# Gold leaf and filigree in Khatau Voiles' new regal look





THE KHATAU MAKANJI
SPG. & WVG. CO., LTD.
Head Office: Laxmi Building,
Ballard Estate, Bombay 1. Mills:
Haines Road, Byculla, Bombay 27.

சில்லறை விற்பனை நிலையம் :

216, நேதாஜி சுபாஷ் சந்திர போஸ்
ரோடு, சென்னை - 1

கட்டாவ் வாயில்ஸ் :
2/133, மவுண்ட் ரோடு,
ஆயிரம் விளக்கு, சென்னை - 2


VDS
IN
WORLD
MARKETS

தீபாவளிக்குப் புதிய ராசி தயாரிப்பு

# ஜாக்கார்ட்

நாகரிகத்தின் சின்னமாகத் திகழும் இந்த ஆடையை அணிய முந்துங்கள். தீபாவளிக்குப் புதிய தயாரிப்பு ஜாக்கார்ட். கண்கவர் வண்ணங்கள், கவர்ச்சி மிகுந்த டிசைன்கள், பார்டர்கள். ஜாக்கார்ட் பட்டுப் புடவையில் நீங்கள் உற்சாக மாகவும், இளமையாகவும் தோற்ற மளிப்பீர்கள். புடவைக்கு ஏற்ற பட்டுச் சோளி அணியுங்கள்.

ஸ்பெஷல் ஸம்பேஜு, நீலாத்ரி நிறங்களும் உள்ளன.

ஏர்-கண்டிஷன் வசதியுடன் கூடிய எமது விற்பனை நிலையங்கள் :

ராதா சில்க் எம்போரியம்
14, சன்னதித் தெரு,
மைலாப்பூர், மதராஸ்-4.

ராதா சில்கஸ
தன் பில்டிங், மவுண்ட் ரோடு,
மதராஸ்-2.

ராதா சில்க் எம்போரியம்
வெஸ்டர்ன் இந்தியா ஹவுஸ்,
ஸர் பிரோஸ் ஷா மேத்தா ரோடு,
பம்பாய்-1.

ராசி




தீபாவளி வாழ்த்துக்கள்

**மபத்லால் க்ரூப்**



**டாடா**
**மெர்ஸிடஸ்-பென்ஸ்**



கோவை ஜில்லாவிற்கு அதிகாரம் பெற்ற விற்பனையாளர்கள்

## கவுண்டர் & கம்பெனி

225 – 226, டாக்டர் நஞ்சப்பா ரோடு, கோயமுத்தூர் – 18

தந்தி : "கவுண்டர்கோ" போன் : 23377 (3 லைன்கள்) த. பை. 1512

நீலகிரி ஜில்லாவிற்கு உப விநியோகஸ்தர்கள்

## என். மகாலிங்கம் & கம்பெனி

T.M.B. சர்வீஸ் சென்டர் – குன்னூர் ரோடு, உதகமண்டலம்

தந்தி : "எனெம்கோ" போன் : 461 (2 லைன்கள்) த. பெ. எண் 21

கண்ணனூர், கோழிக்கோடு, பாலக்காடு ஜில்லாக்களுக்கு

## சக்தி ஆட்டோமொபைல்ஸ்

ஜெயில் ரோடு, கோழிக்கோடு – 2

தந்தி : "சக்திஆட்டோ" போன் : 3612 த. பெ. எண் 9

சர்விஸ் சென்டர் & ஒர்க்ஷாப்: மீன் சந்தை, கோழிக்கோடு-3; போன்: 3831

# ஒன்றுபோல் அனைவரும் விரும்புவது



ஏனெனில், ட்ரான்கோ வால்வுகள் தரத்தையே முதன்மையாகக் கொண்டு தயாராகின்றன; மிக உயர்ந்த தகுதிக்கு ஏற்ப அமைக்கப்படுகின்றன. சவாரிக் காரோ, சாமான் வண்டியோ அல்லது எத்தனையோ தொழிலுக்கு ஏற்ற சாதாரண எஞ்சினோ —இப்படி இந்தியாவில் தயாராகும் எல்லாவகை எஞ்சின்களுக்கும் ஒரிஜினல் எக்விப்மெண்டாக ட்ரான்கோ வால்வுகள் ஏற்கப்படுவதில் வியப்பு ஒன்றும் இல்லை.

அனைவரும் ஒன்றுபோல் இவற்றை விரும்புவது இயல்பே.

# ட்ரான்கோ வால்வுகள்

*தயாரிப்பாளர்:*

**எஞ்சின் வால்வ்ஸ் லிமிடெட்**

மதராஸ்-16

FDSEV081TH

எங்கள் மனமார்ந்த

பிரில்

புதிய
- சுலபமாக எழுதக்கூடிய
- பேனாவிற்குக் கெடுதி விளைவிக்காத

பவுண்டன் பேனா இங்க்

இண்டஸ்ட்ரியல் ரிஸர்ச் கார்ப்பொரேஷன்
சென்னை-41

IS: 220

தலைமை ஆபீஸ்
பெங்களூர்-3

IS: 1221

தீபாவளி வாழ்த்துக்கள்

Season's Greetings to the farmer

DIAMOND
SPRAYER / DUSTER

DIAMOND EQUIPMENT COMPANY

46, SOWRIPALAYAM ROAD, PEELAMEDU, COIMBATORE-4

Nalin-257

*enhance the gaiety of DIWALI with*

**SATHE**

**BISCUITS**

**COCOA**

**CHOCOLATES**





SATHE BISCUIT & CHOCOLATE COMPANY LIMITED, POONA 2.

இந்த தீபாவளியை
ஸன் வாக்குவம் பிளாஸ்க்
குடன் அதிக ஒளிமிகுந்த
தாகக் கொண்டாடுங்கள்




அன்பை வளர்க்கும்
அன்பளிப்பை வழங்குங்கள்.

அன்பளிப்புக்காகவே
கவர்ச்சிமிகுந்த அட்டைப்
பெட்டியில் தற்போது
கிடைக்கிறது.

“தீபாவளி” மாடல்





விக்டர் பிளாஸ்க் கம்பெனி பிரைவேட் லிட்.
பம்பாய் ● கல்கத்தா ● டெல்லி
சென்னை ● ஹைதராபாத்




VAPL-VF-4/67

உங்களைப் போன்ற உற்சாகம் மிக்கவர்களின்
முதல் தேர்வாக பிஎஸ்ஏ இருப்பது இயல்புதான்.

பிஎஸ்ஏ எழில் மிக்க சைக்கிள். இலேசானது
ஆயினும் வலுவுள்ளது. எளிதாக
ஓட்டுவதற்கேற்ற லாகவமும்
அமைப்பும் கொண்டது.

பிஎஸ்ஏயில் பல இடங்களுக்கும்
குஷியாகச் செல்லுங்கள்.

உலகில் இப் பகுதியில் சிறந்த சைக்கிள்
தயாரிப்பாளர்களால் பிஎஸ்ஏ அதன்
புகழ் பெற்ற உயர் தரத்திற்கேற்ப
தயாரிக்கப்படுகிறது.

**BSA** ®

பிஎஸ்ஏ மிகச் சிறந்த
சைக்கிள்





® பிஎஸ்ஏ சைக்கிள்ஸ் லிமிடெட் யு.கே. அவர்களின் பதிவு பெற்ற டிரேட் மார்க்
இந்தியாவில் தயாரிப்போர்: டியூ சைக்கிள்ஸ் ஆப் இந்தியா, அம்பத்தூர், மதராஸ்-53
உரிமையாளர்கள்: டியூப் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், மதராஸ்-1
பதிவு பெற்ற உபயோகிப்போர்

tic-bsa-3896


What makes Parryware distinctive?

# எமது தீபாவளி நல் வாழ்த்துக்கள்!

**தி வான்கார்ட் இன்ஷ்யூரன்ஸ் கோ. லிட்.,**

ரிஜிஸ்டர்டு ஆபீஸ் : மதராஸ்

---

## முன்னேற்றம் ஒரு முக்கியத் தேவை





கம்பீரமாகக் காட்சியளிக்கும் BEL தொழிற்சாலையில் சேவையையே குறிக்கோளாகக் கொண்டுள்ள இஞ்சினியர்களும், டெக்னீஷியன்களும், அக்கௌண்டெண்டுகளும், ஆராய்ச்சியாளர்களும், நிர்வாகிகளும் நாட்டின் பல் பாகங்களிலிருந்து வந்து பணிபுரிகிறார்கள்.

நாம் இந்தியர்கள் என்று பெருமை கொள்பவர்கள். அவர்கள் நாட்டின் முன்னேற்றத்தில் நாட்டம் கொண்டவர்கள். எலக்ட்ரானிக்ஸில் நாட்டின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் ஆக்கப்பணியிலே ஈடுபட்டவர்கள். அதில் பெருமை கொள்பவர்கள்.





**பாரத் எலக்ட்ரானிக்ஸ் லிமிடெட்**

பதிவு அலுவலகம்: ஜாலஹள்ளி, பெங்களூர்-13



வாடிக்கையாளர்கள் அன்பர்கள் அனைவருக்கும் எமது தீபாவளி நல் வாழ்த்துக்கள் !




(1) மானோ ப்ளாக் செட் (2) ஆயில் இன்ஜின் பம்பு (3) கரும்பு ஆலை
(4) மின்சார சங்கு (5) மின்சார மோட்டார் (6) பெல்ட் பம்பு
(7) மோட்டார் பம்பு (8) H. S. மல்டி ஸ்டேஜ் பம்பு (9) டொமெஸ்டிக் பம்பு

தயாரிப்பவர்கள்

போன் : 22935

# சுப்பையா பவுண்டரி

தந்தி : "பவுண்டரி"

அவனாசி ரோடு - கோயமுத்தூர்-18

கிளைகள்

அருணாசல ஆச்சாரி தெரு, சேலம்-1 | திண்டிவனம் ரோடு, திருவண்ணாமலை

ஏஜண்டுகள் :

R. நாராயண் & கோ., லிங்கிசெட்டி தெரு - மதராஸ்-1 | R. நாராயண் & கோ., டவுன்ஹால் ரோடு - மதுரை

SF/358

CRITERION-RM-TV

# Hearty Deepavali Greetings

**AMCO BATTERIES LIMITED.**

THE PIONEERS IN BATTERY MANUFACTURE IN INDIA
MANUFACTURERS OF AUTOMOBILE, FORK LIFT TRUCK AND
DIESEL TRACTION BATTERIES AND STATIONARY AND TRAIN LIGHTING CELLS
IN TECHNICAL COLLABORATION WITH

**GOULD NATIONAL BATTERIES INC. U.S.A.**

THE LARGEST MANUFACTURERS OF LEAD ACID BATTERIES IN THE WORLD

AM MAC (B) 63

ஒளி பெருகும்
இத் தீபாவளித் திருநாளில்
வளம் பெருகி வாழ்வு மலர
எங்கள் உளங்கனிந்த
நல் வாழ்த்துக்கள்






## இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்

தலைமைக் காரியாலயம்: 151, மவுண்ட் ரோடு மதராஸ்-2

M. Ct. முத்தையா — சேர்மன்
G. லக்ஷ்மிநாராயணன் — ஜெனரல் மானேஜர்

iob-4361

# சக்தியுடன் முன்னேறுங்கள்




மற்ற வண்டிகளைக் காட்டிலும் நீங்கள் முந்துவதற்கான சக்தி வேண்டுமாயின் நீங்கள் எம்இஸியை நம்பலாம். மேற்கு ஜெர்மனிய மற்றும் ஆஸ்திரிய நாடுகளின் கூட்டுறவுடன் தயாரிக்கப்படும் எம்இஸி பாட்டரிகள் போக்குவரத்து நிலைமைகளிலுள்ள எந்த சந்தர்ப்பத்திற்கும் ஈடு கொடுக்கும்படியாக விசேஷ அமைப்புடன் கூடி தயாரிக்கப்பட்டு உள்ளன.




**BATTERIES**



மைசூர் எலக்ட்ரோ-கெமிகல் ஒர்க்ஸ் லிமிடெட், பெங்களூர்-22

IN COLLABORATION WITH **SONNENSCHEIN GmbH, WEST GERMANY and SEMPERIT, A. G., AUSTRIA**

---





**தீபாவளி நல்வாழ்த்துக்கள்!**

தீபாவளியும் புத்தாண்டும் கூடும் இந்நன்னாளில் எங்கள் வாடிக்கையாளர்களுக்கும் நலம் நாடுவோருக்கும் எல்லா இன்பங்களும் செல்வங்களும் கிட்டுவதாக!






தரமான டீஸல் என்ஜின்கள் தயாரிப்பாளர்கள்

**கிர்லோஸ்கர் ஆயில் என்ஜின்ஸ் லிட்.,**

ரிஜிஸ்டர்ட் ஆபீஸ்: எல்பின்ஸ்டன் ரோடு, கிர்க்கி, பூனா-3 (இந்தியா)

They were friends. They were enemies.
A passerby could not tell which was who!




( For Unrestricted Exhibition )

Watch for this outstanding Attraction at your favourite Theatre!

Grams: CORE BARREL    Phone: OFFICE: 22067 / RESI: 24756

# ராதா இண்டஸ்ட்ரீஸ்

டாடாபாத் . . . . . . கோயமுத்தூர் - 12



★ விவசாயம்
★ தொழிற்சாலை
★ வீட்டு உபயோகம்

தண்ணீர் பற்றாக் குறையை "ராதா கோர்ட்ரில்"களை உபயோகித்து போரிங் குழிகள் போட்டு தீர்த்துக்கொள்ளுங்கள்.

போரிங் மெஷின்கள் வாடகைக்கும் விலைக்கும் கிடைக்கும்

**விவசாயிகளுக்கு**

கிணறு வெட்டும் மண், கல் இவைகளை கிணற்றிலிருந்து அப்புறப்படுத்த "WELL DONE CRANE" வாடகைக்கும் விலைக்கும் கிடைக்கும்

பிராஞ்சு ஒர்க்ஸ்:

நரசிம்ம நாயக்கன் பாளையம், கோயமுத்தூர் -11

# நிப்தி

## இல்லந்தோறும் பிரபலமாகிவிட்ட பெயர்

வியாபாரச் சின்னமாகிய "நிப்பி" என்பது உயர் தரத்தின் சின்னமாக விளங்குகிறது. நிப்பி லாந்தர்கள் இந்தியா முழுவதிலும் இல்லங்களுக்கு இன்றியமையாத சாதனங்கள் என்று பிரக்யாதி பெற்றுவிட்டன. காஸ் ஜனதா ரெஸின் குக்கர்களும் இதே போல அத்தியாவசியமான பொருள் என்று பெயர்பெற்றுவிட்டன. இயக்க எளிதாயும் உறுதியான அமைப்பு உடையதாயும் சிறப்பாகச் சேவை புரிவதுமான இந்தக் ரெஸின் திரிவகை குக்கர் அடுப்புகள் நேரத்தையும் எரிபொருள் செலவையும் மிச்சமாக்கும்.

நிப்பி எனாமல் சாமான்கள் — மற்ற நிப்பி தயாரிப்புகளுக்கு இணையான மதிப்பும் பெருமையும் உடையவை.

தி ஓரியண்டல் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிட்.

67, பிபின் பிஹாரி கங்குலி தெரு
கல்கத்தா - 12



நிப்பி லாந்தர்கள்



காஸ் ஜனதா



எனாமல் சாமான்கள்

Kalpana-em 27A



# மல்டிவெல்ட்

## கம்பி இணைப்புகள் தற்போது மேலும் ஓர் புதிய சிறப்புடன் வெளி வருகின்றன.




''மல்டிவெல்ட்''- பலரக வேலைகளுக்கு ஏற்றது.




மல்டிவெல்ட் ஒயர் கோ., பிரைவேட் லிமிடெட்
59, மரோல்-மரோஷி ரோடு மரோல் பம்பாய்-59.-போன்: 573169

விற்பனை ஏஜண்டுகள் :
மணிலால் & கோ.,
209, சாந்த் துகாராம் ரோடு, பம்பாய் -9
போன் : 322176



FDS-B MW6-A

# வாய்மையே எளிது, அதுவே வெல்லும்

துறவு, தியாகம் இவற்றைப் போற்றியே வந்தாலும் பகவத்கீதையைப் போலவே திருக்குறளும் இல்லறத்தைச் சரிவர நடத்துவதே மக்களுக்கு நல்லது என்று வற்புறுத்துகின்றது. இதற்கு உதாரணம் மிகவும் அழகான ஓர் குறள்:

> **"பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற**
> **செய்யாமை செய்யாமை நன்று."**

இந்தக் குறளின் பொருள் – பொய்யாமை என்கிற இல்லற விரதத்தை, பொய்யாமல் அதாவது உண்மையாக, உள்ளொன்று வெளியொன்றில்லாமல் தவறாமல் ஆற்றினால், இல்லறத்தை விட்டு விட்டுத் துறவறம் மேலான அறம் என்று எண்ணி, அதன் கடுமையான விரதங்களைச் சரிவர நடத்தாமல் துறவியாக இருக்க முயல்வது பிசகு. அப்படி முயலாமல் இருப்பது நன்று. துறவுக்குரிய விரதங்களைச் சுத்த உள்ளத்தோடு ஆற்றுவது மிகக் கடினம். உள்ளம் சுத்தமாக இல்லாமல் துறவு விரதங்களை வெளி நடவடிக்கைகளில் காத்தாலும் பயனில்லை. அதைத்தான் நன்றல்ல என்கிறார் குறளாசிரியர். அந்த முயற்சியை விட்டு விடுவது நலம் என்கிறார். இல்லறத்தில் இருந்து கொண்டு பொய்யாமை என்கிற ஒரு விரதத்தை, பொய்யாமல், அதாவது குற்றமின்றியும் தவறாமலும் ஆற்றினால் அதுவே மேலானது. 'அறம்பிற' அதாவது துறவு முறை வேண்டாம். முதலில் நிற்கும் பொய்யாமையின் 'மை' ஈற்றுத் தொழிற் பெயர். இரண்டாவதாக நிற்கும் 'பொய்யாமை' என்கிற சொல்லுக்கு 'பொய்யாமல்' என்று பொருள். வினையெச்சம்.

அதைப் போலவே இரண்டாவது அடியில் முதலில் நிற்கும் 'செய்யாமை' என்பது தொழிற் பெயர் உருவங் கொண்டதாயினும் அச்சொல்லின் பொருள் 'செய்யாமல்' என்று வினையெச்சமாகக் கொள்ள வேண்டும். இரண்டாவதாக நிற்கும் 'செய்யாமை' தொழிற் பெயர் — செய்யாதிருத்தல் என்பது அதன் பொருள். அந்த முயற்சி செய்யாதிருத்தல் நலம் என்பது இக்குறளின் உபதேசம்.

தொழிற் பெயரின் உருபு (மை) வினை யெச்சப் பொருள் தருவதைத் திருவாய் மொழியிலும் சில இடங்களில் காணலாம்.

கடினமான முறையை மேற்கொண்டு அதைச் சரிவரச் செய்யாமல் செய்வதாகத் தோற்றம் காட்டுவதைவிட, இல்லறத்தில் இருந்து கொண்டு வாய்மையை உண்மை முறையில் காப்பாற்றிக் கடமை செலுத்தினால் அது ஒன்றே போதும். 'ஸத்தியமேவ ஜயதே ந அந்ருதம்' – வாய்மையே வெல்லும்; பொய்மை வெல்லாது.

வாய்மை உலகத்தை ஒன்றாக்கும். ஐம்பொறிகள் உடலுக்குப் பணி செய்வதைப் போல் வாய்மையும் இவற்றுடன் சேர்ந்தால் எல்லாருடைய உணர்ச்சிகளும் அறிவும் எல்லாருக்கும் பொதுவாகும். கண் பொய்யாது; நாக்கு பொய்யாது. அதைப் போல் ஒவ்வொருவரும் தத்தம் உணர்ச்சிகளையும் அடைந்த அறிவையும் உண்மையாக மற்றவர்களுக்கு எப்போதும் உணர்த்துவது கடமை என்று தவறாத இல்லற தருமமாக ஏற்பட்டு விட்டால் பிறகு மக்களின் உணர்ச்சிகளும் அறிவும் எவ்வளவு விசாலப்பட்டுப் போகும்! மிகச் சிறந்த ஆறாவதொரு புலனாக வாய்மை அனைவருக்கும் பணி செய்யும். மக்களுலகத்தை வாய்மை ஒன்றாக்கும். தனித் தனி உயிர்களாக வாழ்ந்து வரும் மக்கள் அனைவரும் ஆறு புலன்களுடன் ஓருயிர் ஆவார்கள்.



# சொறி நாய் நாரா



சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

நான் பிச்சை எடுத்துப் பிழைத்து வரும் பெண்பிள்ளை. என் பெற்றோர் எனக்குத் தருமம் என்று பெயர் வைத்தார்கள். வரப்போகும் என் வாழ்க்கையை, 'தருமம் போடுங்கள், தருமம் போடுங்கள்' என்று இறைஞ்சும் வாழ்க்கையை, முன்னாடியே கண்டு இந்தப் பெயர் எனக்கு வைத்தார்களோ என்னவோ? என்னுடைய பழங் கதையை இப்போது சொல்லப் போவதில்லை. சென்ற தீபாவளியில் நடந்த ஒரு சம்பவத்தை மட்டும் சொல்லப் போகிறேன். பத்துப் பன்னி;ண்டு வருஷங்களாக என் பார்வை மந்தமாகிப் போய், முடிவில் முற்றும் அந்தக நிலை அடைந்து விட்டேன். எனக்குத் துணையாக ஒரு பையனைத் தத்து மகனுகச் சேர்த்துக் கொண்டேன். அவன் பெயர் ஆராவமுதன். திவ்வியமான பெயர். வடக்கே விஷ்ணு பக்தர்களுக்கு இந்தப் பெயர் தெரியாது. தெற்கேதான் இந்த அழகான பெயர் என்று ஒரு வடநாட்டுப் பக்தர் பரவசமானதாக எங்கேயோ கேள்விப்பட்டேன். என் சுவீகார மகனின் பெயரைச் சுருக்கி 'ஆரா' என்றுதான் அழைப்பேன். அவனுக்கு உடம்பு நிறைய சொறி. பிச்சைக்காரர்களுக்கு மருந்து யார் கொடுப்பார்கள்? எப்படியோ சகித்துக் கொண்டு என் வாழ்க்கைத் துறையில் உதவியாக இருந்துவந்தான்.

ஒரு சொறி நாயும்கூட என்னை அண்டிப் பிழைத்து வந்தது. ஏனோ தெரியவில்லை. அது என்னைப் பற்றிக் கொண்டு விடமாட்டேன் என்று என்னோடேயே வாழ்ந்து வந்தது. யாராவது சோறு கொஞ்சம் கொடுத்தால் அதற்கும் ஒரு பிடி போட்டு விட்டுப் பிறகுதான் நானும் ஆராவும் சாப்பிடுவோம். அது இருப்பியாக, நாங்கள் சாப்பிடுவதைப் பார்க்காமல் ஒதுங்கிப் படுத்துத் தூங்கும். நாயின் பெயர் நாரா. நாராயணன் என்பதற்குச் சுருக்கம்.







நாயாயின் என்ன, மனிதனாயின் என்ன, பணக்காரனாயின் என்ன, பிச்சைக்காரனாயின் என்ன எல்லாரும் நாராயணனின் அவதாரங்கள் என்று படித்தவர்கள் சொல்லுவார்கள். ரூபாய் அணா பைசாவைப் போல் அவதாரங்களும் பலவகை; பல மதிப்பு. என் அன்பன் சொறி நாய் நாராவும் நாராயணன் அவதாரமே போல் என்னைக் காத்து வந்தது.

"உன் கண்ணுக்கு வைத்தியம் செய்யலாம். புரையை எடுத்துவிடச் செய்கிறேன். பெரிய சர்க்கார் ஆஸ்பத்திரியில் உன்னைச் சேர்த்துச் சொஸ்தப்படுத்துகிறேன். பதினைந்து ரூபாய் கொடு" என்று ஓர் அம்மை – ரத்தினம்மாள் எனக்கு அடிக்கடி சொல்லி வந்தாள்.

"அம்மா, பிச்சைக்காரியிடம் பதினைந்து ரூபாய் ஏது. ஒரு ரூபாய் ஏது ?" என்பேன்.

"எனக்கு எல்லாம் தெரியும். இந்தக் காலத்துப் பிச்சைக்காரர்கள் சமாசாரம். ரூபாயைப் பத்திரமாக முடிபோட்டு வைத்திருக்கிறாய்" என்றாள் ரத்தினம்மா.

ரத்தினம்மா சொன்னது உண்மை. யாராவது சோறோ கூழோ போட்டால் தின்பேன். காசாகக் கொடுத்தால் சேர்த்து வைப்பேன். இப்படிக் கொஞ்சம் பணம் சேர்த்து வைத்திருந்தது உண்மை. இது இந்த ரத்தினம்மாவுக்கு எப்படித் தெரிந்ததோ தெரியவில்லை. ரத்தினம்மாளுக்குப் பெரிய ஆஸ்பத்திரியிலும் கண் ஆஸ்பத்திரியிலும் திருவல்லிக்கேணி பெண்கள் ஆஸ்பத்திரியிலும் அதிக செல்வாக்கு என்று சொல்வார்கள். பல ஊர்களிலிருந்து நோயாளிகளை அழைத்து வந்து அவர்களைத் தன் செல்வாக்கினால் ஆஸ்பத்திரிகளில் சேர்த்துவிடுவாள். மற்றவர்களுக்குக் கொடுக்க வேண்டியது கொடுத்துவிட்டு மாதம் முந்நூறு ரூபாய் வருமானம் பெறுபவள் என்று பேச்சு.

ஒரு நாள் தீபாவளி.

"ஐயா, தருமம்" என்று நான் கத்தினதற்கு ஒரு பையன், பட்டாசு கட்டுக் கொண்டிருந்தவன், என்னைக் கண்டு ஓர் ஐந்து பைசா காசு வீசிப் போட்டான். அது நான் இருந்த மைதானத்தின் ஒரு மூலையில் இருந்த புற்றில் விழுந்துவிட்டது. ஆரா என்னைப் பிடித்து நடத்திக்கொண்டிருந்தவன் உடனே காசை எடுக்க என்னை விட்டுவிட்டுப் புற்றில் கைவைத்தான். 'புஸ்' என்று ஒரு நாகப் பாம்பு படம் எடுத்து வெளியே வந்து பையன் மேல் பாய்ந்தது.



இதைக் கண்ட சொறி நாய் நாரா சிறுத்தைப் புலி போல் பாம்பின் மேல் பாய்ந்து பாம்பைக் கழுத்தில் கவ்விப் பாம்புடன் சண்டையிட்டது.

பாம்பு என் மகன் ஆராவைக் கவனிப்பதை விட்டு விட்டு நாயைக் கடித்துவிட்டுப் பிறகு ஆராவின் மேலும் பாய்ந்து கடித்துவிட்டுப் புற்றில் புகுந்து கொண்டது.

கொஞ்ச நேரம் அவஸ்தைப்பட்டு நாய் உயிர் நீத்துவிட்டது. விஷம் நாயின் உடலில் பாய்ந்துவிட்டிருந்தபடியால் பையன் ஆரா பிழைத்துக் கொண்டான்.

"அப்பனே, ஆராவமுதே! நம்முடைய நாய் நாரா உனக்கென்று உயிர் கொடுத்துவிட்டது. அதை நல்ல முறையில் புதைக்கவோ, எரிக்கவோ செய்வாய்" என்று ஆராவமுதனிடம் ஒரு ரூபாய் கொடுத்தேன். அவன் கண்ணீர் விட்டு அழுதுவிட்டு, ராமசந்திரன் ஜடாயுவுக்கு உத்தரகிரியை செய்து மோக்ஷம் பெறச் செய்தது போல் நாராவுக்குச் சமாதி செய்துவிட்டான். கடித்த பாம்பு மகாவிஷ்ணுவின் சயனமாகிய அனந்தனே என்று நம்பினேன்.

பாம்பின் கடியினாலோ என்னவோ மகன் ஆராவின் சொறி தானாகச் சொஸ்தமாகிவிட்டது. ரத்தினம்மாளிடம் பதினைந்து ரூபாய் கொடுத்துப் பெரிய ஆஸ்பத்திரிக்குச் சென்று கண்களிலிருந்த புரையை எடுத்துச் சொஸ்தப்பட்டுத் திரும்பி வந்தேன். திரும்பி வந்தால் என்ன, வீடா வாசலா ? இப்போதும் பிச்சைக்காரிதான். என் நாய் நாரா இறந்து போனது இறந்து போனதுதான். அது நம் கண்ணன் திருவடி அடைந்துவிட்டது. அதற்கு என்னைப் பற்றி இனி என்ன கவலை? கண்ணனுக்கு எல்லா ஜீவராசிகளும் ஒன்றே. நாராவாயின் என்ன, நாயாயின் என்ன, பிச்சைக்காரப் பையன் ஆராவாயின் என்ன ? எல்லாம் ஒன்றே. அவனை நம்பிச் சரணடைவது ஒன்றே கதி.

ஃ ஃ ஃ

ஆரா பிழைக்கச் சொறி நாய் நாரா தன் உயிரை நீத்த இந்தக் கதை பிச்சையெடுத்து வாழும் தருமம் சொன்னதை நான் எழுதினேன். தேவிக்கு நாயாயினென்ன யாதாயினென்ன அனைவரும் அனைத்தும் அவள் ஈன்ற குலம். அந்த உலகத்தாயின் உருவமே கங்கை. தீபாவளியன்று அனைவர் உள்ளமும் புறமும் புனிதமாக எல்லாருடைய வீட்டுக்கும் வந்து ஸ்நானம் செய்வித்து மகிழ்வாள்.

# ஸ்ரீ தியாகராஜர்

டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன்



[சங்கீத சத்குருவான ஸ்ரீ தியாகைய ஸ்வாமிகள் அவதரித்த இருநூறாவது ஆண்டு இது. புண்ணியத் தமிழ் மண்ணில் தோன்றிச் சுந்தரத் தெலுங்கிசைத்த மகானுக்கு இன்று நம்மிடை வாழும் தெலுங்குத் தமிழர் பெருமகனின் வாயிலாக அஞ்சலி செலுத்துகிறோம்.]

ரிக்வேத காலத்திலிருந்து இன்றுவரை நமக்கு ஒளி காட்டும் ஒரு நீண்ட பரம்பரை வந்துள்ளது. ஆன்மிகப் பண்புகளின் முக்கியத்துவத்தை விளக்குவது இப் பரம்பரையே. மனித இனம் எப்படி விலங்கினத்தைவிட உயர்ந்ததோ, அவ்வாறே ஆத்மானுபவம் பெற்ற மனிதன் மற்ற மனிதரைவிட உயர்ந்தவன் என்று இப்பரம்பரை உணர்த்தியுள்ளது. நாம் இன்னும் அந்த உயர்வை அடையவில்லை. இருந்தாலும அடைய முடியும் என்று நம்புகிறோம். இன்று கொள்கைப் போராட்டங்கள் மலிந்துள்ளன; தேசத்துக்குள் பிளவுகள் ஏற்பட்டுள்ளன; சர்வதேச அரங்கில் சூழ்ச்சிகள் பெருகியுள்ளன; இந்தச் சமயத்தில் அறிவு, ஒழுக்கம், அன்பு இவற்றின் உயர் பண்புகளை நாம் நினைவு கொள்வது நலம். சூக்ஷ்மமான சிந்தனை பெற்ற நம் பெரியோர்கள் பாட்டின் மூலமும் கவிதையின் மூலமுமே சாமானிய மாந்தரின் மனத்துள்ளும் புகுந்து விடுகிறார்கள். அழகு, இசைவு, சுதந்திரம் இவற்றில் ஆவேசமான ஈடுபாடும் நாட்டமும் கொண்ட கவிகளும், இசைக் கலைஞர்களுமே சமூகத்தில் சக்திவாய்ந்த மாறுதல்களைச் செய்ய முடிகிறது. இவ்வாறு நமது இனத்தின் இலட்சியங்களை அழுத்திக் காட்டி, தங்களது ஜீவசக்தியையும் எடுத்துக் காட்டி, சிரஞ்சீவியாகிவிட்ட மகாத்மாக்கள் சிலர் சென்ற நூற்றாண்டிலும் வாழ்ந்தனர். இவர்களில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டிய சங்கீத முனிவரே தியாகராஜர்.

தியாகராஜர் என்ற பெயரே உலக இச்சைகளையெல்லாம் விட்டு விட்ட துறவரசர் என்று பொருள்படும். மனச்சாந்திக்கும் சுதந்திரத்துக்கும் வழி தியாகமே. பயம், பொறாமை, பேராசை, டம்பம் இவற்றின் வலையிலிருந்து தப்பாத வரையில் நமக்கு மனக் கலக்கம்தான் இருக்கும்; உலகிலும் பலாத்காரம்தான் இருக்கும். 'பரம புருஷனான திருப்பதி வேங்கடரமணா! தருமத்தையும் மோட்சத்தையும் மற்ற புருஷார்த்தங்களையும் நான் அடைய முடியாதபடி குறுக்கிடும் அகந்தை என்ற திரையை, பொறாமை என்ற திரையை, விலக்க மாட்டாயா?" என்று தியாகராஜரும் பாடினார்.

பரமபுருஷ! தர்மாதி மோக்ஷமுல
பாரதோலு சுன்னதி நாலோனி
தெர தீயக ராதா? லோனி
திருப்பதி வேங்கடரமண! மத்ஸரமனு.

இந்தத் தீய அம்சங்களைத் தியாகராஜர் எப்படித் தியாகம் செய்தார்? சஞ்சலியாத பக்தி மூலமே தியாகியானார். ஆண்டவனிடம் அன்பினாலேயே உலகில் பற்றின்மை பெற்றார்.

பரம்பொருளிடம் பக்தி வைத்தால் மற்றவற்றில் தானே பற்று இற்றுப் போகிறது. ஆண்டவன் ஒருவனிடமே உள்ளம் ஆழ்ந்து பதிந்து விடுகிறது. பகவானில் உட்கலந்து

வாழ்கிற வாழ்வுக்கு மற்ற சாதனங்களைவிட பக்தியே எளிதாக உள்ளது. ஆண்டவனை இடைவிடாது அன்போடு சிந்திப்பதே பக்தி என்கிறார் ஸ்ரீ ராமாநுஜர்.

**स्नेहपूर्वं अनुध्यानं भक्तिरित्यभिधीयते ।**

இப்படி அன்போடு ஆண்டவனைச் சிந்தித்த பக்திமான் தியாகராஜர்.

வெற்றி – தோல்வி இரண்டுக்கும் அரங்கம் மனிதனின் ஆன்மா. இன்பம் துன்பம் இரண்டுக்கும் அரங்கம் மனிதனின் ஆன்மா. தெய்வ ஒளியின் பிரதிபிம்பமே மனிதன் எனினும் அவன் கீழ்ப்பட்ட நிலையிலேயே வேரோடியிருக்கிறான். அவன் தன்னைத் தானே புதுப்பித்துக் கொள்ள வேண்டியவன். நாம் படைக்கப்பட்ட வஸ்து. அதே சமயத்தில் நம்மையே புதிதாகப் படைத்துக் கொள்ள ஆற்றல் பெற்றவருமாவோம். நம்மை நாமாக மாற்றிக் கொண்டு ஆன்ம சாக்ஷாத்காரம் பெறும் போது, சிருஷ்டியாக உள்ள நாம் சிருஷ்டிகர்த்தராகவே மாறுகிறோம். சிருஷ்டிக்கப்பட்ட ஜந்து என்ற முறையில் நம்மிடம் தாமஸ சக்திகள் காணப்படுகின்றன. இந்நிலையிலுள்ளபோது செயலின்மையில் ஊக்கம் கொள்கிறோம்; புது மணத்தை இழந்து வாடி நிற்கிறோம். ஒரு வழியிலும் ஈடுபாடின்றிச் சஞ்சலிக்கிறோம். அப்போது குறுகிய சுய நலத்துக்கு ஆட்படுகிறோம். ஆனால் இப்படிப்பட்ட நமக்கு, நம்முள் உள்ள சிருஷ்டிகர்த்தா என்ற பொறி நம்மை நாமே பூரணராக்கிக் கொள்ளும் சக்தியை அளிக்கிறது. ஆக்கப்பட்டவர்கள் என்ற நிலைக்கும், ஆக்க சக்தி படைத்தவர் என்ற நிலைக்குமிடையே உள்ள போராட்டம் முடிவதற்குள் மனித உயிர் சுய அநுதாபம், கோபம், சஞ்சலம், ஈடுபாடு என்ற பல மனோபாவங்களைக் கடக்க வேண்டியதாகிறது. முற்றிலும் புத்துயிர் பெறாத நிலையில் மனித ஆன்மா தனக்கே தான் பரதேசியாகி விடுகிறது; பிறரிடமிருந்தும் பிரிந்து நிற்கிறது; எல்லா ஜீவர்களையும் சிருஷ்டித்த ஆதாரத்திலிருந்தும் பிரிந்து நிற்கிறது. இறுதி நிலையிலோ இவை யாவற்றுடனும் அது இணைந்து வருகிறது. இந்த வளர்ச்சியில் ஜீவன் பெறுகிற சகல பாவங்களையும் வெகு நுண்ணிய உணர்வுகளாக, மகத்தான முறையில் வடித்தவர் தியாகராஜர்.

தியாகராஜர் மிகவும் எளியவர். தம்மைப் பிறர் அடியோடு காணாதபடி அழித்துக் கொண்டவர். இப்படியிருந்தே, உபநிஷத உண்மைகளையும் பகவத்கீதையின் சத்தியங்களையும் எளிய, ஆனால் ஈர்ப்புச் சக்தி வாய்ந்த மொழியில் வெளியிட்டவர். ஒரு ராஜ்யத்தையே அடைந்தவர். பக்தியால் அடைகிற பகவத் சாம்ராஜ்யத்துக்கு ஈடான நிதியில்லை: 'ராம பக்தி ஸாம்ராஜ்யமு' என்று பாடுகிறார் தியாகராஜர்.

ராமனை நம் கண் முன்னாலேயே கொண்டு வந்து நிறுத்துகிறார் தியாகராஜர். சிவதநுவை ராமன் வளைக்க முற்படும் போது அவனது முன்னுச்சி மயிர்கள் முகத்தில் ஆடியதையும், மாரீசனின் மமதையை அடக்க அம்பை இழுத்து விட்ட செவ்வியையும் எவ்வளவு அழகாகப் பாடுகிறார்?

மனோ வாக்குக் காயங்கள் ஒன்றாக இணைந்து செயலாற்றி நம்மை முழு மனிதராக்கும் ஒழுங்குவிதிகளே மதம் எனும் சாதனை. இந்த முழுமையை அடைந்தவராக ராமனைச் சித்திரிக்கிறார் தியாகராஜர்.

**ஒக மாட ஒக பாணமு ஒக பத்னீ வ்ரதுடே மனஸா**
**ஒக சித்தமு கலவாடே ஒக நாடுனு மரவகவே**

'மாறிலாத ஒரே சொல், குறி தவறாத ஒரே பாணம், ஒரே மனைவி, ஒரே சித்தம் ஆகியவற்றை உடைய ராமனை ஒரு போதும் மறவாதே மனமே' என்கிறார்.

அவர் தமது அநுபவத்தின் ஆழத்திலிருந்து பாடியவர். 'பெருமை வாய்ந்த பரம புருஷனை நான் அறிவேன்; இருட் சக்திக்கு அப்பாற்பட்டவனும் சூரிய வண்ணனுமான பரம புருஷனை அறிவேன்' என்று உபநிஷதம் நேருக்கு நேர் கண்டதாகச் சொல்வது போலவே தியாகராஜரும் பாடினார்.

**वेदाहं एतं पुरुषं महान्तं**
**आदित्यवर्णं तमसः परस्तात् ।**

என்பது உபநிஷதம்.



இதே போல் தியாகராஜரும், 'மலைமீதுறையும் ராமனை நான் குறி தப்பாமல் கண்டேன்' என்கிறார்:

**கிரிபை நெலகொன்ன ராமுனி குரிதப்பக கண்டி**

'நான் அந்தத் தரிசனம் பெற்ற போது என் உடல் மயிர்கூச்செறிந்தது. ஆனந்தபாஷ்பம் கன்னத்தில் வழிந்தது. உணர்ச்சிக்கு வாக்குத் தர முடியாமல் திணறினேன்' என்கிறார்.

**புலகாங்கிதுடை ஆனந்தாச்ரு**
**வுல நிம்புக**
**மாடலாட வலே நனி**
**கலுவரிம்ச கனி**

தெய்வ தரிசனம் பெறமுடியும் என்று நம்பிக்கை பெற்றால் பிறகு விசாரமேது என்கிறார்: ''மாகேலரா விசாரமு ?''

**வா**ழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் நிரந்தர சத்தியத்தின் தரிசனம் நடைபெற வேண்டும். அந்தத் தரிசனம் இருந்தாலே நமது சிறுமையும் அற்பத்தனமும் வெளியேறும். லௌகிகத்தை ஆன்மிகத்தால் வெற்றி கொள்ள வேண்டும். பெருவாழ்வு பெற இதுவே வழி. இப்படி வாழ்வு பெற்ற தீர்க்கதரிசிகள் உலகத்தோடு ஒட்டாமல் வாழ்ந்தவர்கள் என எண்ணுவது தவறு. அவர்கள் தங்களைப் பிறருக்குத் தந்தே தங்களை உணர்ந்தனர்.

| | | |
|---|---|---|
| परोपकाराय | फलन्ति | वृक्षाः |
| परोपकाराय | वहन्ति | नद्यः |
| परोपकाराय | चरन्ति | गावः |
| परोपकारार्थं | इदं | शरीरम् |

'பிறருக்குப் பயனுவதற்கே தருக்கள் பழுப்பது போல், பிறருக்குப் பயனுவதற்கே ஆறுகளில் நீரோடுவது போல், பிறருக்குப் பயனுவதற்கே பசுக்கள் பால் தந்து உதவுவது போல், பிறருக்குப் பயனுவதற்கே ஏற்பட்டது மானுட உடல்' என்று வாழ்ந்தவர்களே மகான்கள். பரோபகாரத்தினும், அன்பை அனைவருக்கும் சொரிவதால் எல்லா உயிர்களும் நம் சகாக்களாகி விடுகின்றன. மற்ற உயிரின் இன்ப துன்பம் நம் இன்ப துன்பமாகி விடுகிற அர்த்தில்தான் 'சமய சோஷலிஸம்'. இவ்வாறு அனைவருடன் ஒன்றி வாழ்வதே உண்மைச் சமயம். இது சமயத்தின் பேரால் தனித்து வாழ்வதற்கு மாறுபட்டது. எல்லா மானுடர்களையும் ஒரே தன்மையாக்கி ஒன்று கூட்டினும் தங்கள் தனித்தன்மைகளை இழந்துவிடுவர்; அதாவது தங்களையே இழந்து விடுவர். மனிதனுக்கு ஆன்ம சுதந்திரம் வேண்டும்; உடைமை ஏதுமே அற்றிருக்கும் திரம் வேண்டும். ஆனால் தனித்து விடுவதால் சமுதாயத்திடம் அவன் அன்பை இழந்துவிடக் கூடாது. பற்றிக்கொண்டு விடாமலே அன்பு செய்யப் பழக வேண்டும் ; பிரதி எதிர்பாராமலே நம்மைக் கொடுத்துக் கொள்ளப் பழக வேண்டும். இப்படி யெல்லாம் இருந்து பிறருக்குச் சந்தேசத்தைக் கொடுத்தவர் தியாகராஜர்.

**நா**கரிகம் என்பது போட்ட இடத்திலேயே கிடப்பதல்ல. அது என்றும் சென்று கொண்டேயுள்ள நிரந்தர இயக்கம். வழி வழியாக நமக்கு இவ்வாறு வந்துள்ள நாகரிகத்தில் மகத்தான அம்சங்கள் இருப்பது மட்டுமின்றி சிறுமைகளும் உள்ளன. இவையே நம்மை அடிமைப்படுத்தி வந்துள்ளன. உலகமெங்கிலுமே சமயம் என்பது மூடநம்பிக்கையாகவும், பிரிவினை வாதமாகவும், அடிமைப்படுத்தும் சக்தியாகவும் இழி நிலை அடைந்துள்ளது. பழைய பழக்கங்களே புனிதமானவை என்கிற பத்தாம்பசலித்தனத்தையே சமயம் என்று தவறாக எண்ணும்படியாகி விட்டது. இவற்றையெல்லாம் தியாகராஜர் கண்டித்தார். சமயத்தின் உண்மையான உயிரையும், அதன் வெளி அலங்காரங்களையும் வித்தியாசப்படுத்திப் பார்த்தார். ஆண்டவனை அனைத்திலும் பார்ப்பவனுக்கு ஆசிரம தருமங்கள் கூட அவசியமில்லை என்றவர் அவர்:

**அன்னி நீவனுக யெஞ்சின வானிகி**
**ஆச்ரம பேதமு லேல**

''ஸ்நானம் செய்வதும், கண்மூடிக் கொள்வதும், துளசி பத்திரம் மட்டும் உண்பதும்தான் மதஅனுஷ்டானமென்றால், மீனும் கொக்கும் ஆடும் முதலில் மோக்ஷம் போக வேண்டும்'' என்று 'பலமு குலமு' என்ற க்ருதியில் தியாகராஜர் பாடுகிறார். நமக்கு வழிவழியாக வந்துவிட்ட தீமைகளை ஏன் ஒளிக்க வேண்டும்? தியாகராஜர் ஒளிக்காமல் வெளியிட்டார்.

மானுட இனம் முன்னேறுமா வீழ்ச்சியுறுமா என்பதற்கான திறவுகோல் மானுட ஆன்மாவிலேயே உள்ளது. நன்மைக்கும் தீமைக்குமிடையே ஏற்படும் அந்தமற்ற போராட்டமே சரித்திரம். ஒளிச் சக்திகளுடன் ஒத்துழைக்கும் மனிதர்களுக்கும், அவ்விதம் ஒத்துழைக்க மறுப்பவர்களுக்குமிடையே சமுதாயம் பிளவுபட்டிருக்கிறது. இந்தப் போராட்டம் அர்த்தபுஷ்டியுள்ளது. தியாகராஜர் போல் நமக்கு முன்பு தலைமை தாங்கியவர்களின் நம்பிக்கைகளையும், அபிலாஷைகளையும், முயற்சிகளையும் புரிந்து கொண்டு நம் சமுதாயம் மேம்பட்டு வளர்வதற்குப் போராடுவோம்.








# MERRITT* AND Coats

## THE RIGHT TEAM FOR A STRONG SEAM

Sewing the flimsiest organdie or the heaviest woollen suiting, or embroidering a dainty design with COATS thread, Merritt sewing machines give you perfect stitches and a strong seam. Every Merritt sewing machine is backed by the world-famous Singer after-sales service. ■ Help your Merritt machine do its first-class work by choosing COATS thread for your material. COATS have a century-old tradition of making the finest, dependable threads for every use.



*A Trade Mark of The Singer Company



**Coats**

*the thread makers*

J. & P. COATS (INDIA) PRIVATE LIMITED

BOMBAY · CALCUTTA · GAUHATI · DELHI · MADRAS · KORATTI (KERALA)



# பாரத நாடு புண்ணிய நாடு

டாக்டர் **சி. வி. ராமன்**

ஆத்மிக ரீதியில் பாரத பூமியைப் புண்ணிய பூமியாகப் போற்றிவருபவர்கள் நாம். மானுடர் வாழ மிகவும் உகந்த வானிலையை இந்நாடு பெற்றிருப்பதாலும் சிருஷ்டியிலேயே இந்நாட்டுக்கு ஒரு முக்கியத்துவம் இருப்பதாகத் தோன்றுகிறது. வானிலை அடிப்படையில் நம் நாட்டைப் புண்ணிய நாடென மாபெரும் விஞ்ஞானி ஸ்ரீ ராமன் அவர்களின் வாய்மொழியில் கேட்கும்போது [எவ்வளவு பெருமிதம் கொள்கிறோம் ?

— ஆசிரியர்

**வா**னிலை விஞ்ஞானத்தை அற்புத ரசம் மிகுந்த ஒரு நாடகத்துக்கு ஒப்பிடலாம். இந் நாடகத்தின் முக்கிய பாத்திரங்கள் ஐந்து. முதலாவது, ஒளிக் கதிர்களையும் வெப்பத்தையும் வானவெளியில் நாலா பக்கங்களிலும் தங்கு தடையின்றிக் காலகாலமாக வீசிக் கொண்டிருக்கும் சூரியன். இரண்டாவது, சூரியனை அதன் பக்கமாகச் சாய்ந்து ஆண்டுக்கு ஒரு முறையும், தன்னைத் தானே 24 மணி நேரத்துக்கு ஒரு முறையும் தனது அச்சிலேயே சுழன்று வலம் வரும் நாம் வசிக்கும் இந்த பூமண்டலம். மூன்றாவது, இந் நாடகத்துக்கே நடுநாயகமாக விளங்கும் வாயுமண்டலம் (Atmosphere). நான்காவது, பூமண்டலத்தில் உள்ள நிலப் பரப்பும் அதன் கண்ட, உப கண்டங்களுமாகும். ஐந்தாவது, இந் நிலப்பரப்பைச் சூழ்ந்துள்ள சமுத்திரங்களும் நீர்நிலையங்களும். இந்தப் பஞ்ச பூதங்களும் தங்களது அலுவல்களைக் கால நேரம் தவறாமல், நடத்திக் கொண்டு வருகின்றன. இருந்தாலும், வானிலை நிலவரங்களை மட்டும் நிச்சயமாக, நிர்ணயமாக நம்மால் சொல்ல முடிகிறதில்லை. இன்று வானிலை எப்படி, இவ்வாண்டு மழை பெய்யுமா, என்றெல்லாம் ஜோசியம் கேட்பது போலக் கேட்க வேண்டியிருக்கிறது. பிரபல வானிலையாராய்ச்சியாளர்கள்கூட இத்துறையில், நிர்ணயமாகச் சொல்ல முடியாது தவிக்கின்றனர். ஸர் கில்பேர்ட் வாக்கர் என்ற வானிலை நிபுணர் (Meteorologist) ஒருவர் இருந்தார். சூரியனிடத்தில் அவ்வப்போது தோன்றும் புள்ளிகளால்தான் வானிலை மாறுதல்கள் ஏற்படுகின்றன; ஆகவே இவற்றை ஆராய்ந்து அறிவைப் பெருக்கிக்கொண்டால் வானிலை விஞ்ஞானம் வளரும் என்று அவர் யோசனை கூறினார்.

வானிலை (Weather) என்பது சமையலறை நெருப்பைப் போல நாமே உண்டாக்கிக் கொள்வதல்ல. நமக்குப் புறம்பான சக்திகளால் உருவாக்கப்படுவது வானிலை. எங்கிருந்து இது உருவாகிறது, எப்படி உருவாகிறது என்பதை ஆராய வேண்டும். இந்த ஆராய்ச்சி நமது நடவடிக்கைகளுக்கு இன்றியமையாதது. மழையை நம்பி வாழும் மக்களுக்கும், பட்ஜெட்டுகள் முதல் விமானப் போர்வரை செய்கிற சர்க்காருக்கும் மழை, காற்று, புயல், சூறாவளி, இடி, மின்னல், முதலியன குறித்த அறிவும் வானிலை மாறுதல்களின் அறிவும் மிகுதியாகத் தேவைப்படுகிறது. இதைப் பெறுவதற்கு நல்ல சாதனங்களான தூரதரிசினி, வெப்பமானி, உஷ்ணமானி, உபகிரகங்கள், ராடார், பலூன்கள் முதலியவற்றைக் கொண்டு கணக்கற்ற விவரங்கள் சேகரிக்கப்படுகின்றன. ஆனால் இவற்றிலிருந்து, வானிலை விஞ்ஞானத்தின் அடிப்படை அறிவு வளர்ச்சியடைவதில்லை. மூளையைக் குழப்பும் தகவல்களிடையே சிக்கி, எங்கு ஆரம்பிப்பது எங்கு முடிப்பது என்றே தெரியாமல் தவிக்க வேண்டி வருகிறது.

இதிலிருந்து விடுதலை பெற வேண்டுமாயின், அடிப்படை அம்சங்களில் நமது ஆராய்ச்சிபுகவேண்டும். முதலில் வாயு மண்டலத்தை எடுத்துக் கொள்வோம். வாயு மண்டலம் (Atmosphere) ஏன் இருக்கவேண்டும்? அதை இருக்கும்படி செய்வது எது? சூனியப் பிரதேசத்தில் (vacuum) வாயுக்கள் விரிவடையும். வாயு மண்டலமும் இம்மாதிரி விரிந்து சுருங்குகிறதா?

பூமியின் ஈர்ப்புச் சக்தியினால்தான் வாயு மண்டலம் பூமியுடனேயே இணைந்துள்ளது. வாயுமண்டலத்தின் அழுத்தமும் திண்மையும் அதைப் பூமியுடன் இணைக்கின்றன. அடுக்கடுக்காயுள்ள வாயு மண்டலத்தில் மேல் அடுக்கின் அழுத்தம் கீழ் அடுக்கின் மீது படிகிறது. உயரத்தில் செல்லச் செல்லத் திண்மையின் அளவும் பரிமாணமும் குறைகிறது. அதனால்தான் மேலே போகப் போக இறுக்கம் குறைகிறது.

பூமியுடன் இணைக்கப்பட்டிருந்தாலும் பூமி தன்னச்சில் தானே சுழலும் போது, அதைச் சூழ்ந்துள்ள வாயு மண்டலமும் சுழலுகிறதா என்பதும் ஆராய்ச்சிக்குரிய விஷயம். பூமி தன்னைத் தானே விநாடிக்கு 465 மீட்டர் வேகத்தில் சுற்றும் போது, அதைச் சூழ்ந்துள்ள வாயு மண்டலமும் இதே வேகத்தில் சுழல வேண்டுமல்லவா? அப்படிச் சுழன்றால் என்ன ஏற்படும்? மணிக்கு 466 மைல் வேகத்தில் தினந்தோறும் புயல் வீசிக் கொண்டிருக்க வேண்டும். மனிதன் வாழவே முடியாது. ஆனால் இவ்வாறு நிகழுவதில்லை. இதைக் கொண்டு பூமி சுழலும் போது, அதையொட்டிய வாயு மண்டலம் சுழலுவதில்லை என்று கருதப்படுகிறது. ஆனால் நிச்சயமாகச் சுழலுவதேயில்லை என்று சொல்லி விடவும் முடியாது. ஆனால் அது சுழலும் வேகத்தில்தான் ஏற்றத் தாழ்வுகள் உள்ளன. வெவ்வேறு உயரங்களில், வெவ்வேறு அக்ஷ ரேகைகளில், வெவ்வேறு வேகங்களில் இவை சுழலுகின்றன. அடுக்கடுக்காக உள்ள வாயு மண்டலத்தில் ஓர் அடுக்கிலுள்ள வாயுப் பிரதேசத்தின் அழுத்தம், அதற்கு மேல், கீழுள்ள வாயுப் பிரதேசத்தின் அழுத்தங்களுடன் மாறி மாறிக் கலந்து கொண்டிருக்கின்றன. இதைப் பரிவர்த்தனை (interchange) என்பர். உரசல் (friction) என்றாலும் பொருந்தும். வடதுருவ, தென் துருவப் பிரதேசங்களில் வாயு மண்டலத்தின் சுழலும் வேகம் மிகக் குறைவாகவே இருக்கும். பூமத்திய ரேகைப் பகுதியில் (Equator) இது அதிகமாக இருக்கும். எல்லை வரம்புள்ள பூமண்டலத்தைப் போலோ, சமுத்திர ஜலாசயங்களைப் போலோ அன்றி எல்லைவரம்பு அற்றிருப்பது வாயு மண்டலம். அதில் மாறுதல்கள் தனி முறையில், ஆனால் விஞ்ஞான ரீதியில்

புரிந்து கொள்ளக் கூடிய முறையிலேயே நடைபெறுகின்றன. நடைமுறையில் கிழக்கத்திய காற்றுகள், மேற்குக் காற்றுகள், பிரதேசக் காற்றுகள், பருவக் காற்றுகள் என்று வழங்கப்படும் காற்றுக்களின் தன்மையிலிருந்து ஓரளவு இதன் மர்மங்களைத் தெரிந்து கொள்ளலாம். சாதாரணமாகக் கிழக்குக் காற்றுகள் அதிக வேகமாக வீசுபவை. மேற்குக் காற்றுகள் குறைந்த வேகமுள்ளவை. பூமத்தியப் பிரதேசங்களில் காற்று வீசாத பகுதிகளும் உள்ளன. இவற்றுக்கு ''மந்தப் பிராந்திய''மென (Doldrums) பெயர். கடல்சூழ் பகுதிகளில் காற்று வீச்சின் போக்குகளை மிகத் தெளிவாகவே காண முடியும்.

சமீப காலத்தில் வாயு மண்டலத்தில் மற்றொரு அதிசயத்தைக் கண்டு பிடித்திருக்கின்றனர். சுமார் முப்பது மைல் உயரத்தில் வாயுவெளியில் ஒரு பிரதேசத்தில் விநாடிக்குச் சுமார் நாற்பது மைல் வேகத்தில் சதா புயல் காற்று வீசிக் கொண்டிருக்கும் பிரதேசம் இருக்கிறது. இதற்கு (Troposphere) என்று பெயர். இந்தப் பேய்க் காற்றுப் பகுதிக்கு Jet streams என்றும் பெயர் உண்டு. இந்தப் பகுதியில் குளிர்ச்சி அதிகம். உயரே செல்லச் செல்ல உஷ்ணமும் குறைகிறது. இந்தப் பிரதேசத்தில்தான் வாயு மண்டலத்தின் அடுக்குகளுக்கிடையே பரிவர்த்தனை நிகழ்கிறது என்று கருதப்படுகிறது. ஆனால் இது எப்படி அங்கே வந்தது, ஏன் வந்தது, என்று தெளிவுபெறவில்லை.

வாயு மண்டலம் என்பது என்ன? அது எங்கிருந்து தோன்றியது? அதன் ஸ்தானத்தில் அது எவ்வாறு வந்தது? நமக்குத் தெரிந்தவை சில. தெரியாதவை பல. பிராண வாயுவும், ஜலஜவாயுவும் அங்கே உள்ளன என்றும், நைட்ரஜன் ஹீலியம் போன்ற வாயுக்களும் உண்டு என்றும் தெரியும். ஹீலியம் இலேசான வாயு; ஆகையால் உயர் பகுதிகளில் உள்ளது. இவற்றைத் தவிர, ஓஜோன் (Ozone) என்ற வாயுவும், கார்பன் — டை ஆக்ஸைட் வாயுவும் கூட அங்கே உள்ளன. ஓஜோன் வாயுவின் தன்மை ஆச்சரியமானது. சூரியனிடமிருந்து வந்து கொண்டிருக்கும் சக்தி வாய்ந்த '' அல்ட்ரா வயலட் '' (Ultra-violet) கதிர்களின் வேகத்தைத் தாங்கி, ஆகர்ஷித்துக் கொண்டு, மனிதனுக்குத் தேவைப்படும் அளவுக்குப் பிராண வாயுவுடன் இதைக் கலந்து உபயோகமாகும்படி நமக்குக் கிடைக்கச் செய்வது இந்த வாயுதான். இதை ஒரு '' வடிகட்டி '' வாயு என்றே சொல்ல வேண்டும். இது வாயு மண்டலத்தில் இல்லாவிட்டால், நாம் எல்லாருமே அமிதமான பிராண வாயுவின் வேகத்தினால் காய்ந்து தீய்ந்து போவோம். இது எப்படி இங்கே வந்தது? ஏன் வந்தது?

அதேபோல், கார்பன் — டை — ஆக்ஸைட் தாவரங்களுக்கு மிகவும் அவசியமானது. மனிதனுக்கு அவசியமில்லை. இது வாயுமண்டலத்தில் எப்படி வந்தது?

உயிர் வாழ்வதற்கு நீர் இன்றியமையாதது. பூமண்டலத்தில் எழுபது சதம் தண்ணீராக இருந்தாலும் அது எல்லாம் உபயோகமாகாத உப்பு நீராகவும், தேவையில்லாத இடங்களிலும்தான் இருக்கிறது. பூமியில் வாழும் பிராணிகளுக்குத் தேவையான சுத்தத் தண்ணீர் வாயு மண்டலத்திலிருந்துதான் கிடைக்கிறது. எப்படிக் கிடைக்கிறது? வெப்பத்தினால் பூமியில் உள்ள நீர் ஆவியாக மாறி, மேகங்களாகி, மழையாகப் பொழிகிறது என்று சுலபமாக நாம் சொல்லி விடுகிறோம். ஆனால் விஞ்ஞான ரீதியில் இதற்கு விளக்கம் இன்னும் தெளிவாகக் கிடைக்கவில்லை. வாயு மண்டலம் காற்றுப் பகுதி. நீராவியும் வாயுவே. நீரானது வாயு வடிவத்தில் மேகமாக நின்றால் போதுமா? ஜல வடிவத்தில் நமக்குக் கிடைக்க வேண்டுமே! வாயு எப்படி ஜலமாக மாறுகிறது? மழை என்பது என்ன? மழை ஏன் பெய்கிறது? இவற்றுக்குத் தெளிவான, திட்டவட்டமான விடைகள் விஞ்ஞான ரீதியில் இன்னமும் கிடைக்கவில்லை. மேகங்களில் வாயு வடிவத்தில் உள்ள நுண்ணியநீர்த் திவலைகளை மழையாகப் பொழியச் செயற்கை முறையில் பிரயத்தனங்கள் செய்யப்பட்டு வருகின்றன. இன்னும் பூரண பலன் கிடைக்கவில்லை.

அதே போல், இடியும் மின்னலும் ஏன் தோன்றுகின்றன, எப்படி உண்டாகின்றன, என்பவை தெளிவு பெறாத விஷயங்கள். உதாரணமாக, சென்னைக் கடற்கரையோரப் பகுதியில் இடியும் மின்னலும் மிகுதியாகத் தோன்றுகின்றன. மேற்கு மலைப் பகுதியாகிய கேரளத்தில் மழை மிகுதியாகப் பெய்கிறது. இதற்கு இடையிலுள்ள மைசூர் பிராந்தியத்தில் மழை இல்லாவிட்டாலும், காற்றும் மப்பு மந்தாரமும் அதிகம். பருவ மழையும், பிரதேச அமைப்பும் இவற்றுக்குக் காரணமெனச் சொன்னாலும், மின்னல் இடி முதலிய வானிலைத் தோற்றங்கள் விளக்கம் பெறாதவையே.

வானிலை மாறுதல்களில் வாயு மண்டலமும் மேக மண்டலமும் எவ்வளவு முக்கியமான பங்குகொள்கின்றனவோ, அதேபோல் சமுத்திரங்களுக்கும் பெரும் பங்கு உண்டு. உதாரணத்துக்கு Gulf Stream என்று நமக்கெல்லாம் தெரிந்திருக்கும் உஷ்ணக் கால்வாயை எடுத்துக் கொள்வோம். பூமத்திய ரேகைப் பகுதியில் மெக்ஸிகோவிலிருந்து சமுத்திர ஜலத்தின் அதிக உஷ்ணத்தை இக்கால்வாய் குளிர்பகுதிகளான இங்கிலாந்து, நார்வே, ஸ்வீடன் பிரதேசங்களுக்குப் பரவச் செய்யாமல் போனால், என்ன ஏற்படும் என்று சிந்தித்துப் பாருங்கள். பூமத்ய ரேகைப் பகுதியில் சமுத்திர ஜலம் கொதி நீர் நிலையில் இருக்கும். வட துருவப் பிரதேசங்கள் உயிர்ச் சின்னங்களே இல்லாத மயானவெளி போலக் காட்சி அளிக்கும். வெப்பத்தையும், குளிர்ச்சியையும் இடம் விட்டு இடம் பரவச் செய்து, சம நிலையில் வைத்திருக்கும் விசித்திரம் ஒன்றே நீர் நிலையங்கள் வானிலை விஞ்ஞானத்தில் எவ்வளவு முக்கியத்வம் பெற்றுள்ளது என்பதைக் காட்டுகிறது.

இவற்றையெல்லாம் கல்லூரி மாணவர்களின் பிரச்னைகள் என்று உதாசீனமாகத் தள்ளிவிடக் கூடாது. நம் தினசரி வாழ்க்கையைப் பாதிக்கக்கூடிய இத்துறையில் நமது சம்பிரதாயமான மனப்பான்மையைச் சற்று மாற்றிக்கொள்ள வேண்டும். வானிலை விஞ்ஞானத் துறையில் புது கண்டுபிடிப்புக்கள் நார்வே, ஸ்வீடன் போன்ற நாடுகளிலிருந்துதான் வரவேண்டும் என்று எண்ணுவதை விட்டு, நமது நாட்டில், குறிப்பாகத் தென்னாட்டிலிருந்து ஏற்படக்கூடும் என்று கருதி, அதற்கான முயற்சிகளை மேற்கொள்ளவேண்டும்.

வானிலையைக் கொண்டே பார்த்தால் பாரத நாடு புண்ணிய நாடு என்றே சொல்ல வேண்டும். நாம் இங்கே வசிப்பதற்குப் புண்ணியம் செய்திருக்கிறோம். நாட்டின் அமைப்பு வானிலை ரீதியில் எல்லா வசதிகளுடனும் அமைந்திருக்கிறது. இந்துமகாசமுத்திரத்துக்கு மத்தியிலும், திபேத்திய பீடபூமிக்குத் தெற்கிலும் நம் நாடு அமைந்திருப்பதால் தென்மேற்குப் பருவக் காற்றும் வடகிழக்குப் பருவக்காற்றும் நமக்குச் சுபிட்சத்தை அளிக்க முடிகிறது. திபேத்திய சமவெளி நிர்மலமான வானவெளியைக் கொண்டது. நக்ஷத்திரக் கூட்டங்கள் கண் சிமிட்டும் அழகை ரசிக்கலாம். ஆனால் அங்கே மழை மிகக் குறைவு. மழை எல்லாம் இந்தியப் பகுதியில்தான் பெய்கிறது. அதனால்தான் இங்கே மக்கள் பெருக்கம்கூட அதிகம்! இந்திய தேசத்தின் இரண்டாயிரம் ஆண்டு சரித்திரத்தையே இந்திய வானிலைதான் நிர்ணயித்துள்ளது என்றுகூடச் சொல்லலாம்.

வானிலைத் துறையில் பல ஆராய்ச்சிக் கூடங்களும் சாதனங்களும் நிரம்பி இருப்பினும் இந்தத் துறையில் விரிவான ஆராய்ச்சிக்கு நிறைய இடமிருக்கிறது.

# சொற்சுவையும் பொருட்சுவையும்

கி.வா. ஜகந்நாதன்



கவிஞன், கவிதை என்னும் அற்புதப் படைப்பைச் சொல்லாலும், பொருளாலும் செய்கிறான். அறு சுவையுடைய பலவகைச் சிற்றுண்டிகளை வெவ்வேறு பண்டங்களைக் கொண்டு அடுத் தொழிலில் வல்லுநன் சமைக்கிறான். ஆனால் ஒன்பது சுவையுடைய கவிதையை இரண்டே பண்டங்களைக் கொண்டு கவிஞன் சமைக்கிறான். இதைவிட வியப்பைத் தரும் செய்தி வேறு இல்லை. அந்த இரண்டு பண்டங்களே சொல்லும் பொருளும். உலகத்தில் உள்ள எல்லா மொழியிலும் கவிதை உண்டு. அந்தக் கவிதைகளில் எல்லாம் சொல்லும், பொருளும் ஆகிய இரண்டு பண்டங்களே ஒன்பது சுவையையும் தருவதைப் பார்க்கிறோம். சொல்லையும் பொருளையும் ஆளும் வகையில் கவிஞன் அந்தச் சுவையை எழுப்புகிறான். இத்தனை காலமாக ஆயிரக் கணக்கான கவிஞர்கள் புதிய புதிய சுவையை எழுப்பிக் கொண்டே வருகிறார்கள். அந்த இரண்டு பொருளுக்கு மேலே வேறு ஒன்றையும் சேர்ப்பதில்லை.

சொல்லும் பொருளும் சேர்ந்து அமைந்த கவிதைகளில் சில, சொல்லினால் வரும் இன்பமும், சில பொருளினால் வரும் இன்பமும் தனித் தனியாகக் கிடைக்கும் வகையில் அமைந்திருக்கும். சொல்லின்பம், பொருளின்பம், சொற்பொருள் இன்பம் என்று இந்த இன்பத்தை மூன்று வகையாகக் கொள்வதும் உண்டு. சொல் இன்பம் என்பது குறிப்பிட்ட சொற்களால் வரும் சுவை. அந்தச் சொற்களை வேறு மொழியில் மாற்றி யமைத்தால் அந்தச் சுவை இராது; அல்லது அதே மொழியில் உள்ள வேறு சொல்லை அமைத்தாலும் இராது. சிலேடை முதலிய அமைப்புக்கள் சொல்லின்பத்தைத் தருபவை. பொருளின்பம் என்பது கவிதையிலுள்ள கருத்தினால் விளைகிற இன்பம். இதை ஒருவாறு பிற மொழியில் அமைத்தாலும் ஓரளவு புலனாகும். என்றாலும் மொழிபெயர்ப்பினால் கவிதையின் முழுப் பொருள் இன்பமும் வரும் என்று சொல்ல இயலாது.

ஒரு மலர் தோன்றும்போது தனக்கே உரிய அமைப்புக்கள் எல்லாம் ஒருசேர அமைந்தாற்போல, கவிதையும் கவிஞனிடத்தில் மலரும்போது தனக்கென்று அமைந்த அமைப்புக்கள் எல்லாவற்றையும் பெற்று முழு வடிவமாக வருகிறது. செயற்கை மலரை அமைப்பவன் காம்பைத் தனியாகவும், இதழைத் தனியாகவும் அமைத்து, பின்பு அவற்றை எல்லாம் இணைத்து அதில் மணத்தையும், நிறத்தையும் ஊட்டுவான். ஒவ்வொன்றும் தனித் தனியாக இருக்க அவற்றை யெல்லாம் இணைத்து அமைக்கின்ற கைத்திறனால் செயற்கை மலரைச் செய்கிறான். செயற்கைத் தாமரை (Fabricated Lotus) இயற்கையில் வளர்வது போன்றது அன்று. இயற்கைத் தாமரை மலரிலோ மலரும்போதே அதற்குரிய மணமும், மென்மையும், தண்மையும், வண்ணமும், எழிலும் மலர்கின்றன. எல்லாம் ஒருசேர அமைந்து முழுமை பெற்று விடுகின்றன. கவிதையும் கவிஞன் உள்ளத்தில் தோன்றி வெளிவரும்போதே எல்லா வகை எழிலும் ஒருங்கே அமைய மனத்தைக் கொள்ளை கொள்ளும் வண்ணம் விளங்குகிறது.

சில புலவர்கள் சொல்லின்பத்தைச் சிறப்பாக வைத்துக் கவிதை இயற்றுவார்கள். கவிதை சிறப்பது சொல்லின்பத்தினால் அன்று. பொருளின்பமும் சேர்ந்து நிற்பதனால்தான் கவிதை உயர்ந்த தரத்தைப் பெறுகிறது. காளமேகம் போன்ற ஆசு கவிகள் சொற்களைக் கொண்டு சிலம்பம் விளையாடுகிறார்கள். சிலேடை, மடக்கு, யமகம் முதலிய அலங்காரங்களை வைத்துச் சொற்கள் இன்பம் தரும்படி செய்கிறார்கள் அவர்கள். அவை மிகச் சிறந்த கவிதை என்று சொல்ல இயலாது. ஆனாலும் கவிஞர்களுடைய சாமர்த்தியத்தை அவை புலப்படுத்தும். வளம் நிரம்பிய சொற்களை ஆளும் திறமையும், அவற்றை வெவ்வேறு பொருள்பட அமைக்கும் ஆற்றலும், சமயத்திற்குத் தகுந்தபடி சாமர்த்தியமாகப் பொருளையும் சொல்லையும் இணைக்கும் தகுதியும் அத்தகைய புலவர்களிடம் நிரம்பி யிருக்கின்றன. பொருள் இன்பம் தோன்றும்படி பாடும் கவிஞர்களோ தம்முடைய கவிதையில் உணர்ச்சியைக் கோலம் செய்து உள்ளத் தடத்தில் ஓர் ஓவியத்தை எழுப்புவார்கள். அந்தப் பொருளுக்குள் நாம் ஈடுபட்டு விட்டால் நம்மை மறந்து விடுவோம். சொல்லின்பம் காட்டும் கவிதைகளில் நாம் தனியே நின்று சொல்லைப் பார்த்துக் கொண்டிருப்போம். பொருளின்பம் நிரம்பிய கவிதைகளிலோ அந்தப் பொருளோடு பொருளாகக் கலந்து ஒன்றாகி நம்மை மறந்து நிற்போம். சொல்லின்பம் நிரம்பிய பாடல்களில் தோன்றுவது சொல்லின் சிறப்பு. பொருளின்பம் நிரம்பிய பாடல்களில் நம்மையும் மறந்து அநுபவிக்கும் ஓவியக் காட்சி இருக்கும். சில பாடல்களில் இந்த இருவகை அமைதியையும் பார்க்கலாம். இப்போது ஓர் உதாரணத்தை இங்கே கவனிக்கலாம்.

ஃ ஃ ஃ

அழகர் கலம்பகம் என்ற நூலைக் கவிராச பண்டிதர் என்னும் புலவர் இயற்றினார். அதில் ஒரு பாட்டு. அதன் முற்பகுதியில் சொல்லின்பமும், பிற்பகுதியில் பொருளின்பமும் இருக்கின்றன. சொல்லின்பத்தில் மடக்கு, சிலேடை முதலியவற்றை ஆள்கிறார் புலவர்.

பிரமனைப் பற்றிச் சோலைமலையில் எழுந்தருளி இருக்கும் சுந்தரராஜப் பெருமானிடம் முறையிடுவதாக அமைந்துள்ளது பாட்டு: "எம்பெருமானே, உன்னுடைய பிள்ளையாண்டானாகிய பிரம்ம தேவர் என் தலையில் எதை எதையோ எழுதிவிட்டாரே. என் நாக்கில் உன் திருநாமம் ஆகிய அரி என்பதை

## ஏட்டு வீட்டுத் தீபாவளி!
















எழுதக் கூடாதா?'' என்று முறையிடுகின்றார் புலவர். அந்த முறையீட்டைச் சொல்லின் ஜாலங்கள் அமைய அமைக்கிறார்.

> மலைக்குமேல் மலைவிளக்காம் அழகா, வேத
> வான்குதலை நான்குதலை மகனார் வானா
> தலைக்குமேல் எழுதுகின்றார்; அரியென் றெங்கள்
> தாலத்தின் மேலெழுதச் சமர்த்தி லாரோ?

'மலைக்கு மேலே மலை விளக்குப் போட்டாற்போலச் சோதி தோன்றும்படி எழுந்தருளியிருக்கும் அழகனே, எப்போதும் வேதத்தைக் குதலை மொழி போலப் பேசிக் கொண்டிருக்கும் நான்கு தலையுடைய உன்னுடைய மகனார் ஆகிய பிரம்ம தேவர் யாதொரு பயனுமின்றி எங்களுடைய தலைக்கு மேலே எழுதுகின்றார். அதை விட்டு விட்டு எங்களுடைய நாக்கில் அரி என்று எழுதும் சாமர்த்தியம் இல்லாதவரா அவர்?' என்பது இதன் பொருள்.

> வேத வான்குதலை நான்குதலை மகனார்

என்பதில் மடக்கு இருக்கிறது. எசமான் ஒருவனிடம் அவனிடத்தில் ஏவல் செய்கிற சேவகன் அந்த எசமானனின் பிள்ளையைப் பற்றிக் குறை சொல்லுகிறான். சொல்லும்போது அந்தப் பிள்ளையாண்டானிடம் உள்ள கோபம் அவன் பேச்சில் ஒலிக்கும். அதே சமயத்தில் மரியாதையும் இருக்கும். அந்த முறையில் பிரம்ம தேவனைப் பற்றிக் குறைகூற வந்த புலவர், அவன் சுந்தரராஜப் பெருமானின் குமாரன் ஆகையால் கோபத்தோடு பேசும்போதே மரியாதையும் பிசகாமல் பேசுகிறார்: 'மகனார்' 'எழுதுகின்றார்' என்கிறார்.

> வானா தலைக்குமேல் எழுதுகின்றார்

என்பதில் இரு பொருள் இருக்கிறது. பயன் இல்லாமல் எழுதுகின்றார் என்பது ஒரு பொருள். வானைப் போல என் தலையில் எழுதுகின்றார் என்பது மற்றொரு பொருள். வாழ்வினையிலும் நல்லது பொல்லாதது ஆகிய இரண்டும் நடக்கின்றன. ஆனால் தலைவிதி என்று சொல்லும்போதெல்லாம் தீய அனுபவங்களையே எடுத்துச் சொல்லுகிறோம். ஆகையால் தலைவிதி வானாக நின்று கழுத்தை அறுக்கிறது என்று சொல்வாரைப் போலக் கூறுகிறார்.

> வானா தலைக்குமேல் எழுதுகின்றார்

'வேண்டாத இடத்தில் வேண்டாத எழுத்தை எழுதுகின்ற உன் பிள்ளை, பள்ளிக்கூடத்திற்குச் சென்று அரிச்சுவடியில் அரி என்று எழுதச் சாமர்த்தியம் இல்லாதவராய் இருக்கிறாரே. பனை ஓலையில் அரி என்று எழுதக் கூடாதா?' என்ற பொருளும் தோன்றும்படி

> அரியென்றெங்கள், தாலத்தின் மேல் எழுதச் சமர்த்திலாரோ?

என்று சொன்னார். தாலம் என்ற சொல்லுக்கு நாக்கு என்றும், பனை என்றும் பொருள் உண்டு. எழுத ஆரம்பிக்கின்றவர்கள் 'அரி: ஓம்' என்று தொடங்குவது வழக்கம். பழங்காலத்தில் பனை ஓலையில் அப்படி எழுதுவார்கள். 'அரிச்சுவடியின் முதல் வார்த்தையையே எழுதாமல் என் தலையில் வீணாக எழுதுகின்றானே' என்று கோபத்தோடு பேசுவதுபோல அமைந்திருக்கிறது பாட்டு. 'வானா', 'தாலம்' என்ற இரண்டு சொற்களுக்கும் இரண்டு வேறு பொருள்கள் தோன்றுகின்றன. 'தலைவிதி காரணமாக நான் துன்புறுகிறேன். உன்னுடைய திருநாமத்தைச் சொல்லும் ஆற்றல் எனக்கு இல்லை' என்பதை இப்படிச் சமத்காரமாக பிரமனுடைய செயலாக வைத்துப் புலவர் சொன்னார். அதே சமயத்தில் 'உன்னுடைய பிள்ளை அறியாமையால் செய்ய வேண்டியதைச் செய்யாமல் இதைச் செய்கிறான்' என்று குறை கூறுவதாகவும் அமைந்திருக்கிறது பாட்டு. இந்தப் பகுதியில் ''வேத வான்குதலை நான்குதலை'' என்ற மடக்கும், ''மகனார்'' என்ற சொற் பிரயோகமும், ''வானா, தாலம்'' என்ற இரு பொருள் தரும் சொற்களும் சொல்லின்பத்தை உண்டாக்குகின்றன. வேறு சொற்களால் இந்த இன்பத்தை உண்டாக்க முடியாது. ஆகவே இந்தப் பகுதி முழுவதும் சொல்லின்பம் நிரம்பியது. இது புலவருடைய சொல் சாதுரியத்தைக் காட்டுவது.

இனி அடுத்த பகுதியைப் பார்ப்போம். அந்தப் பகுதியில் சொல்லைவிடப் பொருளுக்குச் சிறப்பு மிகுதி. சொற்கள் பொருளைத் தந்தாலும் அவை வெறும் கருவி மாத்திரமாக நிற்கின்றன.

> அலைக்குமேல் உடுமலரா மிதக்கும் காலம்
> ஆலம்ஒன்று காயாம்பூ மலர்தாற் போற்பச்
> சிலைக்குமேல் இருக்கண்வளர் அனந்தா னந்தா
> இருக்கில்இருக் கும்பொருளே எம்பி ரானே

என்பது அது. [இருக்கில் — வேதத்தில்.]

இங்கே ஓர் அழகிய சித்திரத்தைப் புலவர் காட்டுகிறார். உலகம் எல்லாம் கடலில் மூழ்கியிருந்தது. எல்லா இடத்தும் பிரளய வெள்ளம் நிறைந்திருந்த காலத்தில் அந்தக் கடல் வெள்ளத்தின்மேலே ஆலிலையில் திருமால் படுத்துக் கொண்டிருந்தார் என்பது புராண வரலாறு. அதனை நினைக்கிறார் புலவர். பிரளய கால வெள்ளம் என்றாலே நமக்கு அச்சத்தை உண்டாக்குகிறது. புலவரோ அச்சத்தைத் தருகின்ற அந்தக் காட்சியை அழகு நிறைந்த காட்சியாக மாற்றி விடுகிறார்.

ஆற்றங்கரையில் குடியிருப்பவர்களுக்கு ஒரு காட்சி நினைவு இருக்கும். புது வெள்ளம் வரும்போது கரைகளில் இருக்கும் மரங்களிலுள்ள பூக்கள் அதில் உதிர்ந்து மிதந்து வரும். இங்கே எங்கும் புது வெள்ளம் வந்திருக்கிறதாம். அதில் வெள்ளைப் பூக்கள் மிதக்கின்றன. அவற்றின் நடுவிலே பச்சைப் பசேல் என்ற ஓர் ஆலிலை மிதக்கிறது. அந்த ஆலிலையைக் கூர்ந்து பார்த்தால் அதன் மேல் ஒரு காயாம்பூ நீல நிறம் ஒளிரக் கிடக்கிறது. இப்படி மலரும் இலையுமாகப் புது வெள்ளக் காட்சியைக் காட்டுகிறார் புலவர். நட்சத்திரங்கள் எல்லாம் உதிர்ந்து பிரளய வெள்ளத்தில் வெள்ளை மலர்களைப் போல மிதக்கின்றனவாம். அதன் நடுவே ஆலிலையில் கண்ணன் படுத்திருக்கிறான். அவன் காயாம்பூ நிற மேனியன் அல்லவா? அதைத்தான் சொல்கிறார்.

**இருக்கண் வளர் அனந்தா னந்தா**
**இருக்கில்இருக் கும்பொருளே எம்பி ரானே**

என்னும் இடத்தில் கொஞ்சம் சொல்லின்பத்தைக் கொண்டு வருகிறார்; சொற்களை மடக்கும்படி செய்திருக்கிறார். ஆனால் அதற்கு முன்புள்ள பகுதி புது வெள்ளத்தில் இலையையும், மலரையும் மிதக்க விட்டுக் காட்டுகிறது. அந்தப் பகுதியைப் படிக்கும்போது சொற்கள் நமக்கு நினைவுக்கு வரவில்லை. வெள்ளத்திடையே மலர்கள் மிதப்பதும், அவற்றினிடையே ஆலிலை மிதப்பதும், அதன்மேல் காயாம்பூ அழகு ஒழுகக் கிடப்பதும் ஓவியமாகத் தோன்றுகின்றன. சொல்லுக்கு அப்பால் நின்று அந்த ஓவியத்திலே நாம் மனம் லயித்து நிற்கிறோம். அங்கே சொல்லைப் பற்றிய எண்ணமே வரவில்லை. சொல்லின் வழியே பொருளைத் தெரிந்து கொண்டாலும் கரும்பின் சுவையை நுகர்ந்த பிறகு சக்கையைத் துப்பிவிடுவது போலச் சொல்லை மறந்து விடுகிறோம். இதுதான் பொருளின்பம்.

இப்பொழுது பாட்டு முழுவதையும் பார்ப்போம்:

**மலைக்குமேல் மலைவிளக்காம் அழகா, வேத**
**வான்குதலை நான்குதலை மகனார் வானத்**
**தலைக்குமேல் எழுதுகின்றார்; அரியென் றெங்கள்**
**தாலத்தின் மேலெழுதச் சமர்த்தி லாரோ?**
**அலைக்குமேல் உடுமலரா மிதக்கும் காலம்**
**ஆலம்ஒன்று காயாம்பூ மலர்ந்தாற் போற்பச்**
**சிலைக்குமேல் இருக்கண்வளர் அனந்தா னந்தா.**
**இருக்கில்இருக் கும்பொருளே, எம்பி ரானே!**

இந்தப் பாடலில் முன் பகுதியில் சொற்சுவையும், பின் பகுதியில் பொருட் சுவையும் இணைந்து அமைந்திருப்பதைப் பார்க்கிறோம். சொற்சுவையைத் தரும் பகுதியில் மடக்கு, சிலேடை முதலிய சொற் சாதுரியங்களைப் புலவர் அமைத்திருக்கிறார். பொருட் சுவை அமைந்த பகுதியிலோ சொல்லுக்கு அப்பாலே சிறந்த ஓர் ஓவியம் அமையும்படி பாட்டைப் பாடியிருக்கிறார். முதலாவது பகுதி அறிந்து இன்புறுவதற்குரியது. ஆனால் அதை விடப் பன்மடங்கு சுவையைத் தந்து இன்பக் கடலில் ஆழ்த்துகின்றது பின்னால் உள்ள பகுதி.

# தெய்வயானைத் திருமணம்

வள்ளித் திருமணம் கதையாகவும், ஹரிகதையாகவும், கவிதையாகவும், நாடகமாகவும், பேசும் படமாகவும் பரவியிருக்கிறது. காதலும் விளையாட்டும், சாகஸமும் மிகுந்த களவுத் திருமணமானதால் வள்ளித் திருமணத்துக்குத் தனி மவுசு. வள்ளி நமது தமிழகச் செல்வி என்பது தலையான காரணம். ஆனால் இந்தத் தமிழகத்தையே தேடி வந்து திருப்பரங்குன்றத்தில் முருகனை மணந்த வானவர்களின் அரசிளங் குமரியான தெய்வயானையின் திருமணத்திலும் ஒரு தனிச் சிறப்புண்டு. பெருமான் அவளை மணந்த பரங்குன்றத்தைத்தான் படை வீடுகளில் முதலாவதாக வைத்திருக்கிறார்கள். இந்திரனுக்கு இன்னலிழைத்த சூரனை மாய்க்கவே அவதரித்த முருகன், சூரசம்ஹாரம் ஆனவுடன் இந்திரன் அளித்த ஏந்திழையாளை மணம் புரிந்து கொண்டதில் தனியானதொரு நிறைவு உண்டு.

பொன்னாட்டில் வளர்ந்த தேவகுஞ்சரி மண்ணாட்டின் மலை மீது அடியெடுத்து வைப்பதைக் கசிந்து பாடுவார் கச்சியப்பர்:

கல்லுயர் பொருப்பினிடை காமரடி செல்ல
அல்லைகொல் என்றுமணி நூபுரம் அரற்ற
மெல்லிடை வருந்துமென மேகலை இரங்க
எல்லவரும் உள்மகிழ எம்மனை நடந்தாள்
பஞ்சிதனின் மெல்லடி பனிப்பவரை யின்பால்
குஞ்சரி நடந்த செயல் கூறுபுது மைத்தோ?

குன்றத்தில் நடந்து கன்றிய அவளது பஞ்சினும் மெல்லிய அடிகளைப் பற்றி முருகப் பெருமான் அம்மி மிதிக்கச் செய்தான்:

சிலையிடை மன்னவன் சீறடி தந்தான்
மலரயன் உச்சியின் மேலடி வைத்தான்.

பிரம்மாதி தேவர்கள் சிரத்தில் மீது தனது பாதத்தைச் சூட்டும் பெருமான் தேவயானையின் பாதத்தைப் பற்றி அம்மி மீது வைத்தானாம்! பரமனும் பார்வதியும் இந்திரனும் இந்திராணியும் மாதவரும் முனிவரும் சிவகணமும் பார்த்திருக்க சாஸ்திரோக்தமாகக் கந்தன் புரிந்துகொண்ட மணம் இது. ஓவியர் விஜயின் கைவண்ணத்தில் குழைவு, களிப்பு, அன்பு இவற்றோடு இந்த வைதிகமும் கமழ்கிறது.

## அட்டைச் சித்திரம்



# ஆன்மஜோதி அரவிந்தர்

*திலீப்குமார் ராய்*

மகாயோகியான அரவிந்த முனிவரின் பெருமையை நானிலம் அறியும். அவரைக் குறித்து இங்கு எழுதும் ஸ்ரீ திலீப் குமார் ராய் அவர்கள் கண்ணனின் பரம பக்தர். பூனாவில் ஹரிகிருஷ்ண மந்திரத்தில் அல்லும் பகலும் சங்கீர்த்தனம் செய்து கான லோலனான கண்ணனை வழிபடுவதே வாழ்வாகக் கொண்ட அவர், தமக்கு நன்கு பரிசயமான புண்ணிய புருஷரைப் பற்றி எழுதுகிறார்.



மனிதன் என்பவன் பரிதாபத்துக்குரிய ஒரு ஜீவராசியாக வாழ்வதற்கே விதிக்கப்பட்டவன்; காணாத சக்திகளின் கைப் பாவையாக விதி செலுத்தும் வகையிலேயே செல்ல வேண்டியவன் அவன்; பாரம்பரியம் அவனைச் சூழ்ந்து கட்டுப்படுத்தும்; மாயைகள் அவனை மயக்கும்; அறியவொண்ணாத, எதிர்க்கவொண்ணாத சக்தியினால் எப்போதும் மனமுடைந்து போவதற்கே ஏற்பட்டவன் மானுடன் — இப்படியெல்லாம் அடிக்கடி சொல்லப்படுவதுண்டு.

ஸ்ரீ அரவிந்தரின் வாழ்க்கை இக்கருத்துக்களை அடியோடு நிர்மூலமாக்குகிறது. அவர் ஜோதிமயமான ஓர் ஆன்மா. தமது காலத்துத் தத்துவ ஞானிகளிடையே, கவிஞர்களிடையே தலைசிறந்ததோர் இடம் பெற்றவர் அவர்.

ஃ ஃ ஃ

அரவிந்தருடைய தந்தைக்கு வாலிபத்திலிருந்தே ஆங்கில நாகரிகத்தில் ஈடுபாடு. அவர் இந்தியப் பண்பாட்டை இகழ்ந்து வந்தவர். எனவே, தமது மகன் அரவிந்தனுக்கு ஏழாவது வயது நடக்கும்போதே, பிள்ளையை லண்டனுக்கு அனுப்பி விட்டார்.

ஆனால் அந்தப் பிள்ளையோ எல்லாருக்கும் புரிபடாத வஸ்துவாக இருந்தது. இங்கிலாந்திலிருந்து திரும்பிய அரவிந்தர் உறுதி வாய்ந்த சுதேசியவாதியாகத் திரும்பினார்! அதோடு மட்டுமின்றி, விரைவிலேயே முன்னணியில் உள்ள புரட்சிவாளரானார்! பிற்பாடு மகாயோகியாகவும் ஆனார்! மாபெரும் புலமை பெற்று, வேதங்களுக்கு விரிவுரை எழுதிப் பண்டிதர்களையும், சநாதன வேத நிபுணர்களையும் பிரமிக்கச் செய்தார்!

இந்தியாவின் உன்னதப் பெருமையையும், புராதன ஞானத்தையும் அழுத்தமாக வலியுறுத்தும் பல ஆழ்ந்த ஆராய்ச்சி நூல்களையும் வேதாந்த கிரந்தங்களையும் எழுதியவர் அரவிந்தர். இவர் இந்தியாவுக்குத் தமது இருபத்தியோராவது வயதில் திரும்பும்போது இவருக்கு எந்த இந்திய மொழியும் தெரியாது என்பது குறிப்பிடத் தக்கது. ஆயினும், வெகு விரைவிலேயே இந்தியாவுக்குரிய தனி மார்க்கத்தில் ஈடுபடலானார். கண்டனங்களைப் பொருட்படுத்தாமல் முன்னேறினார். வேதம் கூறும் ஆன்மிகத்தையும், சம்ஸ்கிருத மரபையும் முழுங்கும் உண்மையான ஆதராக முதிர்ச்சியுற்றார். இம்முதிர்ச்சி இவருக்கு இயல்பாகவே வாய்த்தது. 1924ல் எனக்கு ரோமைன் ரோலாங் பின்வருமாறு எழுதினார்: ''ஸ்ரீ அரவிந்தரைப் பற்றி நான் எவ்வளவு அறிந்திருக்க வேண்டுமோ அவ்வளவுக்கு அறிந்திருக்கவில்லை. என்றாலும், நான் அவரை அறிந்துள்ள சிறிய அளவே உலகின் மிக உயர்ந்த ஆன்ம சக்திகளுள் ஒன்று அவருள் உறைவதைக்காட்டிக் கொடுக்கப் போதுமானதாக உள்ளது.'' இந்தியா என்ற பத்திரிகையில் அவர், ''இந்தியருக்குள் பிரபஞ்சம் முழுவதையும் தழுவும் ஒரு பண்பாட்டைப் பெற்றவர் அரவிந்தரே என்பதில் ஐயமில்லை'' என்கிறார்.



கட்டுரை ஆசிரியர்

ஃ ஃ ஃ ஃ

ஆம், அவர் உலகம் தழுவும் எல்லாப் பண்புகளையும் ஒருமிக்கப் பெற்றவர் — கிரேக்க மொழி, லத்தின், ஜெர்மன், சம்ஸ்கிருதம் யாவற்றின் மீதும் நாட்டம் பெற்றவர். இந்தியா ஒன்றுக்குள்ளேயே பல பண்பாடுகள் ஒருமித்துள்ளன அல்லவா? அரவிந்தர் பல நாட்டு மொழியறிவில் பெற்ற பண்புகளே இந்த இந்தியப் பண்பாடு முழுமையாக்கிற்று. இங்கிலாந்தில் அவர் லத்தின், கிரீக் மட்டுமின்றி ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன், இத்தாலிய மொழி ஆகியவையையும் பயின்றார். இந்தியாவுக்கு வந்து சம்ஸ்கிருதத்துடன் வங்காளி, குஜராத்தி, தமிழ் ஆகியன கற்றார்.

ஃ ஃ ஃ ஃ

ஆரம்பத்தில்மிதந்த ஈடுபாடுள்ள புரட்சியாளராக இருந்த அவர், அரசியலில் அதிதீவிரவாதிகளுக்குத் தலைமை வகித்து, வாழ்வில் பல ஆபத்துக்களை எதிர்கொண்டார். சிறையும் புகுந்தார். சிறையில் இரவு பகல் தியானம் புரிந்தார். கண்ணனின் கருணை அவரை வந்து தொடும் வரையில் தியானம் நீடித்தது. ''ஆன்மிக நாட்டம் ஒன்றிலேயே வாழ்வைப் புனிதமாக்கிக் கொள்வாய்; கீதையைப் போதிப்பாய்'' என்றான் கண்ணபிரான். தமது குருவான ஸ்ரீ கிருஷ்ணனைக் கண்டு உரையாடியது பற்றி அரவிந்தர் நெஞ்சை நெகிழ்விக்கும் முறையில் குறிப்பிடுகிறார்: '' 'என்னுடைய பணிக்குத் தேவையானபடி உனக்கு உபதேசிக்க விரும்பியே நான் உன்னை இங்கு கொண்டு வந்து சேர்த்திருக்கிறேன்' என்று கிருஷ்ணன் என்னிடம் கூறினான். பிறகு என் கரங்களில் கீதையை வைத்தான். அவனது சக்தி என்னைச் சூழ்ந்து வியாபித்தது. முற்காலத்தில் அவன் தனது சீடன் அர்ஜுனனிடம் எதைஎதிர்பார்த்தான் என்பதும், எக்காலத்திலும் அவன் தனது ஆணையைச் செய்ய ஆர்வமுடையோரிடம் அதை எதிர்பார்க்கிறான் என்பதும் எனக்குப் புரிந்தன.''

ஃ ஃ ஃ

அந்த ஆணைக்கு அடிபணிந்தே அரவிந்தர் பாண்டிச்சேரிக்குச் சென்று தங்கினார். அங்கு அவரது ஆசிரமத்தில் நாற்பதாண்டுகள் யோகம் புரிந்து, சாதனையின் உச்சத்தை எய்தினார். இதனை இவர் ஜொலிக்கும் நடையில் பற்பல நூல்களில் விளக்கியுள்ளார். இவற்றுள் வசன நடையில் தலைசிறந்தது 'தெய்விக வாழ்வு' (The Divine Life) கவிதையில் தலைசிறந்தது 'ஸாவித்திரி'. இந்த மகாகாவியத்தில் இவர் பிரதிபா சக்தியின் சிகரத்தைத் தொட்டு விட்டார்.

அரவிந்தரது ஒளி பொருந்திய உருவையும் விரிந்த அறிவையும் சலியா ஊக்கத்தையும் மகோன்னதமான மேதையையும் பற்றி எவ்வளவு எழுதினாலும் போதாது. இவைதாம் நான்கு கண்டத்திலுமுள்ள பல சாதகர்களையும் சீடர்களையும் பாண்டிச்சேரியில் அவர் ஸ்தாபித்த ஆசிரமத்துக்கு ஈர்த்தன. ஏகாந்த தியானத்தை விட்டு வெளிவந்து, நாட்டின் விடுதலை இயக்கத் தலைமையில் இடம் பெறுமாறு முன்பெல்லாம் இந்திய தேசியக் காங்கிரஸ் தலைவர்கள் அவரிடம் கேட்டுக் கொண்டதுண்டு. ஆயினும் அவர் மறுத்தே வந்தார். ஆன்ம வேட்கைக்கே தம்மை அர்ப்பணித்துக் கொண்டார். ''தெய்விகமான சக்தியின் ஆதிக்கம் தவிர வேறெந்த ஆதிக்கத்தையும் ஏற்காதிருந்தாலே பரிசுத்தமாகலாம்'' என்று அவர் ஒரு கடிதத்தில் எழுதியுள்ளார். அரசியல்வாதிகளுக்கு மட்டுமின்றி, அவரது அபிமானிகளுக்கும்கூடச் சில சமயங்களில் அவரது இக்கொள்கை ஏமாற்றமளித்தது. ஆயினும் அவர் தம்மை ஆன்மிகத்துக்காக ஈடுபடுத்திக் கொண்டது பூரண சமர்ப்பணமாயிற்று. அதை யாராலும் மாற்ற முடியவில்லை. தமது இறுதி லட்சியம் ஒன்றை நோக்கியே வாழ்நாள் முழுதும் அவர் உயர்ந்து வந்தார். மனத்துக்கு அதீதமான வாழ்வை நுகர வேண்டும், கிருஷ்ணனின் சுவர்க்க சாம்ராஜ்யத்தை எய்த வேண்டும் என்பதே அவரது ஆன்ம யாத்திரையாகவும், கனவாகவும் இருந்தது. அக்கனவை நனவாக அநுபவிக்கவே அவர் நாளும் ஓங்கி வளர்ந்து வந்தார். 'அந்திம கவிதை'களில் (Last Poems) உள்ள ஜீவத் துடிப்பு மிகுந்த ஒரு பாடலில் அவர் கூறுகிறார்:

விண்வெளி கடந்த கண்ணனின் கழலை
அடைய விரும்பும் நான் அறிந்துவிட்டேன் —
பகவனின் இதயப் பகுதியிலே

கொடுமையும் இனிமையும் கலந்த இவ்வுலகில்
அடிவைத்து (உ)திக்கும் ஆன்மனின் பிறப்பில்
பொருளினைக் கண்டேன் இறுதியில் யானே.


ஹூ...மந்திரக்காளி... மாயக்காளி...இந்தக் குதிரைக்கு உயிர் கொடு!






உலகத்திலேயே நான்தானே அதிகமாக வரிவிதிப்பேன் ....அதுக்கு ஏனக்கு நோபல் பரிசு கொடுக்க வேண்டும்!
வரிகள்


அந்தக் கனவெல்லாம் இங்கே நடக்காது,....






சபாஷ்!

தென்றலின்
சுகம் காண







அரைக்கீரைவிதைத்
தைலம்
சந்தனாதித் தைலம்

சிறு சேமிப்பில் முதலீடு செய்யுங்கள்

Criterion-TSR-983

## பட்டாசும் வெடித்து
## இனிப்பும்
## உண்டபின்

# எது
# மிச்சம்?

# மகிழ்ச்சியான
# தீபாவளியின்
# நினைவும்
# பின்னி
# துணிகளாலான
# கவர்ச்சி மிக்க
# ஆடைகளுமே!

எந்தப் பண்டிகையானாலும் அதை நினைவில் நிறுத்தும் வகையில், எழில்மிக்க நீடித்து உழைக்கும் பின்னி துணிகளாலான ஆடையணிந்து மகிழுங்கள். நீங்கள் தேர்ந்தெடுக்கத் தரத்தில் சிறந்த பின்னி துணிகள்: 'டெரீன்' இணைந்த சூட்டிங்குகள், சட்டைத் துணிகள், நேர்த்தியான பாப்ளின், பருத்தியாலான 'ஆன்டி-க்ரீஸ்' மற்றும் 'ட்ரிப்-ட்ரை' சூட்டிங்குகள், தூயபட்டுப் புடவைகள், காட்ஸ்வால், டர்க்கிடவல்கள் மற்றும் பின்டெக்ஸ் கைநெசவுத் துணிகள் திரைச் சீலைகள். ஞாபகமிருக்கட்டும்! பின்னி துணிகளை வாங்குங்கள், உங்கள் பணத்தின் முழுமதிப்பையும் பெறுவீர்கள்.

**பின்னி-துணி உலகிலே புகழ் பெற்ற பெயர்**

பக்கிங்ஹாம் & கர்னாடிக் கம்பெனி லிமிடெட், பெங்களூர் உல்லன் காட்டன் & ஸில்க் மில்ஸ் கம்பெனி லிமிடெட், பின்னி & கம்பெனி லிமிடெட், மதராஸ் ஸ்தாபனத்தின் கிளைகள்.

# பண்டிகை துணுக்குகள்!

புன்னகை பூத்து



புத்தாடைகளை
அணிந்து



எஸ்ட்ரெலா
பாட்டரிகளைப்
புகுத்தி



மகிழ்ச்சிகரமான
விடுமுறையை
அனுபவியுங்கள்



# காமகோடியில் கனிகள் இரண்டு

கொத்தமங்கலம் சுப்பு

**திரு அவதாரம்**

ஜயஜய சங்கரா என்று ஓது
ஜனன மரண வினை அணுகாது
ஜயஜய சங்கர என்று ஓது
தர்மம் நம்மை விட்டகலாது
சகலபேருக்கும் ஜயவருஷம் — அது
சஜ்ஜனர்க்கெல்லாம் ஜயவருஷம்
சந்திர சேகர இந்திர சரஸ்வதி
சங்கரர் வந்தது ஜயவருஷம்
வேதபுராண நீதிகளோங்க
வெண்ணீறோங்க விரதமோங்க
கீதமுடன் சங்கீதமோங்க
கிருபை ஓங்கத் தவம் ஓங்க
கலியுகம் தன்னில் தருமங்களுக்கும்
காஷாயத்துக்கும் மதிப்பு ஓங்க
ஆகமசிற்பக் கலையோங்க — திரு
வாசகம் கோளறு பதிகமுடன்
ஆண்டாளின் திருப்பாவைகள் ஓங்க
அருள்மணி திருவெம்பாவை ஓங்க
இந்து மதத்தின் புகழ் ஓங்க — மத்
தெல்லா மதமும் தழைத்தோங்க
தரையிலே தவழும் குழந்தை வாயில்
ஜயஜய சங்கரர் பெயர் ஓங்க
எழுத்தாளர்களின் பேறு ஓங்க
எட்டுத் திசையிலும் தர்மம் ஓங்க
வழுத்தாதவர்கள் வாயில் சிவசிவ
மந்திரம் ஓங்க அவதரித்தார்.
விழுப்புரமாநகர் வீதியிலே — நான்
வேதம் தவழ்ந்து விளையாட
வடிவேல் முருகன் அவதாரம் செய்த
வைகாசியிலே அனுஷத்திலே
வடிவேல் முருகன் வந்ததுபோல் — திரு
வடிவம் கொண்டவர் அவதரித்தார்.
கட்டிக் கரும்பின் கணுப்போலே — தமிழில்
வெட்டிய ஒரு கணு கன்னடமே
சிட்டர்கள் ஏத்தும் குருவுக்கும்
ஒட்டிய தாய்மொழி கன்னடமே
வீட்டில் கன்னடமானாலும்
விளையாடும் தமிழ் நாவினிலே — அன்னை
ஊட்டிய பாலுடன் பக்தியையும் ஊட்டி வளர்த்
தைக்குத்தங்கக் காப்பிட்டு—உலகை[ந்தார் தாயாரே
காக்கும் பிள்ளைக்குக் காப்பிட்டார்.
ஒட்டியும் ஒட்டா முனிவருக்கு
ஒட்டியும் ஒட்டாப் பொட்டிட்டு
மாயை விலக்கும் கண்ணுக்கு
மலர்விழி அஞ்சன மையிட்டு
காணக் கூட்டம் வருமென்று
கன்னத்தில் திருஷ்டிப் பொட்டிட்டு — பவக்
கடலை நீந்தக் கத்துக் கொடுக்கும்
கருணைக் கடல் என்றறியாமல்
தரையில் குழந்தை நீந்துகதென்று
தாயார் தூக்கி முத்தமிட,
பக்தர் நெஞ்சில் தவழுபவர்
பழகிக் கொண்டார் தரை மேலே.
கைவீச்சொன்றால் உலகத்தைக்
கவர்ந்து இழுக்கும் தெய்வத்தை
கைவீசப்பா கைவீசு — கடைக்குப்
போகலாம் வீசென்பார்.
கண்ணைக் காக்கும் இமை போலே
கணவன் மனைவி இருபேரும்
புண்ணியவானைக் காப்பாற்றி — இந்தப்
புவியைக் காக்க வளர்த்தார்கள்.

**பள்ளிப் படிப்பு**

வகுப்புத் தேர்வில் முதல் பரிசெல்லாம்
வாங்கியவர் அவரே.
வாக்கு வன்மைக்கு பைபிள் பரிசும்
வாங்கியவர் அவரே
ஆர்தர் இளவரசாக நடித்தார்
அதிரண்டாம் ஆண்டில்
அடுத்த ஆண்டிலே காமகோடியின்
அரசரும் ஆனார்கள்

**குரு தரிசனம்**

பட்டம் அறுபத்தாறில் அமர்ந்த பரமகுரு நாதன்
பாதிப் பூஜையில் குழந்தையை ஒருமுறை…







பார்த்தார் திருக்கண்ணால்
பால்வடியும் திருமுகத்தில் அந்தப்
பரமனைக் கண்டாரோ?
தாய்தந்தைக்கும் பூசை பிரசாதம்
தட்டில் வைத்தளித்தார்.
சாமிநாதனைத் தன்மனத் தாமரைத்
தவிசில் வைத்துக் கொண்டார்.
''அடிக்கடி வாவா'' இங்கே என்று
அன்புடனே சொல்லி
அட்சதை போட்டார் உலகம் வாழ
அட்சதை போட்டாரே
அடிக்கடி சாமிநாதரும் சென்று
அவரை வணங்குவாராம்
ஒருநாள் பாலனைக் காணோம்
என்று உற்றார் தேடலுற்றார்
ஊரணி குட்டை குளங்களிலெல்லாம்
தேடினராம் பெற்றோர்.
அப்போது ஓர் ஆள் அங்கே வந்துன்
அருமைத் திருக்குமரன்
ஆச்சாரியாரின் மடத்தைத் தேடி
ஐந்து மைல் வந்தான்
குருநாதருடன் குழந்தை அமர்ந்து
குஷியாகப் பேசுகிறான்
குறுநகை கண்டு உலகத்துக்கே
குருவும் மயங்குகிறார்
என்றே சொல்லத் தாயும் தந்தையும்
இன்பம் கொண்டார்கள்
தந்தையும் தாயும் மைந்தனைப் பிரிந்து
தவித்தது ஒத்திகையோ?

### அபிஷேகம்

கலவை நன்றாய் இருந்தால் சந்தனக்
கட்டைக்குப் பயனுண்டு
கலவை நன்றாய்க் கலந்தால் இருக்கும்
கட்டிடம் பலகாலம்
சாந்தும் கலவை சந்தனம் கலவை
சாயுஜ்யம் கலவை
ஜீவாத்மாவும் பரமாத்மாவும் சேர்வது
தான் கலவை
கலவை என்பது சிறிது மாறினாலும்
கவலை என்றாகும்
கலவை என்னும் தல வைபவத்தை
காவியங்கள் சொல்ல
கலவை என்னும்போதே பக்தர்
கைகூப்பிக்கொள்ள
கலவை என்ற ஊரில் இருந்த
காமகோடி சுவாமி — தன்
கலவைக்கு முன்னே சுவாமிநாதனை
கடிதில் அழை என்றார்

பதின்மூன்றாண்டில் ஜகத்குருவாகப்
பட்டம் பெற்ற மகான்
பால்வடியும் திருமுகத்தோடு அன்று
பட்டம் கொண்ட மகான்
பதினாலாவதில் விஜய யாத்திரை
பண்ணத் தொடங்கினராம்
வெள்ளை நாவல் பழுக்கும் பதியில்
வீற்றிருக்கும் அன்னை
மேவும் கோயில் கட்டி முடித்தே
செட்டிப் பிள்ளைகள்
சாவன்னா ராவன்னா மானா குடும்பத்
தனவணிகக் கோமான்
ஜகத்குரு ஸ்வாமியைக் கும்பாபிஷேகம்
தனக்கே அழைத்தாராம்
பரிவுடனே குருநாதரும் சென்றார்
பல்லக்கில் ஏறி
பாலரு வாயர் ஞானசம்பந்தர்
பவனியைப் போலேதான்
கோலாகலமாய்க் கும்பாபிஷேகக்
கூட்டம் அத்தனையும்
பாலராகிய லோக குருவைப்
பணிந்திடவே வந்தார்
பார்க்கப் பார்க்கத் திகட்டாத முகம்
பால் வடியும் முகமே
பசும்பொன் மேனி பார்வை ஜீனி
பரம ஞானி என்றார்
அகிலாண்டேச்வரி அம்பிகையின் முன்
அடிவணங்கி ஸ்வாமி
அகிலாண்டத்துக்கும் அருளுரை கூற
ஐயன் புறப்பட்டார்

### வித்யாப்பியாசம்

காமகோடி பீடமென்றால்
கதைகள் யாவும் பிறக்குமிடம்








தானே வலிய வரும் கலைகள்
ஸ்வாமிகள் கற்றுக் கொண்டாராம்
வடமொழிக் கல்விக் கடலாடி
வியாகரணம் தத்துவம் மீமாம்சை
உடனே நாடக காவ்ய அலங்காரம்
உபநிடதம் புராணம் சோதிடமும்
கணிதம் கல்வெட்டாராய்ச்சி
ககனக் கோள்களின் ஆராய்ச்சி
புகைப்படக் கலையும் ஆங்கிலமும்
பொருள்நயமிக்க பிரெஞ்சு மொழி
தேவாரம் திருவாசகமும்
திருவாய்மொழியும் திருக்குறளும்
தீந்தமிழ் இலக்கிய இலக்கணமும்
ஸ்திரமாகப் படித்தாராம்
நாவார் மொழிய அருள் பொழியும்
நாதசங்கீத நுண்கலையும்
ஓதாதுணரும் குருநாதன்
உடலெடுத்தே வந்த காரணத்தால்
ஓதியுணர்ந்தார் ஒவ்வொன்றிலும்
உலகில் முதல்வர் ஆகிவிட்டார்
காவேரிக் கரை ஓரத்திலே
இராம மகேந்திர மங்கலத்தில்
ஆண்டுகள் நான்கு ஓயாமல்
அருங்கலை கற்றார் குருநாதர்

**யாத்திரை**

அந்தநாள் தீர்த்தமும் ஒன்றாகி — நீ
ராடும் மாமாங்க வருஷத்திலே
அந்தநாள் பீடம் அமர்ந்திடவே — செய்யும்
ஆசாரியர் கும்பகோணம் வந்தார்
ஆயிரம் ஆயிரம் தீபங்களாம் — மடத்தில்
ஆயிரம் ஆயிரம் பேர்க்கன்னமாம்
ஆயிரம் ஆயிரம் நாமம் சொல்லி — அன்னைக்கு
அர்ச்சனையாம் லட்ச அர்ச்சனையாம்
மாமாங்கக் கூட்டத்தில் தொண்டு செய்ய—இல்லா
மாணவர்கள் இரண்டாயிரம் பேர்
தாமே உழைத்ததைக் கண்டுவிட்டு—நெஞ்சில்
தயவு சுரந்தது தாய்போலே
பட்டீசுரத்திலே ராவுத்தருக்கு — ஒரு
பந்தி வைத்து ஸ்வாமி விருந்தளித்து
பாராட்டிப் பேசியே வெள்ளிக் கோப்பை ஒன்றைப்
பரிசு கொடுத்தாரே ஸ்வாமிகளும்

எம்மதமாயினும் சம்மதமே — அதில்
இறைவனைக் காண வழியிருந்தால்
தம்மதமே மதம் மற்றமதம் — எல்லாம்
தள்ளுபடி என்று சொல்வதில்லை.
ஆசானைச் சேவிக்க நேரம் இன்றி
ஆசாபாசத்தில் உழல்பவர்க்கு
ஆண்டவனே வந்து தரிசனம் தருவதை
அவனியில் யாரேனும் கேட்டதுண்டோ
மாமழை மேகம் வயல் தேடி — வந்து
மாரியைப் பெய்து வளர்ப்பது போல்
ஸ்வாமிகள் பக்தர் மனம்தேடி வந்து
தர்மப் பயிர் செய்யத் தானே வந்தார்
அத்தனை நித்தனைக் கண்டது போல் — அருள்
சித்தனை முத்தனைக் காண்பவர்கள்
எத்தனை எத்தனை பேர்களம்மா — சென்ற
தெத்தனை எத்தனை ஊர்களம்மா
ஊர் ஊராய் யாத்திரை வருவதனால் — நமது
உள்ளம் உயருது உயருதம்மா — ஒவ்வொரு
ஊரிலும் தங்குவதால் — நம
துள்ளத்திலே ஞானம் பொங்குதம்மா
அரவிந்த மலரடி பட்ட மண்ணில் — ஆசாரம்
தானே மலருதம்மா
குருவைத் தரிசனம் செய்யவென்று — காலையில்
குளிக்கும் குடும்பங்கள் கோடியம்மா
நீராடி மேனியில் நீறடி — நீ
முந்தி நான்முந்தி என்றோடி
ஊரே இரண்டாகு வந்ததம்மா —நம
துள்ளத்திலே பக்தி பெருகுதம்மா
சந்திரமௌளீச்வரர் பூஜை தன்னைக் கண்டு
தந்திரம் சூதை மறந்திடுவோம்
இந்திரப் பட்டம் அடைந்
ததுபோல் — நம
இன்னல்கள் யாவும் மறந்
திடுவோம்
கற்பூரதாரத்தி தரிசன
மாம் — அம்மா
கண்முன் இரண்டு கடவுள்
களாம்
பேசும் தெய்வம் ஒன்று
ஈசன் சிலை ஒன்று
பேதங்கள் ஏதும் தெரிவ
தில்லை







சங்கரநாமத் தருநிழலில் — வந்து
தங்க நினைத்த புலவர் பலர்
இங்கிதமாகக் கவிபாடி — எப்பவும்
பாமாலை சூடிடுவார்

### ஏழை பங்காளன்

யாத்திரை மார்க்கத்தில் ஒவ்வொரு நாளும்
அதிசயம் ஆயிரமாம்
பாத்திரமறிந்து ஏந்தது செய்யும்
பரிவை என்ன சொல்வேன்?
ஏழை பங்காளனிடத்தில் இடையன்
ஏழை ஒருவனுக்கு
சுடில்லாத பக்தியினும் நிலம்
இருந்ததெல்லாம் விற்றான்
மாட்டை விற்று மனையை விற்று
வயலையும் விற்றுவிட்டு
காட்டை விற்று இருந்ததை யெல்லாம்
கையில் கொண்டு வந்தான்
கடவுளைக் கண்டு எட்ட இருந்து
காலில் விழுந்தது போல்
கருணைக் கடலே என்னால் இயன்ற
காணிக்கை இதுவென்றான்
எனக்கேன் மகனே ஏழை நீயே
எடுத்துக்கொள் என்றார்
இரு கண்ணிலும் நீர் அருவி ஓட
ஏழை அழுதுவிட்டான்
ஈசப்பிறவி பிறந்தேன் நானும்
எய்த்து இளைத்துவிட்டேன்
ஞானப் பழமே காணிக்கை கொண்டு
வாளைத் தாருமென்றான்
அன்பன் கொடுத்த காணிக்கை தன்னை
அக்கணம் ஏற்றுக் கொண்டார்
அருகிலிருந்த தாசில்தாரிடம்
இருகை ஏந்தி நின்றார்
ஐயா தாசில்தாரே அந்த
இடைச்சாதி பக்தருக்குக்
கையாலே புறம்போக்கு நிலத்தில்
காணிகள் நான்கு அருளும்
நாலு காணிக்குப் பட்டா வாங்கி அந்
நந்தனிடம் கொடுத்தே
வாழ்க வாழ்க உன் பக்தி என்றே
வரமும் கொடுத்தாராம்

### யானைக்கு அருள்

யானை கட்டிய குடிசையில் ஒரு நாள்
அக்கினி புகுந்திடவே
யானை சங்கிலி அறுத்துக் கொண்டு
அடவிக்கு ஓடியது
மூன்று நாளைக்குத் தேடித் திரிந்தும்
முதலுக்கே மோசம்
நாலாம் நாளில் குட்டை ஒன்றிலே
தான் இருப்பது கேட்டார்
பாகன் வந்து கூப்பிட்டுப் பார்த்தான்
பலபேர் அழைத்தார்கள்
நீரை விட்டு எழுந்து வராமல்
சீறியது யானை
எல்லாருக்கும் இரங்கும் பெருமான்
ஏழை பங்காளன் — யானை
இருக்குமிடத்தைத் தேடி வந்து
எழுந்திரடா என்றார்
தீப்புண் பட்ட யானை — ஐயன்
திருமுகத்தைக் கண்டு
கூப்பிடும் தாய் முன் குழந்தையைப் போலே
குடுகுடென்று ஓடிவந்து
வழக்கம் போலே ஸ்வாமிகள் காலை
வணங்கிக் கதறியது
தீப்பட்ட யானையின் தேகம் எல்லாம்
திருக்கரத்தால் தடவி,
சாப்பிடப் போடா என்றதும் யானை
தன்னிடம் சேர்ந்ததுவாம்

### காந்தியடிகள் சந்திப்பு

நல்லிச் சேரியில் காந்தி மகான் குரு
நாதரைக் காண வந்தார்
அல்லியின் மொட்டு சந்திரன் கண்டு
அலருதல் போல் மலர்ந்தார்
கருணைக் கடலில் கங்கை வந்து
கலந்தது போல் காட்சி
காந்தி மகாத்மா சாந்த முனிவரைக்
கண்டு வணங்கியது
இந்து முறைப்படி குருஅடி தன்னில்
என் ஐயன் விழுந்தார்
இருகைகளையும் கட்டிக் கொண்டு
எதிரிலே நின்றார்







கண்கள் நான்கும் கலந்தது தேவர்
பண்கள் முழங்கினரே
மண்களில் பாரத மண்ணின் பெருமையை
வானவர் போற்றினரே
அமருகவென்று ஸ்வாமிகள் காந்திக்கு
அருளாணை இடவே
கதரைக் கட்டிய துறவிகள் இருவரும்
தரையில் அமர்ந்தார்கள்
ஏதேது உரைசெய்தார் என்பதை
எவரும் அறியார்கள்
ரகசியமாக இருவரும் பேசி
இதயம் கலந்தார்கள்
ஐந்தரை மணியும் ஆகியதப்போ
அருகிலிருந்தவர்கள்
அண்ணல் காந்தி உண்ணும் நேரம்
ஆகுது என்றார்கள்
அருளுரை கேட்டேன் அதனால் எனது
அகப்பசி தீர்ந்ததென்றே
அண்ணல் உரைக்கவும் ஆசான் கரத்தால்
அளித்தார் கனி ஒன்று
பம்பளீஸ் நாரத்தைப் பழத்தை காந்திக்குப்
பரிவுடன் கொடுக்க
பாக்கியம் பாக்கியம் என்று மகாத்மா
பணிவுடனே பெற்றார்
அந்தக் கனிதான் இந்திய நாட்டின்
விந்தைச் சுதந்திரமோ?
அருளை நினைந்து அதனைப் புசித்தால்
ஆவிக்கிதம் தருமோ?

## மண்ணின் பெருமை

சேதுவிலே மண்ணெடுத்து சிவலிங்க பூஜைபண்ணி
காசியிலே கங்கைதன்னில் கரைத்த கதை சொல்வோம்
மண் என்று சொன்னவருக்கு மண்ணுயிருக்குமது
மாதாவைப் போல் நினைத்தால் ஆதரவு செய்யுமது
சேதுவின் மண்ணெடுத்து சிவபூஜையோடு வைத்து
ஆதிகுருநாதர் தினம் அதைப் பூஜை செய்துகொண்டு
இரண்டோடுபத்தாண்டு இந்திய மண் மாதாவைத்
திரிபுரசுந்தரி போல் தினம் பூஜை செய்தார்கள்
அந்த மண்ணை ஸ்வாமிகளும் ஆராதித்தார் என்றால்
இந்த மண்ணில் நாம் பிறக்க என்ன தவம் செய்தோமே
இரண்டோடுபத்தாண்டு என்தாயைப் பூஜை பண்ணி
கங்கை யமுனையிலே கலந்தாராம் ஸ்வாமிகளும்

ஒத்துமையை உண்டாக்க உளறுகிறோம் நாமெல்லாம்
ஊரை இரண்டாக்கி ஒத்துமையைப் பேசுகிறோம்
ஒருமைப்பாடு உண்டாக்கும் குருநாதன் காலடியின்
அருமைக்கு ஈடுசொல்ல யாரும் பிறந்ததில்லை
நடந்த இடத்திலெல்லாம் நாம் காண்போம்
ஒற்றுமையை
தென்னாடு வடநாடு திசை பேதம் கிடையாது
திருச்சியிலே செந்தமிழைத் தீங்கரும்புபோல் பேசி
வடநாட்டில் இந்தியிலே திருவுரைகள் ஆற்றிடுவார்
திருப்பதியில் பெரியவர்கள் தெலுங்கில் உரை
செப்பிடுவார்
திருச்சூரில் மலையாளம் தேன்போலப் பறைந்திடுவார்
எந்த மொழியானாலும் எண்ணியதும் ஓடிவரும்
சிந்தையிலே கலைவாணி திருக்கொலுவே
கொண்டதனால்
காமகோடி பீடம் கலைக்கெல்லாம் தாயல்லவோ?
நாமும் அதை வணங்கி நற்கலைகள் பெறலாமே
அறிவுக்கு ஆசை சொல்ல ஐயனைப்போல் யாருண்டு?
அறிவைத் திருத்திவிட்டு ஆற்றோட்டம் ஆக்கிவைத்து
நெறியை நன்னீராக்கி நிலமெங்கும் பாய்ச்சிடுவார்
பாவாணர் தங்களுக்குப் பட்டம் கொடுக்கிறதும்
பட்டாடை போர்த்துவதும் பரிவாகப் பேசுவதும்
வேதம் அறிந்தவர்க்கு விதவிதமாய் சன்மானம்
வித்தைக்கு ஏத்தபடி வேண்டியதைச் செய்யறதும்
பூமியிலே இன்று மட்டும் சாமி இவர் போலே
புண்ணியவான் யாரையுமே மண்ணுலகம் கண்டதில்லை
தருமங்கள் செய்வாரைத் தட்டிக் கொடுப்பதிலே
தாய்போலே ஸ்வாமிகளின் தயவும் இருக்குமம்மா

## ஆசார நியம அநுட்டானம்

ஆயிரம் ஆயிரம் பேர்களுக்கு
நித்தம்
அன்னம் அளிப்பார்
திருமடத்தில்
ஆயினும் நம்குரு நாதர்
மட்டும் — அன்ன
ஆகாரத்தைக் குறைத்துக்
கொண்டார்
பசிப்பிணி தீர்க்கும் மருந்து
என்றே — உணவை
பகவத்பாதர் அன்று
உரைத்ததனால்









உப்பு புளிகாரம் நீக்கிவிட்டு — அன்னம்
உண்டுவந்தார் சுவாமி தொண்டு செய்ய
அன்னத்தை அடியோடு விட்டு விட்டு
ஐயன் உணவிலே மாற்றம் செய்தார்
வில்வத் தளத்தையும் வேப்பங் கொழுந்தையும்
வெறுப்பின்றி உண்டார்கள் விருப்பமுடன்
நெற்பொரியை மட்டும் இப்பொழுது உண்டு
அற்புதம் இத்தனை செய்து வரும்
சற்குருநாதரைப் புரிந்து கொண்டால்
சாப்பிடப் போய் சொல்லத் தேவையில்லை

## உபதேசப் பெருமை

அமுதைப் பொழியும் நிலவைப் போலே
ஐயன் திருமுகமே
அருள்மொழி யெல்லாம் கேட்டு நடந்தால்
அனைவர்க்கும் சுகமே
இகபர சாதனம் ஆகும் ஐயன்
இயற்றிடும் அருளுரைகள்
நன்மொழியெல்லாம் பொன்மொழி என்று
நமஸ்காரம் செய்வோம்
சின்னச் சின்ன வாக்கியம் சொல்வார்
தென்னம் பூவைப் போலே
சிந்தையிலே அது ஊறி வளர்ந்தால்
தேங்காய் போல் ஆகும்

அருள்மொழி படிக்கும்போதே — நமக்கு
ஆலயத்துக்குள் இருக்கும் சீலம் வருமே
குருமொழி கேட்டு நடப்போம் — உள்ளக்
கோயிலிலே தீபம் வைத்துக் கும்பிடுவோமே

## பாத பூஜை

காலடிவந்தவர் காலடிவந்தவர் காலடியில் வரும்
மறவடியை
கர்வமுடன் தாங்கும் பண் பொடியைக்
கண்டு அதில் வைப்பேன் என்முடியை
காலடி மண்ணின் பெருமை சொன்னால்
அது காலடி கோடி எடுத்த பயன் — தரக்
காத்திருக்கின்ற படைத்த ஐயன்
நடந்து நடந்து சிவந்த திருவடி
நம்மைப் பவித்திரனுக்கும் — அதை
நம்பினோர் பாவத்தைப் போக்கும் — மேலும்
நன்மைகள் கோடி உண்டாக்கும்

கட்டிப் பிடித்துக் கதறிவிட்டால் — நம்ம
கண்களில் ஆனந்த அருவி — நாம்
கடந்து விட்டோம் இனிப்பிறவி.
வேதங்கள் ஓதி அறிந்தவர்க்கும் — இன்னும்
விவரம் புரியாத பாதம் — அதுநம்
வித்தைக்கு எட்டாத பாதம்.
ஏதுமறியாத என்போன்ற பேர்க்கு
இரங்கி யருளிடும் பாதம் — இதயத்தில்
ஏறுது ஆனந்த போதம்.

## பாதாதிகேசம்

பன்னீரும் சந்தனமும் பக்தர்களின் ஆனந்தக்
கண்ணீரும் எந்நாளும் கமழுகின்ற சேவடியான்
குழந்தை தனைக் காக்கக் குழைந்து வரும் தாய்போல
நடந்து நடந்தே சிவந்த நல்லடியான்
அடிபணிவார்தம் தலையில் அயனெழுதும்
தலையெழுத்தை
நொடியிலே மாற்றிவிடும் நுண்விரலான்

வேறு

பத்துநகம் பத்துமதி புத்தமுதமே பொழியும்
பத்துவிரல் சொல்லும் புத்திமதிகளே — பெரியவர்
பாதமலரே நமக்குக் கதிகளே.
கண்டு தரிசித்தவர்கள் கவலைப் பிசாசுகளே
கண்டதுண்டமாக்கும் கணைக்கால்களே — பிறவி
கவலையினை நீக்கும் அந்தவேல்களே.
பாண்டவர்க்குத் தூதுசென்ற ஆண்டவனை
(நினைவுறுத்தும்
பரிவுடன் நடக்கும் முழங்கால்களே — கண்டவர்க்கு
பவக் கடலின் ஆழம் முழங்கால்களே.
கட்டியும் கட்டாதிருக்கும் ஒட்டியும் ஒட்டாதிருக்கும்
காவியம் துதிக்கும் காவி ஆடையே—ஏழையைக்
காக்கவே புனைந்த காவிஆடையே.
என்ன சொல்வேன் என்ன சொல்வேன்
பொன்னுரும் மேனியினை
ஈச்வரனை எதிரில் வந்த காட்சியோ — நாம்
எப்பிறப்பில் செய்த தவமாட்சியோ
மேனி கண்டபோதே சிவஞானிகளும் மயங்கிடுவர்
நாவினை எடுத்துரைக்க முடியுமோ — ஆயிரம்
நாவுடை சேஷனாலும் முடியுமோ?
மேனி கண்ட மாத்திரத்தில்
வேறெதுவும் தோணுதில்லை









மெய்மறந்து நன்டவிடச் சொல்லுது — நமது
விழியிரண்டும் நீர் நிறைந்து கொள்ளுது.
காவிரி, கங்கை, கோதாவரி யாறேழும்
கலந்த கருணை விழிப் பார்வை — அது
கடல் ஏழும் சேர்ந்த ஒரு கோர்வை
கண்ணை மூடிக்கொண்டிருந்தால்
கண்ணுக்குள்ளே நிற்பவரை
என்னவிதம் எழுதுவது சொல் ஐயே! — அந்த
இன்பத்தையே எழுத மொழி இல்லையே.
புன்னகையில் என் மனத்தைப் பொன்மயமாயாக்குகிற
புண்ணியரைப் பற்றி நானும் சொல்லவா — அருகில்
போக நான் அருகனில்லை அல்லவா?
என்ன கருணை எனையும் தன்னிடத்தில் வரவழைத்து
எப்பவந்தே என்றவர்கள் கேட்கவும் — ஐயன்
இருவிழியால் குளிர என்னைப் பார்க்கவும்

வேறு

என்னிடத்தில் அன்பதிகம் என்னிடத்தில் அன்பதிகம்
என்று அன்று கோபியர்கள் சொன்னதைத்
தன்னிடத்தில் கொண்டவரோ?
தானே அருவானவரோ?
சின்ன மதியாலளக்கத் தெரியலே
தெரிஞ்சுக்காததாலே ஒண்ணும் குறையலே.
ஆவுடையார் கோவிலிலே அமுத கண்ணும் தொழுத
ஆகநின்ற மாணிக்கத்தின் கண்முன்னே [கையும்
ஆளவந்த குருந்தடியில் அமர்ந்த திருக்கோலமிதோ
அப்படித்தானிருக்கு மென்றே தோணுது — நினைச்சால்
ஆனந்தப் பரவசமாய் ஆகுது.
அப்பரையே சிதம்பரத்தில் எப்ப வந்தாய் என்றுகேட்ட
அம்பலவாணர் உருவம் தானிதோ
அருள் பழுத்த குமிழ் சிரிப்பும்
அழகு தவழ் திருநீறும்
அப்படித்தானிருக்கு மெனத் தோணுது — கண்ணில்
ஐயன் முக மண்டலமே காணுது.
அமுதபிள்ளை பால் குடிக்க — அவசரமா ஓடிவந்த
அமுத முலைப்பால் சுரந்த தெய்வமோ — அன்று
அம்மையப்பனுமி நின்ற தெய்வமோ?
அபிஷேக நீர்த்தமதை அள்ளித் தரும் போதினிலே
அப்படித் தானிருக்குமெனத் தோணுது — அந்த
அன்னை முகம் கண்நிறையக் காணுது.
ஆருரரின் தோழமைக்கு ஊர்ஊராகப் பரவை தேடி
அலைந்தலைந்து தூது சென்ற பாதமோ — இது
ஆண்டவன்தன் லீலா விநோதமோ?
ஊர் ஊராக பக்தர் மனைதோறும் சென்று —
அருளுரைகள்
கூறுவதால் அப்படித்தான் தோணுது:
அய்யன் குளிர்ந்த முகம் கண்கள் முன்னே காணுது.

**ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள்**

காமகோடியில் மாமரமொன்றில்
கனிகளிரண்டு தொங்குதம்மா
கண்டால் போதும் பிறவிப் பசியைக்
காதவழிக்கு ஓட்டுதம்மா.

வேறு

தேரிலே வரும் தெய்வம் ஒன்று — கோயிலில்
தெரிசிக்கும் திருமூலஸ்தானம் மற்றொன்று
பேரிலே இரண்டும் ஒன்றேதான் — புதுப்
பெரியவர் பெரியவாள் இருவரும் ஒன்றே
திருமுகத்தைக் கண்டு மயங்காதார் — அதிலே
திகழ்கின்ற புன்சிரிப்பைக் கண்டு மயங்கார் யார்?
பட்டத்தை ஆளுவதற்கென்றே — ஒரு
பாலகரைத் தேர்ந்தெடுத்து பரமகுருநாதர்
பையனின் தாய்தந்தை இடத்தில் — கேட்டு
பாலகனை மடத்திலே படிக்கவும் வைத்து
வேதமொடு சாஸ்திரம் புராணம் — பக்தி
விநயமுடன் கைங்கரியம் விதிமுறைகள் சொல்லி
போதனையும் அருள் நோக்கும் செய்து — அந்தப்
புண்ணியரைத் திருமடத்தில் போற்றி வளர்த்தார்கள்
சுப்பிரமணியம் என்ற திருநாமம் — பால
சுப்பிரமணியரைப் போல சுந்தர ரூபம்
எப்பொழுதும் கலை பழகும் ஆர்வம் — உள்ள
இளங்கதிரை வணங்கி நாம் இன்பநிலை சேர்வோம்
ஜயேந்திர சரஸ்வதிகள் என்ற — பெயரைத்
தாங்கிடும் ஸ்வாமியைத் தண்டனிடுகின்றேன்.
ஜயஜய சங்கர என்றே — எந்தன்
தலைவணங்கி குருநாதர் தாளைப் பணிகின்றேன்
ஒன்றுபலவாகி வரும் தெய்வம் — கண்முன்
நின்று இருஉருவமாய் தர்மம் நிலைநாட்டி
தொண்டு புரிகின்றதனைச் சொல்லி — நாவால்
தோத்தரித்துப் பாமாலை சூடிப் பணிகின்றேன்.



# மணவாள மாமுனிகள்

வைணவ சம்பிரதாயமானது ஆழ்வார்களாலும் ஆசாரியர்களாலும் பெருமையும் புனிதமும் பெற்றுப் பொலிகின்றது. இவ்வாழ்வார் ஆசாரியர்களின் பரம்பரையானது பொய்கையாழ்வார் தொடங்கிப் பொய்யிலாத மணவாள மாமுனிகளோடு தலைக்கட்டுகின்றது. இப்பெரியார்கள் நமக்குச் செய்தருளிய பேருதவிகளுக்கு நாம் செலுத்த வேண்டிய கைம்மாறு அவர்களுடைய புகழ்களை வாயாரச் சொல்லிப் போற்றுவதும் கையாரவெழுதி மகிழ்வதுமேயாம். நாமாகச் சில செய்யுள்களையோ சுலோகங்களையோ இயற்றிப் போற்றுவதிற்காட்டிலும் முன்னோர்கள் மொழிந்தவற்றைக் கொண்டு போற்றுவது மேம்பட்டதாம். ஆழ்வார்களில் நம்மாழ்வாரொருவர்க்கு மட்டுமே மதுர கவிகள் அருளிய 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்ற துதியுள்ளது. மற்றுள்ள ஆழ்வார்களுக்கு அவரவர்களின் திவ்வியப் பிரபந்தங்கட்குத் தோன்றியுள்ள தனியன்களைத் தவிர வேறொரு துணுக்கையும் துதியாக அமைந்திலது.

இனி ஆசாரியர்களைப் பற்றிப் பேசப் புகுவோமாயின் ஸ்ரீ ராமாநுஜரொருவர் தவிர மற்றெவர்க்கும் தோத்திர நூல் அமைந்திலது. 'இராமாநுச நூற்றந்தாதி'யானது ஆசாரியரின் காலத்திலேயே அவதரித்து மேன்மை பெற்றது. யதிராஜ ஸப்ததி, யதிராஜ விம்சதி, யதிராஜ தண்டகம் முதலானவை பிற்காலத்தில் தோன்றியவை. நிற்க. ஸமகாலத்தில் தோன்றிய துதி நூல் மேலே கூறிய நூற்றந்தாதியொன்றேயாம். வடுக நம்பியென்பவர் யதிராஜ வைபவமென்றொரு வடமொழி நூல் பணித்தாரெனினும் அது சரித்திர நூலே யன்றித் தோத்திர நூலன்று. இராமாநுசர்க்கு அடுத்துள்ள எம்பார்,. ஆழ்வான் பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, பிள்ளை லோகாசாரியர், திருவாய்மொழிப்பிள்ளை யளவாகவுள்ள ஆசாரியர்களுக்கு ஒரு தோத்திர நூலும் திருவவதரிக்கக் கண்டிலோம். இதனால் தோத்திரம் செய்யக் கூடிய பெருமை அவ்வாசிரியர்களிடத்து இல்லையென்று நாம் சொல்லுவதாகக் கருதலாகாது. பிரகிருதம் மணவாள மாமுனிகளைப் பற்றி நாம் கூறுவதை மட்டும் குறிக்கொள்ள வேணும்.

''ஏராரு மெதிராசரெனவுதித்தான் வாழியே'' என்று வாழ்த்தப்பட்டு வருகின்ற மாமுனிகள் எம்பெருமானுடைய அபராவதாரமாகத் தோன்றினவரென்பதில் ஐயமில்லை. இவ்வளவே யன்று; அவர் தம் அவதாரத்திற்காட்டிலும் மிக்க மேம்பாடுடையது மாமுனிகள் தம் அவதாரம். சுதந்திரமாகப் புதிய நூல்களை அருளிச் செய்வதில் விசேஷ விருப்பமற்று ஏற்கனவேயுள்ள சிறந்த நூல்களுக்கு வியாக்கியானமான நூல்களை இயற்றுவதிலேயே ஊக்கமும் ஊற்றமும் இருவர்க்கும் சமமானது. ஸ்ரீ பாஷ்யம், வேதாந்த தீபம், வேதாந்த சாரம், கீதாபாஷ்யம் என்னுமிவை (இராமாநுசரியற்றியவை) வியாக்கியான நூல்களே யன்றோ? அப்படியே மணவாள மாமுனிகளும் ''சீருலகாரியர் செய்தருள் நற்கலை தேக பொலிந்திடு நாள்'' என்கிறபடியே பிள்ளை லோகாசாரியாருடையவும் அவரது திருத்தம்பியாருடையவும் அருமருந்தான திவ்விய ரஹஸ்ய நூல்களுக்கு வியாக்கியானங்களை யருளிச் செய்தார். ஸ்ரீ ராமாநுஜர் வேதாந்த ஸங்கிரகம், கத்யத்ரயம், நித்யம் என்கிற சுதந்திர நூல்கள் சிலவற்றையும் அருளியது போல மாமுனிகளும், யதிராஜ விம்சதி, உபதேசரத்தினமாலை முதலிய சுதந்திர நூல்களும் பல இட்டருளினார். இவ்வகையாலே இவ்வாசிரியர்களிருவர்க்கும் ஒருபுடையொப்புமை என்பது நிற்க, மாமுனிகளுக்கு ஸ்ரீ ராமாநுஜரிற் காட்டிலும் மிக்க ஏற்றமுள்ளமை கேண்மின்.

உபதேச ரத்தின மாலையில் ''ஓராண் வழியாய் உபதேசித்தார் முன்னோர், ஏராரெதிராசரின்னருளால் பாருலகில், ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள் கூறுமென்று பேசி வரம்பறுத்தார் பின்'' என்ற பாசுரத்தின்படி ஸ்ரீ ராமாநுஜர்க்கு ஓர் ஏற்றம் பிரசித்தமாக உள்ளது. அதாவது, ஆளவந்தார்



பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரியார்

முதலான முன்னோர்கள் அர்த்தங்களின் அருமை பெருமைகளைக் கண்டு மறைத்தொளித்துப் போந்தார்களென்றும், ஸ்ரீ ராமாநுஜர் அங்ஙனமின்றிக்கே பாருலகில் ஆசையுடையோர்க்கெல்லாம் கூறுமாறு கட்டளையிட்டதாகவும் காண்பதேயாம். இங்ஙனே பிறர்க்குக் கட்டளையிட்ட அப்பேராசிரியர் முன்னம் தாம் ரஹஸ்யப் பொருள்களை எடுபடுத்தி விளக்கியிருக்க வேண்டும். பிரம சூத்திரத்துக்குப் பல உரை நூல்களிட்டருளின அவர் ரஹஸ்யப் பொருள்களை விளக்கி ஒரு நூலும் பணித்திலரன்றே? அஃது அவர்க்கு ஒரு குறையேயாகும். அக்குறையைத் தீர்த்துக் கொள்வதற்காகவே அவ்விராமாநுஜர் தாமே மாமுனிகளாகத் திருக்கோலம் பூண்டார். இவ்வவதாரந்தன்னில் செய்தருளின காரியங்களே மிக மிகப் புகழத் தக்கவையாயின.

இப்பெருந்தகையின் பெருமை கண்டே மாமுனிகளுக்குப் பலப்பல தோத்திர நூல்களை அக்காலத்தவர்களே இட்டு வைத்தனர். வடமொழியில் ஸ்ரீமத் வரவர முனி சதகமென்று நூறுநூறு சுலோகங்கள் கொண்ட இரண்டு துதி நூல்கள் தோன்றின. ஒன்று எறும்பியப்பா பணித்தது; மற்றொன்று பிரதிவாதி பயங்கராசாரியர் பணித்தது. அன்றியும் பிள்ளைப் பெருமாளையங்கார் அஷ்ட பிரபந்தங்களொன்னுமாபோலே, மாமுனிகளின் திருவடி பணிந்து அஷ்டதிக்கஜாசாரியர்களென்று பேர் பெற்ற எண்மர் எட்டுப் பிரபந்தங்கள் தென் மொழியில் இட்டு வைத்தனர். எறும்பியப்பா என்னுமாசிரியர் வரவர முனி சதகமொன்றேயன்றி வரவரமுனி காவியம், வரவர முனி சம்பூ, வரவரமுனி கர்ணாமிர்தம், அம்ருத த்வனி தினசர்யா என்றிவை முதலான பல துதி நூல்களையும் பணித்துள்ளார். இத்துதி நூல்களெல்லாவற்றிலும் கூறப்பட்டுள்ள விஷயங்களை ஸாரமாக எடுத்துரைப்போமாயின் 'மாமுனிகளின் திருநாவிறு ஒப்பற்றது' என்பதொன்றே தேறி நிற்கும். இவர்தம் முந்திய அவதாரமான ஸ்ரீ ராமாநுஜரைப் பற்றின நூற்றந்தாதி முதலான துதி நூல்களை நோக்குங்கால் பிற மதத்தவர்களின் செருக்கையடக்கின ரென்பது அவர்தம் பெருமையின் ஸாரமாகத் தெரிய வரும். விரோதிகளை மாய்க்கும் பணி அவ்வவதாரந்தன்னில் தலைக்கட்டிற்றுதலால் மாமுனிகளான இருவவதாரத்தில் "முன்னவராம் நங்குரவர் மொழிகளுளனப் பெற்றோம் முழுது நமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம்" என்று தாமே பணித்தருளினபடி தூயவமுதைப் பருகிப் பருகிக் களிப்பதே செயலாக விருந்தது.

ஸ்ரீராமாநுஜரும் மாமுனிகளுமான இரண்டவதாரங்களையும் உற்று நோக்குமளவில் ராமாநுஜரை ஸூரியனாகவும் மாமுனிகளைச் சந்திரனாகவும் அறுதியிடலாம். உலகத்தில் பலர் பல வகையான விருதுகளைப் பெறுவதுண்டு; பண்டிதர் என்றும், வித்வான் என்றும், வாக்மி என்றும், விசாரதர் என்றும் அவரவர்கள் பெறும் விருதுகளைக் காண்கிறோம். மாமுனிகள் பெற்ற விருது 'விசதவாக் சிகாமணிகள்' என்று. கடல் சூழ்ந்த மண்ணுலகினுள் இந்த விருது மாமுனிகளொருவர்க்கே ஏற்கும். கூறினது கூறல், மயங்க வைத்தல், நலிந்து பொருள் கொள்ள வைத்தல், இன்னது சொல்லிற்றென்று தெரியாதபடி பேசிவைத்தல், பிறர் மனம் நோவப் பேசுதல், வீண் பேச்சுக்களை வளர்த்தல், முன்னோர் மொழிந்த முறைகளுக்கு மாறாகப் பேசுதல், முன் பின் முரண்படப் பேசுதல் முதலிய குற்றங்குறைகளை மாமுனிகளின் திவ்விய ஸூக்திகளில் இறையுங்காணவியலாது.

நம்பிள்ளையென்னுமாசிரியர் அரங்கன் ஸன்னிதியில் திருவாய் மொழியின் அரும் பெரும் பொருள்களை அனவரதமும் அருளிச் செய்து போந்தாரென்கிற பிரசித்தி யிருந்தும் அரங்கன் அவ்வாசிரியரைத் தனக்கு ஆசிரியராகக் கொள்ளவோ சிறப்புப் பாயிரமென்கிற தனியனை அவர்க்குப் பணிக்கவோ மனங்கொண்டிலன். அப்பரமன்தானே மாமுனிகள் பக்கலிலே சீடனாக இருந்து சந்திர ஸூரியர்கள் உள்ளவளவும் உலகில் ஓங்கி நிற்குமாறு உலகம் புகழும் தனியனொன்றை விண்ணப்பம் செய்தது மிக அற்புதம். அந்த வரலாற்றின் சுருக்கம் வருமாறு:

தென் திருவரங்கம் கோயில் கொண்ட பெருமான் மணவாள மாமுனிகளுக்குத் தான் சீடனாகி அவரைத் தனக்கு ஆசிரியராகக் கொள்ளக் குதூகலித்தனன். திருவாய் மொழிக்குச் சிறந்த வியாக்கியானமாக அமைந்த ஈடு முப்பத்தாறாயிரப்படியின் அரும் பெரும் பொருள்களை மாமுனிகளின் திருவாக்கினால் கேட்கப் பெற வேணுமென்று ஆவல் கொண்டனன். தனது திருக்கோயிலின் திருமுன்பே எழுந்தருளியிருந்து விளம்பியருள வேணுமென்று கட்டளையிட்டனன். அது கேட்டவுடனேயே மாமுனிகள்,

"நாமார் பெரிய திருமண்டபமார்? நம்பெருமாள்
தாமாக வெம்மைத் தனித்தழைத்து — நீ மாறன்
செந்தமிழ் வேதத்தின் செம்பொருளை நாளுமிங்கே
வந்துரையென் றேவுவதே வாய்ந்து"

என்று நைச்சியமாய் அநுஸந்தித்து மறுநாள் தொடங்கி ஓராண்டளவும் மேலே சொன்ன ஈடு முப்பத்தாறாயிரப்படியின் சீரிய பொருள்களைச் சிறப்புற விளக்கி வந்தார். அவ்வாண்டில் திருவரங்கநாதனுடைய நித்திய நைமித்திகத் திருவிழாக்களெல்லாம் நிறுத்தப்பட்டிருந்தன. ஓர் ஆனிமாதத் திருமூல நன்னாளில் இந்தப் பிரவசனம் சாத்துமுறை செய்வதாக நிச்சயிக்கப்பட்டு அது நடைபெற்று வரும் போது அரங்கநாதன் ஒரு சிறு குமாரனாய் அத்திரளிலே வந்து நின்று, "ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீ பக்த்யாதி குணார்ணவம், யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்" என்று கைகூப்பி நின்று விண்ணப்பஞ்செய்து விரைந்து சென்று மறைந்தனன். இந்த இதிகாசத்தை மாமுனிகளின் சீடர்களென்று பிரசித்தர்களாய் அஷ்டதிக்கஜாசாரியர்கள் என்று வழக்கப்படுபவர்களான ஆசிரியர்கள் எண்மரும் வடமொழிச் சுலோகங்களிலும் தென் மொழிச் செய்யுள்களிலும் அமைத்துப் பாடியுள்ளார்கள். அந்நாள் தொடங்கி அரங்கநாதனது கட்டளையினால் இத்தனியன் பாகரமே கோவில்களிலும் மடங்களிலும் மனைகளிலும் திவ்வியப் பிரபந்தங்களோதும் போது தொடக்கத் தனியனாக விளங்கி வருகின்றது.

வியாக்கியானங்கள் அருளிச் செய்வதில் மணவாள மாமுனிகளின் திறமை ஒப்புயர்வற்றது. பிள்ளை லோகாசாரியரென்னுமாசிரியர் 'அஷ்டாதசரஹஸ்யம்' என்று பெயர் பெற்ற பதினெட்டு ரஹஸ்ய நூல்களைப் பணித்திருந்தார். அவருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் ஆசார்ய ஹ்ருதயமென்னும் ரஹஸ்ய நூலை அருளிச் செய்திருந்தார். வைணவ சமயத்தில் உபயவேதாந்தமென வழங்கப்படுகின்ற வடமொழி தென்மொழி மறைகளின் ஆழ்ந்த கருத்துக்களை ஆர அமர ஆராய்ந்து வெளியிட்ட நூல்கள் இவற்றுக்கு மேற்பட்ட வேறு எதுவுமில்லை. உலகாசிரியர் பணித்த பதினெட்டு ரஹஸ்யங்களுள் ஸ்ரீவசனபூஷணம், தத்துவத்திரயம், முமுக்ஷுப்படி என்ற மூன்று ரஹஸ்ய நூல்கள் அறிய வேண்டுகிற அர்த்தமெல்லாம் அடங்கி நிற்பனவென்று கொண்டு இவற்றுக்கு வியாக்கியானம் அருளிச் செய்தனர் மாமுனிகள். ஆசார்ய ஹ்ருதயமென்னும்



தந்தி :
"SUBASWAGAT"

போன்: 82027
(8 லைன்கள்)



ரசிகர்கள் சதஸ் !...

# ஹோட்டல் ஸ்வாகத்

ராயப்பேட்டை ஹைரோடு,
சென்னை-14.

- பரிச்சயமான சூழ்நிலை
- குறிப்பறிந்து சேவை
- ஸ்நான அறையுடன் கூடிய ஒருவர், இருவருக்கான ரூம்கள் மற்றும் ஏர்-கண்டிஷன்டு
- எல்லா ரூம்களிலும் போன் வசதி
- கூடிப் பேசும் மண்டபம்
- மாடிப் பூங்கா - லிப்ட் வசதி உண்டு
- மிதமான கட்டணங்கள்

வரவேற்பு மற்றும் வழியனுப்பு வைபவங்கள்
தேநீர் மற்றும் விருந்து உபசாரணைகள்
கலாச்சார கலை விழாக்கள்-பாராட்டு விழாக்கள்
இவைகளை நடத்த வேண்டிய வசதிகள் செய்து கொடுக்கிறோம்

எமது நவீன சிற்றுண்டி சாலையில்
சுவையான சிற்றுண்டியும் - ருசியான சாப்பாடும்
பொதுமக்களுக்கு வழங்கப்படும்

*Fragrance that Lingers like Memories*




YOUR FAVOURITE SOAP
IN ITS NEW SHAPE AND DESIGN,
ITS QUALITY, WEIGHT
AND PERFUME ARE UNCHANGED.

MYSORE SANDAL SOAP

MYSORE GOVERNMENT SOAP FACTORY BANGALORE-12.



நூல் மேலே குறித்த மூன்று ரஹஸ்யங்களும் நாலாயிர திவ்வியப் பிரபந்த வியாக்கியானங்களும் சேர்ந்து ஒரு வடிவு கொண்டதென்னும்படி அமைந்ததாதலின் அதற்கும் வியாக்கியானமிட்டருளினார் மாமுனிகள். இவர் அருளிச் செய்த நூல்கள் மற்றும் சில பல இருப்பினும் இந்நான்கு வியாக்கியான நூல்களும் நான்கு வேதங்களினும் மேம்பட்டவையென்னலாம்படி அமைந்தன.

உலகில் வியாக்கியான நூல்கள் எண்ணிறந்தவை தோன்றியுள்ளன. பெரியவாச்சான்பிள்ளை, வடக்குத் திருவீதிப் பிள்ளைகள் திவ்வியப் பிரபந்தப் பாசுரங்கட்கு வியாக்கியானங்கள் இயற்றினார்களேயன்றி, 'ஸூத்ரங்கள்' என்னும் வகையிலே அமைந்த இத்தகைய நூல்களுக்கு வியாக்கியானம் இயற்றினவர்கள் வைணவ சமயத்தில் மாமுனிகளைத் தவிர வேறு எவ்வாசிரியருமிலர். மூலத்திற்கு அவதாரிகையிடுகிற அழகும், மூலத்தை விவரித்தருளுகிற பாங்கும், ஆங்காங்கு அர்த்தங்களைத் தொகுத்து நிகமித்தருளுகிற பண்பும், பண்டிதர்கட்கும் தோன்றமாட்டாத சங்கைகளைத் தோற்றுவித்துப் பரிஹார வழிகளை உணர்த்தும் பரிசும், பிற மதங்களை மறுத்தெழுத நேர்ந்தாலும் ஒருவர் மனமும் நோவாதபடிக்கும், விஞன நிந்தைகளும் பரிகாசங்களும் புகாதபடிக்கும் எந்த இடத்தையெடுத்தாலும் சாஸ்திர நுண்பொருள்களே கைகொள்ளலாம்படிக்கும், 'நூற்கடல்கள் எல்லாவற்றையும் கரைகண்டவர் இவர் ஒருவரே' என்று திண்ணமாக எண்ணும்படிக்கும் வியாக்கியானங்களை அமைத்தவர் மாமுனிகள் ஒருவரே.

இவருடைய திவ்ய ஸூக்தியமுதக் கடலினின்று சில மணித் திரள்களையெடுத்துக் காட்டுவோம். மாமுனிகள் தாம் ஆங்காங்கு மூலத்திற்குச் சேர விவரித்து அருளிச் செய்யும் அர்த்த விசேஷங்கள் வேறு சில ஆசிரியர்களின் நூல்களிலுமிருந்தால் அவ்விடங்களை எடுத்துக்காட்டி அருளாதொழியார். இந்த நடை பிற ஆசிரியர்களின் நூல்களிற் காணவரிது; 'சிலர் இப்படி உரைப்பர்; சிலர் இங்ஙனே கூறுவர்' என்று பிறரது நூல்களிலுள்ள பொருள்களை மட்டும் காட்டிப் போவார்களேயன்றிப் பெயரையும் இடத்தையும் வாசகங்களையும் காட்டவே மாட்டார்கள். மாமுனிகளின் வியாக்கியான நடை இத்தகைத்தன்று. 'இன்ன ஆசிரியர் இன்னவிடத்திலே இன்னபடி கூறியுள்ளார்; அவரது வாசகங்கள் இவை' என்று மிக விளக்கங் காட்டியே தீருவர். இது மாமுனிகளின் திவ்விய ஸூக்திகளுக்கு உண்டான தனிச் சிறப்பு. இது காரணமாகவே, ''பொய்யிலாத மணவாள மாமுனி புந்தி வாழி'' என்று உலகப் பிரசித்தமான வாழ்த்து அமைந்தது.

வைணவ சமயக் குரவர்களில் வடமொழியிலும் தென்மொழியிலும் சிறியனவும் பெரியனவுமாக நூல்கள் இயற்றினவர்கள் ஆழ்வார்களைத் தவிர ஏறக்குறைய இருபதின்மர் (உலகம் போற்ற நின்ற ஆசிரியர்கள்) மாமுனிகளுக்கு முற்பட்டவர்கள் தேறுவார்கள். அத்தனைபேருடையவும் நூல்களிலிருந்து, உரிய இடங்களில் உயரிய வசனங்களை எடுத்து மேற்கோள் கொடுத்திருக்கும் அழகு அற்புதமானது. இதற்குமேல் மற்றோர் அதிசயம் — மேற்கோள்களை எடுத்துக் காட்டிவிட்டு 'என்கிறபடியே' என்று போய் விடாமல் அவற்றின் பொருளைத் தெரிந்து கொள்வதற்கு வேறு வியாக்கியானங்களைத் தேடவேண்டாமல், அவ்விடங்களில் தமக்கே உரிய நடையில் விவரணமுங் காட்டியருள்வது மிகப் பெரிய மாண்பு. 'ஆழ்ந்து கூர்ந்து ஆராய்தல்' என்னும் முறையிலே மாமுனிகளின் வியாக்கியானத் திருவாக்குகளை நோக்குங்கால், இராமபிரான் மாருதியின் இனிய சில மொழிகளைக் கேட்டதும் இளையோனை நோக்கிக் கூறியதாகக் கம்பர் பெருமான் பாடியுள்ள,

'' இல்லாதவுலகத் தெங்கு மிங்கிவனிசை கள்கூரக்
கல்லாத கலையும் வேதக் கடலுமே யென்னுங் காட்சி
சொல்லாலே தோன்றிற்றன்றே யார்கொலிச்
சொல்லின் செல்வன்
வில்லார்தோள் இளையவீர விரிஞ்சனோ
விடைவலானோ?''

என்னுஞ் செய்யுளை நினைவுக்கு வரும். இக்காலத்தில் இதிகாச புராண பாஞ்சராத்திரம் முதலிய எல்லா நூல்களும் பல லிபிகளில் பல முறைகளில் பலவகை அட்டவணைகளுடனும் அச்சேறியுள்ளன. இஃது ஒரு நூற்றாண்டுக்கு உட்பட்ட செய்தி. ஆசிரியர் காலத்தில் ஓலையேடு தவிர வேறு கிடையாது. அதுவும் ஒரூரில் ஒன்றிரண்டு சுவடிகளுக்கு மேல் காண்பதரிது. எந்த மூலையில் எந்த விஷயமுள்ளது என்று கண்டறிவதற்கும் இயலாது. இத்தகைய நிலையில் மாமுனிகள் இதிஹாச புராணாதிகளான வடமொழி நூல்கள் பலவற்றிலுமிருந்து ஆயிரத்து எழுநூற்று எழுபத்தெட்டு வசனங்களை மேற்கோளாக எடுத்துக்காட்டியுள்ளார் என்று நாம் ஏற்றக் குறைவின்றிக் கணக்கெடுத்து வெளியிட்டிருப்பது உலகம் பரவியுள்ளது. இஃதொன்றை மட்டும் நோக்குங்கால், ஆளவந்தாரென்ற ஆசிரியரால் ''ப்ரக்ருஷ்டவிஜ்ஞான பலைக தாமநி'' என்று போற்றப்பட்ட ஆதிசேஷனே மாமுனிகளாகத் திருவவதரித்தனனென்று மேலையார் கூறியுள்ளது மிகப் பொருத்தமென்றுணரலாகும்.

மாமுனிகளின் மாண்பைச் சுருங்கச் சொல்லின் தாம் இயற்றியருளின நூல்களுள் ஒன்றான ஆர்த்திப் பிரபந்தத்தில் (பா — 28) ''பண்டு பலவாரியரும் பாருலகோருய்யப் பரிவுடனே செய்தருளும் பல் கலைகள் தம்மை, கண்டதெல்லாமெழுதியவை கற்றறிந்தும் பிறர்க்குக் காதலுடன் கற்பித்துங் காலத்தைக் கழித்தேன்'' என்று தாமே யருளிச் செய்தபடி ஏற்கனவே தோன்றியுள்ள பூருவர்களின் பொன்மொழிகளைப் பிரவசனஞ் செய்தருள்வதிலேயே மிகுந்த காதலுடையரா யிருந்தும், இவ்வுலகின் பாக்கிய பரிபாகமடியாக சிஷ்யர்களின் வேண்டுகோளுக்கிணங்கியும் எம்பிரானது கட்டளையை முன்னிட்டும் தேனும் பாலும் கன்னலும் அமுதுமான திவ்விய நூல்களையுமிட்டருளிக் கலியுகத்தைக் கிருதயுகமாக்கி எழுபத்து மூன்றாண்டுகள் இந்நிலவுலகத்தில் வாழ்ந்து நலமந்தமில்லதோர் நாடுபுகுந்தனரென்பதாம்.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் துவளில் மாமணிமாடமோங்கு, உண்ணுஞ்சோறுபருகுநீர் முதலான சில பதிகங்களில் தம்முடைய பெருமையைத் தாமே வெளியிட்டுக் கொண்டவாறு போல மாமுனிகள் தாமும் ஆர்த்திப் பிரபந்தத்திலே,

'' தென்னரங்கர் சீரருளுக்கிலக்காகப் பெற்றோம்
திருவரங்கந் திருப்பதியேயிருப்பாகப் பெற்றோம்
மன்னியசீர் மாறன்கலை யுணவாகப் பெற்றோம்
மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்
முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம்
முழுது நமக்கவை பொழுது போக்காகப்
பெற்றோம்
பின்னையொன்றுதனில் நெஞ்சு போராமற் பெற்றோம்
பிறர் மினுக்கம் பொறாமையிலாப்
பெருமையும் பெற்றோமே''

என்று அருளிச் செய்த பாசுரத்தையே நிச்சலும் சிந்தனை செய்து உய்வோமாக.



# பழனி செல்லாத பரமனடியார்

திருமுருக கிருபானந்தவாரியார்

இறைவனைக் கண்டவர்கள் பலர் நம் நாட்டில் இருந்தார்கள்; இன்னும் இருக்கின்றார்கள். கண்டவர்கள் தமது அமுத வாக்கினால் இறைவனுடைய அருள் திறத்தை ஓதினார்கள். நாட்டில் கண்டவர்களின் வார்த்தைகளைத்தான் கேட்க வேண்டும். 'கண்டவர்கள்' பேச்சை யெல்லாம் கேட்கக் கூடாது.

"கண்டேன் அவர் திருப்பாதம்
கண்டறியாதன கண்டேன்"

என்கிறார் அப்பர் பெருமான்.

"பிரமபுர மேவிய பெம்மான் இவனன்றே"

—கண்டதுடன் அமையாமல் காணாதவர்க்கும் காட்டுகின்றார் காழிப் பிள்ளையார்.

"எட்டானை எல்லையில் எட்டுவனை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின்றேனே"

என்கிறார் வள்ளலார்.

இந்த நூற்றாண்டிலே மூவர்க்கும் தேவர்க்கும் முழுமுதலாகிய முருகவேளைக் கனவிலும் நனவிலும் கண்டு தரிசித்த மகான் பாம்பன் அடிகள் ஆவார்கள்.

திரு. வி.க., எஸ். சச்சிதானந்தம் பிள்ளை முதலியவர்கட்குக் குருவாக விளங்கிய சுத்தாத்வைத ஞான பானு பாம்பனடிகள். அவருடைய கண்ணும் கருத்தும் நுழையாத நூலேயில்லை. அபர ஞானம் பர ஞானம் இரு ஞானங்களையும் அடைந்தவர். துறவிகட்கெல்லாம் ஒரு மணியாகத் திகழ்ந்தவர். அஷ்டமா சித்திகளும் கைவரப் பெற்றவர். சித்திகள் முத்திக்குத் தடையென்று அவைகளைத் தன் அடிமைகளாக்கி அடக்கியாண்டவர்.

இம்முனீந்திரருடைய வரலாற்றில் சில பகுதிகளை மட்டும் இங்கு தருகின்றேன்.

பாம்பன் என்னும் திருத்தலத்தில் சைவ வேளாளர் மரபில் சாத்தப்ப பிள்ளையும், செங்கமலத்தம்மையும் செய்த நற்றவப் பயனால் இவர் 1850ல் தோன்றினார். இவருடைய பிள்ளைத்திருநாமம் அப்பாவு என்பது.

இவர் இளமையிலேயே முருக பக்தி பூண்டு இடையறாது முருகனை நினைந்து உருகுவார். சடக்கர மந்திரத்தைச் சதா ஜெபித்துத் திருவருள் பெற்றார்.

அருணகிரிநாதரை நினைந்து, "அப்பனே! உன்னைப் பத்துப் பாடலுக்கு ஒரு முறை வைத்துப் பாடுவேன். நல்வாக்கு அருள்" என்று வேண்டி, வாக்கு வளம் பெற்று, முருகனைச் செந்தமிழால் பாடுவாராயினர். சிறிது காலம் இல்லறத்தில் இருந்தார். இவருடைய உள்ளம் துறவறத்தையே விரும்பிக் கொண்டிருந்தது.

கி. பி. 1891ல் நிகழ்ந்த சம்பவம் ஒன்று பார்ப்போம்: ஒரு நாள் அங்கமுத்துப் பிள்ளையென்னும் நண்பரிடம், "நாளை நான் பழனிக்குப் போவேன்" என்றார் அடிகளார்.

நண்பர், "எப்போது திரும்பி வருவீர்கள்?" என்றார்.

"திரும்பி வரமாட்டேன்" என்றார் அடிகளார்.

"இப்படித் திடீரென்று புறப்படுகின்றீரே? இது முருகனுடைய கட்டளையோ?" என்று நண்பர் கேட்டார்.

அடிகளார், "ஆம்" என்றார்.

அன்று மாலை அடிகளார் மேல் மாடியில் இருந்து தியானம் புரிகின்றபோது அவர் முன் ஒரு பெரிய உருவம் தோன்றி நின்றது. பல்லை நெறுநெறுவெனக் கடித்தது. ஆள்காட்டி விரலை அசைத்து, "அடேய், இறைவன் கட்டளை என்று பொய் புகன்றனையோ? நான் உனக்குக் கட்டளையிட வில்லையே? ஏன் பொய் சொன்னாய்?" என்று அதட்டிக் கூறியது. அவ்வுருவத்தைக் கண்ட அடிகளார் நடுநடுங்கினார். உடல் வேர்த்தது. வாக்கில் சொல் வரவில்லை. மனத்துக்குள்ளாகவே கூறுவாராயினர்: 'கருணைக் கடலே! அடியேன் நிலபுலம் விழைந்து பொய் புகன்றேனில்லை. ஆன்ம லாபம் கருதியே சொன்னேன். பொறுத்தருள்க' என்று வேண்டிக் கொண்டார்.

இறைவன், "பொய் புகன்று ஆன்ம லாபம் வரவேண்டும்? அது என்னாலாகாதா? இனி யான் கட்டளையிடும்வரை பழநிக்கு வரக்கூடாது. 'வருவதில்லை' என்று சொல்" என்று கடிந்து உரைத்தார்.



அடிகள் நாக்குழறி, ''உத்தரவு ஆகும்வரை வருவதில்லை'' என்றார்.

அவ்வுருவம் மறைந்து விட்டது.

எழுந்து நிலமிசை வீழ்ந்து முருகனை வணங்கினார் சுவாமிகள். அதுமுதல் அவர் வாய் விளையாட்டுக்கும் பொய் புகன்றதில்லை. பொய் என்றால் அவர் உள்ளம் நடுங்கும்.

அடிகளார் ஆயுட்காலம் வரையில் பழநி வர இறைவனிடம் குறையிரந்து முறையிட்டு உத்தரவு கேட்டார். முருகன் உத்தரவு தரவேயில்லை. முருகன் திருத்தலம் அனைத்தையும் தரிசித்த அடிகளார் பழநிக்கு மட்டும் போகவில்லை. ஒரு சிறு பொய்க்காகத் தண்டிக்கப் பெற்றார்.

அடிகளார் துறவறம் மேற்கொண்டு பாம்பன் ஆற்றை நாவாயால் கடந்தார். ''என்னைப் பெற்ற தாயகமே! இனி இந்த உடம்பு கொண்டு உன் மண்ணை மிதியேன்'' என்று கூறிக் கும்பிட்டார்.

பலப்பல தலங்களைத் தரிசித்தார். குமர குருதாசர் என்ற தீட்சா நாமம் பூண்டார்.

1894ல் பங்குனி மாதம் இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள பிரப்பன்வலசை என்ற ஊரில் தங்கியிருந்தார். இவருடைய சீடர் உடையநாயகம் பிள்ளை இவரை நன்கு உபசரித்து வந்தார்.



அடிகளாருக்கு முருகனை நேரில் தரிசிக்க வேண்டும் என்ற எண்ணம் அதிதீவிரமாக உண்டாயிற்று. ''கந்தவேளைக் கண்டால் இருப்பது; இன்றேல் இறப்பது'' என்ற முடிவுக்கு வந்தார்.

குமரகுருதாச சுவாமிகள் தம் சீடர் உடையநாயகம் பிள்ளையை அழைத்துக் கொண்டு மயானம் சென்றார். ஒரு சிறு பந்தர் இட்டு அதன் கீழ் ஓர் ஆள் அமர்வதற்கு ஏற்றதாய்க் குழியை வெட்டுவித்தார். சுற்றி முள் வேலியிடச் செய்தார்.

''உடையநாயகம்! நான் குழியில் அமர்ந்து முருகனை வேண்டித் தவம் செய்யப் போகின்றேன். முருகனைக் கண்டால் வருவேன். இன்றேல் மாண்டொழிவேன். உப்பில்லாத சிறிது அன்னம் உச்சி நேரத்தில் வை. அதனை நான் எடுக்காது விடுவேனாயின் பிறகு வைக்க வேண்டா. முருகனை மறவாதிரு'' என்று கட்டளையிட்டார்.

மயானத்தில் வெட்டப்பட்ட குழியில் இறங்கி, ''குமரகுரு'' என்று சிரத்தின் மீது கரம் கூப்பி வணங்கி வடதிசை நோக்கி அமர்ந்தார்.

இந்தச் செயலைக் கண்டு உடையநாயகம்பிள்ளை சொல்ல முடியாத துயரமுற்றார். குருபிரான் ஆணையை மறுக்க அஞ்சினார். குருதேவரைத் தொழுது தம் இல்லத்தை அடைந்தார்.

சுவாமிகள் மனத்தை ஒருமுகப்படுத்தித் தியானத்தில் நிற்க முயன்றார். ஐந்து நாட்கள் மனக்குரங்குடன் போராடினார். அந்த ஐந்து நாட்களிலும் உப்பில்லாத அன்னத்தைச் சிறிது உண்டார்.

ஒரு பாம்பு இவர் இருக்குமிடத்தில் வந்து இவர் எதிரே போவதைக் கண்டார். இரவில் இவருடைய தவத்தைக் கெடுக்க ஆணும் பெண்ணுமான ஆறு ஏழு பேய்கள் இவரைச் சூழ்ந்து ஆடின. இவர் அவற்றைக் கண்டு அஞ்சாது சடக்கரம் ஓதிக் கொண்டிருந்தார். பேய்கள் இவரைத் தீண்டாமலேயே ஒவ்வொரு நாள் இரவிலும் துன்புறுத்தின. பின்னர் அவை மறைந்தொழிந்தன.

வெள்ளை வேளோர் என்ற முனி நெடிய உருவுடன் வந்து குழியில் இறங்கி இவரைப் பிடித்து அசைத்துத் தூக்கியது. எட்டி மரத்தால் செய்த யோக தண்டத்தால் இவர் அதனை அடித்தார். புகைபோன்ற அதன் உடலில் யோக தண்டம் ஊடுருவாது சென்றது. சுவாமிகள் சடக்கர மந்திரத்தை ஓசைபட ஓதினார். பேய்கட்கு அரசாகிய அந்த முனி இவரை விட்டுத் தெற்கு நோக்கி ஒரு மைலுக்கு அப்பால் சென்று மறைந்தது.

அடிகளார், ''ஆறுமுகப் பெருமானே! அருட் பெருங்கடலே! தயாநிதியே! இது என்ன சோதனை? எனக்கு இத்தனை வேதனையா? உன் திருவுருவைக் காண விழைந்தேன். உற்றாரையும் பெற்றாரையும் மனைவிமக்களையும் துறந்தேன். ஆசாபாசங்கள் மறந்தேன். வள்ளி மணவாளா! அடியேன் எல்லாந் துறந்து மயானக் குழியில் உன்னை வேண்டித் தவம் செய்கின்றேன். என்னை ஆட்கொள்ளலாகாதா?'' என்று இளம் பூரணனைத் துதித்துத் தொழுதார்; அழுதார்.

ஏழாவது நாள் இரவில் அவர்முன் ஒரு குழந்தை தோன்றியருளியது. குழந்தையின் இரு மருங்கிலும் சடைமுடியுடன் இரு முனிவர்கள் நின்றார்கள். முனிவர்கள், ''குழந்தைக் கடவுளே! இவர் உன்னை நோக்கித் தவம் புரிகின்றார்'' என்று கூறினார்கள்.

குழந்தை வேலன் இவரைக் கைகாட்டி அழைத்தருளினார். இவர் எழுந்து வணங்கினார். இறைவன்

இவருடைய செவியில் ஒன்றை உபதேசித்தருளினார். முனிவர்களுடன் முருகன் மேல் திசை நோக்கிச் சென்று மின்னொளி போல் மறைந்தருளினார்.

அடிகளார் முருகன் உபதேசித்ததை உன்னி, தியானித்து அமர்ந்தார். தம்மை மறந்தார். கட்டை போல் அசைவற்றுக் கிடந்தார்.

**சொன்ன கிரவுஞ்ச கிரியூடுருவத் தொளைத்த வைவேல்**
**மன்ன! கடம்பின் மாலைமார்பா! மௌனத்தையுற்று**
**நின்னை யுணர்ந்துணர்ந் தெல்லாம் ஒருங்கிய நிர்க்குணம்பூண்டு**
**என்னை மறந்திருந்தேன் இறந்தேவிட்ட திவ்வுடம்பே**

என்ற அருணகிரிநாதருடைய பாடலுக்கு அவர் இலக்கியமாக இருந்தார். தம்மை மறந்த தவத்தில் அடிகளார் இருபத்தெட்டு நாட்கள் இருந்தார். ஆக, குழியில் இறங்கியதிலிருந்து முப்பத்தைந்து நாட்கள் கழிந்தன. முப்பத்தைந்தாம் நாள் விடியற்காலை இவருடைய தலைக்குமேல் இடி இடித்தாற்போன்ற ஒரு பெரிய ஒலி உண்டாயிற்று. மண்ணும் விண்ணும் நடுங்குவதுபோல் அடிகளாருக்குத் தோன்றியது. ஒரு பேரொளி உண்டாயிற்று.

"ஏகாதச ருத்திரர் வருகின்றார்கள். நீ எழுந்திரு" என்ற ஒலி வானில் எழுந்தது.

அடிகளார், "எவர் கூறினும் எழேன்; எந்தை கந்தவேள் கட்டளை கிடைத்தால் எழுவேன்" என்றார்.

மற்றும் ஓர் ஒலி எழுந்தது.

"முருகன் கட்டளை, எழு."

இதனைக் கேட்ட அடிகளார் எழுந்தார். உச்சிமேற் கைகூப்பித் தொழுதார். அந்தக் குழியை மும்முறை வலம் வந்து நிலத்தில் வீழ்ந்து வணங்கினார். "எனக்கு அருள் கிடைத்த இந்த இடத்தை விட்டுப் பிரிய மனம் வரவில்லை. எந்தை பிரான் கட்டளையை மறுக்க அஞ்சிப் பிரிகின்றேன்" என்று கூறிவிட்டுப் புறப்பட்டார். அப்போது மேல் திசையில் சந்திரன் விளக்கம் புரிந்து கொண்டிருந்தான்.

உடையநாயகம்பிள்ளையின் வீட்டுத் திண்ணையில் அமர்ந்தார். விடிந்தபின் உடையநாயகமும் ஏனைய சீடர்களும் கூடினார்கள். பஞ்சாங்கம் கொணருமாறு செய்து அன்றைய நாளைக் கேட்டு அறிந்தார். அதற்குப்பின் தாம் நிஷ்டையிலிருந்த நாட்கள் முப்பத்தைந்து என உணர்ந்தார்.

இந்த நிகழ்ச்சிகளை அடிகளார் தமது பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.

அடிகளார் பல முறை இறைவனைக் கனவிலும் நனவிலும் கண்டு களித்தார்.

அடிகளார் உச்சிப் போதில் மட்டும் உப்பு, புளி, மிளகாய், கடுகு, எண்ணெய், சர்க்கரை என்ற இவைகள் இன்றிச் சிறிது அன்னம் உண்ணும் நியமம் பூண்டவர். கடுந் துறவி.

1923 டிசம்பர் மாதம் 27ம் தேதி சுவாமிகள் மீது ஒரு வண்டியேறி அவரது கால் முறிந்து விட்டது. சென்னை பெரிய மருத்துவச் சாலையில் சிகிச்சை பெற்றார். ஆங்கிலேய மருத்துவ வல்லுநர்கள், 'அடிகளார் உப்பு காரம் உண்ணாதவர். முதிர்ந்த பருவத்தினர்; இனி கால் கூடாது' என்று கூறி விட்டார்கள். அம்மாதம் அமாவாசைக்கு மறு நாள் இரவில் அடிகளார் முருகனிடம் முறையிட்டு வேண்டினார்.

வானெலாம் சிறகை வீசி ஒரு பெரிய நீல மயில் அடிகளார் முன் ஆடியது. அதன் அடியில் மற்றொரு சிறிய மயிலும் ஆடியது. இந்த அற்புதக் காட்சியை அடிகளார் கண்டு படுத்தவண்ணமே கைகூப்பித் தொழுதார்.

இரு சிறிய வேல்கள் அவர் முறிந்த காலில் உராய்ந்து சென்றதாகக் காட்சியும் தெரிந்தது.

கால் கூடிவிட்டது.

மறு நாள் அதிகாலை ஆங்கிலேயரான மருத்துவர் வந்தார். அடிகளாரின் படுக்கையில் ஒரு குழந்தை படுத்திருக்கக் கண்டார். அதிசயம் கொண்டார். அருகில் சென்றவுடன் குழந்தை மறைந்து விட்டது.

சுவாமிகள் நடந்தருளினார்.

அடிகளார் முருகன் மீது செந்தமிழ்ப் பாடல் 6666 பாடியருளினார். பின்னர், உரைநடையாக எழுதுவாராயினார்.

1929 மே முப்பதாந் தேதி, சஷ்டி திங்கள்று காலை ஏழேகால் மணிக்கு அடிகளாருடைய ஆன்மா முருகன் திருவடியில் கலந்தது.

இவருடைய மகாசமாதிக் கோயில் திருவான்மியூரில் இருக்கின்றது. பரம சாந்தியான இடம். தரிசித்தால் வினைப் பகை விலகும்.

"அங்கே என்ன கூச்சல்? சித்த நாழி நிம்மதியாப் படிக்க விட மாட்டேளா?"



"...வைரவ புராணத்தைப்பத்தி எவ்வளவு அழகா அற்புதமா எழுதி இருக்கா? ரொம்ப சுவாரஸ்யமான புஸ்தகம்...!"



"தூக்கம் அடிக்கிறது. சித்தக் கண்ணை மூடறேன்....அப்பாடா!
புகைப்படம்: ஆர். பி. எஸ். மணி






தலைவனுக்கும் தலைவிக்கும் உள்ள தொடர்பைத் தோழி செவிலித் தாய்க்குப் பலவிதங்களில் உரைப்பது தமிழ் இலக்கியத்தில் தனி அழகுடைய ஒரு துறை. இதற்கு 'அறத்தொடு நிற்றல்' எனப் பெயர். இதில் பல விதங்களுண்டு. இவற்றையே அடுத்து வரும் பக்கங்களில் விஜயா வழங்குகிறார்.

முதல் படத்தில் தோழி செவிலிக்குச் சொல்கிறாள்: ''தலைவியும் தோழிகளும் சோலையில் விளையாடிக்கொண்டிருந்தோம். தலைவி உயரமான இடத்தில் பூத்திருந்த பூவைப் பறிக்க முடியாமல் வருந்தி, மலரை ஆர்வத்தோடும், ஏக்கத்தோடும் பார்த்துக் கொண்டிருந்தாள். அப்போது ஒரு வாலிபன் அங்கு வந்து, தலைவியின் விருப்பத்தை உணர்ந்து மலரைப் பறித்தான். பறித்ததோடு மட்டுமின்றி அவள் கூந்தலில் சூட்டியும் விட்டான். அவனை எண்ணியே தலைவி மெலிந்தாள்.'' இக்கூற்று 'பூத்தரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றல்' எனப்படும்.

இரண்டாம் சித்திரத்தில்தோழி செவிலியிடம் சொல்வாள்: ''தலைவியும் நாங்களும் மலையருவியில் முழுகிக் கொண்டிருந்தோம். திடுமென வெள்ளம் மிகுந்தது. அது தலைவியை இழுத்துப் போகத் தொடங்கியது. நாங்கள் தவித்தோம். அப்போது எதிர் பாராத விதமாகக் காளையொருவன் அங்கு தோன்றி நீரில் பாய்ந்தான். தலைவியை அணைத்துக் கரை சேர்த்தான். அவனை நினைத்தே தலைவி உருக்குலைகிறாள்.'' இவ்விதம் தலைவியின் காதலைக் கூறுவது 'புனல்தரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றல்' எனப்படும்.

மூன்றும் ஓவியத்தில் செவிலித் தாயிடம் தோழி மொழிகிறாள்: ''நாங்களும் தலைவியும் சோலையில்விளையாடிக் கொண்டிருந்தோம். மதயானை பிளிறிக் கொண்டு வந்தது. நாங்கள் மூலைக்கொருவராய் ஓடினோம். தலைவி பிரமித்து, நின்ற இடத்திலேயே நிலைத்து அலறினாள். அப்போது கட்டழகு வீரன் ஒருவன் அங்கு தோன்றி தலைவியை இடக்கையால் அணைந்து, வலக்கையால் யானைமீது வேல் வீசினான். யானையின் நெற்றியிலிருந்து இரத்தம் பீறிட்டது. யானை ஓடி விட்டது. வாலிபனின் வலப்புறத்தில் யானையின் இரத்தமும், இடப்புறத்தில் தலைவியின் கண் மை கரைந்த கருப்பு நீரும் வழிய, அவன் ஒருபுறம் சிவந்தும் ஒருபுறம் கருத்துமுள்ள சிவபெருமான் போல் விளங்கினான். யானை ஓடிய பிறகு அவனும் சென்று விட்டான். அவனை எண்ணியே தலைவி ஏங்குகிறாள் போலும்.'' இது 'களிறுதரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றல்' எனப்படும்.

தலைவனும் தலைவியும் தீண்டிக்கொள்வதை இம் மூன்று காட்சிகளிலும் காண்கிறோம். நாலாவது வேறு விதமானது. இதனைச் செவிலியிடம் பேசும் தோழியின் மொழியில் கேட்போம்: ''தலைவியும் நாங்களும் மலைச்சாரலில் வேங்கைப்பூ பறிக்கச் சென்றோம். 'புலிபுலி' என்று ஆரவாரம் செய்தால் வேங்கைக் கிளை வளையுமல்லவா? எனவே அவ்வாறு ஆர்ப்பரித்தோம். அப்போது இளைஞன் ஒருவன் அங்கு தோன்றினான். அவன் செங்கழுநீர் மலர் மாலையும், வெட்சி மலர் மாலையும் அணிந்திருந்தான். மார்பில் சந்தனம் பூசியிருந்தான். அவன் வில்லை வளைத்து அம்பைத் தொடுத்தவாறு வந்து, ''எங்கே புலி?'' என்றான். நாங்கள் நாணி மறைந்து நின்றோம். ''உங்கள் வாயில்பொய்யும் வருமா?'' என்று தலைவியைக் கேட்டுவிட்டுத் தேரின் மீது ஏறிக் குதிரைகளைத் திருப்பியவாறு தலைவியின் கண்களை நோக்கினான். சூரியன் மேற்கே விழுந்தது. 'இவனல்லவா ஆண் மகன்!' என்றாள் தலைவி.



**படுக்கையைப்
பார்த்தாலே
உறக்கம் வருமே!**

ஏன் வராது! படுக்கையின்மீது போட்டிருப்பது பாம்பே டையிங்கின் உலகப் பிரசித்தி பெற்ற ப்யோகேல் விரிப்பு! இது ப்ளெயினாகவும், கோடுகளுடனும், விதவிதமான பல டிஸைன்களிலும் கிடைக்கின்றது. ப்யோகேல் படுக்கை விரிப்புகளைக் கொண்டு உங்கள் படுக்கையறையை கண்டோர் பொறுமைப் படும்படி வசீகரமாக வைத்துக் கொள்ளுங்கள்!

**பாம்பே டையிங்**

உங்கள் குடும்பத்தில்
இந்த **தீபாவளி** பரிசு
என்றும் நிலைத்திருக்கட்டும்









**பிலிப்ஸ் மோனோராமிக் ரேடியோ**

எமது தீபாவளி

வாழ்த்துக்கள்





திண்டுக்கல்

அங்கு விலாஸ்

M.V. முத்தையா பிள்ளை [FIRM]

வாசனைப் புகையிலை

தந்தி: "அங்குவிலாஸ்" REGD.NOS: 12700, 149348 போன் நிர்: 71.

M.S.MANI

# திரைகடலோடிய தொன்மைத் தமிழர்

கிறிஸ்து சகத்துக்கு வெகுகாலம் முந்தியே, தொலைநோக்குடைய தமிழர்கள், வியாபாரத்தை முன்னிட்டுக் கொண்டு, மத்தியதரைக் கடலைச் சுற்றியுள்ள கிரீஸ், ரோம், எகிப்து முதலிய நாடுகளுக்கும் மத்திய ஆசியாவைச் சேர்ந்த சிரியா, பாலஸ்தீனம், பாரசீகம் முதலிய நாடுகளுக்கும், ஆரம்பத்தில் தரை வழியையும் பிறகு கடல் வழியையும் பின்பற்றிச் சென்றார்கள். இந்த நாடுகளில், தமிழ் நாட்டுப் பொருள்களுக்கு அதிக கிராக்கியிருந்தது. இந்தக் கிராக்கியை நன்கு பயன்படுத்திக் கொண்டார்கள். தமிழ் நாட்டுக்கு மிகுதியான பணம் கிடைத்துக் கொண்டிருந்தது.

இப்படி மேலை நாடுகளுக்குச் சென்றவர்களைக் காட்டிலும் அதிகமான பேர் — ஆம், லட்சக்கணக்கில் — தமிழகத்துக்குக் கிழக்கிலும், தென் கிழக்கிலுமுள்ள பர்மா, சையாம் (தற்போதைய தாய்லாந்து) அன்னம், கம்போடியா, சீனு, மலேயா தீபகற்பம், இந்தோனேசியா ஆகிய பல நாடுகளுக்குக் கடல் வழி ஒன்றையே பின்பற்றித் துணிந்து சென்றார்கள். இப்படி வியாபார நிமித்தமாகச் சென்றவர்களில் சிலரும், இவர்களைத் தொடர்ந்து காலக்கிரமத்தில் சென்ற வேறு பலரும், சென்ற இடங்களில் நிலையாகக் குடி அமர்ந்தனர். இதற்கு முக்கிய காரணம், மேற்கண்ட நாடுகள் வளம் மிகுந்தவையாக இருந்ததுதான். இவை பொதுவாகப் பொன் கொழிக்கும் நாடுகள் என்றே அழைக்கப்பட்டன. குடியமர்ந்தவர்களில், க்ஷத்திரியத்தன்மை மிகுந்த அல்லது க்ஷத்திரிய பரம்பரையில் வந்த சிலர், புதிய ராஜ்யங்களை ஸ்தாபித்து அரசு புரிந்தனர்.



வெ. சாமிநாதசர்மா

ஆனும் பெரும்பாலோர் வியாபார நோக்கோடு சென்றவர்களே.

வியாபார நோக்கோடு சென்றவர்களானாலும், இவர்கள் பொருள் வருவாய் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்ட வெறும் வியாபாரிகளாக இருக்கவில்லை; கல்விமான்களாகவும், நேர்மையும் வாய்மையும், தெய்வபக்தி மிகுந்தவர்களாகவும், எல்லாவற்றுக்கும் மேலாக உலக அநுபவம் நிறைந்தவர்களாகவும் இருந்தார்கள். இந்த அநுபவம் காரணமாக இவர்கள் முன்யோசனையுடன் தங்களோடு தாங்கள் கொண்டு செல்லும் சரக்குகளைப் பாதுகாக்க ஒருசில படைவீரர்களையும், தங்களுடைய சமயச் சடங்குகளை நடத்தி வைக்கவும், தங்களுடைய தெய்வ வழிபாட்டுக்குத் துணை செய்யவும், சமய நூல்களில் தேர்ச்சி பெற்ற சில பிராமணர்களையும், தங்களுடைய அன்றாட வாழ்க்கையைப் பரிமளிக்கச் செய்ய வல்ல கலைஞர்கள், பலதுறைத் தொழிலாளர்கள் ஆகிய சிலரையும் அழைத்துச் சென்றார்கள்; அல்லது தங்களைப் பின்தொடர்ந்து வருமாறு செய்தார்கள்.

வியாபாரத்தில் இவர்கள் கடைப்பிடித்த ஒழுங்கு, நேர்மை முதலியவை காரணமாக இவர்கள் கொண்டு சென்ற சரக்குகள் சுலபமாகவும், சீக்கிரத்திலும் விற்றுப் போயின. இவர்களையொட்டித் தமிழ் நாட்டு நாகரிகமும், கலாசாரமும், பழக்க வழக்கங்களும் சென்றவிடங்களில் மெல்ல மெல்லப் பரவின. இவர்களுடைய கண்ணியமான நடத்தை, இவர்களுக்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பைச் சம்பாதித்துக் கொடுத்தது. இவர்களால் தமிழ் நாட்டின் மதிப்பும் உயர்ந்தது.

தமிழ் நாட்டின் துறைமுகப் பட்டினங்களிலிருந்து தனித் தனிக் குழுவினராகத் தனித் தனிக் கப்பல்களில் சென்ற இந்த வியாபாரிகள், சென்ற இடங்களில் முதல் வேலையாக, தங்களைக் கட்டுப்பாட்டுக்குட்பட்ட ஒரு வியாபார சங்கமாக அமைத்துக் கொண்டார்கள்.

சுமத்ரா தீவில் உள்ள லோபுதுவா என்ற இடத்தில் கி. பி. 1088-ஆம் வருஷத்துத் தமிழ் கல்வெட்டு ஒன்று கண்டுபிடிக்கப் பட்டிருக்கிறது. இதில் அந்த ஊரில் நிறுவப்பெற்ற தமிழ் வியாபாரிகள் சங்கத்தின் அமைப்பு, நடவடிக்கைகள் முதலியவை பிரஸ்தாபிக்கப் பட்டிருக்கின்றன. இந்தச் சங்கத்தில் ஆயிரத்தைந்நூறு அங்கத்தினர்கள் இருந்தார்கள் என்று மேற்கண்ட கல்வெட்டு கூறுகிறது.

இப்படிச் சங்கமாக அமைத்துக் கொண்ட வியாபாரிகள் தாங்கள் விலைப்படுத்தக் கொண்டு வந்த சரக்குகளையும், உள்நாட்டில் விலைக்கு வாங்க வேண்டிய சரக்குகளையும் சேமித்து வைக்க தனித் தனிக் கிடங்குகளைக் கட்டிக் கொண்டார்கள். இந்தக் கிடங்குகளை ஒட்டினாற்போல், தாங்களும், தங்கள் சிப்பந்திகளும் தங்களுடன் வந்த படை வீரர்களும், தமிழ் நாட்டிலிருந்து அவ்வப்பொழுது வந்து போகும் அரசாங்கத் தூதுகோஷ்டியினரும் வசிப்பதற்கென்று தனித் தனியாக நிரந்தரமான கட்டடங்களை நிர்மாணித்துக் கொண்டார்கள். குளி நீருக்கும், குடிநீருக்குமான குளங்கள் வெட்டிக் கொள்ளவும், தெய்வ வழிபாட்டுக்கான கோயில்கள் கட்டிக் கொள்ளவும் இவர்கள் தவறவில்லை. சுருக்கமாக, உள்நாட்டு அரசாங்கத்தின் சட்டதிட்டங்களுக்கும் அதிகாரத்துக்கும் உட்படாத சர்வ சுதந்திரத்தோடு நிரந்தரமாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கக்கூடிய ஒரு சிறு நகரத்தை — வணிகர் நகரத்தை — அமைத்துக் கொண்டார்கள் என்று சொல்லலாம். இந்த நகரத்தைப் பாதுகாக்கும் பொறுப்பை, தங்களுடன் அழைத்து வந்த படை வீரர்களிடம் ஒப்படைத்தார்கள்.

கி. பி. 192-ஆம் வருஷத்திலிருந்து தமிழர்கள் குடியேறி வந்த சையாம் நாட்டில் தகுவாபா என்ற ஊரில் கி. பி. ஒன்பதாவது நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு தமிழ் கல்வெட்டு கண்டெடுக்கப்பட்டிருக்கிறது. இதில் இந்த ஊரில் வியாபாரம் செய்து பெரும் பொருளீட்டிய, தமிழகத்திலுள்ள நாங்கூர் நாட்டுப் பெருமகனொருவன் ஒரு குளம் எடுத்து அதற்கு, 'அவனி நாரணம்' என்று பெயரிட்டான் என்றும், அந்தக் குளத்தைப் பாதுகாத்து வரும் பொறுப்பை அங்குள்ள 'மணி கிராமம்' என்ற வியாபார சங்கத்தைச் சேர்ந்த படை வீரர்களிடம் ஒப்படைத்தான் என்றும் சொல்லப் பட்டிருக்கின்றன. இதைத் தவிர, இந்த ஊரில் ஒரு கோயில் தமிழ்நாட்டிலிருந்து வரவழைக்கப்பட்ட ஸ்தபதிகளைக் கொண்டு கட்டப்பெற்றதாகவும், அந்தக் கோயிலில் இந்த ஊரில் வசித்து வந்த தமிழ் வியாபாரிகள் நித்திய வழிபாடுகளைச் செய்து வந்தார்கள் என்றும் கல்வெட்டு தெரிவிக்கிறது.

மேற்படி கல்வெட்டு காஞ்சீபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்த பல்லவ மன்னர்களில் ஒருவனான மூன்றாவது நந்திவர்மன் (கி. பி. 825–850) காலத்தது. இவன் அவனி நாராயணன் என்ற பெயராலும் அழைக்கப்பட்டான். தகுவாபாவில் குளம் எடுத்தவன் இவனுடைய பிரஜையாதலின், தான் எடுத்த குளத்துக்குத் தன் மன்னனுடைய பெயரை வைத்துத் தன் ராஜ விசுவாசத்தைக் காட்டிக் கொண்





டான். வெளிநாடுகளுக்குச் சென்ற தமிழர்கள், எப்பொழுதுமே தாய்நாட்டுப் பற்றுடையவர்களாகவும், தங்கள் அரசனிடம் விசுவாசம் மாறாதவர்களாகவும் இருந்தார்கள் என்பது இங்கு கவனிக்கத் தக்கது.

கிறிஸ்து சகத்துக்கு முந்தியே தமிழ்நாட்டுக்கும் சீனாவுக்கும் கடல் வழியாக வியாபாரப் போக்குவரத்து இருந்து வந்தது. கிறிஸ்து சகத்துக்குப் பிறகு இந்தப் போக்குவரத்து அதிகமாயிற்று. யானைத் தந்தம், பவழம் முத்து முதலிய விலைமதிப்புள்ள பொருள்களை ஏற்றிக் கொண்டு நூற்றுக்கணக்கான கப்பல்கள் தமிழ்நாட்டுத் துறைமுகங்களிலிருந்து சீனாவுக்குச் சென்றன. இவை திரும்புகிறபோது, சீனாவில் அதிகமாக உற்பத்தியான பட்டு, கற்கண்டு, வெடிமருந்து, பீங்கான் முதலியவைகளை ஏற்றிக் கொண்டு வந்து தமிழ் நாட்டில் இறக்குமதி செய்தன. இவை தவிர, கற்பூரம், பனிநீர், குங்குமம் முதலியவை சீனா முதலிய இடங்களிலிருந்து வந்தன என்று பட்டினப்பாலை உரையால் அறிகிறோம். சுமத்ரா தீவிலிருந்தும் ஏராளமான கற்பூரம் தமிழ்நாட்டுக்கு வந்ததாகத் தெரிகிறது. சுமத்ரா தீவு, கற்பூரத்வீபம் என்ற பெயரால் அழைக்கப்பட்டு வந்தது.

கி. மு. இரண்டாவது நூற்றாண்டில், சீனாவை ஆண்ட பூ-டீ என்ற மன்னன் உத்தரவுப்படி வர்த்தகக் குழு ஒன்று சீனாவிலிருந்து புறப்பட்டு, சுமார் ஒரு வருஷ கடற்பயணத்துக்குப் பிறகு, காஞ்சீபுரத்தை அடைந்ததென்றும், இந்தக் குழு திரும்பிச் செல்லுகையில், முத்து, பவழம், ரத்தின வகைகள் ஆகியவற்றை எடுத்துக் கொண்டு சென்றது என்றும் சீன வரலாறு கூறுகிறது. கி. பி. நான்காவது நூற்றாண்டிலிருந்து பதின்மூன்றாவது நூற்றாண்டு வரை, தமிழ்நாட்டுக்கும் சீனாவுக்கும் இடைவிடாத வியாபாரப் போக்குவரத்து இருந்ததென்று சுருக்கமாகச் சொல்லலாம்.

சீன மன்னர்களுக்கும், தமிழ்நாட்டுச் சோழ, பாண்டிய, பல்லவ மன்னர்களுக்கும் இடையே போய் வந்து கொண்டிருந்த அரசியல் தூதுகோஷ்டிகள்தான் எத்தனை ! கி. பி. பத்தாவது நூற்றாண்டில் ஆண்ட ராஜ ராஜ சோழன், ஒரு தூதுகோஷ்டி மூலம், இருபத்தோராயிரம் அவுன்ஸ் முத்துக்கள், அறுபது யானைத் தந்தங்கள், இருபத்துநான்கு விசை வாசனைத் திரவியங்கள் ஆகியவைகளை, அப்பொழுது சீனாவை ஆண்டு வந்த மன்னனுக்குப்பரிசுப்பொருள்களாக அனுப்பினான்.

கி. பி. இரண்டாவது நூற்றாண்டிலிருந்து தென்னாட்டவர் காம்போஜ (கம்போடியா) நாட்டில் குடியேறத் தொடங்கினர். இங்கு முதன் முதலாக அரசு நடத்தியவன், கௌண்டின்யன் என்ற தென்னகத்துப் பிராமணன். இவனுடைய வமிசத்தினர், சுமார் ஒன்பது நூற்றாண்டுகள் வரை வழி வழியாக இங்கு அரசாண்டு வந்தனர்.

கி. பி. இரண்டாவது நூற்றாண்டுக்கு முந்தியே, சம்பா என்று அழைக்கப்பட்ட அன்னாம் தேசம், தென்னாட்டவரின் குடியேற்றத்தை ஏற்றுக் கொண்டது. இந்த நாட்டிலும் அரச வமிசத்தை முதன் முதலாகத் தோற்றுவித்தவர்கள் தென்னாட்டவரே. சுமார் பதின்மூன்று நூற்றாண்டு காலம், இந்த வமிசத்தினர் திறமையாக ஆட்சி புரிந்து வந்தார்கள்.

கி. பி. முதலாவது நூற்றாண்டுக்குச் சிறிது காலம் முந்தியே சுமத்ரா தீவிலும் நாலா தீவிலும் தென்னாட்டவர்கள் சென்று குடியேறினர். சிறப்பாக கி. பி. பதினோராவது நூற்றாண்டில் சுமத்ரா தீவுக்குத் தென்னிந்தியர்கள் கூட்டம் கூட்டமாகச் சென்று குடியேறினர் என்று ஒரு வரலாறு கூறுகிறது. இங்ஙனமே மலேயா தீபகற்பத்தில் கி. பி. நான்காவது ஐந்தாவது நூற்றாண்டில் குடியேறிய தென்னிந்தியர்களின் எண்ணிக்கை மிகவும் அதிகமாயிருந்தது. நாலா, சுமத்ரா, மலேயா தீபகற்பம் ஆகிய இந்த நாடுகள் கிறிஸ்து சகத்தின் ஆரம்ப நூற்றாண்டுகளிலிருந்தே தமிழ் மன்னர்களின் ஆட்சிக்குட்பட்டிருந்தன. இந்த மன்னர்கள், வடமொழியிலும், தமிழ் மொழியிலும் நல்ல தேர்ச்சியுடையவர்களாக இருந்தார்கள். கி. பி. ஆறாவது நூற்றாண்டில் ஜாவாவில் ஆண்ட பூர்ண வர்மன் என்ற அரசன், வைதீக மதத்தைப் பின்பற்றி வந்தான் என்றும், இவனுடைய அரசவையில் வடமொழிக்கு மிகுதியான ஆதரவு இருந்து வந்ததென்றும் அறிய முடிகிறது.

தமிழர்கள் குடியேறியதன் விளைவாக மேற்கண்ட நாடுகளில் தமிழ்நாட்டுப் பழக்க வழக்கங்கள், நுண்கலைகள் முதலியவை குடிபுகுந்தன. இவைகளை அந்த நாடுகளின் பூர்வ குடிகளும் விரும்பி ஏற்றுக் கொண்டார்கள்.





கணவன்: இதோ பாரு, பங்கஜம்! நம்ம வீட்டுக்கு நாட்டுப் பெண் புதுசு ஆகுதே'ன்னு அலட்சியம் ஒரு போட்டுக் கூட தூசு வராமே பார்த்துக்கணும்.... வந்துடு....! ஆமா!

மனைவி: சரி, அப்ப இந்தக் கூட வெங்காயத்தையும் நீங்களே நறுக்குங்கோ!

◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇

ஜாவா, சுமத்ரா, பாலி முதலிய தீவுகளில் வசிக்கின்ற மக்கள் வெற்றிலை போடும் பழக்கத்தைத் தமிழர்களிடமிருந்தே பெற்றார்கள். நெல் முதலிய தானியங்களைக் குற்ற உரல் – உலக்கையைப் பயன்படுத்தல், ஆகாரத்தில் அரிசியை உபயோகித்தல், இரட்டை மாட்டு வண்டியில் பிரயாணம் செய்தல், இடுப்பில் ஒற்றைத் துணியுடன் வயல்களில் இறங்கி வேலை செய்தல், தச்ச வேலையில் வாய்ச்சியைக் கையாளல், திருவிழாக்களில் கரகம் எடுத்தல், இப்படிப் பல தமிழர்களிடமிருந்து சென்று பரவியவை.

தமிழ் நாட்டில் உள்ளதுபோல் கோபுரங்களோடு கூடிய கோவில்களும் இந்தக் கோவில்களில் விநாயகர், பிரும்மா, சிவன், விஷ்ணு, துர்க்கை முதலியோருடைய உருவச் சிலைகளும், ஜாவா, சுமத்ரா முதலிய பிரதேசங்களில் ஏராளமாகக் காணக் கிடக்கின்றன. இந்தக் கோவில்களில் நடைபெற்ற வழிபாட்டு முறைகள், திருவிழாக்கள் முதலிய பலவும் தமிழ் நாட்டிலிருந்து சென்றவையே.

சையாம், கம்போடியா ஆகிய நாடுகளில், தமிழ் தந்த அகத்திய மாமுனிக்குக் கோவில்கள் எழுப்பி அவைகளில் ஒழுங்காக வந்தனை வழிபாடுகள் நடைபெற்றிருக்கின்றன. தவிர, மேற்கண்ட இருநாடுகளிலும், ஜாவா, சுமத்ரா முதலிய தீவுகளிலும், தமிழ் நாட்டில் ராமாயண, மகாபாரத இதிகாசங்களுக்கு என்ன மதிப்பு இருந்து வந்திருக்கிறதோ அந்த அளவுக்கு மதிப்பு இருந்து வந்திருக்கிறது. இந்த இதிகாசங்களை நாட்டிய நாடகங்களாக அமைத்துக் காட்டுவதில் ஜாவானியர்கள் இப்பொழுதும் திறமைசாலிகளாகத் திகழ்கிறார்கள்.

தமிழ் நாட்டிலிருந்து சென்ற ஞான பண்டிதர்கள் பலர், இந்து மதத்தை – சிறப்பாகச் சைவ சமயத்தை இந்தத் தென்கிழக்கு ஆசியப் பிரதேசங்களில் பரப்பியிருக்கிறார்கள். இவர்களைப் போலவே, பௌத்த பிட்சுக்கள் பலர் சென்று புத்தமதப் பிரசாரம் செய்திருக்கிறார்கள். இவ்விரு சாராரும் ஆங்காங்கு அநேக மடாலயங்களை ஸ்தாபித்து, அங்கு ஒழுங்கான மத போதனைகள் நடைபெறுவதற்கு ஏற்பாடு செய்வித்தார்கள்.

புத்த மதத்தைச் சீனாவில் பரப்பத் தமிழ்நாட்டிலிருந்து சென்ற பிட்சுக்களின் எண்ணிக்கையை ஆயிரக் கணக்கிலேயே சொல்ல வேண்டும். பல்லவ அரச பரம்பரையைச் சேர்ந்த போதி தர்மன் என்பவன், கி.பி. 520-ஆம் வருஷம் காஞ்சிபுரத்திலிருந்து புறப்பட்டு இந்தோனேஷியா வழியாகச் சீனாவுக்குச் சென்று சீன அரசவையில் அதிக மரியாதைகளைப் பெற்றான் என்றும், இவனுக்குப் பிறகு சீனாவில் புத்தமதப் பிரசாரம் தீவிரமடைந்ததென்றும் சீன நூல்கள் கூறுகின்றன. இவனைப்போல் இன்னும் அநேக மகா பண்டிதர்கள் சீனாவுக்குச் சென்று, வடமொழியில் உள்ள அநேக புத்தமத கிரந்தங்களைச் சீனத்தில் மொழிபெயர்த்துக் கொடுத்ததோடு, அங்கு புத்தமதம் பிரபலமடைவதற்குப் பெரிதும் உழைத்திருக்கின்றனர்.

தமிழ் நாட்டிலிருந்து சீனாவுக்குச் சென்றவர்களில் அநேகர் அப்படியே ஜப்பானுக்கும் சென்று அங்கு தமிழ்நாட்டுக் கலாசாரத்தைப் பரப்பியிருக்கிறார்கள். தமிழர்கள் பெரிதும் போற்றி வந்த இந்திர வழிபாடு ஜப்பானில் பிரபலமடைந்தது. ஜப்பானின் தலைநகரான டோக்கியோவில் இந்திரனுக்கு ஒரு கோவில் எழுப்பப்பட்டது. விநாயகர், முருகன், சிவன், கலைமகள் ஆகிய இப்படிப்பட்ட தெய்வங்களின் உருவச் சிலைகள் இப்பொழுதும் ஜப்பானின் பல இடங்களில் காணப்படுகின்றன.

பாரத்வாஜ கோத்திரத்தைச் சேர்ந்த போதிசேனன் என்பவன் கி. பி. 733-ஆம் வருஷம் தமிழ் நாட்டிலிருந்து ஜப்பானுக்குச் சென்று அங்கு புத்த மதத்தைப் பரப்பியதோடல்லாமல், புத்த மதத்தின் தலைமைப் பீடாதிபதியாகவும், அநேக ஆண்டுகள் வீற்றிருந்தான். இவன் நூற்றுக்கணக்கான ஜப்பானியர்களுக்கு வடமொழிப் பயிற்சி அளித்து அவர்களைச் சிறந்த பண்டிதர்களாக்கினான். மற்றும் இவன் ஜப்பானிய எழுத்துக்களை ஒழுங்குற அமைத்துக் கொடுத்து அந்த மொழிக்கு ஆக்கமளித்தான்.

கி. பி. 790-ஆம் வருஷம் தமிழ்நாட்டிலிருந்து ஒருவன் பருத்தி விதைகளை எடுத்துக் கொண்டு ஜப்பானுக்குச் சென்றான். இவனுக்குப் பிறகே ஜப்பானில் பஞ்சு உற்பத்தி அதிகமாயிற்று. இந்தத் தமிழன் முதன் முதலாகச் சென்று இறங்கிய ஊரில் இவனுக்கு ஒரு கோவில் எழுப்பி, அந்த ஊருக்குச் 'சொர்க்கம்' என்று பெயரிட்டுத் தங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொண்டிருக்கிறார்கள் ஜப்பானியர்கள். பொதுவாகவே சீனாவிலும், ஜப்பானிலும் நமது பாரத நாடு சொர்க்கம் என்று பொருள் தரக்கூடிய ஒரு வார்த்தையாலேயே வெகு காலம் வரையில் அழைக்கப்பட்டு வந்திருக்கிறது.

இறுதியில், சுருக்கமாகக் கூறுமிடத்து, கிறிஸ்து சகத்துக்கு வெகு காலம் முந்தியிருந்தே தமிழ்நாட்டுக்கும் உலகத்துப் பல நாடுகளுக்குமிடையே பொருள் பரிவர்த்தனையும் கலாசாரப் பரிவர்த்தனையும் நடைபெற்று வந்திருக்கின்றன. இந்தப் பரிவர்த்தனைகளில் தமிழர்கள் பெற்றது குறைவு; கொடுத்தது அதிகம்.




பேஸ் பவுடர்
(ரோஸ், ஜாஸ்மின், மெரிகு)

குல்கந்து

பொன்னாங்கண்ணித் தைலம்

அரைக் கீரை விதைத் தைலம்

கோபுர மார்க் பன்னீர்

சந்தனாதித் தைலம்

லவ் பேர்ட்ஸ் பத்தி





**K.T.R. வாசனாதி திரவியசாலை**

விஜயபுரம் • திருவாரூர் • தமிழ்நாடு



சென்னை நகர பூரண விநியோகஸ்தர்கள்:

ஸ்ரீ ரகுநாத் ஏஜன்ஸிஸ், 10. அக்ரஹாரத் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, (போன்: 88223) சென்னை-2




ஆயிரத்தைந்நூறு ஆண்டுகளுக்கு முன். தமிழ்நாட்டு ஸ்ரீ வில்லி புத்தூர். மார்கழி மாதம் சதுர்த்தசி இரவு. விடியற்கால வேளை. தைந்நீராடல் என்ற பாவை நோன்பைத் தொடங்கும் கன்னிப் பெண்கள், தெருவிலே காத்யாயனியின் பெருமையைப் பாடிக் கொண்டும் கும்மியடித்துக் கொண்டும் வருகிறார்கள்.

**ஒரு குரல் :**

பொழுது புலர்ந்தது. பொற்கோழி கூவிற்று.
போகலாம் வாருங்கள் கன்னியரே.
தொழுது பராசக்தி சோதியை நெஞ்சினில்
சூட வாருங்கள் கன்னியரே.

**எல்லோரும் :**

கும்மியடி, பெண்ணே, கும்மியடி, கண்ணே,
கோலக் கும்மி அடித்திடடி.
நம்பன் இடப்புறத் தன்னை அருள் — நிறம்
நாடிக் கும்மி அடித்திடடி — புகழ்
பாடிக் கும்மி அடித்திடடி.

**ஒரு குரல் :** காலை புலர்ந்தது. காட்டினிலே கதிர்க்
கண்கள் மலர்ந்தன, கன்னியரே.
நீல மழை பெய்ய நெஞ்சம் நிறைந்துய்ய
நீலியைப் பாடுவோம் கன்னியரே.

**எல்லோரும் :**

கும்மியடி, பெண்ணே, கும்மியடி, கண்ணே....

**ஒரு குரல் :**

தண்ணென் றருள்புரிந்தாதரிப்பாள், எங்கள்
தாயாம் தயாபரி தேறடியோ.
கண்ணென் றதிர்ந்து மழைவரும் காட்சியைக்
கண்ணைத் திறந்துநீ பாரடியோ.

**எல்லோரும் :** வாராய், மழையே, வா,
அரும்பு தூவி, அலர்தூவி,
வாராய், மழையே, வா.

**ஒரு குரல் :** வா, மனங்குளிர ; வா, வளருமுகில் ;
வா, வனந்தளிர ; வா, கனம் அதிர ;
வா, வயல் ஒளிர ; வா, அமுதுதிர ;
வா, வா, வா. ; வா, வா, வா.

**எல்லோரும் :** வாராய் மழையே வா
அரும்பு தூவி, அலர்தூவி,
வாராய் மழையே வா....

**ஒரு குரல் :**

மேகம் கொட்டத் துள்ளும் மின்னல் வெட்டப் புயல்
மேதினி எங்கும் வளைத்திடவே,
தாகம் முட்டித்தலை சாய்த்து வதங்கிடும்
தான்கள் தழைத்து நிமிர்ந்திடவே,

**எல்லோரும் :** வாராய், மழையே, வா,
அரும்புதூவி, அலர் தூவி,
வாராய் மழையே வா....

**ஒரு குரல் :**

பொன் மழை தருவாள், பூங்குழல் போற்றும்
கன்னியர் தமக்குக் கற்பகமாகிக்
கண் நிறைந்த கணவர் கைப் பிடிக்கும்
புண்ணியம் அருளுவாள், போற்றுவோம் அவள்பதம்

**இன்னொரு குரல் :**

செந்திருவாகத் திகழ்ந்திடுவாள், வெள்ளைத்
தேமலர்ப் பீடத்தும் ஏறிடுவாள் ;
சிந்தி விழிக்கனல் சிங்கத்தின் மீதேறிச்
சீறிடுவாள், தீமை நூறிடுவாள்.

**எல்லோரும் :**

கும்மியடி, பெண்ணே, கும்மியடி, கண்ணே,
கோலக் கும்மி அடித்திடடி.
நம்பன் இடப்புறத் தன்னை அருள் — நிறம்
நாடிக் கும்மி அடித்திடடி — புகழ்
பாடிக் கும்மி அடித்திடடி.

[பாடிக் கொண்டே மறைகிறார்கள்]

விடியற் காலம்: வாசலைப் பார்த்துக் கொண்டு பெரியாழ்வார் மகள் கோதை நிற்கிறாள். அவள் முகத்திலே, பரந்த மழை மேகத் தைப் போல ஏக்கம் கவிந்துள்ளது.

**கோதை :**

பொழுது புலரும் வேளை, எங்கும்
விழுது விழுதாய் இருள் விலகுகிறது.
எனது நெஞ்சத் திருளும் விலகுமா ?
மனத்தைக் கவ்வும் ஆசை ஈடேறுமா?
இருளைக் கடைந்த துணுக்குகள் போல
எருமை மாடுகள், பனிப்புல் மேய
ஊர்ந்து செல்கின்றன. ஊருணித் தோப்பில்,
சேர்ந்து பறவைகள் சிலம்பிடும் ஓசை,
கீசு கீசென்று அதோ, ஆனைச் சாத்தன்
பேசும் அரவம். என்னதான் பேசுமோ?
பிரியோம், பிரிந்தால், உயிர் தரியோம் எனக்
கரையும் இக்குருவிகள். நானோ, நானோ....
உயிரின் நாயகன், ஒரு தனி முதல்வன்,
உயர்வற உயர்ந்தோன், அவனைப் பிரிந்து,
துயரம், ஐயோ, துளியும் இல்லாமல்
மயர்விலே அலைகிறேன். வாழ்வெனக்குண்டா ?
பிறந்து, பிறவிகள் கோடி பிறந்து
மறந்து இரிகிறேன். வாழ்வெனக்குண்டா ?

[வெளியிலிருந்து தொலைவிலே பாடப்பெறும் பாவைக் கும்மி ஒலி வருகிறது. பின்வரும் சொற்கள் காதில் விழுகின்றன.]

**உள்ளேயிருந்து ஒரு குரல் :**

**கண் நிறைந்த கணவர் கைப் பிடிக்கும்**
**புண்ணியம் அருள்வாள், போற்றுவோம் அவள் பதம்.**

**கோதை :**

கணவர் கைப் பிடிப்பதா? கணவன் யாரோ ?
புண் பொதிந்த உடம்பு சுமந்து
காலதேவன் கையினில் ஆடும்
ஆலியாய் அழியுமோர் மனிதனும் கணவனா ?
மானிடவர்க்கு என்ற பேச்சு எழுந்தாலும்
ஊனை எறிவேன், உயிரை உதறுவேன்.

கணவனா? ஆயிரம் பணமுடி நிழலிலே
கண்வளர் கண்ணனே கணவன். அவனோ,
விண்ணும் மண்ணுமாய் விரிந்த விஞ்சையன்,
எண்ணங் கடந்தவன், எங்கும் கரந்தவன்,
அவனை என்னால் அடைய முடியுமா?
அவனை, அந்த அலகிலாப் புதிரை,
என்னால் எட்டிப் பிடிக்கவும் இயலுமா?
என்னால் இயலுமா? இயலுமா? ஆனால்....
எல்லையில்லாதவன், இறைவன். ஆயினும்
எல்லையில் கருணையும் அவன் இயல்பு அன்றோ?
அதனால் அல்லவா இறங்கினான்? அலகிலாப்
பதம் விட்டு இறங்கி, பஞ்சையைப் போல,
தேடித் தேவரும் தெளியா மாயவன்,
மாடு மேய்க்கும் ஆயரோடு ஆடினான்?
நீண்டவான் கடந்த நெடும் பதம் அன்றோ
பாண்டவர்க்காகத் தூது நடந்தது?
மத்தடி பட்டு மயங்கி அழுதது?
எத்தனை எத்தனை எளிமையை ஏற்றது?
உண்மைதான், உண்மைதான், ஆனால் ஆனால்,
பெண்ணே, அன்றுநீ பிறந்தாய் இல்லையே?
ஐயோ, அன்று நீ பிறந்திருந்தால்
ஐயனை, ஐயனை, அணைந்திருக்கலாம்.
தீங்குழல் விளம்பிய தேனை மாந்தி
மூங்கிற் காட்டு மூட்டிலே புகுந்து
கண்ணனைக் கண்டு...... கண்ணனைக் கண்டு....
பெண்ணே, ஏனடி இன்று பிறந்தாய்?
இந்தப் புழுதியில் இடர்ப்படுகின்றாய்?
நந்த கோகுலம், பிருந்தாவனக் கரை,
நந்த கோகுலம், யமுனைக் கரும் புனல்,
நந்த கோகுலம்.... நந்த கோகுலம்....

[செயலற்று, பேச்சற்று நின்று விடுகிறாள்]

### 3

நந்த கோகுலத்தில் ஆயர் சிறுமியர் கண்ணனையே அடையக்கருதி, அவனையே துணையாகக் கொண்டு புதுமையான பக்தி நோன்பு நோற்கிறார்கள். அவர்களில் ஒருத்தியாக அவர்களோடு பாடிக் கொண்டு ஆண்டாள் போகிறாள்.

**மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்,
நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்,
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்,
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்,
ஏரார்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்,
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல் முகத்தான்,
நாராயணனே நமக்கே பறை தருவான்,
பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்.**

### 4

பிற்பகல். நல்ல வெயில். பெரியாழ்வார் வளர்க்கும் நந்த வனம். மாமரத்திலிருந்து குயிலொன்று கூவிக் கொண்டிருக்கிறது. அதைக் கேட்டுக் கொண்டு நிற்கிறாள் கோதை.

**கோதை :**
ஆயர்பாடி எங்கே மறைந்தது?
மாயன் அவனும் மறைந்தான், மறைந்தான்.
இந்தப் புழுதிதான் என் தலைவிதியா?
விந்தைக் குயிலே, என்ன கூறுவாய்?
கேசவன் வருவான் என்றா? வருவானா?
ஆசை காட்டி மோசம் செய்தானடி.
என்ன சொல்கிறாய்? வருவானா? உனது
கன்னற் குரலும் அவன் குரல்தானோ?

**காயும் வெயிலில் குயில் குரலாய்க்
கனியும் குரலும் உன் குரலா?
போயும் போயும் புழுதி வெளி
புகுந்து பொய்போல் மெய்காட்டும்**



மாயா உன்றன் குரலா ? உன்
மாயை விலக்க மாளாமல்
தேயும் இவளைத் தேய்த்திட நீ
தெறிக்கும் குரலா குயிற் குரலும்?

தேய்த்துவிடு, என்னைத் தேய்த்து விடு, ஐயா,
சாய்த்து நீ முறித்தால், சரிதான். இந்த
வேதனை தானும் விலகும் அல்லவா?
பேதை இவளை ஏனோ வதைக்கிறாய்?
சொல்லடா, சொல்லடா, வருகிறாயா?
தொல்லை அகலுமா? சூழ்ந்து நீ என்னைக்
கைத்தலம் பற்றும் காலமும் வருமா ?
மைத்துனா, நம்பீ, மாதவா, வந்துநீ
கைத்தலம் பற்றும் காலமும் வருமா?
பித்தாய் உடைந்து புலம்புவேன், குயிலே.
உருகி உருகி என்ன உரைக்கிறாய்?
வருகிறான், வருகிறான், வந்தான் என்றா ?
ஆமடி, ஆமடி, அவன்தான் வருகிறான்.
ஊமையே, பாடடி, உரக்கப் பாடடி.
வாரணம் ஆயிரம் சூழ வலம்வர
நாரண நம்பி நடந்து வருகிறான்.
பூரண பொற்குடம், தோரணம் எங்கே?
ஆரணம் எங்கே? அவன்தான், அவன்தான்....
[கீழே சாய்கிறாள்]

**உள்ளேயிருந்து குரல் :**

**வாரணம் ஆயிரம்சூழ வலம் செய்து**
**நாரணன் நம்பி நடக்கின்றான் என்றெதிர்**
**பூரண பொற்குடம் வைத்துப் புறமெங்கும்**
**தோரணம் நாட்டக் கனாக்கண்டேன் தோழீ நான்.**

**கோதை** (மெல்ல எழுந்து:)

கனவா, கனவுதானா? மறுபடியும்
கனவா? எங்கே அவன்? எங்கே அவன் ?
எங்கும் இருப்பவன் எனக்கு மட்டும்
இங்கே கண்முன் இசையா திருப்பதேன்?
மலர்களும், பச்சைத் தழையும், வானும்
அலகிலாக் குறும்பன் அவன் இதோ என்னுமோ ;

**உள்ளேயிருந்து குரல் :**

**கருவிளை ஒண்மலர்காள் காயா மலர்காள்**
**திருமால் உருவொளி காட்டுகின்றீர் உய் வழக்**
**கொன்றுரையீர்.**

**கோதை :**

உய்வழக்கு உரைக்கவா? இவையா? அவன்தன
மெய்நிறம் பசப்பும் பொய்ம்மைச் சுவடுகள்.
வருகிறான், வருகிறான், வருகிறான். யாரது ?
கருங் குருவிகளா கூவிக் குமைவது ?

**உள்ளேயிருந்து குரல் :**

**காலை எழுந்திருந்து கரியகுருவிக் கணங்கள்**
**மாலின் வரவு சொல்லி மருள் பாடுதல் மெய்ம்மை**
**கொலோ ?**

**கோதை :**

என்ன செய்வேன், என்ன செய்வேன்?
இங்கே அவனைக் காண முடியுமா ?
வந்தொரு வார்த்தை வழங்குவானா ?
சிந்தும் என் சிந்தைக்கு விடிவே இல்லையா ?
இதோ, கார்மேகம். நீதான் சொல்லேன்.
மேகமே, நீதான் சொல்லேன்.... வருவானா ?

**உள்ளேயிருந்து குரல் :**

**கார்காலத் தெழுகின்ற கார்முகில்காள், வேங்கடத்துப்**
**போர்காலத் தெழுந்தருளிப் பொருதவனார் பேர்சொல்லி**
**நீர்காலத் தெருக்கினம் பழவிலைபோல் வீழ்வேனை**
**வார்காலத் தொருநாள் தம்வாசகம் தந்தருளாரே.**

**கோதை :**

வந்தாற் போதும், வாசகம் வேண்டாம்.
வந்தால், வந்தால்...... இந்த உயிரை
அள்ளிப் பறித்து அவன் மார்பில் எறிந்து
கொன்னை இன்பத்தில் குலவ மாட்டேனா....

**உள்ளேயிருந்து குரல் :**

**கருப்பூரம் நாறுமோ, கமலப்பூ நாறுமோ,**
**திருப்பவளச் செவ்வாய் தான் தித்தித் திருக்குமோ?**
**மருப்பொசித்த மாதவன்தன் வாய்ச்சுவையும் வாசமும்**
**விருப்புற்றுக் கேட்கிறேன், சொல்லாழி வெண்சங்கே.**
[தோழிகள் வருகிறார்கள்]

**கோதை :**

தாங்க முடியவில்லை. என்னால்
தாங்கவே முடியவில்லை, ஐயோ,
ஏனடி நிற்கிறீர்கள்? இதோ,
அழைத்துச் சென்று என்னை அங்கே அங்கே,
நந்தகோகுல நடுவிலே விடுங்கள்.
கண்ணன் என்னும் கருங் கருந் தெய்வம்
காட்டிப் பழகிக் கவல்கிறேன். என்னை
ஆய்ப்பாடிக்கே அழைத்துச் செல்லடி.
ஆய்ப்பாடி! ஆய்ப்பாடி! எங்கே அது?
மாயன், என்றன் மாதவன் எங்கே?
[மயங்கிச் சாய்கிறாள்]

**உள்ளேயிருந்து குரல் :**

**பட்டி மேய்ந்தோர் காரேறு**
**பலதேவற்க் கோர் கீழ்க் கன்றாய்**
**இட்டீ றிட்டு விளையாடி**
**இங்கே போதக் கண்டீரே ?**
**இட்டமான பசுக்களை**
**இனிது மறித்து நீரூட்டி**
**விட்டுக் கொண்டே விளையாட**
**விருந்தா வனத்தே கண்டோமே**

**கோதை :** (சரேலென எழுந்து விழியில் புதிய ஒளியுடன்)

வந்தான், வந்தான், வந்தான் வரதன்.
அந்தமில் ஆதிஇங்கு அடைந்து விட்டானடி !
வந்தான், வந்தான், வரம்பிலே முடங்கும் என்
சிந்தையும் தெறிடச் சேர்ந்து விட்டானடி !
இருள் அழிந்தது, மருள் ஒழிந்தது.
ஒருவன் அருளால் உணர்வு பிறந்தது.
எங்கோ உள்ளதன்று ஆய்ப்பாடி.
இங்குதான் உள்ளது. எங்குமே அவன்தான்.
பிரிந்து, பிரிந்து, என்னைப் பிய்த்த பொருளெலாம்
கரைந்தன, அவன் கார்மேனியாய்க் கலந்தன.
இங்கே, ஏழ்மையில், சிறுமையில், விழுந்து
மங்கும் உயிர்களை மறித்து நீரூட்டி,
விட்டுக் கொண்டு அவன் விளையாடுகிறான்.
தொட்ட தொட்ட இடமெலாம் அவனருள்.
இதுவே, இந்த மண்ணே, கோகுலம்.
இதுவே பிருந்தாவனம். இங்கு எங்கும்
அவனே, அவனே, அவனே, அவனே.....
[விம்மிதத்தில் நிற்கிறாள்]

**உள்ளேயிருந்து குரல் :**

**கட்டிலே கலந்தது துளியும்**
**ககனமாய் விரிந்தது மலரும் ;**
**கடரிலே கருண்டது பொறியும்,**
**தொட்டது வானிடும் மண்ணும்;**
**முடிவிலா மோனமென் கதியில்**
**முயங்கியே ஓய்ந்தது மொழியும்;**
**அடைவென அந்தமில் அழகன்**
**அருளினை வென்றனள் ஆண்டாள்.**

—————— திரை ——————



# நகரமும் நரகமும்



க. சந்தானம்

இப்பொழுது உலகெங்கும் பெருகி வரும் யந்திர சகாப்தத்தின் முக்கிய அறிகுறி நகர வாழ்க்கை. முன் காலங்களிலும் நகரங்கள் இருந்தன. பாடலிபுத்திரம், உஜ்ஜயினி, மதுரை, காஞ்சீபுரம் முதலிய மாநகர்களைப் பற்றிப் பழம் நூல்களில் படிக்கிறோம். ரோமாபுரி, பாரிஸ், லண்டன் போன்ற நகரங்கள் ஐரோப்பாவில் பல நூற்றாண்டுகளாகப் பிரசித்தி பெற்றிருக்கின்றன. ஆனால் நாட்டின் பெரும்பாலான மக்கள் கிராமங்களில் வசித்து விவசாயத்திலும், குடிசைத் தொழில்களிலும் ஈடுபட்டு வந்தனர். நகரங்கள் கிராமங்களின் சந்தைகளாகவும், அரசாங்கம், வியாபாரங்களின் அலுவலகங்களாகவும் இருந்தன. இக்காலத்திலோ யந்திரத்தொழில்களில் முன்னேறியிருக்கும் நாடுகளிலெல்லாம் பெரும்பாலான குடும்பங்கள் நகரங்களிலேயே வசித்துத் தொழில்கள் புரிகின்றன.

சென்ற இருநூறு ஆண்டுகளில் உருவான அமெரிக்க ஐக்கிய நாடுகளின் போக்கே இதற்குப் போதிய சான்றாகும். 1800ம் வருஷத்தில் அங்கு கிராமப்புறத்தில் 93.9 சதவிகிதமும், நகரங்களில் 6.1 சதவிகித மக்களுமே இருந்தனர். இப்பொழுதோ ஐந்தில் நான்கு குடும்பங்கள் நகரவாசிகளாகி விட்டன. பிரிட்டனிலோ 3 சதவிகிதம்தான் விவசாயிகள்.

பிரிட்டனின் யந்திரத்தொழில்களுக்கு ஒரு முக்கிய சந்தையாக இருந்த பாரதத்தில் 1921ல் 88.6 சதவிகித மக்கள் கிராமவாசிகளாக இருந்தனர். இரண்டு உலக மகா யுத்தங்களின் பலனாக இந்நாட்டிலும் நகரவாசிகளின் எண்ணிக்கை உயர்ந்தது. 1951ல் 17.3 சதவிகிதமாகவும் 1961ல் 18 சதவிகிதமாகவும் அதிகரித்தது. இந்தப் பத்து ஆண்டுகளில் சதவிகிதம் கணிசமாக உயராமல் இருந்தபோதிலும் நகரங்களின் மொத்த ஜனத்தொகை 6.3 கோடியிலிருந்து 7.9 கோடியாயிற்று. அதாவது நாலில் ஒரு பங்கு அதிகரித்தது. 1971ல் இது 10 கோடியாகிவிடக் கூடும்.

பலர் இம்மாதிரி நகரவாசிகள் அதிகரிப்பதைக் கண்டு வருந்துகின்றனர். அதற்கு முக்கிய காரணம் நகர வாசம் நரகவாசமாவதே. வறுமை நாட்டுப்புறத்தில் ஓரளவு சகிக்கக் கூடியதாக இருக்கும். நகரங்களிலோ அது மனித வாழ்க்கையை மிகவும் அருவருப்புடையதாகச் செய்கின்றது. குடியிருக்க நல்ல வீடு, அதில் போதிய குடிஜலம், சாக்கடை வசதிகள், சுத்தமான வீதிகள், விரைவான போக்குவரத்து வசதிகள், பள்ளிகள், கலைக்கூடங்கள், உத்தியானவனங்கள், நிரம்பிச் சராசரி குடும்ப வருமானமும் மானமுள்ள மனித வாழ்க்கைக்குப் போதுமளவில் இருந்தால் நகர வாழ்க்கை பல அம்சங்களில் கிராம வாழ்க்கையை விட மேலாக இருக்கக் கூடும். அப்படியின்றி, ஆயிரக்கணக்கான குடும்பங்கள், வெளிச்சம், காற்று, ஜலம், சாக்கடை எதுவுமில்லாத குடிசைகளில் வசித்து, வேலையும் கூலியும் இன்றிக் குமுறியிருக்குமிடங்களை நகரமென்று சொல்லுவதை விட நரகமென்றே கூறுவது தகும்.

நமது நாட்டில் டில்லி, பம்பாய், சென்னை போன்ற சில தலைநகரங்களில் வசிக்கும் பாதி மக்களுக்கு இவ்வசதிகள் கிடைக்கின்றன. ஆனால் மற்ற பாதி ஜனங்கள் மிகவும் மோசமான நிலையில், சுகாதாரமின்றி, போதிய வருமானமின்றி இருப்பதால் சுகமாக இருப்பவர்களும் மனித உணர்ச்சியை அடக்கிக் கண்ணை மூடிக் கொண்டு வசிக்க வேண்டியிருக்கிறது. ஜில்லா, தாலுகாத் தலைநகரங்கள் பண்டைக் காலத்தின் குறைகளோடு இக்காலத்திய தீமைகளால் நிறைந்து மனிதக் கூண்டுகளாயுள்ளன.

1961 ஜனக் கணக்குப்படி, இந்தியாவில் 10 லட்சம் மக்களுக்கு மேல் கொண்ட ஏழு மாநகரங்களும், ஒரு லட்சத்துக்கு மேலும் பத்து லட்சத்துக்குக் குறைந்த ஜனத் தொகை உள்ள நகரங்கள் நூறும், லட்சத்துக்குக் குறைந்த ஜனத்தொகையுள்ள நகரங்கள் நூறும் இருந்தன. இவற்றுள் சிலவற்றுக்கே இக்காலத்திய சுகாதார வசதிகள் உள. சுத்தமான குடிஜலம் கூடப் பல நகரங்களுக்கு இல்லை. ஆனால் ரேடியோ, சினிமாக்களுக்குக் குறைவில்லை. சென்ற இருபது ஆண்டுகளில் நகரங்களிலுள்ள எல்லாக் குழந்தைகளும் பள்ளிகளில் கல்வி கற்கின்றன.

இவ்விதம் ஏராளமான மக்கள் நகரங்களில் குவிந்து வருவதைத் தவிர்த்துக் கிராமங்களிலேயே கூடியவரையில் கல்வி, சினிமா, ரேடியோ வசதிகளைக் கொடுத்து விடலாம் என்று சிலர் யோசனை கூறுகின்றனர். சுகவாசத்துக்கு மட்டுமின்றி, பொருளாதார அபிவிருத்தியை எண்ணினாலும் கிராமங்களில் ஜனத்தொகை பெருகுவதால் நாட்டுக்கு நலமில்லை. இப்பொழுது 13 கோடி உழைப்பாளிகள் உழுதுவரும் 35 கோடி ஏக்கரா நிலங்களைப் புதிய இயந்திரங்கள் இல்லாமலே 5, 6 கோடி விவசாயிகள் பயிர் செய்து விடலாம். அப்பொழுது விவசாயம் நல்ல பலனளிப்பதோடு குடியானவனுக்குப் போதிய ஊதியம் கிடைக்கும். எல்லா நாடுகளிலும் விவசாயிகளின் எண்ணிக்கை குறையும் அளவிலேயே உற்பத்தியும் வருமானமும் பெருகி வந்திருக்கின்றன. கிராமத்து ஜனங்கள் அதிகரித்தால் ஒவ்வொரு குடும்பமும் பயிர் செய்யும் நிலப் பரப்புக் குறைந்து வருமானமும் கம்மியாகி விடும்.

சிறு கைத்தொழில்களைக் கிராமங்களில் பரப்பினால் இந்தத் தர்மசங்கடம் நேரிடாது என்று நினைக்கலாம். விவசாயத்துக்குப் பக்கபலமான சில தொழில்களைக் கிராமாந்தரங்களில் ஏற்படுத்தலாம். நெல் அறவை, எண்ணெய் பிழிதல், பருத்தியிலிருந்து கொட்டை எடுத்துப் பஞ்சு தயாரித்தல் முதலிய தொழில்கள் கிராமங்களுக்கு உரியவையே. ஆனால் நடைமுறையில் இந்தத் தொழில்களைச் சிறிய நகரங்களில் அமைப்பதே மேலானது. அப்பொழுது பல கிராமங்களிலிருந்து தானியங்கள், பருத்தி, எண்ணெய் விதைகள் முதலியவைகள் வருவதற்கும், தயாரான சாமான்களை விற்பனை செய்வதற்கும், பண வசதிகளுக்கும் எளிதாகும். ஆதலால் விவசாயத்தைச் சேர்ப்

படுத்தி உற்பத்தியைப் பெருக்குவதே கிராமங்களில் செய்யக் கூடிய பணிகளில் முதன்மையாகும். கிராமத்து ஜனத்தொகை அதிகரிக்காமல் நகரங்களுக்குக் குடியேறுவதும், அவ்விடங்களில் தொழில் வளம் பெருகுவதுமே முன்னேற்றத்துக்குத் தகுந்த முறை.



நகர வாழ்க்கை முன்னேறுவதற்கு ராஜ்ய அரசாங்கத்துக்கே முடிவான பொறுப்பு இருந்தபோதிலும், அதை நகரசபைகள் மூலமாகவே செயலாற்ற வேண்டும். தற்போதைய நகரசபைகளுக்குப் போதிய அதிகாரங்களோ, சுதந்திரமோ, வருமானமோ இல்லை. வீட்டு வரி ஒன்றிலேயே நகரசபை நிர்வாகம் நடைபெற வேண்டும் என்பது இயலாத காரியம். விற்பனை வரி, மோட்டார் வரி முதலியவைகளில் ஒரு பங்கினை நகர சபைகளுக்கு ராஜ்ய அரசாங்கம் கொடுத்துவிட வேண்டும். வரி விகிதத்தை உயர்த்தாமலே பட்சபாதமின்றி வீட்டு வரி விதிப்பதற்கு இதர நாடுகளில் போல் ஒரு மதிப்பீட்டுக் கமிஷன் அமைக்கப்பட வேண்டும். இதனால் ஆண்டு ஒன்றுக்கு இரண்டு மூன்று கோடி ரூபாய் சென்னைக்கு அதிக வருமானம் கிடைக்கலாம்.

நமது சென்னை மாநகரை ஓர் ஆதரிச நகராக்கப் பின்வரும் சீர்திருத்தங்கள் இன்றியமையாதன.

(1) நகரில் பிச்சை வாங்குவதைச் சட்டம் மூலம் குற்றமாக்கிக் கடுமையாக அமுல் செய்ய வேண்டும். முதலில் இது கொடுமையாகத் தோன்றினாலும் நான்கு அல்லது ஐந்து ஆண்டுகளில் இவ்விழிய பழக்கம் அறவே ஒழிந்து, மக்களுக்குள் சுயமரியாதை உணர்ச்சி பெருகும். தெருக்களிலும் இறந்தவெளிகளிலும் வசிக்கும் பெரும்பாலோர் இவர்களே.

(2) மாடுகள், ஆடுகள், கோழிகள் முதலிய பிராணிகளை நகரத்துக்குள் வைத்துக்கொள்ள அனுமதிக்கக் கூடாது. போக்குவரத்துக்கும், சுகாதாரத்துக்கும் இவற்றால் பெரும் இடைஞ்சல்கள் உண்டாகின்றன. தெருவில் திரியும் நாய்களை அழித்துவிட வேண்டும்.

(3) தெருவிலும், இறந்தவெளிகளிலும், கடற்கரையிலும் மலஜலம் கழிப்பது இப்போதுகூடக் குற்றமாகும். ஆனால் அதைத் தடுப்பதற்குப் போதிய போலீஸ் படையோ, நகரசபையில் அக்கறையோ சிறிதும் காணப்படவில்லை. இந்த அசுத்தத்தை அடியோடு ஒழிக்காமல் சென்னை நகரம் மற்ற வழிகளில் முன்னேற முடியாது.

(4) மனிதர் வண்டி இழுப்பதும், மாட்டு வண்டிகளும் இக்காலத்துக்குப் பொருத்தமானவைகளல்ல. அவற்றால் பலர் ஜீவிப்பதால், படிப்படியாக அவைகளைத் தடுத்து இந்த உழைப்பாளிகளுக்கு வேறு வழிகளில் ஜீவிக்க வசதிகள் செய்ய வேண்டும். ரிக்ஷா, சைக்கிள் ரிக்ஷாக்களும் மறைவது நலம்.

(5) வீடுகளிலும் வீதிகளிலும் சேரும் குப்பைகளைத் தினந்தோறும் அதிகாலையில் மோட்டார் லாரிகளில் விரைவாக அகற்ற வேண்டும். பல இடங்களில் திறந்த மாட்டு வண்டிகளில் நடுப்பகலில் குப்பைகளை வாரத்துக்கு இரண்டு மூன்று தரம் அகற்றுவதும், காற்றில் குப்பை வண்டிகளிலிருந்து திரும்பவும் வீதிகளில் விழுவதும் சகஜமாகிவிட்டது.



(6) சென்னை போன்ற மாநகரில் குடிசைகள் இருப்பது அபாயத்துக்கு இடமானது. இது சமீபத்தில் ஏற்பட்ட தீ விபத்திலிருந்து நன்கு விளங்கிற்று. இப்பொழுது இருக்கும் குடிசைகளை ஓடு அல்லது மச்சு வீடுகளாக மாற்றி, இனிக் குடிசைகள் கட்டக் கூடாதென்று கண்டிப்பான விதிகள் செய்ய வேண்டும். தொழிற்சாலைகளெல்லாம் தமது தொழிலாளிகளுக்கு வீடு கட்டிக் கொடுக்க வேண்டுமென்ற நியமமும், தோட்டங்களில் பங்களாக்களில் இருப்போர்கள் தங்கள் வீடுகளில் வேலை செய்யும் குடும்பங்களுக்குத் தங்கள் காம்பவுண்டுகளில் வீட்டு வசதிகள் அளிக்க வேண்டுமென்றும் நியமம் அவசியமாகும். நடுத்தரக் குடும்பங்களுக்குக் கூட்டுறவு சங்கங்கள் மூலமும், பலவித நிதி ஸ்தாபனங்களிலிருந்து நீண்ட காலக் கடன்கள் வழங்கியும் வீட்டு வசதிகளைப் பெருக்க வேண்டும்.

(7) ஆண்டுதோறும் சுமார் ஒரு லட்சம் ஜனப் பெருக்கு இருக்குமென்று எதிர்பார்க்கலாம். அதில் மூன்றில் ஒரு பங்கு சென்னையில் பிறக்கும் குழந்தைகளாகவும், மீதி வெளியூரிலிருந்து வருவோர்களாகவும் இருப்பர். அடுத்த இருபது ஆண்டுகளின் முடிவில் இருக்கக் கூடிய ஜனத்தொகையை மனத்தில் வைத்துக்கொண்டு குடிஜல, சாக்கடை வசதிகளை, போக்குவரத்து சாதனங்களை விஸ்தரிப்பது அவசியமாகும்.

இந்த நியமங்களும், வசதிகளும் எல்லா நகரங்களுக்கும் அவசியமே. ஆயினும் ஒரே சமயத்தில் பல நகரங்களுக்கு அளிக்கச் சென்னை அரசாங்கத்துக்குப் பண வசதியுமில்லை, அதற்கு வேண்டிய ஆற்றலுமில்லை. ஆதலால் முதலில் சென்னையின் முன்னேற்றத்தையே மேற்கொண்டு நாலைந்து வருஷங்கள் முனைந்து முடிக்க வேண்டும். அதன் பின்னர் வருஷத்துக்கு இரண்டு மூன்று நகரங்களைச் சீர்படுத்தி வந்தால் இருபது முப்பது ஆண்டுகளில் நகர் வாசம் முன்னேறுவதோடு, தங்களைத் தாங்களே சமாளித்துக்கொள்ள நகரசபைகளுக்குச் சக்தி வளர்ந்துவிடும்.

ஒரே நகரசபை எல்லாக் காரியங்களையும் தானே செய்வது இயலாது. ஒவ்வோர் டிவிஷனிலும் ஒரு கிளைச் சபை ஏற்படுத்தி அதனிடம் சில்லறைப் பணிகளை ஒப்புவிப்பது நலம். குடிஜல, சாக்கடை வசதிகள், போக்குவரத்து சாதனங்கள், தெருக்களில் விளக்குகள், ஆரம்பக் கல்வி போன்ற முக்கிய விவகாரங்களையே நகரசபை நேரில் கவனிக்க வேண்டும்.

கிராமங்களின் முன்னேற்றத்துக்கு முதலிடம் கொடுக்க வேண்டுமா, நகரங்களைச் சீர்படுத்துவது முக்கியமா என்ற கேள்வி வெறும் விதண்டாவாதமே. நகரங்களில் தொழில்களும், குடியிருப்பு வசதிகளும் அதிகரிப்பதாலேயே கிராமங்களுக்கு நன்மை உண்டாகும். குடியானவர்கள் ஒரு மகனை விவசாயத்தில் ஈடுபடுத்திவிட்டு மற்றவர்களைப் பல தொழில்களுக்கு நகரங்களுக்கு அனுப்புவது சாத்தியமானால் நாடு நகரம் இரண்டுமே செழிக்கும். வேண்டிய உரம், நல்ல விதை, தானியத்துக்கு நல்ல விலை, ஆரம்பக் கல்வி, போக்குவரத்துச் சாதனங்கள் இவைகளே கிராமங்களுக்கு அவசியமானவை. இவற்றிற்காகவும் நகர வாழ்வு உயர வேண்டும்.

அசுத்தத்தையும் அலங்கோலத்தையும் அசட்டை செய்வதும், கண்ணை மூடிக்கொண்டு சகிப்பதும் நமது பிறவிக் குணமாகி விட்டது. இது அடியோடு மாறி, மனித முயற்சியால் தவிர்க்கக் கூடிய நிலைமைகளை அகற்றுவதற்கு ஆக்கிரமும், ஆவலும் நகர மக்களிடம் வளர வேண்டும். இல்லாவிடில் நமது நகர வாழ்க்கை மேன்மேலும் நரக வாழ்க்கையாவது நிச்சயம்.

# காபி இனிப்புடன் தீபாவளி கொண்டாடுங்கள்

## காபி முந்திரி கேக்

**தேவை:** 500 கி. சர்க்கரை, 250 கி. முந்திரி, 200 கி. நெய், ஒரு சிறிய தேங்காய், ஆறு ஏலக்காய், ஒரு கப் காபி டிகாக்ஷன்.

**தயாரிப்பு முறை:** முந்திரிப் பருப்பை வெந்நீரில் கால்மணி நேரம் ஊறவைக்கவும். தேங்காயை துருவி, அதனுடன் கலந்து விழுதாக அரைத்துக்கொள்ளவும். வாயகன்ற பாத்திரத்தை அடுப்பில் வைத்து சர்க்கரைப் பாகு தயாரிக்கவும். பாகு நீளக் கம்பியாக வந்ததும், அரைத்த முந்திரித் தேங்காய் விழுதையும் நெய்யையும் சேர்த்து நன்றாக கிளறவும். கொஞ்சம் கெட்டியானதும் காபி டிகாக்ஷனைச் சேர்த்து மறுபடி கிளறவும். சிறிது நேரம் பொறுத்து, அடுப்பிலிருந்து இறக்கி, பொடி செய்த ஏலக்காய் சேர்த்து, ஒரு தட்டில் பரப்பிக் கொட்டவும். பாகு இறுகியதும் தேவையான அளவு சிறு வில்லைகளாகத் துண்டிக்கவும்.

## காபி ரவா பர்பி

**தேவை:** 200 கி. ரவை, 500 கி. சர்க்கரை, 125 கி. நெய், கொஞ்சம் முந்திரிப்பருப்பு, 4 ஏலக்காய், 2 சிறு தேங்காய், 1 கப் காபி டிகாக்ஷன்.

**தயாரிப்பு முறை:** ரவையையும் தேங்காய்த்துருவலையும் தனித்தனியே வறுத்து வைத்துக்கொள்ளவும். எல்லாப் பொருள்களையும் இரண்டு சம பாகமாகப் பிரித்துக்கொள்ளவும். சர்க்கரை ஜலத்தில் பாதியை அடுப்பில் வைத்து, ரவையில் பாதியையும் தேங்காயில் பாதியையும் சேர்க்கவும். அதிலே பாதி நெய்யை ஊற்றிக் கிளறவும். பாகு சற்றே கெட்டியானதும் ஒரு தட்டில் பரப்பிக்கொட்டவும்.

இப்போது மீதமுள்ள பண்டங்களைக் கொண்டு மறுபடி பாகு செய்யவும், காபி டிகாக்ஷனையும் கலந்து கிளறவும். ஏலக்காய் பொடியைத் தூவி, இறுகிய பாகை முன்னர் கொட்டிய பாகின் மேல் ஊற்றவும். முந்திரிப் பருப்பைப் பொடிப்பொடியாக நறுக்கி, மேலே தூவவும். பாகு இறுகியதும் சிறு வில்லைகளாகத் துண்டிக்கவும்.

**காபி போர்டு • பெங்களூர்**






தீபாவளி வந்து விட்டால் நாகசாமி வீட்டில் ஒரே ரகளைதான்.

தீபாவளிக்கு ஒரு மாதம் முன்னரே, வீடாளு மன்றத்தில் தீபாவளி பட்ஜெட் விவாதப் போர் தொடங்கி விடும்.

''நன்னாயிருக்கு! குஞ்சாரத்துக்கும் (அவள்தான் மூத்த பெண்) மாப்பிள்ளைக்கும் கணிசமா ஜரிகை போட்ட பட்டுப் புடவை, வேஷ்டி எல்லாம் வாங்கி வைக்க வேண்டாமா? தீபாவளிக்கு அழைத்து விட்டு வெறும் கையோடேயா அனுப்பறது? ஹும்!'' என்று மோனை மோனைத்துக் கொட்டுவாள் தனலக்ஷ்மி அம்மாள்.

அவள்தான் மிஸஸ் நாகசாமி.

'' அவர்களை வெறும் கையோடே அனுப்புவது இருக்கட்டும். நீ வெறும் கையிலே முழம் போடு!'' என்றார் நாகசாமி.



# சமாளிச் சாமி!

பரதன்

மூத்த பிள்ளையாண்டான் டெரிலின் ஷர்ட்டும், டாக்ரான் ''சாக்கடைக் குழாய்'' பாண்டும் தான் வேண்டும் என்றான்.

மற்றவர்களுக்கும் தனக்கும் தனலக்ஷ்மி அம்மாளே வக்காலத்து வாங்கி வாதித்தாள். அந்த அம்மாள் தன் கணவரையும் விடவில்லை.

''நன்னாயிருக்கு! வருஷா வருஷம்தான் சேலம் ஜரிகை வேஷ்டி அங்கவஸ்திரம் வாங்கிக் கிழிச்சாச்சு! இந்த வருஷம் நல்ல ஜரிகை போட்ட பட்டு பத்தாறு வாங்கிக்கோங்கோ.... நாள் கிழமைக்கு உதவும்......'' என்றாள்.

அந்த ஆண்டு தீபாவளி பட்ஜெட் திட்டம் வஸ்ஸிசாக ஓர் ஆயிரம் ரூபாய்க்கு மேல் மதிப்பிடப்பட்டது.

கையில் ரொக்கமில்லை, பாங்கியில் பாக்கியில்லை, கடன் கொடுப்பார் யாருமில்லை என்று நாகசாமி சொல்லிப் பார்த்தார். தனலக்ஷ்மி அம்மாளா இதற்கும் பின் வாங்குபவள்?

''நன்னாயிருக்கு! உங்களுக்குப் பணம் கொடுக்க வக்கில்லேன்னு, நீங்க வாயைப் பொத்திண்டிருங்கோ! நான் நம்ம கந்தசாமி கடையிலே சரேட்டா எடுத்துண்டு வரேன்..... எப்படியாவது பார்த்துப் பத்து நாளிலே பணம் கொடுத்துடுங்கோ.....'' என்று ஒரு 'ஹும்' கொட்டி முடித்தாள்.

தனலக்ஷ்மி அம்மாள் தன் வாக்கை நிறைவேற்றி, செல்வர் செல்விகளுடன் கந்தசாமி கடையைப் படையெடுத்து, கடையை அடையாளம் புரியாமல் அடித்து விட்டார்கள். விற்பனைச் சிப்பந்திகளைத் திணற அடித்தார்கள். விதம் விதமான ஆடைகளுடன் நிறைந்திருந்த அல

மாரிகள், தனலக்ஷ்மி அம்மாளின் தலைமையில், அவர் வீட்டுச் சேனை எடுத்த படையெடுப்பில், அலறிக் கொண்டு, தாங்கள் சுமந்து நின்ற சரக்குகளை விற்பனை 'கவுண்டர்'களிலும், விற்பனை சிப்பந்திகளின் சுற்றிலும் கொட்டிவிட்டு, உல்லாசமாகக் காலியாக நின்றன. பட்டுப் புடவைகள், பாவாடைப் பீஸுகள், ஷர்ட்டிங்குகள், கோட்டிங்குகள் இவைகளின் மலைக் குவியல்களுக்கிடையில் விற்பனைச் சிப்பந்திகள் திக்குமுக்காடிக் கொண்டு தனலக்ஷ்மி அம்மாளும் அவரது குடும்பத்தாரும் பொறுக்கி எடுத்த சரக்குகளைத் தனியாக எடுத்து வைத்துக் கிழிக்க வேண்டியதைக் கிழித்து, மடிக்க வேண்டியதை மடித்து, 'பாலிதீன்' பைகளிலும், காகிதப் பைகளிலும் போட்டு நாசுக்காகக் கட்டிக் கொடுப்பதற்குள் அவர்கள் யமலோகமே போய் விட்டு வந்து விட்டனர்.

சிறிதும் பெரிதுமாகக் கொண்டு வந்த பத்துப் பன்னிரண்டு பாலிதீன், காகிதப் பைகளில் உள்ள சரக்குகளுக்குக் கந்தசாமி உற்சாகத்துடன் ரொக்கப் பட்டியல் போட்டு, ரூபாய் ஆயிரத்தெட்டு சொச்சம் என்று தனலக்ஷ்மி அம்மாளிடம் கொடுத்தார். அதை அலட்சியமாக வாங்கிக் கொண்டு, அந்த அம்மாள், ''ஐயாவை செக் அனுப்பச் சொல்றேன்'' என்று சொல்லிவிட்டு மறு பேச்சில்லாமல், ஆளுக்கு இரண்டு பைகளாக எடுத்துக் கொண்டு, பரிவாரத்துடன் வெளியேறிய காட்சி கந்தசாமி கண்ணில் அப்படியே கட்டியிருந்தது. அவர் ஐந்து நிமிஷங்கள் பேச்சு மூச்சில்லாமல் மூர்ச்சையே போட்டு விடுவார் போல் இருந்தார். அவர் கண்டிப்பான முதலாளி என்றாலும், கண்ணியம் வாய்ந்தவர். அதனால் ஒரு பெண்மணியின் முன்னேற்றத்தை — தன் கடைச் சரக்கை வாரிச் சுருட்டிக் கொண்டு வழி நடந்தாலும்—தடுக்க அவர் மனம் இடம் கொடுக்க வில்லை. அதோடு வியாபாரம் முன்னேற வேண்டுமானால், ''வாடிக்கை'யை விட்டுத்தான் பிடிக்க வேண்டும் என்ற விற்பனை விற்பன்னம் தெரிந்தவர். ''எங்கே போகிறது, பணம்! தானே வரும், வட்டியும் முதலுமாக'' என்ற நம்பிக்கையில் சும்மா இருந்தார்.

தனலக்ஷ்மி அம்மாளின் வைரத் தோட்டையும், தங்கச் சங்கிலியையும், முத்து, வெட்டுக் கல் வளைகளையும் பார்த்து அவர் கணக்குப் போட்டார். அந்தக் கணக்கில் நாகசாமி அடிபடவில்லை. அவருக்கு நாகசாமியைத் தெரியாது. அங்குதான் தப்புக் கணக்குப் போட்டு விட்டார்.

நாகசாமியைக் கந்தசாமிக்குத் தெரியாது, உண்மை. அவரைப் பற்றி உங்களுக்கும் தெரியாது. நாகசாமி இந்த மாதிரிச் சமயங்களில்தான் தன் உண்மைச் சாதுரியத்தை வெளிப்படுத்தும் வாய்ப்பை முழுவதும் பயன்படுத்திக் கொண்டு, வெற்றி கொண்டு எட்டுத் திசையும் முழங்க விளங்குவார். இந்த மாதிரி நெருக்கடிகளில், தெளிவாகச் சமாளித்துக் கொள்ளும் சாமர்த்தியம் எல்லாருக்கும் வந்து விடாது. நாகசாமிக்கு அது ஒரு தெய்வீக வரம் என்றே சொல்ல வேண்டும். அதனாலேயே அவர் நெருங்கிப் பழகும் வட்டாரங்களில் அவரை, எல்லாரும் ''சமாளி சாமி'' என்று காரணப் பெயர் சூட்டிச் செல்லமாக அழைப்பதுண்டு. அவரது சமாளித்துவம், கந்தசாமிக்கும் அவருக்கும் இடையே நடந்த கடிதப் போக்குவரத்திலிருந்து தெள்ளென விளங்கும். கடித நகல்களும், ''இடைவேளை''களும் கீழே தரப்பட்டுள்ளன:

கந்தசாமி அண்டு சன்ஸ்
நேர்த்தியான, நாகரிக ஆடை உடைக் கடை.

அக்டோபர் 1 - 1965

மதிப்புக்குரிய ஐயா,

1965 செப்டம்பர் 10-ந் தேதியில் தங்கள் வீட்டிலிருந்து தங்கள் மனைவியாரும் குடும்பத்தாரும் எங்கள் கடையில் எடுத்துச் சென்ற புடவை வேஷ்டி ஷர்ட்டிங்குகள் வகையறாக்களுக்கான ரொக்கப் பட்டியல் நகல் இத்துடன் அனுப்பியிருக்கிறோம். தங்கள் மனைவியார் எங்களுக்குச் சேரவேண்டிய தொகை ரூபாய் 1008 பைசா 75 க்குத் தாங்கள் செக் அனுப்புவதாகச் சொல்லிப் போனார்கள். இதுவரை தங்கள் செக் கிடைக்கவில்லை. ஞாபக மறதியாக இருந்திருக்கலாம்; அல்லது ஒருகால் செக் அனுப்பி அது தபாலில் தவறிப்போய் இருக்கலாம். தயவு செய்து தாங்கள் செக் அனுப்பியிராவிட்டால், உடனே அனுப்பக் கோருகிறோம். அனுப்பியிருந்தாலும் அது வந்து சேராததால், ரொக்கமாகவே அனுப்பிவிட்டால் நலம். தங்களுக்குத் தொந்தரவு கொடுப்பதற்கு மன்னிக்க வேண்டும்.

என்றும் உங்களைத் திருப்தி செய்யக் காத்திருக்கும்

கந்தசாமி

இடைவேளை பத்து நாட்கள்.

கந்தசாமி அண்டு சன்ஸ்
நேர்த்தியான......

அக்டோபர் 11, 1965

மதிப்புக்குரிய ஐயா,

1965 அக்டோபர் 1-ந்தேதி நாங்கள் தங்களுக்கு எழுதிய கடிதம் கிடைத்திருக்கும். கிடைத்திருக்காவிட்டால் இத்துடன் அக் கடிதத்தின் நகல் அனுப்புகிறோம். தயவு செய்து அதில் கண்டபடி, தங்களிடமிருந்து சேரவேண்டிய தொகை ரூபாய் 1008-75 பைசாவை உடனே அனுப்பக் கோருகிறோம். தீபாவளி சமயமாதலால் எங்களுக்கும் பண முடையாக இருக்கிறது. எங்களிடம் விசுவாசம் கொண்ட உங்கள் போன்ற மதிப்பு வாய்ந்த வாடிக்கைக்காரர்கள் எங்கள் நிலைமை உணர்வீர்கள் என்று நம்புகிறோம். தங்கள் இசைவை உடனே எதிர்பார்க்கும்,

தங்கள் திருப்திக்காக...

இந்த இரண்டாவது கடிதத்திலும் நாகசாமிக்கு ''இசைவு'' என்பதற்குப் பதில் மன அசைவுதான் ஏற்பட்டது.

''இவனுக்குத்தான் பணமுடையாம்! நமக்கு இல்லையோ! நானும் இவனைப் போல் ஒரு மனிதன்தானே! தீபாவளி என்றால் நமக்கும்தான் பண நெருக்கடி! இவனுக்கு என்ன கேடு? ஒன்றுக்குப் பத்தாக லாபம் வைத்துத் தீட்டி நம்மை மொட்டை அடிக்கிறான். பணமுடையாம். பஞ்சப் பாட்டுப் பாடுகிறான்! இவன் நிலைமை நாம் அறிய வேண்டுமாம்! நம் நிலைமை இவன் அறிந்தானா! முட்டாள்! விசுவாசமாம்! யாருக்கு யார் விசுவாசம்? இவனுக்கு நம்மிடம் அந்த விசுவாசம் இருக்கிறதா?''

அடுத்த கடிதங்களும் கந்தசாமியிடமிருந்து உற்பத்தியாகி, நாகசாமி திசையில் பாய்ந்தன. ''நினைவுக் குறிப்பு - 1'', ''நினைவுக் குறிப்பு — 2'' என்று குறிப்பிடப்பட்ட அச்சிட்ட கார்டுகள். மோனத்தின் மகிமை அறிந்த நாகசாமி இதற்கும் அசையவில்லை.

கந்தசாமியிடமிருந்து அடுத்தபடி வெளியேறியது ஒரு 'ரிஜிஸ்தர் கடிதம்'. நாகசாமியிடம் அந்தப் பருப்பு வேகுமா? ரிஜிஸ்தர் கடிதத்தை வாங்க மறுத்து விடவே அது, கந்தசாமியிடமே அடைக்கலம் புகுந்தது.

அதற்குள் தீபாவளி வந்து போய் விட்டது. தனலக்ஷ்மி அம்மாளும் குடும்பத்தாரும் சந்தோஷமாகக் கங்கா





ஸ்நானம் செய்து கோடியுடுத்தித் தீபாவளியைக் குதூகலமாகக் கழித்தனர். நாகசாமிகூடப் பட்டுப்பத்தாறில் வைதிகக் காட்சியளித்தார்.

தீபாவளிக் கணக்குப் பார்த்த ஜவுளி கந்தசாமி பேரேட்டில் ரூ. 1008.75 நாகசாமி பெயரின் கீழ் தொக்கி நின்றது. கந்தசாமி இருபது வருஷமாக ஜவுளி வியாபாரம் செய்து வந்தவர். அவரது கண்ணியம், திறமை, கறார் கண்டிப்பு இவற்றின் திடமான அஸ்தி வாரத்தின் மேல்தான் இன்று அந்த மூன்றடுக்குக் கட்டிடத்தில் 'ஏர்கண்டிஷ'னுடன் அந்தக் கடை அப்படி அந்த வீதியிலேயே உயர்ந்து விளங்கிறது. இந்த இருபது வருஷ அனுபவத்தில் இந்த நாகசாமி போல் ஒரு ''கிராக்கியை'' ஜவுளி கந்தசாமி கண்டதேயில்லை. தம் முதல் கடிதத்துக்குப் பதில் போடாவிட்டாலும், முக்காலே மூணு வீசம் பேர்கள் இரண்டாவது நைச்சியக் கடிதத்துக்கு மசிந்து விடுவார்கள். அப்படி மசியாதவர்கள் ஞாபகக் குறிப்புக்கு மதிப்புக் கொடுப்பார்கள். ரிஜிஸ்தர் கடிதத்துக்கு யாரும் தப்பியதில்லை.

இதோதடா வென்றும் கல்லுப் பிள்ளையாராக அல்லவா இருக்கிறார் இந்த மனிதர்! நாகசாமி கல்லுப் பிள்ளையாராக இருந்தால், கந்தசாமி விடாக்கண்டர் என்று அவருக்குத் தெரியாது போலும்! கந்தசாமி கையாண்ட அடுத்த நடவடிக்கை, தன லக்ஷ்மி அம்மாளுக்கு ஜவுளி கொடுத்த ஒரு செப்பந்தியை 'பில்லும்' கையுமாகக் கடுமையான ஒரு மிரட்டல் கடிதத்துடன் நாகசாமி வீட்டுக்கு அனுப்பினார்.

செப்பந்திக்கு நாகசாமி வீடு தெரியாது. ஆனால் அது யமலோகத்திலிருந்தாலும், பாதாள லோகத்திலிருந்தாலும் கண்டு பிடித்து, நாகசாமியை நேரில் கண்டு அவர் பணத்தை உடனே கீழே வைக்கிறாரா அல்லது மேற்கொண்டு கோர்ட்டு நடவடிக்கை எடுக்கவா என்று மிரட்டி எப்படியாவது பணத்தை வாங்கிவரும் படி விரட்டி அனுப்பினார் முதலாளி.

அந்த அப்பாவி செப்பந்தி, 'செல் வெண்ணெய் கழன' ஊரெல்லாம் அலைந்து, திரிந்து நாகசாமி இருப்பதாகச் சொன்ன தெருவைக் கண்டு பிடித்தார். வீடு வீடாகப் படியேறி விசாரித்து, ''நீயில்லே'', ''நானில்லே'' என்று வீட்டுக்காரர்கள் சொல்லிக் கதவைத் தாளிட (அப்போதுதான் போலீஸ் கமிஷனர் நகரில், நாகரீக வேடம் தரித்த வாலிபன் ஒருவன் வீடுகளில் புகுந்து தன்னைப் பலவிதமாக வருணித்துக் கொண்டு அகப்பட்டதைச் சுருட்டிக் கொண்டு போவதாக எச்சரிக்கை விடுத்திருந்தார்.) கடைசியில் அங்கு யாரோ ஒரு வீட்டுக்காரர் எதிர் வீட்டைக் காட்டி அதில் செப்பந்தி வருணித்தவர் போல் ஒரு மனிதர் மனைவி பிள்ளை குட்டிகளுடன் வசிப்பதாகச் சொன்ன பின்தான் ஜவுளிக் கடை செப்பந்திக்குச் சற்று உயிர் வந்தது. தம் தெருவில் உள்ள சித்தி விநாயகருக்கு ஐந்து தேங்காய் உடைப்பதாக வேண்டிக் கொண்டு அந்த வீட்டுக் கதவைத் தைரியமாகத் தட்டினார்.

உள்ளிருந்து ஒரு பெண் குரல் கேட்டது. ''எவரதி!'' என்று!

செப்பந்திக்கு ஸப்தநாடியும் ஒடுங்கிற்று. தம் முதலாளி பட்டணத்துத் தெலுங்கு பேசினாலும், நாகசாமியின் தாய்மொழி தெலுங்காக இருக்கும் என்று அவர் எதிர்பார்க்கவில்லை. தனலக்ஷ்மி அம்மாள் கடைக்கு வந்தபோது சுத்தத் தமிழ்தான் பேசினாள்!

''நாகசாமி இருக்காங்களா?'' என்று தைரியத்தைக் கைவிடாமல் கேட்டார்.

''நாகசாமியும் லேது போகசாமியும் லேது... இக்கட எவருலேது... போ... போ.....!'' என்று சுத்தத் தெலுங்கில் பெண் குரல் மூடப்பட்ட கதவுக்குப் பின்னிருந்து விரட்டிற்று.

''சித்திவிநாயகரே! என் மேல் குற்றமில்லே. நீ கொடுத்து வைத்தது அவ்வளவுதான்'' என்று பயபிறங்கிப் பறந்தார் செப்பந்தி.

கந்தசாமி தம் செப்பந்திக்கு ஒரு ஸஹஸ்ர நாமார்ச்சனை செய்தார்.

''மடையா! முட்டாள்! தெலுங்கிலே பதில் சொன்னதும் பயந்துகிட்டு வந்துட்டியோ! அவங்க வீட்டிலே தெலுங்கு பேசறவங்களா இருக்கக் கூடாதோ? இல்லே, உன் குரலைக் கண்டுகிட்டு வேஷம் போட்டு ஏமாத்தியிருக்கலாம் இல்லே.... நீயும் தெலுங்கிலே பேசி, கதவைத் திறக்க வைச்சு ஆளைப் பார்த்துப் பிடிப்பியா! வெறுங் கையோட திரும்பி வர்றயே! மண்டு... மக்கு....''

கந்தசாமியா இலேசில் விடுவார்? அடுத்தது தம் கடை வாடிக்கைக்கார வக்கீல் ஐயா மூலம் ஒரு லாயர் நோட்டீஸ் விட்டார்.

இந்த முறை தபால்காரர் விடவில்லை. கடிதத்தை எப்படியோ நாகசாமியிடம் சேர்த்து ரசீதில் கையெழுத்தும் வாங்கி விட்டார்.

இதுவரை சாத்வீகப் போர் நடத்திய நாகசாமி பொறுமையின் எல்லையை எட்டிவிட்டார். துள்ளி எழுந்தார். டைப்ரைட்டரை எடுத்தார். வெவ்வேறு பெயர்கள் கொண்ட தொழில்கள், காரியாலயங்கள், கம்பெனிகள் இவற்றின் தலைப்புக்கள் கொண்ட விதம் விதமான அச்சிட்ட கடிதத் தாள்களில் ஒன்றைப் பொறுக்கி எடுத்தார். (நாகசாமி ஒரு பெரிய கதாசிரியராகவோ, சினிமாக் கதை எழுத்தாளராகவோ இருந்திருக்க வேண்டியவர். துரதிர்ஷ்டவசத்தால் அவரது அபார கற்பனைத் திறன் கடிதத் தலைப்புக்களுக்கு வெவ்வேறு பெயர் சூட்டி அச்சடித்து வைத்துக் கொள்வதில் மட்டுமே பயன்பட்டது.) அவர் பெயருக்குப் பின்னும் அவரது கல்வி, மற்ற விசேஷப் பட்டங்களைக் குறிப்பிடும் அகராதி அக்ஷரங்கள் அடுக்கப்பட்டிருந்தன. பெயருக்கடியில் வெவ்வேறு பதவிகளை வழங்கிக் கொண்டிருந்தார். ஒன்றில் அவர், ''சேர்மன்'', இன்னொன்றில் ''மானேஜிங் டைரக்

டர்''; மற்றொன்றில் ''மானேஜிங் டிரைக்டர்'', வேறொன்றில் வெறும் ''டைரக்டர்'', ''செக்ரட்டரி'', ''செக்ரட்டரி ஜெனரல்'' இன்னும் இப்படி அவர் யுக்திக்குத் தோன்றிய பொறுப்புக்களைச் சுமந்தார்.

அதில் மிக கௌரவமாக உள்ள ஒரு பதவி அச்சிட்ட கடிதத் தாளில், ஜவுளிக் கடைக் கந்தசாமிக்குக் கடிதம் ஒன்றை டைப் அடித்தார்.

''ஐயா,
உங்கள் வக்கீல் என்று சொல்லப்பட்டவரிடமிருந்து என் பேருக்கு அனுப்பிய ஒரு நோட்டீஸைக் கண்டு திகைப்படைந்தேன். நீங்கள் யார், உங்களுக்கும் எனக்கும் என்ன வியாபார சம்பந்தம், எதற்காக நோட்டீஸ் அனுப்பினீர்கள் என்று புரியவில்லை.
உங்கள் வக்கீல் நோட்டீஸில் ஏதோ உங்களுக்கு நான் பணம் பாக்கி தரவேண்டும் என்று குறிப்பிட்டிருக்கிறது. ஜவுளிகள் ஏதோ எடுத்து வந்ததாக ஓர் அம்மாளிடம் என் மனைவி பேரில் போடப்பட்டிருக்கிறது. எப்பொழுது உங்கள் கடையில் யார் ஜவுளி எடுத்து வந்தார்கள் என்று தெரியவில்லை. ஆள் மாறாட்டப்பட்டு நீங்கள் அவசரப்பட்டு உங்கள் வக்கீலைத் தூண்டி விட்டிருப்பதாக எண்ணுகிறேன். உங்கள் கடையிலிருந்து எடுத்து வரப்பட்டதாகக் குற்றம் சாட்டப்படும் ஜவுளிகளைப்பற்றியோ, அதற்கான தொகையைப்பற்றியோ, நானும் என் குடும்பத்தாரும் யாதொன்றும் அறியோம். எனக்கோ என் மனைவிக்கோ உங்கள் கடை எங்கே இருக்கிறது என்பது கூடத்தெரியாது. அதில் ஜவுளி விற்கிறீர்களா, உப்பு புளி சாமான் விற்கிறீர்களா என்று கூடத் தெரியாது. நியாயமாக உங்கள் பேரில் நான் மான நஷ்ட ஈட்டுக்கு ஒரு லக்ஷரூபாய் வரை தாவா போடலாம். ஆனால் உங்கள் வியாபாரத்தைக் கெடுக்க மனமில்லாததாலும், நானும் உங்களை விடப் பெரிய வியாபாரத்தில் ஈடுபட்டவனானதாலும், இதோடு உங்களை எச்சரித்து விட்டு விடுகிறேன்.

இப்படிக்கு
நாகசாமி

ஜவுளி கந்தசாமி மிகவும் பொறுமைசாலிதான். ஆனால் அவர் பொறுமையை நாகசாமி சோதித்து விட்டார். அவர் கடிதத்தில் மற்ற எல்லாப் பாகங்களையும் விட ''உங்கள் கடையில் உப்பு புளி விற்கிறீர்களா?'' என்று கேட்டாரே, அந்த அவமதிப்பைக் கந்தசாமியால் பொறுக்க முடியவில்லை. க்ரெட்டாகவும், கடனாகவும் ஜவுளி எடுத்துப் போய், சால்ஜாப்புகள் சொல்லி, தவணை கேட்டு, கடைசியில் பணத்தை முழுமையாகவோ, 'இன்ஸ்டால்மெண்ட்'டாகவோ கடையில் பணத்தைக் கொடுத்துவிடும் வாடிக்கைகளை அவர் பார்த்திருக்கிறார். ஆனால் இந்த மாதிரி அப்பட்டமாக முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்கும் பேர்வழியை அவர் வியாபார அநுபவத்தில் பார்த்தது இதுதான் முதல் முறை.

கந்தசாமிக்குக் கோபம் வராது; எப்பொழுதாவது கோபம் வந்தால் அவரைப் போல் பொல்லாத மனிதரைப் பார்க்க முடியாது. நாகசாமி ஜவுளி கந்தசாமியின் கோபத்துக்கு ஆளானார்.

கடையில் ஒரு பெரிய கிரிமினல் லாயரிடம் கேஸ் தஸ்தாவேஜிகளைக் கொடுத்தார். மாஜிஸ்திரேட் கோர்ட்டில், ஏமாற்றம், நம்பிக்கை துரோகத்துக்கு நாகசாமி மேல் கேஸ் போட்டு, கோர்ட்டுக்கு வரும்படி ஸம்மன்ஸ் வந்தது. நாகசாமி பல முறைகள், ஸம்மன்ஸ் கொண்டு வருபவரிடம் டிமிக்கி கொடுத்தார். முதல் முறை, ''நாகசாமியா? அப்படி இங்கே ஒருவரும் இல்லையே!'' என்று அவரது இரண்டாவது குமாரன் சொல்லி அனுப்பி விட்டான். இரண்டாம் முறை ஸம்மன்ஸ் கொண்டு வந்தவர் வீடு பூட்டியிருப்பதாக வந்து விட்டார். மூன்றும் முறை வீட்டுக் கதவில் ஸம்மன்ஸ் ஒட்டியிருந்தது. அதில் அவர் குறிப்பிட்ட தேதியில், கேஸுக்குக் கோர்ட்டில் ஆஜராகாத போனால் கைது செய்யப்படுவார் என்று எச்சரித்திருந்தது. நாகசாமி காரியம் மிஞ்சி விட்டது என்று அறிந்து ஸம்மன்ஸை எடுத்துக் கொண்டு, போலீஸ் கோர்ட்டுகளில் புலி என்றும் சிங்கம் என்றும் பெயர் வாங்கிய வக்கீல் வக்ரசாமியிடம் போனார். வக்ரசாமி, நாகசாமியைப் பார்த்ததுமே ஆளை அளந்து விட்டார். கந்தசாமியின் கடிதங்கள் 'பில்'களைப் பார்த்தார்.

''சரி! நீர் இந்த ஜவுளிகளைக் கந்தசாமி கடையில் வாங்கவில்லை என்று தானே பிரதிவாதம்! உம் கேஸ் அவ்வளவு 'ஸ்ட்ராங்' இல்லைதான். இருந்தாலும் ஒரு கை பார்க்கலாம். ஒரு சின்ன இடைவெளி இருக்கிறது. அதில் நீர் தப்பினால் உம் அதிர்ஷ்டம். கொஞ்சம் சிரமப்பட வேண்டும். மாஜிஸ்திரேட் யார் என்பதைப் பொறுத்திருக்கிறது. பார்ப்போம்.....என் பீஸ் என்ன தெரியுமோ, இல்லையோ?'' என்றார்.

''எவ்வளவு சொல்லுங்கள். என்னால் முடிந்ததைக் கொடுக்கிறேன்.''

''எனக்கு 'ரிடெய்னிங்' ரூபாய் ஐந்நூறு ரொக்கமாகக் கொடுத்துவிட வேண்டும். அதற்கு ரசீது கொடுக்க மாட்டேன். அப்புறம் கேஸில் ஆஜராகும் ஒவ்வொரு நாளும் எனக்கு ரூபாய் ஐம்பது கொடுக்க வேண்டும். பிறகு கேஸ் ஜெயித்தால் ஒரு ஐந்நூறுக்குக் குறையாமல் கொடும்'' என்றார்.

நாகசாமி ஒரு கணம் திகைத்தார். பிறகு பையிலிருந்து ஒரு நூறு ரூபாயை எடுத்துக் கொடுத்து, ''இதை வைத்துக் கொள்ளுங்கள். பாக்கியை இந்த வாரத்துக்குள் கொடுக்கிறேன்'' என்றார்.

கதையை வளர்ப்பானேன்? நாகசாமி அந்த ஐந்நூறு ரூபாய் முழுவதும் கொடுப்பதற்குள் கேஸ் விசாரணைக்கு வந்தது. வக்கீல் வக்ரசாமி இந்த மாதிரி கேஸ்களில் அகப்பட்டதை வாங்கிக் கொண்டு பெயருக்காக வாதாடுவார்.

நாகசாமி வழக்கு விசாரணையில் கந்தசாமி தரப்பில் சாட்சியாக விசாரிக்கப்பட்ட சிப்பந்திகள் நாகசாமியைத் தாங்கள் பார்த்ததே இல்லை என்று உண்மையைச் சொன்னார்கள். ஓர் அம்மாள்தான் ஜவுளி எடுத்துப் போனதாகவும் சொன்னார்கள். கந்தசாமியின் வக்கீலுக்கு அப்போதுதான் தாம் செய்த தவறு தெரிந்தது. ஸ்ரீமதி நாகசாமி மேல் கேஸ் போட்டிருக்க வேண்டும். நாகசாமிமேல் கேஸ் தள்ளுபடியாயிற்று. கேஸ் செலவுகளை முறைப்படி வக்கீல் பீஸ் உள்படக் கந்தசாமி கொடுக்கத் தீர்ப்பாயிற்று.

வக்ரசாமி இதற்கு மேல் சும்மா இருப்பாரா? ''டாமேஜ் ஸூட் போடும்'' என்று நாகசாமியைத் தூண்டினார். நாகசாமி ஒப்புக் கொண்டார். பொய் கேஸ் போட்டுத் தம்மை மானபங்கம் செய்ததாக நாகசாமி கந்தசாமி பேரில் கேஸ் போட்டு அதற்கு ரூபாய் பத்தாயிரம் நஷ்டஈடு கோரித் தாக்கலாயிற்று.

கந்தசாமி மனமுடைந்து நாகசாமி மனைவியார் வாங்கின ஜவுளிப்பணத்தை விட்டுக் கொடுத்ததுமின்றி நாகசாமிக்கு ஆயிரம் ரூபாய் கொடுத்து டாமேஜ் ஸூட்டை வாபஸ் வாங்கச் செய்தார்.

வக்ரசாமி இப்படி நாகசாமியைத் தப்புவித்து கேஸ் ஜெயித்துக் கொடுத்ததற்கு மூவாயிரம் ரூபாய் பீஸ் கேட்டார். நாகசாமி உடனே இன்னொரு வக்கீலிடம் போய்த் தம்மை மிரட்டிப் பயமுறுத்தி வக்ரசாமி அநியாயமாக பீஸ் கேட்பதாகவும், தன் ஸூட்டுகளுக்கு வக்ரசாமியே செலவுகளை முன்பணமாகப் போட்டு ஸூட் ஜெயித்தால் கிடைக்கும் பணத்தில் பாதி பங்கு கேட்டதாகவும் வக்ரசாமி பேரில் நடவடிக்கை எடுக்கச் செய்தார். வக்ரசாமி நாகசாமிக்கு ஐயாயிரம் ரூபாய் கொடுத்துத் தம் பேரில் நடவடிக்கை தொடராதபடி காப்பாற்றிக் கொண்டார்.

நாகசாமி இப்போது அமெரிக்காவில் இருப்பதாகக் கேள்வி. ஜெட் விமானங்கள் செய்யும் தொழிற்சாலை ஒன்றை இந்தியாவில் நிறுவுவதற்காக அமெரிக்கக் கூட்டுதவி நாடிப் போய் இருப்பதாகச் சொல்கிறார்கள். ''நாக் ஜெட் எண்டர்பிரைஸஸ்'' என்ற கம்பெனி போர்டு ஒன்றைச் சென்னையில் எங்கோ பார்த்ததாகச் சொல்கிறார்கள். நாகசாமி குடும்பத்தாரும் அமெரிக்காவில் இருப்பதாகக் கேள்வி. முதல் புத்திரன் அமெரிக்க யுனிவர்ஸிட்டியில் கம்பெனி நிர்மாணப் பயிற்சி பெற்று வருவதாகவும், இரண்டாவது பெண் அமெரிக்க விமான கம்பெனியில் ''ஏர்ஹோஸ்டஸ்''ஸாக இருப்பதாகவும், மூன்றாவது பெண் ஹாலிவுட்டில் ஒரு படத்தில் ஒப்பந்தம் செய்யப்பட்டிருப்பதாகவும், மற்ற இரு பிள்ளைகளில் ஒருவன் ஒரு நடனப் பள்ளியில் சேர்ந்திருப்பதாகவும் கடைக்குட்டி ஒரு யோகாசனப் பயிற்சிச் சாலையில் சேர்ந்திருப்பதாகவும் வதந்தி.

தனலக்ஷ்மி அம்மாள் என்ன ஆனாள் என்று கேட்கிறீர்களா?

'தனம்ஸ்' என்று ஒரு 'ஜாயிண்ட்' நியூயார்க்கில் நடக்கிறதே, தெரியுமா? காஞ்சீபுரம், தர்மாவரம், பனாரஸ் பட்டுப் புடவைகளை அமெரிக்க மாதுகளுக்கு அணிவித்து அழகுபடுத்துகிறார்கள். அத்துடன் 'தனம்'ஸில், எல்லாவித இந்திய கைச் சரக்குகளும் வைத்து வியாபாரம் நடத்துகிறார்களாம். இன்னொரு விசேஷம் அங்கே! ஒரு டாலரை ஒரு மெஷினில் போட்டால் கடக் கட ஆவி பறக்க இரண்டு இட்லிகள் சட்னி சாம்பார் சகிதம் — அத்துடன் டபரா டம்ளரில் சூடாக ''பில்டர்'' காப்பியும் வந்து ''டாண்'' என்று தட்டில் நிற்கின்றனவாம்.

ஜவுளி கந்தசாமியும், வக்கீல் வக்ரசாமியும் அமெரிக்காவுக்குப் போய் இந்த வியாபார சூட்சமங்களை அறிந்து வரப் புறப்பட்டிருக்கிறார்கள்.




பிரதி
வெள்ளிக்
கிழமையும்

ஏயர்-இந்தியா

# அரசியல் தீபாவளி




பெண்ணுக்குத் தலை தீபாவளி நிதி சேர்க்கிறேன். முடிந்தமட்டும் உதவி புரியுங்கள்.

மாமனார் : என்ன வேணும்னு இன்னமும் தவிப்பாக நிற்கிறேன்?

மாப்பிள்ளை : ஒன்றும் வேண்டாம், மாமா! மாமி பண்ணிப்போட்ட டிபன் சீரணம் ஆகிறதுக்குத் தான் 'எக்ஸர்ஸைஸ்' பண்றேன்.






''ரூபாய்க்கு மூன்று படி சர்க்கரை கிடைத்த பிறகுதான் உங்களுக்கு ஸ்வீட் தரப் போகிறோம்.''

''நல்லதாப் போச்சு! அதுவரை நான் இங்கேயே தங்கிடறேன்.''

காப்பியிலே வெங்காய [ வாடையும், பாயசத்தில் ஓவல்டின் வாசனையும் சாம்பாரில் காப்பியின் நறுமணத்தையும் உண்டாக்கிய மாமிக்கு மாப்பிள்ளை தரும் கலப்பு மணப் பதக்கப் பரிசு.







''கண்ணே! விழியாலே மொழி பேசும் நீ, வாய் திறந்து பேசுகிற பேச்சு எதுவும் எனக்கு விளங்காதபடி உனக்கு தகவோதாவும் வந்திட்டுதே! என் செய்வேன்?''

பிள்ளை வீட்டார் பெண் வீட்டாரிடம் தீபாவளித் துணி பெற்றுக் கொள்கிறார்கள்.








''தலா ஒரு சொட்டு எண்ணெய், சிட்டிகை சீயக்காய், ஒரு ஸ்வீட்; ஒரு காரம், ஒரு வெடி, ஒரு மத்தாப்புத் தான்!''

மாப்பிள்ளை : ஹே, சீதா! கதவைத் திறக்காதே! உன் விஷமக் கொடுக்குத் தம்பி பட்டாசு சுடறான். பயமாயிருக்கு!








''நான் கேட்ட பட்டாஸ், வெடி, வாணம் எல்லாம் வாங்கித் தந்தால்தான் கங்கா ஸ்நானத்துக்கு அத்திம்பேரை அனுமதிப்பேன். என்ன சொல்றீங்க?''





மர்பி மாடல் டிஎ/டியு 0824
விலை: ரூ. 390.00*





மர்பி மாடல் டிஎ/டியு 0776
விலை: ரூ. 466.67*

*அகில இந்திய விலை [மகாராஷ்டிரம் தவிர] எக்சைஸ் தீர்வை மட்டுமே உள்ளிட்டது. பாட்டரி விலை தனி. விற்பனை வரி மற்றும் இதர ஸ்தல வரிகளும் தனி.



**murphy**

# கோலாகலமான மர்பி இசையுடன் கொண்டாடுவீர் தீபாவளி



இசை இன்பத்திற்கு மிஞ்சிய பரிசு இன்னொன்றில்லை. உங்கள் குடும்பத்திற்கு வழங்குங்களேன் ஒரு மர்பி. மட்டற்ற செவியின்பம் அவர்களுடையதாகிவிடும். நாளும் பொழுதும் மர்பி ரேடியோவைச் சூழ்ந்த வண்ணம் அவர்கள் சுவைக்கும் இன்பமே இன்பம். கேட்கும் இசையிலே ஒரு தத்ரூபம்... சொற்பொழிவுகளிலே ஒரு தெளிவு— எதிரே அமர்ந்து ரசிப்பது போன்ற ஆனந்தம். அருகமைந்த மர்பி வியாபாரியை அணுகுங்கள் இன்றே. ரேடியோவோ, டிரான்ஸிஸ்டரோ உங்களுக்கே உகந்த ரகம் ஒன்றுண்டு.
உங்கள் சக்திக்கேற்ற விலைகளிலே ரூ.125/-க்கும் அதற்கு மேற்பட்டும் கிடைக்கிறது மர்பி— கலை தவழும் முகமும் கள்ளமற்ற அகமும் கொண்ட ரேடியோ.



மர்பி மாடல் டிபி 0816
விலை: ரூ. 415.00*



மர்பி மினி-மாஸ்டர்
மாடல் டிபி 0581
விலை: ரூ. 303.00*



மர்பி மாடல் டிஏ 0366
விலை: ரூ. 668.33*



மர்பி மாடல் டிஏ 0926
விலை: ரூ. 668.33*



மர்பி மானிடர்
மாடல் டிஏ/டியு 0202
விலை: ரூ. 303.00*



மர்பி மிக் 2
மாடல் டிபி 0579
விலை: ரூ. 240.00*



மர்பி ம்யூஸிஷியன்
மாடல் டிபி 0509
விலை: ரூ. 125.00*



மர்பி மாடல் டிஏ/டியு 0777
விலை: ரூ. 541.67*



**மர்பி இல்லத்தை மகிழ்விக்கிறது!**







# ஆதவனுக்கு ஓர் ஆலயம்

கி. ராஜேந்திரன்

"என்ன, சிற்பியாரே! கோவில் திருப்பணி எப்போது முடியும்?" என்று கேட்டான் மன்னன்.

"இன்னும் ஒரு வாரம். அப்புறம் கோபுரச் சிகரம் வானளாவி நிற்பதைப் பார்ப்பீர்கள்!" என்றான் தலைமைச் சிற்பி பைஸு மகாராணா.

"நல்லது நல்லது" என்று மகிழ்ந்து முத்தாரம் ஒன்றைப் பரிசாக அளித்து விட்டுக் கோவிலில் இதுவரை நடைபெற்றுள்ள வேலைகளை மேற்பார்வையிட மேலே வந்தான் மன்னன்.

"ஆகா, எவ்வளவு அற்புதமாக இருக்கிறது!" பார்க்கப் பார்க்கப் பக்திப் பரவசமானான் அவன். 'சூரியதேவா! பன்னிரண்டு ஆண்டுகள் தவம் இருப்பது போல் இதே சிந்தனையாக இருந்து இதோ கோவில் முடியும்தறுவாயில் இருக்கிறது. இனியாவது என் ரோகம் தீருமல்லவா?' என்று மானசீகமாகக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டே ஆலயத்தை வலம் வந்தான் அவன்.

இன்றைக்கு எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னால் மகாநதிக் கரையில் அரசாண்டவன் நரசிங்க தேவன். கங்க மன்னர்கள் வம்சாவளியில் உதித்தவன். ஏதோ ஒரு தீராத நோயினால் பீடிக்கப்பட்டபோது சூரியதேவனுக்கு ஆலயம் எழுப்பி வழிபடவேண்டும் என்று அவனுக்கு யோசனை சொன்னார்கள். தினமும் சூரியனை நமஸ்காரம் செய்பவர்களை எந்த ரோகம்தான் துணிந்து அணுகும்? மன்னன் ஆலயமும் எழுப்பி வழிபட எண்ணினான். அது தனக்காக மட்டுமின்றி நாட்டு மக்களுக்கே, ஏன், உலகுக்கே பெருமிதமளிக்கக் கூடிய வகையில் அமைய வேண்டும் என்று திட்டமிட்டுப் பணிகளைத் தொடங்கினான். பொக்கிஷ நிலவறைகள் வெற்றிடமாயின. பன்னிரண்டு ஆண்டுகளில் அரசுக்குக் கிடைத்த வருவாயெல்லாம் ஆலய நிர்மாணத்துக்கே செலவாயிற்று. பன்னிரண்டாயிரம் சிற்பிகள் அதனை உருவாக்கப் பாடுபட்டார்கள்.

ஆயினும் என்ன? இப்போது முடியும் தறுவாயில் தலைமைச் சிற்பி இப்படிச் சோகமே உருவாக அமர்ந்திருப்பானேன்? அவனது அந்தரங்கத்துக்குரிய சிலரும் சுற்றிலும் துயர் தோய்ந்த முகத்துடன் அமர்ந்திருப்பது எதனால்?

"மகாராணா! ஏதாவது யோசனை தோன்றுகிறதா?" என்று மெல்லக் கேட்கிறார் சிற்பி ஒருவர்.

"நான் என்ன செய்வேன்? இன்று காலை கோபுரம் சரியானபடி அமர மறுத்ததிலிருந்து எனக்கு மூளையே சரியாக இயங்கவில்லை. பிரமை பிடித்தாற் போலிருக்கிறது. இத்தனை ஆண்டுகளின் உழைப்பும் கடைசியில்......!"

"ஐயோ! அப்படிச் சொல்லாதீர்கள்! விவரம் அரசனுக்குத் தெரிந்தால் அவனுக்கு ஏற்படக்கூடிய ஏமாற்றம்..... நினைக்கவே உள்ளம் நடுங்குகிறதே!"

அரசனுக்குத் தெரியாமல் போகவில்லை. ஒரு நாள் என்ன, நாலு நாட்கள்கூட மறைக்கலாம். ஆனால் சிற்பி வைத்த ஒரு வாரக் கெடு தாண்டிய பிறகும் கோபுரம் விண்ணை முட்டக் கம்பீரமாக நிற்கவில்லை என்றால்? இத்தனை பாடுபட்டு, இத்தனை செல்வத்தைக் கொட்டிக் கடைசியில் மொட்டையாக நிற்பதா ஆலயம்? மன்னனுக்கு ஏற்படும் ஏமாற்றம் இருக்கட்டும், மக்களுக்கு என்ன பதில் சொல்வான் அவன்?

"சிற்பியாரே!" என்று சினம் பொங்கக் கர்ஜித்தான் அவன். "இன்னும் இரண்டு நாட்கள் தருகிறேன். இரண்டே நாட்கள் கோபுரம் உச்சியில் உட்கார வில்லையானால் பன்னிரண்டாயிரம் சிற்பிகளின் தலைகளும் மண்ணில் உருளும்!"

அன்று இரவு உருவாகி வரும் ஆலயத்தைச் சுற்றிலும் சிற்பிகள் வாழ்ந்த குடில்களில் பயங்கர அமைதி குடிகொண்டிருந்தது. தலைமைச் சிற்பி, பைஸு மகாராணாவோ தமது கூடாரத்தில் குறுக்கும் நெடுக்குமாக அலைந்து கொண்டிருந்தார். 'எங்கே தவறு செய்தோம்? எதைக் கணக்கில் எடுத்துக் கொள்ளத் தவறினோம்?' மூளை குழம்பியதே தவிரப் பலன் கிடைக்கவில்லை.





மறுநாள் இன்னும் ஒரு முறை கோபுரத்தை உயரே ஏற்றி அமர்த்த முயன்றார்கள். சாய்மானமாக வைக்கப்பட்ட நீண்ட பலகைகளில் அங்குலம் அங்குலமாக மேலே ஏறியது கோபுரம். மறுபுறம் யானைகள் பல பிளிறிக் கொண்டே அதனை இழுத்து உயர்த்திக் கொண்டிருந்தன. இதோ ஆயிற்று. உச்சிக்கு வந்து விட்டது.

"நிறுத்துங்கள்!" என்று கட்டளை விட்டான் மகாராணு. உடலெல்லாம் வியர்த்துக் கொட்டியது அவனுக்கு. கோபுரம் சரியாகப் பொருந்தவில்லை. அது அதிர்ந்து ஆடி விழுந்து விடும் போன்ற நிலை. மீண்டும் தரைக்கே இறக்கப்பட்டு விட்டது அது.

மகாராணு விரக்தி அடைந்து அருகிலிருந்த ஒரு குதிரைமேல் ஏறிக்கொண்டு காற்றாய்ப் பறந்தான். 'நான் உருவாக்கும் தலைகளில் முதல் தலை தன்னுடையதாகத்தான் இருக்கும்.' — பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் தான் விட்டுப் பிரிந்த மனைவியின் நினைவு அப்போதுதான் எழுந்தது அவன் உள்ளத்தில். கடமையே கண்ணாயிருந்தவனுக்கு அவளைப் பற்றிய சிந்தனை அது வரையில் ஏது? 'அப்போது அவள் கர்ப்பவதியாக இருந்தாள் அல்லவா? தனக்கு மகன் பிறந்திருந்தால் அவனுக்கு இப்போது பன்னிரண்டு வயதிருக்கும் இல்லையா?' பாலகனை மானசீகமாக எண்ணியபோதே மேனி சிலிர்த்தது சிற்பிக்கு. 'மகனே! உன்னைப் பார்க்கக் கூடக் கொடுத்து வைக்காத பாவியாகி விட்டேன் நான்!'

குதிரை சோர்ந்து போய் ஓரிடத்தில் நின்றது. சிற்பி மகாராணுவும் களைத்துப் போய்க் கீழே இறங்கினான். அருகே ஒரு குடிசை. நானே சாகத்தான் போகிறேன் என்றாலும் இன்று தாகத்தைத் தணிக்காமல் இருக்க முடியவில்லையே? பைஸு மகாராணு விரக்தியாகச் சிரித்துக் கொண்டே குடிசைக்குள் நுழைந்தான். அங்கு கிழவி ஒருத்தி வாழ்ந்து வந்தாள். தாகசாந்தி செய்வித்தவள் வந்திருப்பவன் உயர் நிலையில் இருப்பவன் என்பதைப் புரிந்து கொண்டாள். விருந்துண்டு போகுமாறும் கேட்டுக்கொண்டாள்.





பைஸுவுக்கும் பசிதான். குதிரை பசியாறப் புல் மேய்ந்து கொண்டிருந்தது. சற்று நேரத்துக்கெல்லாம் அருமையான உணவு படைத்தாள் கிழவி. சுடச் சுடப் பாயசம் வார்த்தாள். பைஸுவுக்கு விருந்திலா இருந்தது கவனம்? அவன் விரல்களைப் பாயசத்தில் தோய்த்தான். 'ஸ ஸ ஸ...! அப்பா! என்ன சூடு!' என்று உதறினான் விரல்களை.

கிழவி சிரித்தாள். "நன்றாக இருக்கிறது; சூடாகப் பாயசம் வார்த்தால் அதன் ஓரத்தில் விரல்களை வைக்க வேண்டாமோ? அப்போது சுடாதே. அப்படியின்றி மத்தியிலிருந்தா எடுத்துச் சாப்பிடுவார்கள்? அழகுதான்!"

பைஸு மகாராணுவுக்கு மூளையில் ஏதோ மின்னல் பளிச்சிடுவதுபோல் இருந்தது. கிழவியின் இந்தப் பேச்சு அவனுக்கு எதையோ உணர்த்துவது போல் இருந்தது. ஆயினும் சரியாகப் புரியவில்லை. 'கோயில் நிர்மாண வரை படங்களில் என்ன தவறு இழைத்தோம்?' சிந்தித்துக் கொண்டு குதிரை ஏறிக் கூடாரத்துக்குத் திரும்பினான் பைஸு.

அங்கே ஏக அமர்க்களமாக இருந்தது. சிற்பிகளெல்லாம் ஒருவருடன் ஒருவர் ஏதோ காரசாரமென்று பேசிக் கொண்டிருந்தார்கள். "என்ன, திடீர்ப் பரபரப்பு?" என்று வினவினான் பைஸு.

"சிற்பியாரே! இளைஞன் ஒருவன் நாம் செய்த தவற்றைச் சுட்டிக்காட்டித் திருத்துவதாகவும் சொல்கிறான்."

பைஸு, அவர்கள் சுட்டிக்காட்டிய திக்கில் நோக்கினான். "இளைஞனா இவன்? சிறுவன் என்று சொல்லுங்கள். பன்னிரண்டு வயதுப் பிள்ளை நான் செய்த தவறு என்ன என்று

கண்டுபிடிப்பது நடக்கிற காரியமா? ஆற்றிலே அடித்துப்போகிறவன் துரும்பு கிடைத்தாலும் பற்றிக் கொள்ளப் பார்ப்பது போலிருக்கிறது உங்கள் பேச்சு!"

"ஐயா!" சிறுவன் பேசினான்: "நான் குழந்தையாக இருந்தபோதே என் தாயார் எனக்கு விளையாடச் சிற்பியின் கருவிகளைத்தான் கொடுத்தார்கள். சிற்ப, கட்டடக் கலையின் நுணுக்கங்களையெல்லாம் கற்றறிந்திருக்கிறேன். வாய்ப்புக் கொடுத்துப் பாருங்கள்!"

சிற்பி சொன்னான்: "எனக்கும்கூட உன் வயதில் ஒரு மகன் இருக்கிறான்.... அதாவது இருக்கிறான் என்று நம்புகிறேன்." இப்படிச் சொல்லிவிட்டு வாஞ்சையுடன் அவனைக் கட்டித் தழுவிக் கொண்டான்.

"நான்கூட என் தகப்பனார் பைஸு மகாராணாவைத் தேடித்தான் கிளம்பினேன்" என்றான் சிறுவன்.

அவனைச் சுற்றியிருந்த மகாசிற்பியின் கரங்கள் இறுகின. "மகனே!" என்று நெஞ்சாரத் தழுவிக் கொண்டான் பைஸு. பிறகு அவன் அம்மாவைப் பற்றி விசாரித்துவிட்டுத் தன் நிலைமையும் தம் சகாக்களின் நிலைமையும் எடுத்துரைத்தான்.

எல்லாரும் கூடாரத்துக்குள் போனார்கள். பைஸுவின் மகன் பத்துப் பதினைந்து நிமிஷங்களுக்கு வரைபடங்களையெல்லாம் ஆராய்ந்தான். கணக்குகளைச் சரிபார்த்தான். பிழை ஏற்பட்டது எங்கு, எதனால் என்று கச்சிதமாக அனைத்து கூறி விட்டான்.

சிற்பிகள் அனைவரும் வியந்து வாய் அடைத்துப் போய் நின்றனர்.

மகாராணா ஆனந்தக் கண்ணீர் சொரிந்தான். "மகனே! சற்று முன் வரை நான் சாவதைப் பற்றிக் கவலைப் பட்டுக் கொண்டிருந்தேன். இனி சத்தியமாகச் சொல்கிறேன். மரணம் குறித்து எனக்கு அச்சமில்லை. இப்படிப்பட்ட ஒரு மேதையை மகனாகப் பெற்றதே போதாதா எனக்கு? வாழ்க்கையில் இதைவிட எனக்கு வேறென்ன பெருமை வேண்டும்?"

மறுநாள் காலை மன்னன் வந்த போது கோபுரம் கதிரவனின் பொன்னொளியில் குளித்துக் கொண்டிருந்தது. ஆனால் இந்த அற்புதத்தைச் சாதித்து விட்ட மகாசிற்பியின் முகத்தில் பெருமிதத்தையோ மகிழ்ச்சியையோ காண முடியவில்லையே, எதனால்?

"பைஸு மகாராணா! ஏன் என்னவோ போலிருக்கிறீர்கள்? என் மீது உங்களுக்குக் கோபமா?" என்றான் அரசன் அன்புடன்.

"இல்லை, பிரபோ! இன்று காலை கோபுர வேலைகள் பூர்த்தியான நேரத்தில் நான் என் மகனை இழந்துவிட்டேன். அந்தக் கோபுரத்தின் உச்சியிலிருந்தே அவன் விழுந்து இறந்து விட்டான்!" இப்படிக் கூறிவிட்டுப் புலம்பி அழுதான் சிற்பி.

மகனைக் கண்ட மறுநாளே அவனை இழப்பதென்றால்.... அது மட்டுமா? அந்தத் தியாகமூர்த்தி சாகும் தறுவாயில் கூறிய சில வார்த்தைகள்.... "அப்பா!



"மூன்றுந்தாரமாக என் பெண்ணைக் கொடுத்தேனே! அந்த மாப்பிள்ளைக்குத் தங்க பிரேம் போட்ட மூக்குக் கண்ணாடி, வெள்ளிப் பூண் போட்ட வாக்கிங் ஸ்டிக், வெள்ளியிலே பொடி டப்பி, தம்ளர் எல்லாம் இத்தனையும் தீபாவளிப் பரிசாக வேணுமாம்!"

பன்னிரண்டு ஆண்டுகள் நீங்களும் உங்கள் சகாக்களும் பாடுபட்டு இந்த மகத்தான கலைப் பொக்கிஷத்தை உலகுக்கு அளித்திருக்கிறீர்கள். கடைசியில் இதனை முடித்து வைத்தது நான்தான் என்று இருக்க வேண்டாம்; முழுப் பெருமையும் புகழும் உங்களையும் உங்கள் சகாக்களையுமே அடைய வேண்டும். அதற்காக நான் உயிர்த் தியாகம் புரியத் தீர்மானித்தேன். உலகின் கண்களுக்கு நான் தவறி விழுந்து விட்டதாகவே இருக்கட்டும், அப்பா!"

* * *

ஒரிஸ்ஸாவில் கொனாரகாவுக்குப் போகிறவர்கள் சூரியதேவன் கோயிலைச் சுற்றி வரும் போது மேற்சொன்ன அருமையான கதையைக் கேட்காமல் இருக்க முடியாது.

ஆனால் வழிகாட்டிகள் கூறும் இந்த ஒரு கதையை மட்டும்தானா கேட்கலாம்? கோயிலின் சுற்றுப்புறத்தில் உள்ள ஒவ்வொரு சிலையும் ஒரு சுவையான கதை சொல்லும், நிதானித்து இருந்து கேட்போமேயானால். அது மட்டுமல்ல; ஒவ்வொரு முறை பார்க்கும் போதும் புதுப் புது உணர்வுகளைத் தோற்றுவித்து, புதுப் புதுக் கதைகளைப் பேசும். அந்த அழகுச் சிலைகளின் ஒவ்வோர் அங்கமும் ஓர் இனிய கதை கூறும், கலை உள்ளம் படைத்தோருக்கு.

ஒரிஸ்ஸாவின் தலைநகரான புவனேசுவரத்திலிருந்து சுமார் நாற்பது மைல்களுக்கு அப்பால் உள்ளது கொனாரகா சூரியதேவன் கோயில். கடற்கரையில் அமைந்துள்ள இதன் முன் வாயில் கிழக்குத் திக்கு நோக்கி இருக்கிறது. அதிகாலை நேரத்தில் சூரியோதய சமயத்தில் இதனைக் காண்பது மெய்சிலிர்க்கும் அநுபவம். கரிய நிழலாகத் தோன்றிப் பின்னர் வெளுத்து காணப்பட்டு, அப்புறம் பொன்னொளி பெற்று இறுதியில் பழுப்பு நிறம் கொண்டு வண்ண ஜாலம் செய்யும் இந்தப் பிரம்மாண்டமான ஆலயம் அந்த அமைதிச் சூழ்நிலையிலே சுற்றிலும் உள்ள மரங்களில் வாழும் புள்ளினங்கள், காலை நேரத்து இனிய கீதங்களை எழுப்பும். அதற்குச் சுருதி போடுவது போல் தொலைவிலிருந்து கடல் அலைகளின் ஓசை மெல்லியதாய்க் கேட்கும். பூங்காற்று உடலைச் சுற்றித் தழுவும்.

இந்த மோன மயக்கத்திலிருந்து விடுபட்டு அடியெடுத்து வைக்க முடியுமானால் கொனாரகா சூரியதேவன் கோயிலைப் பகுதி பகுதியாகவும் சிற்பம் சிற்பமாகவும் பிரித்துப் பார்த்து ரசித்து மகிழலாம். அது மட்டுமா? ஒவ்வொரு சிற்பத்தின் அங்கங்களையும் அந்த அங்கங்களின் ஒவ்வொரு நெளிவுசுளிவுகளையும் அநுபவிக்கலாம்.

அப்பப்பா, எத்தனை எத்தனை உருவச் சிலைகள் எத்தனை எத்தனை விசித்திரக் கோலங்கள், சித்திர வேலைப்பாடுகள்! எண்ணி மாளாது, சொல்லி முடியாது.

தாஜ்மகாலைக் கண்டுபிடித்து அதைப் பற்றி எழுதி உலகுக்கு அறிமுகப்படுத்தி உலக அதிசயத்திலும் ஒன்றாக்கிய ஆங்கிலேயக் கலைஞன் — அறிஞன், அதற்கு முன்னால் இந்தச் சூரியதேவன் கோயிலைப் பார்த்திருப்பானேயானால் பிறகு அவன் ஒப்பு நோக்குகையில் தாஜ்மகாலைத் துச்சமாகவே கருதியிருப்பான், சந்தேகமில்லை.

கொனாரகா சூரியதேவன் கோயில் இன்று இடிந்து தகர்ந்து போயிருக்கிறது. அப்படிச் சிதிலமடைந்த நிலையிலேயே இத்தனை பிரமிப்பையும் கலை உள்ளத்துக்கு இத்தனை சுவையையும் ஊட்டுமானால் அது முழுமையாக நின்றபோது—

ஆனால் ஓரளவு சிதிலமடைந்த நிலையில் அது இருப்பதிலேயே ஓர் அலாதி சுவையும் இருக்கத்தானே செய்கிறது!

வேற்று மதத்தவரின் படையெடுப்பு நடைபெற்றபோது கோயிலுக்கு ஏதேனும் தீங்கு நேரிடினும், மூலஸ்தானத்தில் உள்ள சூரியதேவனுக்கு அபசாரம் நிகழ்ந்துவிடக் கூடாது என்ற நோக்கில் அதனைப் பக்தர்கள் பெயர்த்து எடுத்துப் போய் ஒளித்து வைத்தார்கள். அது இன்று வரை கண்டுபிடிக்கப்படவேயில்லை! (யார் கண்ணிலாவது தென்பட்டால் சொல்லுங்கள்!)

'கோயிலில்லா ஊர் பாழ்!' என்பார்கள். இறைவனில்லாக் கோயிலும் பாழ்தான். பூஜை புனஸ்காரம் இன்றிப் பக்தர்கள் வருவதும் நின்று காடு மண்டிப் போயிற்று, கோயிலைச் சுற்றி. கோபுரமும் விரிசல் கண்டு தகர்ந்து பெயர்ந்து இடிபாடடையும் நிலையில் இருந்தது.

பின்னால் பிரிட்டிஷ் அரசாங்கத்தினர் வனத்துக்கிடையில் கோயிலைக் கண்டு சுற்றுப்புறத்தைச் சுத்தப்படுத்தினர். தகர்ந்து எப்போது விழுந்து விடுமோ என்ற நிலையில் இது பயமுறுத்திக் கொண்டிருப்பானேன்? ஒரு வழியாக வெடி வைத்து நாமே தகர்த்து விடலாம் என்று முடிவுக்கு வந்தார்கள். அற்புதமான கோயிலை வெடி வைத்து இடித்து விட்டான் என்று குற்றம் சொல்

லாமல் இருக்கவேண்டுமே என்பதற்காக, ''இந்த அழகுக் குவியலை உலகத்துக்குப் பாதுகாத்துத் தருவதற்காகவே அதன் ஒரு பகுதி இடித்துத் 'தகர்க்கப்பட்டது'' என்று கல்லில் பொறித்தும் வைத்தார்கள்.

சூரியதேவன் கோயில் பிராகாரத்துக்குள் யாரும் இன்று நுழைய முடியாது. அங்கெல்லாம் பாறைகளைப் போட்டு அடைத்துச் சுற்றுப்புறச் சுவர்கள் விழாமல் காத்துத் தந்திருக்கிறார்கள்.

மூலஸ்தானத்துக்குள் போக வேண்டுமானால் சர்க்கஸ் வித்தைகள் செய்து கொஞ்சம் நம் முன்னோர்களையும் நம் மீது ஆவாகனம் செய்யச் சொல்லித் தொத்திக் கொண்டும் பற்றிக் கொண்டும் தாவியும் தவழ்ந்தும் ஏறியும் இறங்கியும் சென்று காணலாம். அப்படிச் சென்றும் மூலவரைக் காண இயலாது. அவர் காணாமல் போய்த்தான் ஆண்டுகள் பல நூறு ஆகிவிட்டனவே !

ஆயினும் அந்த மூலவர் எப்படி இருந்திருப்பார் என்பதை அந்த மாபெரும் பீடத்தைக் கொண்டே ஊகிக்கலாம். நல்ல வேளை! அவர் இப்போது அங்கு இல்லாமலிருப்பதே நல்லதாயிற்று. இருந்தால் அண்ணாந்து உயரத்தில் அவர் முகத்தைப் பார்க்கையிலேயே நமக்குத் தலையைச் சுற்றிக் கொண்டு வந்துவிடும்!

மூலவரின் உயரம், அகலம் போன்ற கன பரிமாணங்களை உணர்ந்தபின் அவர் எப்படித் தோற்றமளித்திருப்பார் என்று காண விரும்பினால் அதற்கு வசதி இருக்கிறது. கிழக்கு நோக்கி இருந்திருக்க வேண்டிய மூலவரைத் தவிர மேற்கு, தெற்கு, வடக்கு நோக்கியும் வேறு மூன்று சூரிய தேவர்கள் இருக்கிறார்கள். இவர்கள் மூலவரைவிடச் சிறிய அளவினர்தான் என்றாலும், இரண்டாள் உயரத்துக்குக் குறைவில்லை, கவலை வேண்டாம். இவர்கள் காலை, மாலை மதியச் சூரியன்கள். கையில் பத்மம் ஏந்திக் குதிரை மீது ஆரோகணித்திருப்பது போலவும், நின்றிருப்பது போலவும் உருவ வேறுபாடுகள் உண்டு. சூரிய தேவனுக்குக் கிழ நோய் தீர்ந்து மகிழ்ந்த மன்னன் செங்கோலைச் சமர்ப்பித்து வணங்குவதையும் காண்கிறோம்.

சுற்றுச் சுவர்களில் உள்ள ஒரு சிற்பம் அரசனும் அரசியும் அரண்மனை முன் முகப்புக்கு வந்து மக்களுக்குக் காட்சி தரும் கோலத்தைக் காட்டுகிறது. போருக்குக் கிளம்பும் படைகள், யானைக் கூட்டங்கள் இவற்றையெல்லாம் பார்க்கும் போது ஒட்டைச் சிவிங்கி ஒன்றும் நம் கண்களில் படுகிறது.

சூரியதேவன் கோயில் அமைந்துள்ள கொனாரக் அந்நாளில் பெரும் துறைமுகப் பட்டினமாக விளங்கியது. இந்தக் கோயில் ஒரு காலத்தில் கலங்கரை விளக்கமாகக்கூடத் திகழ்ந்ததாக நம்புகிறார்கள். வாணிபம் செழித்த அந்நாட்களில் ஆப்பிரிக்காவிலிருந்து ஒட்டைச் சிவிங்கி ஒன்று ஏன் வந்திருக்கக்கூடாது? இன்றைக்கு நாம் அடிப்படும் நேசநாடுகளுக்கெல்லாம் ஒவ்வொரு யானையை அன்பளிப்பாக அனுப்பி விடுவதில்லையா, என்ன ?

சூரியதேவன் கோயிலுக்கு முன்னால் நடன மண்டபமும் பின்னால் சாயா



''என் கை பட்டாலே குளிர்ச்சியாக இருக்கும் என்பீர்களே! அதனாலேதான் காப்பியை இங்கிருந்தே பிடிக்கக் கொண்டு வரேன்!''

தேவிக்கென்று தனிக் கோயிலும் உள்ளன. சாயாதேவிக் கோயிலில் இன்று விசேஷமாக எதையும் காணோம். மேல் விதானமில்லாத நடன மண்டபத்துத் தூண்களிலும் உயரமான பீடங்களிலும் ஆயிரமாயிரம் ஆடற்கலை பயின்ற அழகிகள் இன்றும் சிறிதுகூட அயராமல் ஆடிக் கொண்டே யிருக்கிறார்கள். நாமும் அலுப்புச் சலிப்பின்றிப் பார்த்துக் கொண்டே யிருக்கலாம். அதிலேதான் எத்தனை எத்தனை பாவங்கள்! எத்தனை எத்தனை முத்திரைகள்! எத்தனைவிதமான அலங்காரக் காட்சிகள்! எத்தனை விதமான வாத்திய வகைகள்! இடையிடையே ஒரு நட்டுவனாரும் காணப்படுகிறார்; மெல்லச் சிரித்து மகிழ ஒன்றிரண்டு கோமாளிகளும் கூத்தாடுகிறார்கள் !

நடன மண்டபத்துக்கு அருகே ஓர் ஆலமரம். அதன் அடியில் கிடந்த ஒரு பெரிய கல் பீடத்தின் மீது படுத்துக் கொண்டு இந்த ஆலமரம் என்னென்ன காட்சிகளை இங்கு கண்டிருக்கும் என்று சிந்திக்க ஆரம்பித்தேன். சுற்றுவட்டாரத்தில் அரச குமாரர்களும் இளவரசிகளும் ஆடலழகிகளும் கலைஞர்களும் சிற்பிகளும் காதலர்களும் காதலிகளும் தோன்ற ஆரம்பித்தார்கள். யானைகளும், குதிரைகளும், காவலர்களும், வீரர்களும் இன்னும் சரித்திரத் தொடர் கதைக்கு வேண்டிய எல்லாவிதமான பாத்திரங்களும் முளைத்தெழுந்தனர். பக்கத்தில் இருந்த வழிகாட்டி என்னை அந்தக் கற்பனை உலகில் சஞ்சரிக்கவிடவில்லை. தமிழகத்தில் சரித்திரக் கதாசிரியர்கள் ரொம்பப் பேர்கள் இருக்கிறார்கள் என்ற பொறாமை போலும் இந்த ஒரிஸ்ஸாக்காரருக்கு!

அவர் சிந்தனையைத் தடைப்படுத்திக் கேள்வி தொடுத்தார்: ''நீங்கள் படுத்திருக்கிறீர்களே இந்தப் பீடம், இது எங்கே இருந்து வந்தது தெரியுமா?''

''எனக்கு ஒன்றும் தெரியாது, சுவாமி ! நான் இன்றுதான் முதன் முதலாக இந்தப் பக்கம் வருகிறேன் !''

''அப்படியானால் நான் சொல்கிறேன். கேட்டுக் கொள்ளும்! இந்தக் கோயிலின் நிலை வாசல் ஒன்றின் மேல் இருந்தது. அளவாகச் செதுக்கப்பட்டுள்ள இந்தப் பாருங்கள். இதை மறுபடியும் ஒரு நிலைவாசல் மேல் ஏற்றி வைப்பது எப்படிச் சொல்லும், பார்க்கலாம்!''

''எனக்கு என்னமாய்த் தெரியும், நான் என்ன இஞ்சினீயரா?''

''அப்படியானால் நான் சொல்கிறேன், கேளும். சில மாதங்களுக்குமுன் இங்கே ஜெர்மனியிலிருந்து ஓர் இன்ஜினீயர் வந்தார். அவர் என்னசொன்னார், தெரியுமா? உமக்குத் தெரியாது. நானே சொல்கிறேன். கேளும்! இதை உயரே நிலை வாசல் மீது ஏற்றப் புதிதாக ஒரு 'கிரேன்' தயார் பண்ண வேண்டும் ! கிரேன், அதாவது பாரம் தூக்கி! புரிகிறதா உமக்கு?''

''புரிகிறது: அப்படி யிருக்க 13-ம் நூற்றாண்டில் — அந்த நாளில் இதை எப்படி நிலை வாசல் மீது ஏற்றி வைத்தார்கள்? அதுதான் புரியவில்லை !''

''இதன் பளு என்ன தெரியுமா, உமக்கு?''

''எனக்குத் தெரியாது, நீரே சொல்லி விடும்!''

''இருபது டன்! புரிகிறதா? இருபது டன் !''

''நன்றாகப் புரிகிறது. நான் போய் வருகிறேன். இதற்குமேல் கேட்டால் பிரமிப்பில் நானும் சிலையோடு சிலையாக நின்று விடுவேன்'' என்று கூறி விடைபெற்றுக் கொண்டேன்.

க்   க்   க்

காரில் ஏறினோம். அது நகர ஆரம்பித்தது. ''கொஞ்சம் இருங்கள் !'' என்றார் நண்பர் மணி.

''என்ன?''

''கடைசி கடைசியாக ஒரு தடவை சூரியதேவன் கோயிலைப் பார்க்கத்தான். அதோ! முன் கோபுரத்தின் மேலே பாருங்கள்! வீணை ஏந்தி நிற்கும் அந்த அப்ஸர மாது, 'என்னை விட்டுப் போகிறீர்களே' என்பது போல் இல்லையா?''— நண்பர் மணியின் குரல் தழுதழுத்தது.

''ஓய்! நீர் என்ன அவள் மீது காதல் கொண்டு விட்டீரா? இங்கிருந்து பார்க்க அளவான அழகியாகத் தோன்றுகிறாள் அவள். அந்தக் கோபுரத்தின் மேலே ஏறி அருகில் நெருங்கிப் பார்த்திருக்க மாட்டீர்கள். நான் போனேன். என் மூதாதையரை என் மீது ஒரு மணி நேரம் ஆவாகனம் செய்யச் சொல்லி விட்டு உயரே ஏறிச் சென்றேன். அங்குள்ள அப்ஸரஸ்கள் ஒவ்வொருவரும் மூன்றாள் உயரம்! அவள் அப்படியே கீழே இறங்கி வந்தால், உம்மை இடுப்பில் தூக்கி வைத்துக் கொண்டு கொஞ்சி விடுவாள்!''

''சரி! சரி! நாம் போகலாம், சார்!'' என்று துரிதப்படுத்தினார் நண்பர்.

உயிருடன் இருப்பதுபோல் அதே அளவில் கம்பீரமாக நின்று உலகப் பிரசித்தி பெற்றுவிட்ட கொனாரக யானைகள், குதிரைகள் ஆகியவற்றிட

றும் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டோம்.

ஒரிஸ்ஸாவின் தலைநகரான புவனேசுவரத்திலும் பல தொன்மையான கோயில்கள் உள்ளன. *அங்கெல்லாம் கூடக் கோனாரகா சூரியதேவன் கோயில் பாணியிலேயே அமைந்த சிற்ப வித்திரங்கள் ஏராளம். முக்கியமாக லிங்க ராஜா ஆலயம், ராஜா ராணி ஆலயம் ஆகியவற்றில் கலை அழகின் பூரணத்துவத்தை உணர்ந்து மெய்மறக்கிறோம்; கண்களில் நீர் பனித்து நிற்க மாமேதைகளான அந்தச் சிற்பக் கலைஞர்களை மானசீகமாக வணங்குகிறோம்.

லிங்க ராஜா கோயிலில் ஓர் அழகிய நங்கை நல்லாள் நாணிக் கோணி உதட்டில் புன்முறுவல் எட்டிப் பார்க்கக் கடைக்கண் நோக்கி நிற்கிறாள். அவளை அழகுறப் படைத்ததோடு கோயில் புறச் சுவரின் ஒரு மடிப்பிலே மறைந்தும் மறையாமலுமாக நிறுத்தி யிருக்கிறானே சிற்பி, அந்த அமைப்பை எத்தனை பாராட்டினாலும்தான் என்ன? ஒளிந்திருந்து ஒரு விரலை இதழ்க்கோடியில் அதரங்களுக்கிடையில் வைத்து நிற்கும் அவளைக் கண்டுபிடித்து விட்டவர்கள், "நீ அகப்பட்டுவிட்டியே!" என்று தன்னை மறந்து சத்தினால்கூட ஆச்சரியப்படுவதற்கில்லை.

ராஜாராணி கோயிலில் ஒரு காட்சி. கால் தண்டை ஒன்றைக் கழற்றுகிறாள் ஒரு நங்கை. அதிலேதான் எத்தனை நளினம்! எவ்வளவு பாவபூர்வமாக அமைந்திருக்கிறது அந்தக் காட்சி!

இப்படி ஒவ்வொரு சிற்பமாகப் பார்த்து ரசித்து வர்ணித்துக் கொண்டே போகலாம்தான். ஒரிஸ்ஸாவில் அன்று ஆண்ட மன்னர்கள் கபிட்சத்தை யானையாகவும் அதனை நிர்வகிக்கும் அரசாட்சியினை யாளியாகவும் உருவகப்படுத்தினார்கள். யானை தாழ்ந்தும், குதிரை அதன் மேல் முன் கால்களை உயர்த்திக் கொண்டும் இருப்பதுபோல் மூலை முடுக்குகளிலெல்லாம் சிற்பங்களை வடித்தார்கள். இது அந்நாளைய கபிட்ச சமுதாயத்தின் சின்னமாகவே விளங்கியது.

புவனேசுவரத்திலிருந்து சுமார் முப்பது மைல் தூரத்தில் பூரி ஜகந்




"சார்! உங்க பொண்ணு மாப்பிள்ளே தலை தீபாவளிக்கு வரலியா? புடவை, வேஷ்டிகளை ரிஜிஸ்தர் தபாலில் அனுப்பறீங்களே?"

"என் பெண் ரிஜிஸ்தர் மேரேஜ் இல்லே பண்ணிக்கிட்டா? அதனாலேதான் தீபாவளிச் சீர் ரிஜிஸ்தரிலே அனுப்பறேன்!"

---

நாதர் ஆலயம் உள்ளது. இங்கு நாம் தட்டுச் சுற்றில் வேஷ்டி கட்டிக் கொண்டு தெருவில் நடப்பதைப் பார்த்த உடனேயே, 'ஜகந்நாத சுவாமி தேவோ' என்று குரல் மாறி, 'சுவாமி பார்த்துக்கோ, புண்ணியம் சேர்த்துக்கோ' என்று குரல் கொடுப்பார்கள் பண்டாக்கள். இந்த அர்ச்சகர்கள் நின்றுங்காக, உட்கார்ந்தால் பணம் என்பார்கள் என்று கேள்விப்பட்டுக் கொஞ்சம் முன் ஜாக்கிரதையாக ஒதுங்கப் போனால் உடனே உங்களை வாழ்த்திய வாய் அதை வாபஸ் பெற்றுக் கொண்டு வசை பாடத் தொடங்கும்!

'பணம் எண்ணறே! பாபம் பண்ணறே' என்று சபிப்பார்கள். அடடா! எட்டுத் தமிழ் வார்த்தைகளைத் தெரிந்து வைத்துக் கொண்டு தட்டுச் சுற்று வைத்து வேட்டி கட்டியவர்களை அவர்கள் படுத்தி வைக்கும் பாடு..... ரூபாயைக் கறக்க உண்டியலையே உள்ளே இருக்கும்

நோட்டுக்கள் வெளியே தெரியுமாறு கண்ணாடியால் செய்து வைத்திருப்பவர்கள் ஆயிற்றே!

பூரி ஜகந்நாதர் ஆலயத்தில் கலையுருத் ததும்பப் பெற்ற சிற்ப வேலைப்பாடுகள் அதிகம் இல்லை. கொஞ்சநஞ்சம் இருக்கும் கலைப் பொருள்களுக்கும் கண்ணும்பு பூசி இருட்டடிப்பு செய்திருக்கிறார்கள். கோயிலில் சுத்தம் என்பதைக் காசு கொடுத்தாலும் வாங்க முடியாது. ஆனாலும் பூரி ஜகந்நாதருக்கு உள்ள பக்தகோடிகள் இதையெல்லாமா பார்க்கிறார்கள்? ஜகந்நாதனையும் அண்ணன் பலராமனையும் தங்கை சுபத்திரையையும் தரிசிக்கவல்லவா வருகிறார்கள்!

நவீன பாணி ஓவியம் வரைந்து மார் தட்டும் இந்நாளைய சைத்ரீகர்கள் இந்தக் கடவுளருக்கு எதிரே வெட்கித் தலைகுனிய வேண்டியதுதான். 'மாடர்ன் ஆர்ட்'டின் சாரமாகத் திகழ்கின்றனர் ஜகந்நாதரும், பலராமரும், சுபத்திரையும்.

பூரியில் தேர் உற்சவம் ஜூன்-ஜூலை மாதம் வாக்கில் ஆண்டுதோறும் நடைபெறும்போது லட்சோப லட்சம் மக்கள் குழுமுவார்கள். பதினாறு சக்கரங்களை உடையது பிரதானத் தேர். ஒவ்வொரு சக்கரத்தின் விட்டமும் ஏழு அடி. தேரின் உயரம் நாற்பத்தி ஐந்து அடி.

நாங்கள் ரதோற்சவ சமயத்தில் போகவில்லையாதலால் அந்தக் கூட்டத்தில் மிதிபட்டு மூச்சு முட்டித் திணற வேண்டிய அவசியம் இல்லாது போயிற்று. "அடடா! நாம் எவ்வளவு அதிர்ஷ்டக்காரர்கள்!" என்று சமாதானப்படுத்திக் கொண்டு ஊருக்குத் திரும்பிவிட்டோம்.

ஊர் திரும்பி இந்தக் கட்டுரை எழுதும் நாளான இன்றோடு எட்டு மாதங்கள் ஆகின்றன. ஆயினும் என்ன? ஆதவன் கோயிலின் ஒவ்வொரு பகுதியும் ஒவ்வொரு சிற்பமும் அந்தச் சிலா வடிவ அழகிகளின் ஒவ்வோர் அவயவமும் புருவ நெளிவும் இதழின் கனிவும் கரத்தின் நளினமும் இடையின் ஒசிவும் பாதத்தின் மென்மையும் இன்றும் என் நினைவை ஆட்கொண்டிருக்கின்றன.

ஆதவன் கோயிலை நினைத்துவிட்டால் போதும்; ஒரே ஆனந்த பரவச உணர்ச்சிதான்!





கடலைக் கடக்கப் படகு உண்டு - ஐலஸா
கடவுள் கொடுத்த உடலும் உண்டு
திடமும் உண்டு - ஐலஸா

புகைப்படம்: வித்யாஸ்ரதா.


தீபாவளி வாழ்த்துக்கள்!
திரு. வாடிக்கையாளர்,
இந்தியா.
சிம்கோ மீட்டர் தொழிலகம்,
மீட்டர் தொழிலக சாலை,
திருச்சிராப்பள்ளி-1.
TIRUCHIRA

# இங்கே மழை பெய்தது...

ராஜு எதிர்த்த வீட்டை நோக்கினான். அவள் நின்று கொண்டிருந்தாள்.

'மேக் அப்' இல்லாமல் இருந்தாள். அதிசயம்தான். மாலை வெய்யில் முகத்துக்கு மஞ்சள் பூசிற்று. அலை அலையாய் அடர்ந்திருந்த கருமையான கூந்தல். தாயை ஆர்வத்தோடு தழுவும் குழந்தையைப் போல் அது கழுத்தின் முன்புறத்தை அணைத்துக் கொண்டு விழுந்திருந்தது. இடப்புறக் கன்னத்தைக் கூந்தல் மஞ்சத்தில் அவள் சற்றுச் சாய்த்திருந்தாள். பட்டு மெத்தையின் மீது இடப்பட்ட வெல்வெட் தலையணை.

உள்ளத்தில் ஒரு சிலிர்ப்பு. ராஜு விழித்தெழுந்தான். அவள் ஒழுக்கம் கெட்ட பெண். அவள் அழகாயிருந்தால் என்ன, இல்லாவிட்டால் என்ன? அழகு இயற்கை அளித்த வரப்பிரசாதம். பூஜிக்கப்பட வேண்டியதொன்று. அதை வியாபாரப் பொருளாக்கி விட்டாளே பாவி!....

அந்தப் பெண் புன்னகை செய்தாள். தன் வீட்டு வாசலில் காரிலிருந்து இறங்கி வந்த ஒருவரை அவள் வரவேற்றுக் கொண்டிருந்தாள்.

அந்தப் பெண்ணைப் பற்றிய 'சுவை மிக்க தகவல்களை' ஒரு மஞ்சள் பத்திரிகை ஏற்கனவே தந்துவிட்டது. 'டில்லி முழுவதும் பிரசித்தி பெற்ற பெண்' என்ற தலைப்பின் கீழ் வெளுத்து வாங்கிய அந்தத் தகவல்கள் முழுதும் ராஜுவுக்குத் தலைகீழ்ப் பாடம்.

ராஜுவுக்கு இப்பொழுது அத்தகவல்கள் யாவும் நினைவுக்கு வந்தன. அவனுக்குக் கோபம் கோபமாக வந்தது. யார் மீது என்றுதான் தெரியவில்லை. 'பால்கனி'யில் நின்று கொண்டிருந்த அவன், கைப்பிடிச் சுவர் மீது வேகமாகக் குத்தினான்.

''என்ன ஆச்சு உங்களுக்கு?'' என்ற குரல் கேட்டு அவன் திரும்பினான். அவன் மனைவி தங்கம் நின்றுகொண்டிருந்தாள்.

''அவளைப் பாரு? எவனோத்தன் வரான், என்ன உபசாரம்?''

''உங்களுக்கென்ன வந்தது அது பத்தி ?''

''எனக்கேன் வல்லே? பொம்மனாட்டியா இருக்கிறவா, அவளைக் கண்டா, 'ஏன் பொம்மனாட்டியா பொறந்தோம்'னு வெட்கப்படணும்..... நம் நாட்டுப் பண்பாடென்ன, பெருமை என்ன, இவ இப்படி....

தங்கம் சிரித்தாள்.

''எதுக்குச் சிரிக்கிறே?'' என்று ராஜுவின் குரல் படபடத்தது.

''ரொம்பத்தான் நம்ம தேசத்தைப் பத்திக் கவலைப்படறேள்.'' இதைச் சொல்லிவிட்டு அவள் உள்ளே போய் விட்டாள்.

தங்கம் எப்பொழுதும் இப்படித்தான். தூக்கி எறிந்தாற் போல் பேசிவிட்டுப் போய்விடுவாள். குடும்பப் பெண்களாய் இருக்கிறவர்களுக்கு, அந்தப் பெண்ணைக் கண்டால் கோபம் ஏற்படுவது இயற்கை. ஆனால் தங்கம் மட்டும் ஏன் இப்படி இருக்கிறாள் ?

இரண்டு மூன்று நாட்களுக்கு [முன்பு] நடந்த சம்பவம் அவன் நினைவுக்கு வந்தது......

.....'ஏன் இப்படி அந்தப் பெண்ணுக்காக ரொம்பப் பரிஞ்சு பேசறே?' என்று கேட்டான் ராஜு. தங்கம் பதில் சொல்லவில்லை. 'குடும்பப் பொண்ணா இருக்கிறவாளுக்கு அவளைப் பார்த்தால் கோபம்தான் வரும்' என்றான் ராஜு.

தொடர்ந்து, 'ஏன் தெரியுமா?' என்று கேட்டாள் தங்கம்.

''ஏன்''

''தன்னை ஆக்கிக்கிறாளோ, அழிச்சுக்கிறாளோ, ஏதாவும் ஒண்ணு செய்யக்க அவளுக்குச் சுதந்திரம் இருக்கு. இந்தச் சுதந்திரத்தைக் கண்டுதான் குடும்பப் பெண்களுக்குப் பொறாமை...''

தங்கத்தின் வார்த்தைகளை அவன் ஜீரணம் செய்வதற்குள், அவள் உள்ளே போய் விட்டாள். சுதந்திரம் என்றால் இப்படி இருக்க வேண்டும் என்ற அர்த்தமா? ராஜு மனைவியை நாடி அடுக்களைக்குச் சென்றான்.

''அந்தப் பொண்ணு மாதிரி இருந்தால்தான் சுதந்திரம் இருக்கிறதா அர்த்தமோ?'' என்று கேட்டான் ராஜு.

''என் மனசிலே என்னமோ தோணித்து, சொன்னேன். ஏன் விடமாட்டேங்கிறேள்?''

''அந்தப் பொண்ணைப்பத்தி உனக்குத் தெரியுமா?''

''நீங்க ஆபீஸ் போனப்புறம் அவ இன்னிக்கு இங்கே வந்தாள்.''



இந்திரா பார்த்தசாரதி

''ஏன் சிநேகிதியா இருக்கக்கூடாதா?''

''ஓ.... பேஷா.... நீயும் அவ கொடுக்கப் போற 'பார்ட்டி'யிலெல்லாம் கலந்துக்கப் போறே.....!''

''உங்களுக்கும் பைத்தியம்தான் பிடிச்சிருக்கு'' என்றாள் தங்கம்.

ராஜு சோபாவில் அவள் அருகில் வந்து உட்கார்ந்தான்.

''தங்கம்! நான் சொல்றேன் கேளு. அந்தப் பொண்ணோட சிநேகிதம் உனக்கு வேண்டாம்...!''

''ஏன், நானும் அவ மாதிரி ஆயிடுவேனேன்னு பயமா?'' தங்கம் வெளிப்படையாகவே கேட்டு விட்டாள். ராஜுவின் முகத்தில் படீரென்று அடித்தாற் போலிருந்தது

''அந்தப் பொண்ணு கெட்டவன்னு சொன்னு. நீ என்ன இப்படிப் பேசறே? உன் பேரிலே சந்தேகம்னு யார் சொன்னது! சந்தேகம் வர்றதுக்கு இன்னும் பத்து வருஷம் போகட்டும் அஞ்சு வருஷம் தானே ஆகிறது. கல்யாணமாகி....!''

புஸ்தகத்தை மூடி வைத்துவிட்டுத் தங்கம் எழுந்திருந்தாள். சோம்பல் முறித்தாள்.

''இந்த மாதிரி விஷயங்களுக்குக் காலெண்டர்லே வருஷத்தைக் கிழிச்சா மட்டும் போறாது. மனசுக்கு வயசே கிடையாது.....!''

சோம்பல் முறித்துக் கொண்டே அவள் இதைச் சொன்னவிதம், அவனுக்குத் தான் சொல்வதில் எவ்வித சந்தேகமுமில்லை என்பதைக் காட்டியது.

ராஜுவுக்கு அன்றிரவு உறக்கம் வரவில்லை. மீண்டும் மீண்டும் மோகினி நினைவுதான். தங்கம் அவளுக்காக ஏன் பரிந்து பேசுகிறாள்? வீடு மாற்றி விடலாமென்று ஒரு கணம் நினைத்தான். தங்கம் தன்னைப் பரிகசிக்க இதுவும் ஒரு காரணமாகிவிடும். வெளிப்படையாகவே கேட்டுவிட்டாளே, 'சந்தேகப்படுகிறீர்களா?' வென்று.

தங்கம் அழுத்தமான குண இயல்புடையவள். தான் பலவீனமானவன் தான். சந்தேகமில்லை ஒவ்வொரு தடவையும் தன்னுடைய வார்த்தைதான் கடைசி வார்த்தையாக இருக்க வேண்டும் என்று அவன் முயல்வான். ஆனால், தங்கம் சிரித்துக்கொண்டே ஏதாவது கூறி அவன் வாயை அடைத்து விடுவாள்.

தன்னுடைய தாழ்வு மனப்பான்மை அவனுக்கு நிதரிசனமாகத் தெரிந்தது. ஒழுக்கத்தைப் பற்றி நினைக்கும்போது, தான் உணர்ச்சி வயப்படுவது போல் தங்கம் ஏன் தீவிரமாக எண்ணுவதில்லை?

அவன் திரும்பிப் பார்த்தான். தங்கம் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். மோகினியின் ஒழுக்கத்தைப் பற்றித் தூக்கத்தைக் கெடுத்துக் கொண்டு அவள் சிந்திக்கவில்லை. தெய்வமே... யார் எக்கேடு கெட்டால் என்ன? எனக்குத் தூக்கத்தைக் கொடு...!

விடியற்காலையில்தான் அவன் சற்றுக் கண்ணயர்ந்தான். தூங்கி எழுந்தபோது மணி எட்டு; தங்கம் தன்னை ஏன் இன்னும் எழுப்பவில்லை?

அப்பொழுதுதான் அவன் நினைவுக்கு வந்தது. அன்று ஞாயிற்றுக்கிழமை. படுக்கையை விட்டு எழுந்து பல் துலக்கி விட்டு, பேப்பரை எடுத்துக் கொண்டு பால்கனிக்குச் சென்றான்.

மோகினி நீராடிவிட்டுக்! கூந்தலை உலர்த்திக் கொண்டிருந்தாள். காஞ்சிபுரம் புடைவை, நெற்றியில் பளிச்சென்று திலகம். ரவிவர்மாவின் படம் அவன் நினைவுக்கு வந்தது.

காப்பியின் மணம். தங்கம் ஆற்றிக் கொண்டிருந்தாள்.

''இன்னிக்கு மகாலட்சுமி வேஷம்'' என்றான் காப்பியைப் பருகிக்கொண்டே.

தங்கம் புன்முறுவல் செய்தாள். இது எதிர்த்த வீட்டை நோக்கிச் செய்யப் பட்டதென்று உணர்ந்த ராஜு, மோகினியை நோக்கினான். அவள் முகத்திலும் புன்னகை நெளிந்தது.

''இரண்டு நாள் பழக்கத்திலேயே இவ்வளவு அந்யந்தமா?'' என்றான் ராஜு.

''இரண்டு நாளென்ன, ஒருத்தரை ஒருத்தர் புரிந்து கொள்ள இரண்டு மணி போறாதா?'' என்றாள் தங்கம்.

''நீ அவளை என்ன புரிஞ்சுண்டே?''

''அவளைப் புரிஞ்சுக்கிறது இருக்கட்டும். ஆம்பிளைகளைக் கட்டுக் கொள்ளணும்னு புரிஞ்சுண்டேன்!''

''எதுக்கு?''

''எதுக்கா?.... ஆம்பிளைகளோட பலவீனம்தானே இந்தப் பொண்ணுக்கு உத்தியோகம்? சந்தர்ப்பம் கிடைக்கிற வரையிலும்தான் ஒவ்வொருத்தனும் யோக்கியன். இத்தனை தடியங்க இங்கே வராங்களே, ஒருத்தனாவது ஒரு பிரம்மச்சாரியாவது கல்யாணம் பண்ணிக்கிறேன்னு சொல்றானா?... அந்தப் பொண்ணு என்ன செய்யும்? வயத்தைப் பசிக்காதேன்னு அதான் கேட்கிறதா?''

தங்கம் இப்படி ஆவேசமாகப் பேசி ராஜு கேட்டதேயில்லை.

''அவ ஒழுங்கா இருந்தா கல்யாணம் ஆகாமலா போயிடும்? அவளுடைய அழகுக்கு யாராவது கொத்திண்டு போயிருக்க மாட்டானா?''

''அப்படிக் கொத்திண்டு போக வந்தவன்தான் அவளை இங்கே இப்படிக் கொண்டு வச்சிருக்கான்.... போறுமா? ஆம்பிளைகளைக் கடாமெ என்ன செய்யணுங்கறேன்?''

தங்கம் இதைச் சொல்லிவிட்டுத் தம்ளரை எடுத்துக் கொண்டு உள்ளே போனாள்.

மோகினி புல்பரப்பில் கூடை நாற்காலியில் உட்கார்ந்திருந்தாள். கையில் ஓர் ஆங்கிலக் கவர்ச்சிப் பத்திரிகை. அவள் திடீரென்று மேலே நோக்கினாள்.

அவளையே உற்று நோக்கிக் கொண்டிருந்த ராஜுவின் கண்களும், அவள் கண்களும் சந்தித்தன. அவள் புன்னகை செய்தாள். அல்லது புன்னகை செய்தது போல் ராஜுவுக்குப் பட்டது.

அவன் திரும்பிப் பார்த்தான். தங்கம் இல்லை. உள்ளே போய்விட்டாள். தன்னைப் பார்த்துத்தானா இந்தப் புன்னகை? பதிலுக்குப் புன்னகை செய்ய வேண்டுமா? தன் சிநேகிதியின் கணவன் என்ற முறையில் அவள் புன்னகை செய்திருக்கிறாள். தங்கம் இருக்கிறாளா என்று பார்த்துவிட்டு, இல்லையென்று அறிந்த பிறகு தான் புன்னகை செய்தாள். அவன் தவறாக நினைத்துக் கொள்ள மாட்டானா? ஆனால் தங்கம் உள்ளே போன பிறகுதானே அவள் புன்னகை செய்தாள்?... ஒருவேளை அவள் புன்னகை செய்ததுபோல் தனக்குப் பிரமை ஏற்பட்டதோ?

மோகினி, ராஜுவின் சங்கடத்தை உணர்ந்ததாகத் தெரியவில்லை. அவள் கையிலிருந்த பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்தாள்.

தன்னுடைய புன்னகைக்காக அவள் ஏன் காத்திருக்கவில்லை? அவள் செய்தது உபசாரப் புன்னகை... ஆள் வெறும் ஜடம் என்று தீர்மானித்துவிட்டாளோ?

''குளிச்சுட்டுச் சாப்பிட வரல்லியா?'' என்று கேட்டுக் கொண்டே தங்கம் வந்தாள்.

''என்ன அவ்வளவு அவசரம்?.... ஞாயித்துக்கிழமைதானே?'' என்றான்.



''நான் வேபடி ரோட் போகணும்...

''என்ன விசேஷம்?''

''கொஞ்சம் வேலை இருக்கு.''

''எங்கே வேணும்னாலும் போ. சாப்பிட போட வந்துடு.''

''சரி... இப்போ குளிக்க வரேளா?''

சாப்பாடு முடிந்ததும் தங்கம் புறப்பட்டு விட்டாள். ராஜு கதவைத் தாளிட்டுக் கொண்டு கட்டிலில் படுத்தான். இரவு சரியான உறக்கமில்லை. அசதியினால் நன்றாகத் தூங்கிவிட்டான்.

''டக்... டக்... டக்'' யாரோ கதவைத் தட்டுவது போன்ற ஓசை. ராஜு எழுந்துபோய்க் கதவைத் திறந்தான்.

''மோகினி!''

அவளை நேருக்கு நேர் சந்தித்துவிட்ட அநுபவம் அவனைத் திக்குமுக்காடச் செய்தது.

''உள்ளே வாருங்கள்.''

''மிஸஸ் தங்கம்?...'' என்று கேள்வியைப் புருவத்தில் உயர்த்திக் காட்டினாள் மோகினி. கேள்விச் சுமையினால் கண்ணிமைகள் கொஞ்சம் படபடத்தன.

''லேடி ரோட் போயிருக்கிறாள்... வந்துவிடுவாள்... உள்ளே வாருங்கள்.'' தன்னுடைய தைரியம் அவனுக்கு ஆச்சர்யத்தைத் தந்தது.

மோகினி உள்ளே வந்தாள்.

அவள் நெற்றியில் வியர்வை அரும்பு கட்டியிருந்தது. அவள் சோபாவில் உட்கார்ந்ததும் மின்விசிறியை வேகமாகப் போட்டான் ராஜு.

''தாங்க்ஸ்'' என்று தலையசைத்த மோகினி, விரித்துக் கொண்டிருந்த கைக்குட்டையை எடுத்துக் கைப்பையில் வைத்தாள். கைப்பை, 'க்ளிக்' என்ற சப்தத்துடன் மூடிக் கொண்டது.

காலையில் உடுத்தியிருந்த 'காஞ்சிபுரம் இல்லை. பச்சை நிற நைலக்ஸ் புடவை. கருப்பு நிற 'ஸ்லீவ்லெஸ்'. கூந்தலை ஒரு வாகுவமான அலட்சியத்துடன் அள்ளி முடித்திருந்தாள்.

நீண்ட பெரிய கண்கள் எப்பொழுதும் ஒளி வீசக் காரணம்? அவள் புன்னகை செய்யாத நேரமேயில்லை!

''மிஸஸ் தங்கம் வர நேரமாகுமா?''

''இல்லை.... வந்துவிடுவாள். காப்பி சாப்பிடும் நேரமாகிவிட்டது. காப்பி தயாரிக்க வருவதாகத்தான் சொல்லிச் சென்றாள்.''

''எனக்குக் காப்பி போட வராது. இல்லாவிட்டால் போட்டுத் தந்திருப்பேன்....'' என்றாள் மோகினி.

''மன்னிக்கவும். எனக்கும் தெரியாது. விருந்தினர்களை உபசரிக்கவாவது இதைக் கற்றுக் கொண்டிருக்க வேண்டுமென்று உணர்கிறேன்.''

''நீங்கள் ஒரு மோசமான கணவர். மிஸஸ் தங்கத்துக்கு என் அநுதாபங்கள்'' என்று சொல்லி விட்டுச் சிரித்தாள் மோகினி. பார்க்கிறவர்கள் முகத்தில் தூய்மையை வாரி இறைக்கும் வெண்மையான பற்கள்.

இரண்டு நிமிஷப் பழக்கத்திலேயே அவள் அதிக உரிமை எடுத்துக் கொண்டு விட்டாள் என்று தோன்றியது ராஜுவுக்கு. ஒருவேளை தங்கம் தன்னைப் பற்றி இவளிடம் அடிக்கடி விவாதித்துக் கொண்டிருப்பாளோ?

அவன் ஜன்னலருகே போய் நின்றான். கண்ணுக்கெட்டின தூரம் வரையில் ஜன நடமாட்டமில்லை. லேடி ரோட் போனாலும் தங்கம் சாதாரணமாக நடந்து தான் வருவாள். இன்னும் ஏன் வரக் காணோம்?

வானம் இருண்டு கொண்டு வந்தது. அங்குமிங்கும் ஒளியின் கீறல். மழை பெய்யப் போகிறது. தங்கம் ஆட்டோ ரிக்ஷாவில் வந்தாலும் வரலாம்.

''நான் விளையாட்டுக்குச் சொன்னேன். கோபமா உங்களுக்கு?'' என்று கேட்டாள் மோகினி. சொற்கள் கவிதையாக இழைந்தன.

''கோபம் ஒன்றுமில்லையே! தங்கம் வருகிறாளாவென்று பார்த்தேன்...''

''ஓ!'' என்றாள் மோகினி. சோபாவிலிருந்து ஒரு பக்கமாக ஒருக்களித்துக் கழுத்தின் வெண்மை தெரிய அவள் இதைச் சொல்லும்போது, உலகத்து இன்பமெல்லாம் இந்த ஓரெழுத்தில் அடங்கிவிட்டது போல் ராஜுவுக்குத் தோன்றியது.

சோபாவின் பின்புறமிருந்த 'டைனிங் டேபிள்'ல் காணப்பட்ட ஒரு 'பெண்கள் பத்திரிகை' மீது அவள் பார்வை சென்றது. ராஜு அதை எடுத்து அவள் கையில் கொடுத்தான்.

''மின்விசிறியின் வேகத்தைக் கொஞ்சம் குறைக்கிறீர்களா?'' என்றாள் மோகினி.

மின்விசிறியின் வேகத்தைக் குறைத்து விட்டுத் திரும்பிய ராஜுவின் கண்களுக்கு எதிரே இருந்த பீரோவின் நிலைக்கண்ணாடி தெரிந்தது.

சோபாவின் பின்புறமாக அவன் நின்றுகொண்டிருந்தான். அவள் சோபாவில் உட்கார்ந்து கொண்டு கையிலிருந்த பத்திரிகையின் பக்கங்களைப் புரட்டிக் கொண்டிருக்கும் சப்தம் மட்டும் கேட்டது.

நிலைக்கண்ணாடியில் இந்தத் தோற்றத்தைக் கண்ட ராஜுவின் உடம்பில் ஓர் ஆவேசம் புகுந்து கொண்டது.

அவள் கழுத்திலிருந்து முதுகு வரை வெறும் வெட்ட வெளியில், இளமையின் பசுமை அறுவடையாய்க் கிடந்தது. 'பாக்லெஸ்' ரவிக்கை. தொட்டுப் பார்க்க வேண்டுமென்ற எம வெறி.

தன்னைக் கண்டால் எல்லோருக்கும் இளப்பம். மனைவி வாய் விட்டுச் சொல்லாமலே உதாசீனம் செய்கிறாள். 'நீங்கள் ஒரு மோசமான கணவர், மிஸஸ் தங்கத்துக்கு என் அநுதாபங்கள்' என்று மோகினி சொல்லக் காரணமென்ன? நான் வெறும் ஜடம், கோழை, பலஹீனமானவன்... இல்லை...இல்லை...

இருண்டு வந்த மேகங்கள் ஒன்றுகூடி இடித்தன. மோகினி ஜன்னலுக்கு வெளியே நோக்கினாள். அவள் பார்வையின் பிரதிபலிப்பாக வானத்தில் மின்னல் இழைகள்... உலகத்தில் எல்லாமே செத்து மறையத் தானும் மோகினியும் மட்டும்தான் அந்த அறை நிறைந்த உலகத்தில் தனித்து இருக்கிறோமென்ற நினைவு. அந்தக் கணத்தின் நிரந்தர உண்மையாய் அது அவன் உடம்பை மின்சாரமாய்த் தாக்கிற்று.

மந்திரத்தால் கட்டுண்ட நாகம்போல் சோபாவை நோக்கி நடந்தான் ராஜு.

ஜன்னலருகே தள்ளப்பட்டபோது தான் என்ன நடந்திருக்க வேண்டுமென்பதை அவன் உணர்ந்தான். மோகினியின் முகத்தில் கோபமில்லை, வேதனை தான்.

''உங்கள் மனைவி உங்களைப் பற்றிக் கொண்டிருக்கும் அபிப்பிராயத்துக்கு அருகதையுடையவராய் இருங்கள். நான் வருகிறேன்...''

மோகினி போய்விட்டாள். வெளியே மழை பெய்து கொண்டிருந்தது.

வாசற் கதவைத் தாளிட்டுக்கொண்டு வந்த ராஜு கட்டிலில் 'தொப்'பென்று விழுந்தான். அழவேண்டுமென்று நினைத்தான். அழுகை வரவில்லை. 'மனிதனுயிருந்தவளை, வெறும் சதைப் பிண்டமாய் உருட்டிப் போட்டுவிட்டாள் மோகினி. ஆம்! நான் வெறும் ஜடம், கோழை, பலஹீனமானவன்...' அவன் கண்களை மூடினான்.

'டக் டக் டக்' யாரோ வாசற் கதவைத் தட்டுவது போன்ற ஓசை. பிரமையோ? பிரமையில்லை. யாரோ தான் தட்டுகிறார்கள்.

அப்படியானால், சற்று முன் நடந்ததெல்லாம் கனவோ?

வாசலிலிருந்து தங்கம் குரல் கொடுக்கிறாள். ராஜு எழுந்து போய்க் கதவைத் திறந்தான்.

''ஆட்டோ ரிக்ஷாவில் வந்தியா?'' என்று கேட்டான் அவன்.

''எதுக்கு ஆட்டோ ரிக்ஷா? நடந்து தான் வந்தேன்.''

''மழை பெய்யலே?''

''மழையா? எங்கே மழை? இங்கே மழை பெஞ்சுதா?''

ராஜு பதில் கூறாமல் உள்ளே வந்தான். அவனுக்கு ஒரே குழப்பமாக இருந்தது. வெளியே ஜூலை மாதத்து வெய்யில் உக்கிரமாய்க் காய்ந்தது.

''மோகினி வந்தாளா?'' என்று கேட்டாள் தங்கம்.

ராஜு திகைப்புடன் அவளைப் பார்த்தான்.

''அவ பேரைச் சொன்னாலே உங்களுக்கு ஏன் இவ்வளவு பயம்?'' என்று கேட்டாள் தங்கம்.

''நீ எதுக்காக அந்தக் கேள்வியை இப்போ கேட்டே?''

''வரேன்னு சொல்லி இருந்தா. லேடி ரோட் போனப்புறம்தான் ஞாபகம் வந்தது.''

''லேடி ரோட் போயிட்டு வரவா உனக்கு இத்தனை நேரம்?''

''கிரோம்பாக் போனேன்.''

''அப்படின்னு கிரோம்பாக்கிலே மழை பெஞ்சிருக்காது. இங்கே நல்ல மழை!''

''மழை பெஞ்ச அடையாளமே தெரியலியே...''

''கவடு தெரியாமெ மறைஞ்சு போச்சு?''

வாசற் கதவை யாரோ தட்டும் சப்தம். தங்கம் போய்த் திறந்தாள்.

மோகினி!... ராஜுவின் இருதயம் வேகமாக அடித்துக்கொண்டது.

''நமஸ்தே...'' மோகினி முறுவலித்தாள். காலையில் கட்டியிருந்த 'காஞ்சீவரம்'; நெற்றியில் திலகம். மகாலட்சுமி வேஷமில்லை, மகாலட்சுமியே தான்...''

ராஜு எழுந்து சென்று மின்விசிறியை வேகமாகப் போட்டான்.

''தாங்க்ஸ்'' என்றாள் மோகினி.

''நீங்க அவரோட கொஞ்சம் பேசிண்டிருங்கோ. காப்பி போட்டுண்டு வரேன். பொம்மனாட்டியோட பேசப் பயந்துண்டு பயந்துண்டு பாரதப் பண்பாட்டை நீங்க காப்பாத்த வேணும்...'' என்று கூறிக்கொண்டே உள்ளே சென்றாள் தங்கம்.

தங்கம் இயல்பாகக் கூறினாளா அல்லது... அல்லது... ராஜுவின் குழப்பம் இன்னும் தீரவில்லை.

# எவன் எங்கும் பரந்துளனாய்

## 'மகரிஷி'

மங்கிய நிலவொளி! ஒருவித சடை மாட்டின் ரோமத்தினாலும் அதன் தோலினாலும் அமைக்கப் பட்டிருந்த கூடாரம் அது. வேங்கடராமன் தான் படித்துக் கொண்டிருந்த யாத்திரை சம்பந்தமான புத்தகத்தை அருகில் மூடி வைத்தபோது அவனுடைய செவியில் கூடாரத்துக்கு வெளியிலிருந்து ஒலித்த வயலினின் இனிய நாத அலை வந்து மோதியது.

கூடாரத்துக்கு வெளியே உட்கார்ந்து பிரபாகர்தான் அதை வாசிப்பது.

வெறும் காலுறையோடு மட்டுமிருந்த பாதத்தை அருகில் கிடந்த பூட்ஸுக்குள் நுழைத்துக் கொண்டு எழுந்து வெளியே வந்தான். சில்லெனப் பனிக் காற்று முகத்தைக் குத்தியது. இந்த அபூர்வமான இயற்கை வெளியிலே இவர் வாசிப்பு எவ்வளவு இனிமையாக இருக்கிறது. எங்கு திரும்பினாலும் மலைக் குன்றுகள். எதிரேயும் அருகேயும் எங்கிலும் குறுக்கு நெடுக்காக ஓடும் நதிகள். கூடாரத்தை ஒட்டி ஆற்றோரங்களில், நிமிர்ந்து நிற்கும் தேவதாரு போன்ற மரங்கள். இந்தப் பிரபஞ்சமே இயற்கை வழங்கும் நாத அலைகளும் கொண்ட ஒரு கலப்புத்தானோ என்று எண்ணுமளவுக்கு இருந்தது.

வெளித் தாழ்வாரத்தில் பிரபாகர் வயலின் வாசித்துக் கொண்டிருந்தான். ஆட்டு ரோமத்தினால் நெய்யப்பட்டிருந்த கனமான கம்பளிச் சால்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டே பேராசிரியர் பிரபாகர் அருகில் வந்து நின்றான் வேங்கடராமன்.

தடிமனான உல்லன் சட்டை அணிந்து, தலைக்கு மப்ளரை இறுகக் கட்டிக் கொண்டு விடுதிச் சார்ப்பின் மரத் தூணில் சாய்ந்தவண்ணம் எதிரே தெரியும் கயிலை மலையில் பார்வையை லயிக்க விட்டுக் கொண்டு ராக லயத்துடன் அமர்ந்திருந்தான் பிரபாகர்.

''குளிரவில்லையா உங்களுக்கு?''

பிரபாகரிடமிருந்து பதிலே இல்லை. கேள்வியைக் காதில் வாங்கிக் கொண்டதற்கு அடையாளமாகப் புன்னகை மட்டும் செய்தான்.

'' இந்தப் பனியிலும் குளிரிலும் இப்படி வெளியே உட்கார்ந்து கொண்டு வாசிக்கிறீர்களே !

வயலின் கம்பி மேல் சுறுசுறுப்புடன் ஓடிக் கொண்டிருந்த 'போ'வை எடுத்தான் பிரபாகர்.

ஒலி நின்றது.

''ராக லயத்தில் குளிர் எங்கே தெரிகிறது?'' என்று சொல்லிக் கொண்டே பிடிலை அருகில் வைத்து விட்டுக் கைவிரல்களை ஒன்றுக்குள் ஒன்றைக் கோத்து நெட்டி முறித்தான்.

பிரபாகரனுக்கு அருகில் இருந்த பிடிலையும், அதன் 'போ'வையும் கையி லெடுத்துக் கொண்டான் வேங்கடராமன்.

''வாருங்கள். உள்ளே போகலாம். இரண்டு நாட்களாகப் பனிக் காற்று ரொம்ப வேகமாக வீசுகிறது. இக்காற்று இங்கே நிரந்தரமாகத் தங்கியிருப்பவர்களுக்கே ஒத்துக் கொள்வதில்லையாம். யாத்திரைக்காக வந்த நமக்கு இது ஒத்துக்கொள்ளாது.''

வேங்கடராமனின் முழங்கையைப் பற்றிக் கொண்டு பிரபாகர் எழுந்தான். வெளியே கூடாரத்தின் சார்ப்பில் தொங்கிக் கொண்டிருந்த கரியேறிய விளக்குடன் இருவரும் கூடாரத்தினுள் வந்து விட்டனர். பனி மழையில் சடைமாட்டு ரோமத்தால் வேயப்பட்டிருந்த கூடாரத்தின் ஈர நெடி அவ்வளவு எளிதில் சகிக்கக் கூடியதாக இல்லை.

தன்னைப் போலப் பேராசிரியர் பிரபாகர் குளிரால் அவ்வளவு அதிகம் பாதிக்கப்படாததைக் கண்டு வேங்கடராமன் தனக்குள் வியந்து கொண்டான்.

நல்ல கட்டுமானமான தேகம். எதையும் தாங்கிக் கொள்ளும் உடம்பு வாகு. முகமும், உடம்பும், கைகளும், கால்களும் அந்த வளர்ச்சியோடு ஒத்திருந்தன. ஒரு தீவிர பிரம்மச்சாரியின் சாயல் கண்களிலே. காலுறைகூட அணியாமல் கம்பளி உடையோடு மட்டும் நின்று கொண்டிருந்தான் பிரபாகர்.

வேங்கடராமனுக்குக் கைலாய யாத்திரையின் நடுவில் சேர்ந்த வழித்துணை பேராசிரியர் பிரபாகர். வெவ்வேறு திசைகளிலிருந்து யாத்திரை புறப்பட்ட இவர்களை மொழி இணைத்துவிட்டது. இருவரும் தமிழர்கள். வேங்கடராமன் ஒரு மத ஸ்தாபனத்தின் இளம் தலைவர். அந்த ஸ்தாபனம் இரண்டாண்டுகளுக்கு ஒரு தடவை இப்படி அதன் புதிய தலைவர்களைக் கைலாய யாத்திரைக்குப் போகப் போதிய வசதிகளைச் செய்து கொடுத்து அனுப்புகிறது.

இந்தக் கைலாய யாத்திரையில் பேராசிரியர் பிரபாகரின் நடவடிக்கைகள் ஒவ்வொன்றையும் அருகிலிருந்து கவனித்து வருவதால் அவரிடம் ஒரு தீவிரமான பிடிப்பு விழுந்து விட்டது வேங்கடராமனுக்கு.

''அங்கே இருளில் எதைத் தேடுகிறீர்கள் ?''

கூடாரத்தின் சாளரத்தின் வழியே இருள்வெளியில் எதையோ பார்த்துக் கொண்டு நின்ற பிரபாகரனைப் பார்த்துக் கேட்டான் வேங்கடராமன்.

திரும்பிய நிலையிலேயே பிரபாகரன் சிரித்ததால் அவன் உடம்பு ஒரு முறை குலுங்கியது.

''வெளிச்சத்திலேயே நம்மால் எதையும் தெரிந்துகொள்ள முடியவில்லையே, இருளில் என்ன தெரியப் போகிறது?''

''இப்போது வாசித்தீர்களே, பிருந்தாவன சாரங்கா ராகம், இதை அடிக்கடி நீங்கள் வாசிக்கிறீர்களே. உங்களுக்குப் பிடித்தமான ராகமோ இது?''

''என்னுடைய அக்காவுக்குப் பிடித்தமான ராகம். இந்த யாத்திரையில் அவள் நினைவு அடிக்கடி வருகிறது. அவள் நினைவு வரும்போதெல்லாம் வாசிக்கிறேன்'' என்றவன், ''உங்களுக்கு வியப்பாக இருக்கிறது இல்லையா? என் அக்கா என்றவுடன் என் உடம்பு சிலிர்க்கிறது வேங்கடராமன். அவள் அப்படிப்பட்டவள். அவள் மற்ற பெண்களைப் போல் சாதாரண மனோபாவங்களோடு அலைமோதுகிற பெண் அல்ல. அசாதாரணமானவள். சுருங்கச் சொன்னால் சம்சாரத் துறவி !''

அவர்கள் கூடாரம் ஒரு நதிக்கரையில் கொஞ்சம் தள்ளி உள்ளே இருந்ததால் இரவு அதன் சத்தம் கேட்டுக் கொண்டேயிருந்தது.

வேங்கடராமன் பிரபாகரனின் முதுகையே பார்த்துக் கொண்டிருந்தான். தொடர்ந்து பிரபாகரிடமிருந்து இன்னும் நிறைய விஷயங்களைக் கேட்கும் ஆர்வம் அவன் பார்வையில் இருந்ததை அந்த நிலையில் நின்று கொண்டிருந்த பிரபாகர் திரும்பிப் பார்த்த போது புரிந்து கொண்டான்.

''சுவாரசியமாகவே இருக்கும். கேட்கிறீர்களா?'' என்றான் பிரபாகர்.

''எனக்குச் சுவாரசியம்கூடத் தேவையில்லை. அதில் ஆழமிருக்கும் போலத் தோன்றுகிறது. அதனால்தான் கேட்க வேண்டும் என்ற ஆர்வம்!''

''ஆமாம் நிறைய உண்டு. அற்புதமான மனோபாவமொன்றை நீங்கள் தெரிந்து கொள்ளலாம்'' என்று கூறிய பிரபாகரன் எந்தவித முன்னுரையும் இல்லாமல் கதையைத் தொடங்கி விட்டான்.



வெளியே காளி
கங்கை யாற்றின் உறு
மல் சத்தம் காற்றோடு
கலந்து அது அந்த விடுதிச்
சாளரத்தின் வழியே உள்ளே
வரும் போது பாம்பின் சீறல் போல்
ஒலி எழுப்பிக்கொண்டு வந்தது.

ஃ ஃ ஃ

**வி**வாகமே செய்துகொள்ளக் கூடாது என்ற திடமான முடிவோடு இருந்த நான் ஒருநாள் என் முடிவையெல்லாம் தூக்கி யெறிந்து விட்டு ஒருத்தியை மணந்து கொண்டேன். முன்பின் அதிகப் பரிச்சயமில்லாத வள் அவள். என்னுடைய அக்காவுக்குத் தெரிந்த பெண். ஏழைக் குடும்பம் அவளுடையது. எனக்குக் காதல் போன்ற விஷயங்களில் எல்லாம் அதிக நம்பிக்கை கிடையாது. எனது வாழ்க்கையி லாகட்டும், பிறர் வாழ்க்கையிலாகட்டும். காதல் என்கிற விவகாரம் வந்தாலே எனக்கு அவை பிடிப்பதில்லை. அவை வெறும் 'ஃபேஷன்' என்பது நான் என் துணிவு. ஆத்மார்த்தமான காதல் அன்பு என்பதெல்லாம் மனித இனம் தானாக உற்பத்திசெய்து தன்னைத்தானே ஏமாற்றிக்கொள்ளும் பைத்தியக்காரத்தனங்கள்.

நான் விவாகம் செய்துகொண்ட அந்த ஏழைப் பெண்ணின் பெயர் பிரேமா. பெயர் தான் பிரேமை சொரூபமாகத் தோன்றுகிறதேயன்றி அவளுடைய மனோபாவம் பேயின் மறு துருவம் என்றுதான் சொல்ல வேண்டும். விவாகத்துக்குமுன் எந்த ஆசாபாசத்தோடும் அலை மோதாத நான் பிரேமாவை மணந்தவுடன் அவள்மேல் என் பூரணமான அன்பைப் பொழியத்

துடித்துக் கொண்டிருந்தேன். ஆனால்.. அவனோ..?

ஃ ஃ ஃ

வசதி மிக்க குடும்பத்தில் பிறந்தவன் நான். தாய் தந்தையை இழந்த நிலையில் இருந்த என்னைச் சிறுவனாக இருந்தபோதே எடுத்து வளர்த்து ஆளாக்கும் பொறுப்பு என் விதவைச் சகோதரிக்கு வந்து விட்டது.

நான் என் சகோதரியின் அரவணைப்பிலே வளர்ந்தேன்.

என்னை வளர்த்து ஆளாக்கும் என்னுடைய அக்கா ஒரு சம்சாரத் துறவி. பந்தத்தில் இருந்து கொண்டே சன்மார்க்க நியமங்களை அனுஷ்டிப்பவள். பரமஹம்ஸரைப் பற்றியும், விவேகானந்தரைப் பற்றியும், அன்னை சாரதா தேவியைப் பற்றியும் சதா படித்துக் கொண்டிருப்பாள். வாழ்க்கை என்ற இந்த முப்பட்டைக் கண்ணாடியை எப்பொழுதும் புன்முறுவலுடன் நோக்குகிற 'சாது' அவள். இந்த வாழ்க்கையில் ஜொலிக்கிற ஜாலங்கள் எல்லாம் எவ்வளவு அற்பத்தனமானவை என்பது அவளுக்குத் தெரியும். அவ்வளவு தீவிரமான பக்தியுள்ளம் அவளுடையது.

எனக்கு நினைவு தெரிந்த நாளாக நான் அவளுடைய அரவணைப்பில் வளர்கிறேன். உண்ணுவது அவள் கையால், உறங்குவது அவள் பாடுகிற அபூர்வமான பக்திரஸப் பாட்டின் இனிமையில். பள்ளிக்கூடம் சென்ற நேரம் போக அவள் அருகில் அமர்ந்து என் பாடங்களையும் படிப்பேன். சில நாட்களில் அவள் படிக்கிற வேதாந்த விசாரணைகளைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருப்பேன். நான் அவைகளைக் கவனமாகக் ரசிக்கிறேன் என்பதைக் கவனிக்கும்போது என்னைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே இன்னும் சற்று விளக்கமாக, எனக்காக வாசிப்பவள் போல் நிறுத்தி வாசிப்பாள். என் உள்ளம் இந்த வழியில் தீவிரமாகத் திரும்பியிருக்கிறது என்பதை உணராத நிலையிலோ அல்லது சிறுவன் தானே என்று கொஞ்சம் அசுவாரசியமாக நினைத்து விட்டதாலோதான் எனது மனோபாவத்தை அணுகி வந்து அக்கா பார்க்கவில்லை. அக்காவின் அந்த அசுவாரசியம்தான் என் மனம் விகசிக்க இடம் தந்து விட்டது.

என் உள்ளம் அக்காவைப் போலவே தீவிரமடைந்து ஒரு பக்தி நிலையில் முதிர்ப்பை நோக்கி நடந்து கொண்டிருந்தது. காலத்துடன் ஒன்றியும் ஒன்றாமலும் வாழுகிற அக்காவைப் பார்க்கும் போதெல்லாம் எனக்கும் அக்காவைப் பின்பற்ற வேண்டும் என்ற ஆசை வேரூன்றி விட்டது. நாளாவட்டத்தில் அந்த ஆசை ஓர் அசாதாரணமான நிலையில் என் உள்ளத்தில் நிலை கொள்ளத் தொடங்கியபோது அக்காவுடன் சேர்ந்து நானும் பஜனையில் ஈடுபடுவேன். பக்திப் பாடல்களை அக்காவுடன் சேர்ந்து பாடுவேன். சில நாட்களில் அக்காவைவிட அதிகமான நேரம் தியானத்தில் அமர்ந்திருப்பேன். ஆரம்ப நாட்களில் இதையெல்லாம் பரிகாசமாக எடுத்துக் கொண்டு என்னைக் கேலி செய்வாள். ''உனக்கு எதற்குடா இதெல்லாம்? அதற்குள் நீ இப்படியாக வேண்டாம். ஒழுங்காக உட்கார்ந்து கல்லூரிப் பாடங்களைப் படி'' என்பாள்.



அப்பொழுது நான் கல்லூரியில் பி. ஏ. கடைசி வருஷம். பைரனையும், ஷேக்ஸ்பியரையும், ஷெல்லியையும் மாணவர்கள் உருப் போட்டுக் கொண்டிருப்பார்கள். நானோ தத்துவ ஞானிகளின் வாழ்க்கை வரலாறுகளைப் படிப்பதில் மூழ்கியிருப்பேன். 'சமயம் ஒரு போதை' என்று கிரிஷ் கோஷ் சொன்னது சரிதானா? அன்பு வாயால் பேசாது என்று குருதேவர் பரமஹம்ஸர் சொன்னதின் அர்த்தம் என்ன?—இவ்வாறு அக்காவுடன் பிரமாதமாகத் தர்க்கம் செய்து கொண்டிருப்பேன்.

ஒரு நாள்.

அன்று நான் கல்லூரியிலிருந்து வீட்டுக்கு வந்தபோது நேரம் அதிகமாகி விட்டது. நான் வந்தது கூடத் தெரியாமல் அக்கா குருதேவர் பரமஹம்ஸரின் படத்துக்குமுன் உட்கார்ந்து கண் மூடித் தியானத்தில் இருந்தாள். ரொம்ப நேரம் வரை அக்காவின் தியான நிலை கலையவேயில்லை. நான் அருகில் வந்து நின்றவுடன் கண்களைத் திறந்த அக்காவைப் பார்த்தவுடன் அவளைக் கேலி செய்ய வேண்டும்போல் இருந்தது.

''துயரத்துக்கோ, நரகத்துக்கோ அஞ்சிக் கடவுளிடம் நம்பிக்கை வைப்பது ஒரு கோழைத்தனம்'' என்றேன். நான் அவளைக் கேலி செய்கிறேன் என்பதைப் புரிந்து கொண்டவள், ''இது யார் சொன்ன பொன்மொழி? உருப்போட்டு வைத்திருக்கிறாய்!'' என்றாள்.

''எங்கே, நீதான் சொல்லேன், பார்க்கலாம். நீதான் பெரிய வேதாந்தியாயிற்றே !'' என்றேன் நான்.

''சுரேந்திரர்.''

''இல்லை.''

''ம, என்ற மகேந்திரர் ?''

''இல்லை.''

''நாக் மகாசயர் ?''

''உ.....ஹூம்!''

''கிரிஷ் கோஷ்?''

''இல்லை, இல்லை.''

''யார்தான் சொன்னது? சொல்லேன். எனக்குச் சரியாக நினைவில் இல்லை.''

''மொழியமுதம் என்ற புஸ்தகத்தில் எண்பத்தி நான்காம் பக்கத்தில் கடைசி வரிகள். சொன்னது விவேகானந்தர்'' என்றேன் பெருமையுடன்.

அக்கா அசந்தே போய் விட்டாள்.

பிரபாகர் உற்சாகமாகக் கதையைச் சொல்லிக் கொண்டிருந்தான். விடுதிச் சாளரத்தின் வழியே உள்ளே வந்த காற்று முகத்தில் படும்போது பனி வெடித்த உதடுகளில் எரிச்சலைக் கொடுத்தது வேங்கடராமனுக்கு. போட்டுக் கொண்டிருந்த தடிமனான கம்பளிச் சட்டையை இன்னும் சற்றே இறுக்கிறாற்போல் போட்டுக்கொண்டே நிமிர்ந்து உட்கார்ந்தான் அவன்.

பிரபாகர் மீண்டும் தொடர்ந்தான்.

அக்காவுக்கு எனது கல்லூரித் தேர்வு விஷயம் கவனத்துக்கு வந்தது. எனது படிப்பில் கவனத்தைச் செலுத்தும்படி

---

தூண்டினாள். தத்துவ விசாரணையெல்லாம் வாழ்க்கையில் படித்து முன்னேறி ஒரு ஸ்திரம் பெற்று, தனக்கென ஒரு வாழ்க்கையை அமைத்துக் கொண்டபின் வைத்துக் கொள்ளலாம் என்று கொஞ்சம் கண்டிப்பாகவே சொல்லி விட்டாள். இரவு வெகு நேரம் வரையில் என்னுடன் விழித்துக் கொண்டிருப்பாள். நான் படித்து முடிக்கும் வரை அவளும் ஏதேனும் அவளுக்குப் பிடித்தமான புத்தகத்துடன் என்னுடன் அமர்ந்து என்னுடைய சலிப்பைப் போக்குவாள். விடியற்காலங்களில் எழுந்து ஆவி பறக்கும் சூடான காப்பியுடன் என்னைப் படிக்க எழுப்புவாள்.

அக்காவின் இடைவராத தூண்டுதலாலும், உற்சாகத்தாலும் எனது பி. ஏ. டிகிரியைச் சுலபமாகப் பெற்று அதற்கு மேல் எம். ஏ.யும் போனேன். என்னுடைய சகோதரி எனக்கு அக்கா மட்டுமல்ல. தாய், குரு, தோழி எல்லாம் அவள்தான். அவள் சிந்தனை, செயல் எல்லாம் ஒரு பாதி பற்றற்ற தன்மையின் விபரீதத்திலே மிதந்தாலும் ஒரு பாதி என் மீது கொண்ட பற்றின் விளிம்பிலே ஒரு தாயாரின் தன்மையுடன் இயங்கிக் கொண்டிருந்தது.

அவள் எதிர்பார்த்தபடியே நான் எனது வாழ்க்கையில் ஒரு ஸ்திரத் தன்மையை நோக்கி வந்துவிட்டேன். நான் அவள் விருப்பப்படியே ஒரு கல்லூரியில் விரிவுரையாளராகவும் சேர்ந்தேன். மாதச் சம்பளத்தில் ஒரு தொகை ஏழைகளுக்கென்றும், ஏழைக் குழந்தைகளுக்குப் பால் வழங்குவதற்கென்றும் அவள் விருப்பப்படியே ராமகிருஷ்ண மடத்துக்கு வழங்கினேன். உண்மையான ஆத்ம திருப்தி என்பது எங்கே எப்படி இருக்கிறது என்பதை நான் அப்பொழுதுதான் உணர்ந்தேன். இப்படி ஒருவருக்கொருவர் அளவற்ற பாசபந்தத்தோடு அவள் விருப்பம் என் விருப்பமாகவும், என் விருப்பம் அவள் விருப்பமாகவும் உணர்ந்து வாஞ்சையின் பரிவர்த்தனையில் ஒருவரையொருவர் நன்கு உணர்ந்தே வாழ்ந்தோம். அப்பொழுதெல்லாம் அக்கா அடிக்கடி சொல்லுவாள், ஒரு கட்டுப்பாடான நியமமே துறவுக்குச் சமம்தான் என்று. இப்படி எல்லா வகையிலும் என் நலத்தின் மேல் அக்கறை கொண்டு என்னைக் காத்து வளர்த்தவளின் சொல்லை ஒரே ஒரு விஷயத்தில் என்னால் ஏற்க முடியவில்லை.

என் இன்ப துன்பங்களில் அக்காவுக்கு எத்தனை அக்கறை உண்டோ, அத்தனை அக்கறையும் அவள் மேல் எனக்கு உண்டு. அவள் ஆசைகளையும், கட்டளைகளையும், அபிலாஷைகளையும் நிறைவேற்றக் கடமைப்பட்டவன் நான்.

ஆனால்... அந்த ஒரு விஷயத்தில் நான் அவள் வார்த்தையை ஏற்க முடியாமல் தடுமாறினேன்.''

**க**தை சொல்லிக் கொண்டு வந்த பிரபாகரின் கண்கள் உறக்கத்தால் இலேசாக மூடிக் கொண்டன.

''அசதியாக இருக்கிறதா?'' என்று வேங்கடராமன் கேட்டான்.

தலையைமட்டும் இலேசாக ஆட்டினான்.

''சரி, உறங்குங்கள். மீதியை நாளை நம்முடைய பயணத்தின்போது கேட்டுக் கொள்கிறேன்.''

பிரபாகர் நன்றியுடன் வேங்கடராமனைப் பார்த்தான். பிறகு அவர்களிடையே சம்பாஷணை இல்லை.

இரவு அமைதியுடன் கழிந்தது.

அடுத்த நாள் அவர்கள் யாத்திரைப் பயணத்தின் அடுத்த கட்டம் தொடரப் போவதால் காலையில் எழுந்தவுடனேயே அதற்கான ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினர். உடைமைகளைச் சரி பார்த்துக் கட்டிக் கொண்டனர். அவர்களுடன் சேர்ந்து வந்தவர்கள் அடுத்தடுத்த கூடாரங்களில் இருந்தனர். விடிந்தவுடன் மற்ற கூடாரங்களில் உள்ளவர்கள் ஒவ்வொருவராக வந்து தங்களது பிரயாணத்தைப் பற்றிய திட்டங்களைக் கூறிவிட்டுச் சென்றனர். ஆனால் திடீரென்று பிற்பகலுக்கு மேல் எங்கோ உருவான பனிப் புயல் அவர்கள் பிரயாணத்தைத் தடை போட்டுவிட்டது. அவர்கள் தொடர்ந்து செல்லவிருக்கிற பாதையில் காலையிலிருந்தே பனிப் புயல் வீசுவதையும், அப்புயல் நீங்க ஒன்றிரண்டு நாட்கள் ஆகலாம் என்றும், அதன்பின் பிரயாணம் தொடர்வதே நல்லது என்றும் அந்தப் பக்கங்களிலிருந்து வந்து கொண்டிருந்த யாத்திரிகர்கள் கூறிவிடவே கட்டிய பிரயாண மூட்டைகளை அவிழ்க்க வேண்டியதாகி விட்டது.

**மா**லை நேரம்.

வேங்கடராமனும் பிரபாகரனும் ஆற்றங்கரை ஓரமாக நடந்து வந்து கொண்டிருந்தனர். அவர்கள் கூடாரம் அருகில்தான் இருந்தது.

வட திசையிலிருந்து சிந்து நதியும் கிழக்குத் திசையிலிருந்து பிரம்மபுத்திராவும் தெற்கிலிருந்து கங்கையின் உபநதியான சட்லெஜும் இப்படிப் பெருமையோடும் மகாநதியின் ஜீவக் கலையான மானச சரோவரக் கரையில் பேசிக்கொண்டே நடப்பது ஒரு காவிய அநுபவமாகவே இருந்தது இருவருக்கும். எங்கு திரும்பினாலும் மலைக் குன்றுகள். பாசி படர்ந்தாற்போல் மலைப் பிராந்திய மரங்கள். பசிய புல்வெளியிலெல்லாம் மெதுவாகப் பனி உதிர்ந்து கொண்டிருந்தது. எங்கோ அடிக்கும் பனிப் புயலின் வேகம் அங்கேயும் இலேசாகத் தெரிந்தது. மாலை நேரமானதால் மானச சரோவரக் கரையில் பக்தர்கள் வளர்த்திருந்த அக்னியிலிருந்து வெளிப்பட்ட புகையும், அதன் ஒளியும் ஆங்காங்கு கண்ணிலே பட, ஆடு மாடுகளைத் திரும்பப் பட்டிக்கு ஓட்டிச் செல்லும் திபேத்தியர்களின் நாட்டுப் பாடல்களுக்கு இடையிடையே பக்தர் கூட்டத்திலிருந்து தொனிக்கும் வேத உச்சாடனம்.

''**உ**ங்கள் அக்கா சொன்ன ஒரு விஷயத்தை உங்களால் ஏற்க முடியவில்லை என்றீர்களே, அதிலிருந்து தொடர வேண்டும்'' என்று வேங்கடராமன் அடியெடுத்துக் கொடுத்தான். அந்தக் கதையைக் கேட்க இருக்கிற ஆர்வம் அவனுக்கல்லவா தெரியும்?

பிரபாகர் சிரித்துக் கொண்டே தொடர்ந்தான்.

அன்று மெதுவாக அக்கா என் விவாகம் பற்றிப் பேச்சை எடுத்தாள்.

''உனக்கொரு பெண் பார்த்திருக்கிறேன்'' என்றாள்.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது.

''இதோ பார்!'' என்று கூறி உள்ளே சென்றவள் வரும்போது ஒரு பெண்ணின் போட்டோவுடன் வந்து அதை என்னிடம் நீட்டினாள்.

அக்கா நீட்டிய போட்டோவை நான் பார்க்கவில்லை. நிமிர்ந்து அவள் முகத்

தையே பார்த்துக் கொண்டிருந்தேன். என் பார்வையைக் கண்டு அவள் அதிர்ந்து போயிருக்க வேண்டும். "ஏன் கல்யாணம் என்றவுடன் துரைக்கு இவ்வளவு பயம் வரவேண்டும்?" என்றாள் கேலியுடன்.

"அக்கா! எனக்குக் கலியாணம் வேண்டாம்!" என்றேன், கோபத்துடன்.

கடகடவென நகைத்தாள் என் சகோதரி. "நீ சுத்தப் பைத்தியம். பொறுப்புகளினின்று ஓடுவதால் மட்டும் ஞான வாழ்வைப் பெற்றுவிட முடியாது. தெரியுமா? பெரிய வேதாந்தி என்ற நினைப்பில் போகாதே. அதெல்லாம் உன்னுடைய இந்த வயதுக்கும், நீ வசிக்கும் சமூக அந்தஸ்துக்கும் ஏற்றதாக இருக்காது. ஆத்மிகமான வாழ்க்கை என்பதை நாம் கடைப்பிடிக்கிற நியமங்களின் வழியேகூட அடைய முடியும். ஆண்டவனை முதன்மையாக வைத்துக் கொண்டு அதனின்று புருஷார்த்தங்களைத் தேடுபவர்கள் புண்ணியசாலிகள் என்கிறது கீதை. தெரியுமா? ஒரு கட்டுப்பாடான நியமமே துறவுக்குச் சமம்தான்!" என்றாள். நான் பிடிவாதமாக அதை மறுத்தேன். அவள் மனம் இந்த விவகாரத்தில் தோல்வி கண்டு புண்பட்டது. அதற்கு நான் என்ன செய்ய முடியும்? அவள் நிழலில் வளர்கிறவன் நான். என் நினைவு தெரிந்த நாளாக அவளுக்கு மிக மிக அருகில் இருக்கிறேன். ஆரம்பத்திலிருந்தே நான் வளர்க்கப்பட்ட விதம், என் சிந்தனை படர்ந்த இடம், எனது மனோபாவம் விரிந்த இடம் எல்லாமே அவள் அருகில், அவள் கண்காணிப்பில்தானே!

என் முடிவில் நான் மாறுதலேதுமின்றி இருந்ததால் அக்கா அதற்கு மேல் என்னிடம் இது பற்றி ஒன்றும் பேசவில்லை. இரண்டு மூன்று தினங்கள் நாங்கள் வெகுதூரம் பிரிந்து வந்து விட்டவர்கள் போல் இருந்தோம். அவள் அடிக்கடி வாசிக்கச் சொல்லும் பிடில் ஒரு மூலையில் நான்கு நாட்களாய் மூடியே கிடந்தது. இரவில் என் சிந்தனையெல்லாம் நான்கு நாட்கள் முன்பு நடந்த சம்பாஷணையைப் பற்றியே இருந்தது.

இத்தனை நாட்களாகக் கொண்டிருந்த கடுமையான மனோநிலை என்ன ஆவது? தீர்க்கதரிசியான பரமஹம்ஸர், விவேகானந்தர் போன்றவர்களின் ஞான மொழிகளைப் படித்துப் படித்து உள்ளத்தைப் பண்படுத்திக் கொண்டது எதற்காக? இந்த மாயையில் சிக்கத்தானா? மனிதன் வாழ்க்கையில் விவாகமே செய்து கொள்ளாமல் இருக்க முடியாதா? மனிதனுக்கு மனைவி அவசியம் தானா? பரமஹம்ஸர் சொல்வதுபோல் நம்மைப் போன்றவர்களுக்கெல்லாம் இல்லறத் துறவு சாத்தியமான காரியமா? அவ்வளவு தூரம் பண்பட்ட உள்ளம் கொண்டவர்களா நாம்? சாதாரணமாக உள்ளம் ஒரு நிலையில் பக்குவமடையவே எத்தனையோ சாதனைகளைக் கடந்து வர வேண்டியிருக்கிறது! இவ்வளவும் அக்காவுக்குத் தெரியாதா? இவ்விஷயத்தில் என் மனோபாவத்தை உணர்ந்து தொந்தரவு செய்ய மாட்டாள். அவளும் மனிதனுடைய இந்தப் பந்தத்தை வெறுப்பவளாகத்தான் இருப்பாள் என்று எண்ணியிருந்தேன் — உள்ளத்துக்கும் உறவுக்கும் உள்ள வேற்றுமையை அவள் அளவில் பட்டவர்த்தனமாகக் காட்டி விட்டாள்.

அக்காவின் அன்புக் கட்டளையை மறுக்கும்படியாக நேர்ந்த இந்த நிகழ்ச்சியை நான் உள்ளம் கசந்து வெறுத்தேன். அவளும் என் விவாகப் பேச்சை அத்துடன் நிறுத்தி விட்டாள். ஆனால்...!

பிறகுதான் எவ்வளவு பெரிய வீழ்ச்சி எனக்கு. அன்பு வாயால் பேசாது என்று குருதேவர் பரமஹம்ஸர் சொன்னதுதான் எவ்வளவு உண்மை!

அவள் — பிரேமா என்னிடம் வாயால் பேசவில்லை. அவள் மனத்தின் முணுமுணுப்புத்தான் எனக்கு மிகமிக அருகில் கேட்டது. அக்கா போட்டோவில் காண்பித்த அதே பெண்தான் பிரேமா. அக்காவின் புக்ககத்து வழியில் தூரத்து உறவாம் அவள். எவ்வித முகாந்திரமுமின்றி ஒரு தடவை அக்கா அந்தப் பெண்ணை வீட்டுக்கு அழைத்து வந்திருந்தாள். பிறகு எக்காரணத்தாலோ அடிக்கடி வரத் தொடங்கினாள். அக்காவுக்குக் கூட இருந்து உதவி செய்வாள். கூடவே இருந்து பக்திப் பாடல்களைப் பாடுவாள். நாமாவளிகளையும், தோத்திரங்களையும் ராக லயத்தோடு பாடுவாள். பிரேமா அடிக்கடி இங்கே வருவது அக்காவின் வேலைத்தனம்தான் என்பதை ரொம்ப நாட்களுக்குப்பின், அதாவது என் லட்சிய எல்லையை விட்டுத் தாண்டி எத்தனையோ தூரம் வந்த பின்தான் தெரிந்து கொண்டேன். பிரேமாவைவிட நான்தான் அவளை அடிக்கடி பார்த்தேன். பல தடவைகளுக்குப் பின் ஒரு முறை என்னை வெடுக்கென நோக்கிய அந்த முதல் பார்வையிலேயே என்னுடைய மனம் ஒரு பயங்கரச் சரிவிலே சறுக்கிக் கொண்டு கீழ்நோக்கி விழுவதை உணர்ந்தேன்.

வெங்கடராமனும், பிரபாகரும் மானசரோவரக் கரையில் கொஞ்ச தூரம் நடந்துவிட்டுத் தம் கூடாரம் நோக்கித் திரும்பினர்.

தூரத்தில் காளி கங்கையின் உறுமல். பனிக் காற்று முகத்தில் ஊசி குத்துவதுபோல இருந்தது. கூடாரத்துக்குள் நுழையும்போது இலேசாக இருட்டிவிட்டது. ஏதோ ஒரு பிராணியின் கொழுப்பில் ஆன மெழுகுவத்திகள் அங்கு வந்தபின் வாங்கி வைத்திருந்தார்கள். அதில் இரண்டை ஏற்றி வைத்துவிட்டு விடுதிச் சாளரம், வாசல் எல்லாவற்றையும் மூடிக் கொண்டு முடங்கினர்.

இந்தத் தடவை பிரபாகரன் கதையைத் தொடரும்போது புன்னகையுடன் தொடர்ந்தான்:

ஆழமே இல்லாத என் வைராக்கியத்தால் எதை எதையோ சாதிக்கப் போவதாக இறுமாந்திருந்த என் போலி ஆணவத்துக்கு ஏற்பட்ட தோல்வியைத் துடைத்துக் கொண்டே எழுந்து நிற்க முயன்றேன். முடியவில்லை.

அக்கா எவ்வளவு பெரிய தீர்க்கதரிசி! வைரமற்ற என் மனம் மேன்மேலும் பலஹீனப்படுவதை அவள் கவனித்துக் கொண்டுதான் இப்படி என்னைச் சோதனை செய்கிறாளோ?

இத்தனைக்கும் பிரேமா என்னிடம் இன்னும் வாய் திறந்து பேசவில்லை. ஒரே ஒரு முறைதான் மனோகரமாக, கூடவே ஏதோ ஓர் ஆழத்தோடு நோக்கினாள். அவள் பார்வையில் காதல் இருந்தது என்று நான் சொல்லமாட்டேன். ஏனென்றால், அவள் காதல் மடந்தையல்ல. அவள் கண்களிலும் காதல் இல்லை. பரிவு இருந்தது. தவிப்பு இருந்தது. கனிவு இருந்தது. காருண்யம் இருந்தது. எனது வைராக்கியம் வளர்ந்தது நாட்களக்கில், பிரேமாவின்



பார்வை பட்டு அது குலைந்த நேரமோ ஒரு விநாடிதான்.

அக்காவின் கொள்கை எந்தவித சச்சரவுமின்றி வென்றுவிட்டது.

எனக்கும் பிரேமாவுக்கும் விவாகம் நடந்தேறியது. அதன்பின் அக்காவின் பரிகாசத்துக்கு இலக்கானதெல்லாம் பெரிய கதை. அதைவிடப் பெரிய கதையும் இதற்குப்பின்தான் நடந்தது. எவ்வளவு பெரிய அளவிலே நான் ஏமாந்து போய் விட்டேன் என்பதைப் பிறகுதான் உணர்ந்தேன்.

விவாகத்துக்குமுன் எந்தவித ஆசாபாசத்தோடும் அலைமோதாத நான் பிரேமாவை மணந்தவுடன் அவள் மேல் என்னுடைய அன்பைப் பொழியத் துடித்துக் கொண்டிருந்தேன். ஆனால் அவளோ என்னிடம் எதையுமே எதிர்பார்க்காத, அவளிடமும் எதையும் எதிர்பார்க்க வேண்டாமென்ற தோரணையில் என் ஆர்வத்தை மண்ணாக்கி விட்டாள். முதல் இரவிலேயே அவள் தன்னுடைய நிலையை விளக்கி விட்டாள்.

அவள் நீட்டிய பாலைக் குடித்துவிட்டு ஆர்வத்துடன் அவளைப்பற்றப்போனேன். அவள் விலகி நின்றுகொண்டு கண்ணீர் விட்டாள். அவள் அழுகைக்கு எந்த வித அசாதாரணமான காரணங்களும் இருக்கப் போவதில்லை என்ற எண்ணத்துடன் நான் மீண்டும் அவளை நெருங்கின போது தழுதழுத்த குரலில், "வேண்டாம். என்னைத் தொடாதீர்கள். நான்.... நான்... ஒரு துறவி..." என்றாள். நெருப்பை மிதித்துவிட்டதுபோல் அவள் கரத்தை உதறி விட்டேன். அவள் அழுகையினூடேயே பேசினாள். "தயவுசெய்து என்னை மன்னித்து விடுங்கள். நான் இப்படிப் பேசுகிறேனே என்று பதற்றப்படாதீர்கள். எனக்கு என்னமோ இந்த நரம்பையும் சதையையும் பிணைக்கும் வாழ்க்கை பிடிக்கவேயில்லை. அறவே வெறுக்கிறேன். அதைப் பார்த்துப் பார்த்து எனக்கு இந்த வாழ்க்கையே வெறுத்து விட்டது. நான் கன்னியாக இருக்கவேதான் விரும்பினேன்; விரும்புகிறேன். ஆனால் யார் கேட்கிறார்கள்? பெண்ணின் தனிமை என்பது ரொம்பப் பலமாகக் கருதப்படும் இந்தச் சமூகச் சூழலில் என் விருப்பம் அவ்வளவு சுலபமாக நிறைவேறப் போவதில்லை என்பது நிச்சயமாகத் தெரியும். எனவேதான், இந்த விவாகத்துக்குச் சம்மதித்தேன். அது மட்டுமல்ல; உங்கள் அக்காவின் மூலம் உங்கள் வைராக்கிய சிந்தனையைப் பற்றியும் விவாகமே வேண்டாம் என்று இருந்த உங்கள் முடிவைப் பற்றியும் உங்கள் அந்தரங்கத்தில் விகசித்து இருக்கும் அகத் தூய்மை பற்றியும் நிறையக் கேள்விப்பட்டேன். பரமஹம்ஸரும், விவேகானந்தரும் உங்கள் உயிர்மூச்சென அவர் சொல்லியிருக்கிறார். நான் ரொம்பவும் பெருமைப்பட்டேன். உங்களை மணப்பதால் என்னுடைய கன்னித் தன்மை எந்த வகையிலும் கெடாது என்று முடிவுசெய்து கொண்ட பிறகு தான் உங்களை மணக்கச் சம்மதித்தேன். மனத்திலே வேறு எந்தவித சலனத்துக்கும் இடம் தந்து கொள்ளாதீர்கள். உங்கள் மனம் கோணாமல் உங்களுக்குச் சேவை செய்வேன். நீங்கள் என் தெய்வம் என்பதை நான் மறுக்கவில்லை..."



"என்னய்யா, உம்ம வீட்டிலே எல்லாம் தங்கமும் பாடமாக இருக்கே! மாப்பிள்ளை தங்கமாக இருக்கிறார். நீர் வைரமாக இருக்கிறேன் என்கிறீரே!"

"ஆமாம், மாப்பிள்ளை தங்க மோதிரம் கேட்கிறார். நான் வைரம் பாய்ந்த நெஞ்சோடு கொடுக்கிறதில்லை என்கிற உறுதியோடு இருக்கிறேன்!"

என்று கூறிக் கொண்டே என் கால்களில் விழுந்து நமஸ்கரித்தாள்.

"'நியதிப்படி வாழ்வதுதான் தர்மம். கணவன் மனைவி என்றால் கணவன் மனைவியாகவே வாழ வேண்டும். அதுதான் வாஸ்தவமான நிலை. அதில்லாமல் மனைவியாக ஒருவனின் கையால் தாலியை ஏற்றுக் கொண்டு பின் நான் துறவி என்று சொன்னால் அது விவேகமே இல்லை. ஒரு கட்டுப்பாடான நியமமே தூய்மையான துறவுதான்' என்று அக்கா அடிக்கடி கூறுவாள்" என்று நான் சொன்ன சமாதான தர்க்கம், அவளைத் திருப்ப முடியாமல், இருக்க முடியாமல் வலிமிழந்து போய்விட்டது. எனது கொள்கையும், கோட்பாடும் சோர்ந்தன. ஏதோ ஓர் அசந்தர்ப்பமான நிலையில் நான் அவமானப்படுத்தப்பட்டு வெட்டி நின்றபோது அந்த அவமானம் எனக்கு நானே இழைத்துக் கொண்டதாகவேகூட இருக்குமோ எனக் குழம்பினேன். இந்தக் குழப்பத்தினிடையே பிரேமாவையும் அவள் நடத்தைகளையும் கவனித்தேன். அக்காவைப் போல் அவளும் பூஜை புனஸ்காரங்களில் அதிக சிரத்தை காட்டினாள். என்னைவிட இன்னும் நன்றாகவே அக்காவிடம் பழகினாள். சிரித்தாள். மகிழ்ந்தாள், கோபித்தாள், முறைத்துக் கொண்டு ஓடுவாள், முணுமுணுப்பாள். எல்லாம் உண்டு. என்றாலும், அந்தப் புதுமையான மனோதத்துவம் எனக்குப் புரியவேயில்லை. ஆனால் நாளுக்கு நாள் நான் ரொம்பவும் பலவீனப்பட்டுக் கொண்டு வந்ததை உணர்ந்தேன். சாதாரணமாக ஒரு பெண்ணிடமிருக்கும் திடசித்தம்கூடவா என்னிடமில்லாமல் போக வேண்டும்? கல்யாணத்துக்குமுன் அக்காவிடம் எவ்வளவெல்லாம் வாதாடினேன்! கடைசியில் தோல்வி முனைப்புடன் மனம் அசந்து போய் நின்றதுதான் பலன். இந்தத் தோல்வியை என் மனம் தாங்கவே மறுத்தது. வேறு எந்த வகையிலும் என் மனத்தின் வீர நிலையை ஸ்தாபித்துக் கொள்ள எனக்கு வழி தெரியவில்லை. அதுதான் இப்படியே புறப்பட்டு விட்டேன்.

பிரபாகரன் கதையை முடித்துச் சற்று நேரம் அமைதியுடன் இருந்தான்.

"பிரேமாவின் அந்த மனோதத்துவத்துக்கான காரணத்தை நீங்கள் பிறகு புரிந்து கொள்ளவே பிரயத்தனப்படவில்லையா?" — வேங்கடராமன் கேட்டான்.

"பிறகு புரிந்து கொண்டேன். பிரேமாவின் மனம் ஏன் இப்படி மாறியது என்பதற்குக் காரணம் அவள் குடும்பச் சூழ்நிலைதானும். ஏழை என்றால் பரம ஏழையானது அவள் குடும்பம். வறுமையில் உழன்று உழன்று மரத்துப் போன உணர்ச்சிகள் ஒருபுறம். அவளுடைய தாய் தந்தையின் இடைவிடாத குடும்பச் சண்டை, ஒரு பிரசவத்தின்போது தாயாருக்குச் செய்த சஸ்திர சிகிச்சையில் அவள் தாயார் அணு அணுவாக உயிர் துறந்ததைப் பார்த்தது. கணவன் மனைவி என்றால் இவ்வளவு தொல்லைகளா என்று அந்தச் சிறு வயதில் ஏற்பட்ட வெறுப்பு, காலக்கிரமத்தில் குடும்பத்தில் தலைவிரித்தாடிய வறுமை — இவை போன்ற பல காரணங்கள்தான் நாளாவட்டத்தில் இந்தப் பந்தங்களையே வெறுக்கும் அளவுக்கு அவளைக்கொண்டு போய் விட்டிருக்கிறது என்பதை உணர்ந்து கொண்டேன்."

"உங்கள் அக்காவுக்கு உங்களுடைய நிலைமை தெரியுமா?"

"பிறகு தெரிந்து விட்டது. அக்காவுக்கு அது தெரியவரும்போது நான் யாத்திரை புறப்படத் தயாராகிவிட்டேன். அக்கா என்னைத் தடுக்கவில்லை. மாறாகப் புன்னகை மட்டும் செய்து என்னை வழி அனுப்பினாள். "உன் சஞ்சலம் எனக்குத் தெரியும். அதை நான் சரிபண்ணி வைக்கிறேன். விரைவில் திரும்பி விடு" என்றாள். பிரபாகரன் பெருமூச்சு விட்டுக் கொண்டே கண்களை இலேசாக மூடிக் கொண்டான்.

"உங்கள் தமக்கை கூறினதில் உங்களுக்கு நம்பிக்கை பிறந்ததா?" — வேங்கடராமன் கேட்டான்.

"நம்பிக்கையைப் பற்றியே இனி பேச்சில்லை. எனக்கு இந்த யாத்திரை தந்த மனோதிடம் இனி எப்படி இருந்தாலும் அதனால் பாதிக்கப்பட மாட்டேன் நான். பிரேமா உண்மையிலேயே மனம் மாறி நான் யாத்திரை முடித்துத் திரும்பும்போது, 'மனைவி'யாக வரவேற்றாலும் அதற்காக அளவற்ற மகிழ்ச்சியோ, பழையபடியே 'நான் துறவி'தான் என்று கூறினாலும் அதற்காக மன முடையவோ மாட்டேன். இரண்டு நிலைகளையும் மனப்பூர்வமாக அங்கீகரித்துக் கொண்டு அவளுடன் வாழ நான் மனோபலம் பெற்றிருக்கிறேன். ஒன்று நழுவி விட்டதே என்று மற்றொன்றுக்காக வருத்தப்படும் உத்தேசமும் இல்லை. இரண்டுவித தத்துவங்களையும் ஏற்கும் திடசித்தத்தோடுதான் நான் திரும்புவேன்."

வெளியே நதிகளின் இரைச்சல், பனிப் புயலின் சத்தம். அருகருகில் இருந்த கூடாரங்களிலிருந்து ஒலிக்கும் புருஷஸூக்தம், காயத்திரி மந்திரம், சியாமளா தண்டகம் போன்ற துதிகளின் புனித ஒலிகள் எல்லார் மனத்திலும் சாந்தி பெற ஒலித்துக் கொண்டிருந்தன.

# சிபாரிசுக் கடிதம்

ஸோமாஸ்

**முதல் நாள் :**

"ஏஜமான் இருக்கிறாரா?"

"இருக்கிறாரு..... ஏன்?"

"அவரைப் பார்க்கணும். அவருக்கு ஒரு கடிதம் கொண்டு வந்திருக்கிறேன்."

"அவரை இப்போ பார்க்க முடியாது. கடிதாசை என்கிட்டே கொடுத்துப் போங்க."

"கடிதாசை உங்கிட்டே கொடுக்க முடியாதப்பா. அது அவரிடம் நேரில் கொடுக்க வேண்டிய கடிதம்."

"அப்படியானால் நீங்க இங்கேயே காத்துக்கினு இருக்க வேண்டியதுதான்!"

"ஏனப்பா, அப்படிச் சொல்லுறே? எஜமானரைப் பார்க்க முடியாதா?"

"நீங்க யாரு, விசயம் தெரியாத ஆளாயிருக்கீங்க? அவரை இப்போ பார்க்க முடியாது. அவசரமா வெளியே புறப்பட்டுக்கிட்டிருக்காரு."

**இரண்டாம் நாள் :**

"ஏஜமான் இருக்கிறாரா?"

"இருக்காரு. இப்போ நீங்க அவரைப் பார்க்க முடியாது."

"ஏன்?"

"நீங்க இன்னு விசயம் தெரியாத ஆளாயிருக்கீங்களே. அவரு இப்போ தான் வெளியே போய்ட்டு வந்தாரு. யாரையும் பார்த்துப் பேசமாட்டாரு."

"சரி. அப்படியானால் நாளைக்குக் காலையிலே வரட்டுமா?"

"நீங்க விட மாட்டீங்க போலிருக்குதே. நாளைக் காலையிலே வாங்க பார்க்கலாம்."

**மூன்றாம் நாள் :**

"ஏன்னப்பா, எஜமானனைப் பார்க்கலாமா? இருக்கிறாரா?"

"வாங்க, வாங்க. நீங்களும் விடாமல் வர்றீங்க. இப்படி வந்து வராந்தாவில் குந்துங்க. எஜமான் 'வாக்கிங்' போயிருக்காரு. இப்ப வந்துடுவாரு."

இந்தச் சம்பாஷணைகள் எல்லாம் வேலையில்லாப் பட்டதாரி சுந்தரத்துக்கும், பெரிய தொழில் அதிபர் உயர்திரு வாளர் அருணாசலத்தின் பங்களா காவற்காரனுக்கும் இடையில் நடந்தவை.

சற்று நேரத்துக்கெல்லாம் புலியின் உறுமலோடு போட்டி போடும் விதத்தில் பயங்கரச் சத்தம் கேட்டது. சுந்தரம் நடுங்கிப் போய் வாசற்பக்கம் பார்த்தான். ஒரு பெரிய நாய் உள்ளே நுழைந்தது. அதன் சங்கிலியை மிஸ்டர் அருணாசலம் பிடித்துக் கொண்டிருந்தார்.

கம்பீரமான தோற்றம். வெள்ளை அரை நிஜாரும், கை வைத்த பனியனும் அணிந்து பூட்ஸ் ஒலியுடன் டக் டக் என்று நடந்து வந்தார். நாய் தன் மீது பாயத் தயாராவதைக் கண்ட சுந்தரம் பயந்து நடுநடுங்கி ஒடுங்கி நின்றான்.

"ப்ரூட்டஸ்" என்று எஜமானன் சிம்மக் குரல் கொடுத்ததும் அந்த உயர்ந்த ஜாதி நாய் பாயும் முயற்சியை நிறுத்தியது. வேலையாள் அதன் சங்கிலியைப் பிடித்துத் தோட்டத்துப் பக்கம் கொண்டு போனான். சுந்தரத்துக்கு உயிர் வந்தது. பெஞ்சில் உட்கார்ந்தான்.

மீண்டும் சிறிது நேரத்துக்கெல்லாம் 'டக் டக்' என்று பூட்ஸ் ஒலி கேட்டது. மிஸ்டர் அருணாசலம் வெளியே வந்தார். அவருடன் கூடவே ப்ரூட்டஸும் வந்தது. மறுநிமிஷம் பங்களாவின் முன்புற மைதானத்தில் ப்ரூட்டஸும், அதன் எஜமானரும் குதித்துக் குதித்து விளையாடலாயினர். அவர் கையில் ஒரு பிஸ்கட் பாக்கெட் இருந்தது. அதிலிருந்து அவர் பிஸ்கட்டுகளை ஒவ்வொன்றாகத் தூக்கி எறிந்து கொண்டேயிருந்தார். ப்ரூட்டஸ் ஒன்றைக்கூட விடாமல் தாவிக் குதித்துத் துள்ளி நிமிர்ந்து வாயினால் கவ்வித் தின்று கொண்டேயிருந்தது. எஜமானரும் அதற்குச் சரியாய்க் குதித்து ஓடினார்.

இப்படியாக, பைரவரின் காலைச் சிற்றுண்டி ஒருவாறு முடிவடைந்தது. வேலைக்காரர் ப்ரூட்டஸைப் பிடித்துக் கொண்டு அப்பால் போய்விட்டான். எஜமானர் விறைப்பாக உள்ளே போய் விட்டார். சுந்தரம் சோர்ந்துபோய்ப் பெஞ்சியில் சாய்ந்தான். வேலைக்காரன் அவனிடம் வந்து, "எஜமான் இப்ப யாரையும் பார்க்க மாட்டாருங்க. ரெஸ்ட் எடுத்துக்கிட்டு இருக்காரு. இன்னொரு நாள் வரச் சொன்னாரு....." என்றான்.

"நான் இதோடு மூன்று தடவை..." என்று சுந்தரம் முடிப்பதற்குள், "நீ யாரையா விஷயம் தெரியாத ஆளா இருக்கே. நீங்க இன்னொரு நாளைக்கு வாங்க. பதினொரு மணிக்கு மேலேதான் ஐயா ஆபீசுக்குப் போவாரு. ஒன்பது மணிக்கு வாங்க" என்று சொல்லிவிட்டு வேலைக்காரன் உள்ளே போய்விட்டான்.

திருவல்லிக்கேணியில் தன் நண்பனொருவன் வீட்டில் தங்கியிருந்து கொண்டு சுந்தரம் வேலை தேடிக் கொண்டிருந்தான். அவன் படி ஏறி வேலை கேட்காத கம்பெனி சென்னையில் ஒன்றுகூட இல்லை. போன இடங்களிலெல்லாம் சிபாரிசுக் கடிதம் கேட்டார்கள். அதற்காகச் சுந்தரம் வேலை தேடும் முயற்சியை விட்டு விட்டுச் சிபாரிசுக் கடிதம் தேடும் முயற்சியில் ஈடுபட்டான். எப்படியோ ஒரு பெரிய மனிதரின் சிபாரிசுக் கடிதம் கிடைத்தது. அவர் மிஸ்டர் அருணாசலத்துக்குத் தெரிந்தவர்தான். நம்பிக்கையோடு அருணாசலத்தின் வீட்டுக்குப் போய்ப் பார்த்ததில் அலைச்சல்தான் மிஞ்சியது. ஆனால் சுந்தரம் தளர்ந்து விடவில்லை. மீண்டும் அந்தத் தொழில் அதிபரைப் பார்க்கப் போனான்.

**இன்னொரு நாள் :**

அன்று சுந்தரம் அருணாசலத்தின் பங்களாவுக்குப் போனபோது அவர் குமாரன் ப்ரூட்டஸோடு விளையாடிக் கொண்டிருந்தான். அவனுக்குச் சுமார் பதினைந்து வயது இருக்கும். பெரிய மனிதர்களின் குடும்பத்துக்கே உரிய 'தளதளப்பு' அவன் மேனியில்காணப்பட்டது. அருணாசலம் வராந்தாவில் ப்ரூட்டஸின் விளையாட்டைக் கவனித்துக் கொண்டிருந்தார். சுந்தரம் உள்ளே போனபோது நல்ல வேளையாக வேலைக்காரன் அவனைத் தடுக்கவில்லை. செருப்பைக் கழற்றி ஒரு புறமாக விட்டு விட்டு ஒரு பக்கமாக நின்றான்.

திடீரென்று ப்ரூட்டஸுக்கு என்ன வந்து விட்டது! ஒரே பாய்ச்சலாகச் சுந்தரத்திடம் ஓடி, அவன் கழற்றி வைத்திருந்த தேய்ந்துபோன பழைய செருப்பின் மீது பாய்ந்தது. அதைத் தன் பெரிய வாயினால் கவ்வியது. ஏதோ உலக அதிசயத்தைக் கண்டுவிட்டவர் போல், அருணாசலம் கையைத் தட்டிக்கொண்டு பெரிதாகச் சிரிக்கலானார். அவர் மகனும் சிரித்தான். வேலைக்காரனும் சிரித்தான். சுந்தரத்துக்கு மட்டும் சிரிப்பு வரவில்லை. அவன் எப்படிச் சிரிக்க முடியும்? செருப்பு அவனுடையதல்லவா?

சுந்தரத்தின் செருப்பைத் தன் கூர்மையான பற்களினால் கடித்துக் குதறி எறிந்து விட்டது ப்ரூட்டஸ். சுந்தரம் துடித்தான். ஆனால் என்ன செய்ய முடியும்?

உடனே அருணாசலம் சுந்தரத்தைப் பார்த்து, "நீ யார்? எங்கே வந்தாய்?" என்று கேட்டார்.

"...வேலை கேட்கலாமென்று வந்தேன். கெனல்லர் முத்தையாதான் உங்களைப் பார்க்கச் சொன்னார்..."

"கெனல்லர் முத்தையாவா? அவர் உனக்கு ஏதாவது சிபாரிசுக் கடிதம் கொடுத்தாரா?"

"கொடுத்திருக்கிறார். இதோ..." என்று கூறிச் சுந்தரம் தன் பாக்கெட்டிலிருந்து சிபாரிசுக் கடிதத்தை எடுத்தான்.

யாரும் எதிர்பாராத விதத்தில் மறுகணம் ப்ரூட்டஸ் சுந்தரத்தின் மீது பாய்ந்து அவன் கையிலிருந்த கடிதத்தைக் கவ்விக் கிழித்தெறிந்தது.

மீண்டும் பெரிதாகச் சிரித்தார் அருணாசலம். "இதோ பார், ப்ரூட்டஸ் கத்த போக்கிரி. நீ போய் அவரிடம் இன்னொரு கடிதம் வாங்கிக்கொண்டுவா..." என்று சொல்லிக் கொண்டே உள்ளே போனார் அருணாசலம்!



அழகுருவன் துயில் நிழலில்
அழகுக் குடந்தனை நிறைப்போம்

புகைப்படம்: உதயபாஸ்கர ராவ்

# ஒளிசுடரும் நாட்களுக்கு உரித்தான பரிசு!



குடும்ப முழுமைக்கும் உரிய பாத காணிக்கை கரோனு மிதியடிகள்! வசதியானவை. ஆயுசும் கெட்டி. அழகழகானவை. உங்கள் சக்திக்கேற்ற நயமான விலைகளில் வருபவை! சப்பல்கள், தோல் ஷூக்கள் இரண்டுமே, தேர்ந்தெடுக்கப் பாங்கான பலதரப்பட்ட பாணிகளிலே கிடைக்கின்றன!

## Carona
## கரோனு மிதியடிகள்



வாக்வெல்
ரூ. 29.85
வரிகள் தனி.



ஏர்கூல்
ரூ. 10.95
வரிகள் தனி.



ஸ்னீக்கர்
ரூ. 4.70
வரிகள் தனி,

**கரோனு** மிதியடிகள்—தாங்கி உழைப்பவை, கிழியாமல் தாக்குப் பிடிப்பவை!

**கரோனு ஸாஹு கோ. லிட்.** ரிஜி. ஆபீஸ்: 221, டாக்டர் தாதாபாய் நவ்ரோஜி ரோடு, பம்பாய்.

# காதர்பாட்சாவின் கண்ணாடிக்கடை

முகுந்தன்

கங்காதரன் தன்னைச் சுற்றிலும் ஒரு தடவை பார்த்துக் கொண்டான். அதுவும் ஒரு முறை பார்த்துக் கொண்டது. பிறகு சிரிக்கிற மாதிரி பாவனை செய்தான். அதுவும் சிரித்தது. முறைத்துப் பார்த்தான், புருவத்தை நெரித்துக் கொண்டு. அதுவும் அதே மாதிரி செய்யவே அவனுக்குப் பயமாகப் போய் விட்டது. பேசாமல் மறுபக்கம் திரும்பி உட்கார்ந்து கொண்டான், முதுகைக் காட்டியபடியே. முன்யோசனையுள்ள கடவுள் முதுகில் கண்களைப் படைத்திராத காரணத்தால், அவனும் தன்னுடைய பிரதிபிம்பத்தைச் சுற்றிலும் மாட்டியிருந்த நிலைக் கண்ணாடிகளில் பார்க்க முடியாமல் போயிற்று. அதுவே அவனுக்குப் பெருத்த நிம்மதியாக இருந்தது.

இருநூற்றுத் தொண்ணூறு ரூபாய் தான் சம்பளம் கொடுக்கட்டுமே; அதற்காகத் தினசரி பத்து மணி நேரம் பளிங்குக் கண்ணாடிகளின் மத்தியில் ஒருத்தன் கொட்டுக் கொட்டென்று உட்கார்ந்திருக்க முடியுமா, என்ன? அதுவும் பேச்சுத் துணைக்குக்கூடச் சரியான ஆள் இல்லாமல் உட்காருவதைவிடக் கோயமுத்தூர் சென்ட்ரல் ஜெயிலுக்குள் போய் உட்காரலாம் போலிருந்தது அவனுக்கு. சென்னையில் கூவம் நதிக் கரையில் குளிர் காற்றையும் குடலைக் குமட்டும் வாடையையும் அப்படியே வாங்கிக் கொண்டு நெடிதுயர்ந்திருக்கும் சென்ட்ரல் ஜெயிலைவிடக் கோவை ஜெயில் மேலென்று அவன் தீர்மானித்ததற்குக் காரணங்கள் இரண்டு. அவையாவன :

1. சீதா
2. சீதா

கங்காதரனின் உள்ளங் கவர்ந்தாளின் பெயர் அது. பெயர் என்னவோ இரண்டே எழுத்துக்களில் அமைந்திருந்தாலும் ஒன்றேகால் சோம்பேறியான கங்காதரன் அவளை முழுப் பெயர் சொல்லிக் கூப்பிடவே மாட்டான். 'சீ' என்றோ 'தா' என்றோ உடைத்து உடைத்துத்தான் அழைப்பான்.

கோவையையும் சீதா என்கிற பூவையையும் விட்டுப் பிரிந்து அவன் சென்னையிலே வந்து அடைக்கலம் புகுந்திருக்கிறானென்றால் அதற்குக் காரணம்—உண்மையில் முழ நீளம் இருந்தாலும் 'சாண்' என்று பொய் சொல்லத் தூண்டுகிறதே—அந்த வயிறுதான் !

வந்ததுதான் வந்தானே, ஏதாவது நல்ல கம்பெனியாகப் பார்த்து அதிலே போய்ச் சேரக் கூடாதோ?.... அவனுடைய துரதிர்ஷ்டம் காதர்பாட்சா வடிவிலே காத்துக் கொண்டிருந்தது.

துருக்கிக் கமால் பாட்சாவுக்குத் தூரத்து உறவு என்று பெருமையாகச் சொல்லிக் கொள்கிற மீர்சாகிப் பேட்டை காதர்பாட்சாவுக்கும் நாணயத்துக்கும் தான் தூரத்து உறவு. 'நாணயம்' என்றால் 'நேர்மை' என்று மட்டும் அர்த்தம் செய்து கொண்டால் போதாது ; 'துட்டு' என்றும் புரிந்து கொள்ள வேண்டும். எவனெவன் தலையையோ தடவி, மவுண்ட்ரோட்டில் இடம் பிடித்துப் பெரிதாகக் கண்ணாடிக் கடை போட்டிருந்தார் பாட்சா. அவர் அப்படிக் கடை போடக் கணிசமான அளவில் கங்காதரனின் தகப்பனார் உதவி செய்திருந்ததால்,





அந்த நன்றியை மறக்காமல் பாட்சா தம் கடையிலேயே அவனை இருத்திக் கொண்டு விட்டார்.

முகம் பார்க்கும் கண்ணாடிகள், டம்ளர்கள், லஸ்தர்கள், பீங்கான் பாத்திரங்கள் ஆகிய அத்தனையும் அடுக்கடுக்காக இருந்தன கடையிலே. கங்காதரன் மூன்று மாதங்களுக்கு முன்னால் வேலைக்குச் சேர்ந்தபோது எத்தனை இருந்தனவோ, அத்தனையும் அப்படியே அலுங்காமல் நலுங்காமல் அப்படியே இருந்தன. வாங்குவாரைத்தான் காணோம். இடையே என்றாவது ஒரு நாள் பார்த்தால் முதல் நாள் இருந்ததைவிட ஒன்றிரண்டு டம்ளர்கள் அல்லது தட்டுக்கள் அதிகமாக இருக்கும். தினசரி காலையில் தூசி தட்ட வைக்கும் பையன் துக்காஜி எதையாவது கைதவறிக் கீழே போட்டு உடைத்து வைத்திருப்பான்!

கங்காதரனுக்கோ ஆத்திரம் ஆத்திரமாகவரும். வியாபாரம் ஆகாமல் போர் அடிக்கிறதே என்பதனால் மட்டுமல்ல; நிம்மதியாகக் காலை நீட்டிப் படுத்துத் தூங்கலாம் என்றால் அதற்கும்

'கங்காதரன் வியாபாரம் ஆகவில்லையே' என்று கவலைப்பட்டு வருகிறானே தவிர, பாட்சா அதைப் பற்றி லட்சியம் செய்யவே இல்லை. எவர்சில்வர் பாத்திரம் முதல் விமானம் வரைக்கும் டிக்கெட்டு ஆள் சேர்ப்பதும், ரகசியமாக 'பக்கோடா ஷாப்' நடத்துவதுமாகக் காலம் தள்ளி வந்தார். எப்போதாவது கடைக்கு வருவார். குல்லாவைக் கழற்றிக் கையில் வைத்தபடியே, "நல்ல வெய்யில் இல்லே?...." என்று கங்காதரனைப் பார்த்து விசாரிப்பார். பிறகு, "நல்ல மையாகப் பார்த்து வாங்கி வா!...." என்று துக்காஜியை விரட்டுவார். அதற்கப்புறம் அரை மணி நேரம் நிறைய 'நல்ல' போட்டுக் கங்காதரனிடம் பேசி விட்டுப் போய்ச் சேர்வார்.

இடவசதியில்லையே என்பதனால். தூக்கக் கலக்கத்தில் அல்நாஷர் வேலை ஏதாவது செய்து வைத்தானானால்....?

"இன்னாப்பா, மொதலாளி இல்லையா?...." என்ற கேள்வி, கங்காதரனின் சொக்கும் இமைகளைத் தூக்கிப் பிடித்து நிறுத்தியது. நிமிர்ந்து பார்த்தான். கடையை வாடகைக்கு விட்டிருக்கிற ஜம்புலிங்கம்தான் நின்று கொண்டிருந்தார்.

"இல்லையே...? என்ன விஷயம்?"

"இன்னா நீ மெதுவா கேக்கறியே? லட்டு மாதிரி எடத்தை லபக்குன்னு பிடிச்சுக்கினாரு உன் முதலாளி. மொதல் மாசம்தான் பாடிகை கொடுத்தாரு.... அப்புறம் ஆறு மாசமாகப் போவுது. நயாபைசா கண்லே காட்டலியே? இன்னாப்பா நியாயம் இது.....? நீயே சொல்லு .....!"

"அப்படியா? எனக்குத் தெரியவே தெரியாதே!"

"தெரிஞ்சா மட்டும் 'இந்தா நாய்க்கரே'ன்னு ஆறு மாசப் பாடிகையைத் தூக்கிக் கொடுத்துடப் போறியாக்கும்? பாய் வந்தாருன்னு சொல்லுப்பா...எனக்கு அர்ஜெண்டா துட்டு வோணும்... இல்லாட்டி எடத்தைக் காலி செய்யோணும்! ஆம்மாம்......!"

"இப்போ கொஞ்சம் 'பினிஷல்' டல்லு......" என்று ஏதோ ஆரம்பித்தான் கங்காதரன்.

"அதுக்காக...? பிரியாணி துன்னுமே இருந்துடறாரா உங்க பாயி...? நான்



சொல்லிப்பிட்டேன். எடத்தைக் காலி செய்யாக்காட்டி அக்காமடே ஷன் கண்ட்ரோலர்கிட்டே போவ லாம்னு இருக்கறேன்....இந்தையும் சொல்லு...இன்னும்?...."

அடுத்த தடவை பாட்ச்சா கடைக்கு விஜயம் செய்தபோது ரம்புலிங்கம் வந்து மிரட்டிவிட்டுப் போனதைச் சொன்னான் கங்காதரன். அவரோ இந்த நூற்றாண்டின் மிகப் பெரிய நகைச்சுவைத் துணுக்கைக் கேட்டு விட்டது போலக் கடகடவென்று சிரித்தார்.

"நல்லா போகச் சொல்லுப்பா, அக்காமடேஷன் ஆபீசர்கிட்டே.... நாம இன்னும் ஒரு வருஷம் இங்கேயே நல்லா உக்காந்துக்கலாம்..... அத இனி நாளாவும் கேஸ் முடிய...." என்றார். பிறகு வழக்கம்போல் 'நன்னா' பாலை வாங்கிக் குடித்துவிட்டு நடையைக் கட்டினார்.

சற்றைக்கெல்லாம் ரம்புலிங்கமும் வந்தார். அவருடன் இன்னும் இரண்டு ஆசாமிகளும் வந்தார்கள். முறுக்கு மீசையும் பரட்டைத் தலையு மாக.

"இன்னாப்பா, மொதலாளி கொடுத்தாரா எதிருச்சியும்?" என்று விசாரித்தார்.

"அவர் வரவே இல்லியே?..." என்று சட்டென்று புளுகினான் கங்கா தரன்.

"இன்னா தைரு, நம்மகிட்டேயே 'கமால்' காட்றியே?.... பாவ் கு ருட்சி வச்சிட்டுப் போன டம்ளர் அதோ கிடு. நீ நமக்கே டாவு குத்தறியே?..." என்றவர், "ஏண்டா, தினமும் ஏன் இந்த ஒரு டம்ளரிலியே அவர் கு டிக்கணும்? அதான் அடுக்கடுக்கா இவ்வளவு டம்ளருங்க வச்சிருக்கீங்களே! ஒவ்வொரு நாளைக்கு ஒவ்வொண்ணிலே குடிக்கிறது!..." என்று யோசனையும் தெரிவித்தார்.

"நல்ல யோசனைதான்!..." என்றான் கங்காதரன். பழக்க தோஷம் காரணமாக 'நன்னா' அவனையும் மெல்லப் பிடித் துக் கொண்டு விட்டது.

"அப்பன்னா, பாவ்கிட்டேயிருந்து பைசா பேராதுன்னு சொல்லு!"

"........ .........."

"அப்புறம் வருத்தப்படப் போறே....ஆமாம், சொல்லிட் டேன்...." என்ற ரம்புலிங்கம், "வாங்கடா, போகலாம்..." என்று கூட வந்தவர்களையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டார்.

அடுத்த கடையும் அவருடையதுதான். போறப்போதே கூட வந்தவர்களுக்கு அதைச் சுட்டிக்காட்டினார். "இந்த

இடம்தான்... நல்லாப் பார்த்துக்குங்க!'' என்றார். அவர்களும் சம்மதத்துக்கு அறிகுறியாகத் தலையாட்டினார்கள். அந்த நாலு வார்த்தைகளையும் அப்படியே மனத்தில் வாங்கிக் கொண்டான் கங்காதரன். ஜம்புலிங்கம் என்ன சதித் திட்டம் வைத்திருக்கிறாரோ?....

அவனுடைய பயந்தாங்கொள்ளித் தனத்துக்கும் பால் வார்ப்பது போல் அடுத்த இரண்டு நாட்களில் சில சம்பவங்கள் நிகழ்ந்தன. பூட்டிக் கிடந்த பக்கத்துக் கடை திறக்கப்பட்டது. பரட்டைத் தலையர்கள் ஒரு நாளைக்கு மூன்று வேளையும் வந்து விட்டுப் போனார்கள். அப்புறம் ஒரு நாள் உச்சி வேளையிலே கட்டை வண்டி ஒன்று வந்து நின்றது. அதிலிருந்து பெரிய பெரிய சாக்கு மூட்டைகள் இரண்டைத் தூக்கிக் கொண்டு போனார்கள். அந்த மூட்டைகளிலே என்ன இருக்கிறது என்று பார்க்கக் கங்காதரனுக்கு ஆசைதான். ஆனால், பாவிகள் கதவை உள் பக்கமாகச் சாத்தித் தாளிட்டுக் கொண்டு விட்டார்கள். 'தர்புர்' ரென்று எதையோ இழுக்கிற சத்தமும், 'ணங் ணங்' என்று இரும்புச் சாமான்கள் தரையிலே விழுகிற ஓசையும், கடப்பாரையால் தரையைப் பெயர்க்கிற ஒலியும் இடையிடையே கேட்டன. 'அப்படி என்ன பண்ணுகிறார்கள், ரகசியமாக? ஒருவேளை யாருக்கும் தெரியாமல் நாட்டு வெடிகுண்டு கிடிகுண்டு எதையாவது தயார் பண்ணி, அதிலே நாலைந்தைப் பாட்சா கடைப் பக்கமாக விசிறியெறியச் சொல்லி ஜம்புலிங்கம் உத்தரவு போட்டிருப்பாரோ?.... அந்த முரடர்களைப் பார்த்தால் எதற்கும் துணிந்தவர்களாகத் தோன்றியது. பாட்சாவை நினைத்துப் பார்க்கும்போது ஒரு கணம் அவன் நெஞ்சில் இரக்கம் சுரந்தது. அவனேகூடச் சில சமயங்களில் 'ஒரு பூகம்பம் — அதுகூட வேண்டாம்— ஒரு சின்ன நில நடுக்கம் ஏற்பட்டால் இந்தக் கண்ணாடிச் சாமான்களெல்லாம் எப்படி விழுந்து நொறுங்கும்' என்று எண்ணிப் பார்த்ததுண்டு..... இந்த ஆசாமிகள் நாட்டு வெடிகுண்டை விசிறியெறிந்தால்?.... கடையும் குளோஸ்; கங்காதரனும் குளோஸோ குளோஸ்!

அவன் தன்னந்தனியாகக் கடையிலே உட்கார்ந்திருக்கிறான். அந்த முரட்டுத் தடியர்களில் ஒருத்தன் வருகிறான். ''வாத்தியாரே, ஸப்போட்டாப் பழம் துன்றியா?....'' என்று கேட்டு மேஜையின்மேல் ஒரு பழத்தை வைத்து விட்டுப் போகிறான். மத்தியானம் சாப்பிடலாம் என்று இருக்கிறான் கங்காதரன். அதன் படியே பிற்பகல் மூன்று மணி வேளைக்கு அந்தத் தடியன் வைத்து விட்டுப் போனதை ஆவலுடன் எடுத்துப் பார்த்தால் அது ஸப்போட்டாப் பழம் இல்லை என்று தெரிய வருகிறது. 'எவ்வளவு சுலபமாக நம்மை ஏமாற்றி விட்டான் அந்த அயோக்கியன்!' என்று ஆத்திரம் ஆத்திரமாக வருகிறது. களி மண் உருண்டை போல் இருந்த அந்தப் 'பழத்தை' எடுத்துக் கடையின் மூலையிலே விசிறியெறிகிறான் கங்காதரன். 'படார்!' என்று அது வெடிக்கிறது. அதைத் தொடர்ந்து கண்ணாடிப் பாத்திரங்கள் நொறுங்குகின்றன. 'ஐய்....யைய்....' என்று கூச்சல் போடுகிறான் கங்காதரன்.

இப்படி ஒரு கனவு.

விடைத்த மூக்கும் வலைக் கொண்டையுமாக ஒரு பெண் வருகிறாள். ''காப்லெட் இருக்கிறதா உங்களிடம்?....'' என்று கேட்கிறாள் கிளிக் குரலில். ''இருக்கிறதே....!'' என்று அவன் பாய்ந்தோடிப் போய் எடுத்து வந்து கொடுக்கிறான். பில்லைப் போட்டு நீட்டுகிறான். பணத்தைக் கொடுப்பதற்காக டம்பப் பையைத் திறக்கிறாள். பத்து ரூபாய் நோட்டு ஒன்றையும் எடுத்துக் கொடுக்கிறாள். பிறகு பைக்குள்ளிருந்து லிப்ஸ்டிக்கை எடுத்துக் கடைக் கண்ணாடியில் பார்த்தபடியே உதட்டுச் சாயம் பூசிக் கொள்கிறாள். மீதிச் சில்லறையைப் பவ்வியமாக நீட்டும் அவனிடம், லிப்ஸ்டிக்கை நீட்டுகிறாள். பார்க்கிறான்; தூக்கிவாரிப் போடுகிறது. அது லிப்ஸ்டிக்கே இல்லை; சின்னஞ்சிறு துப்பாக்கி! ''வாடகைப் பணம் எங்கே?.... உம் ! எடு!'' என்று மிரட்டுகிறாள் அந்த லிப்ஸ்டிக் துப்பாக்கியை ஆட்டியபடியே.

இன்னொருத்தர் வருகிறார். நான்கைந்து 'டீ செட்டு'கள் பொறுக்கியெடுக்கிறார். அவற்றைப் பெட்டிக்குள் வைப்பதற்கு முன் வழக்கம் போலத் தட்டிக் காண்பிக்கிறான் கங்காதரன். 'ணங்!' என்ற ஓசையோடு தட்டு ஒன்று உடைகிறது. உடைந்த தட்டுக்குள் தங்கக் கட்டி ஒன்று பளபளவென்று மின்னுகிறது; டாலடிக்கிறது. ''உம்!....'' என்று உறுமுகிறார் அவர். ''எத்தனை நாட்களாக இந்தக் கள்ளக் கடத்தல் வியாபாரம்?....'' என்று மிரட்டுகிறார். அவருடைய கைகள் அவனை நோக்கி நீள்கின்றன. நெற்றியிலே ஒரு தட்டுத் தட்டி, தலையைப் பிடித்து உலுக்குகிறார். தலை 'மொட்டு மொட்'டென்று எதன் மீதோ மோதுகிறது. இலேசாக வலிக்கவும் செய்கிறது. கையிலே ஊசி ஏறின மாதிரி 'சுருக்' என்கிறது. மயக்கமடையச் செய்யும் இஞ்செக்ஷனோ, ஒருவேளை? மீண்டும் இரண்டு சுருக், சுருக்.

சடாரென்று நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டான் கங்காதரன். ''பட்டப் பகலில் என்ன தூக்கம்?'' என்று சிரித்தபடியே கேட்டுக் கொண்டு எதிரில் நின்ற ஆசாமியைப் பார்த்ததும் உச்சி குளிர்ந்தது அவனுக்கு.

''ஹா!.... நீயா!.... சீ...தா....!''— என்றான்.

''ஆமாம், நானேதான்!'' என்று சிரித்தாள் சீதா.

''.... எங்கே இவ்வளவு தூரம்?....'' என்று விசாரித்தான் கங்காதரன்.

''இது எங்களுக்குக் கடைசி வருஷமில்லையா?.... காலேஜிலே எல்லாரும் ஜாலியாக எக்ஸ்கர்ஷன் கிளம்பினோம், மெட்ராஸுக்கு.....''

''என்னென்ன பார்த்தீர்கள்?....''

''லைட் ஹவுஸ், மெரீனா, ஜூ, மியூஸியம்..... இப்போது நேராக ஏரோட்ரோமுக்குப் போய்க் கொண்டிருக்கிறோம்.''

''இரு இரு. இன்னும் கொஞ்ச நேரத்தில் எங்க முதலாளி வருவார். அவரையும் பார்த்து விட்டுப் போ....''

''மெட்ராஸிலே பார்க்க வேண்டியவைகளிலே அதுவும் ஒன்றா?....'' என்றவள் கடிகாரத்தைப் பார்த்தாள். ''அடடா! நேரமாகிறது.... அவர்கள் எல்லாரும் எக்மோர் ஸ்டேஷனில் காத்துக்கொண்டிருப்பார்கள் எனக்காக. உங்கள் அறை விலாசத்தைச் சொல்லுங்கள்; அப்புறமாக வந்து பார்க்கிறேன்.....'' என்று பரபரத்தாள்.

''அறை விலாசம் என்ன, முழு விலாசமே கேட்டுக் கொள்ளேன், நம்பர் ஒன்பது, மூக்காத்தாள் தெரு, புரசைவாக்கம்.....''

''டாட்டா!.... பைபை....!'' என்று கையாட்டிவிட்டுப்பறந்தது அந்தச்சிட்டு.

அன்றிரவு, வழக்கமாகச் சாப்பிடும் சந்திர பவனில், வழக்கமாகப் போடுகிற வற்றல் குழம்பையும் ஆனிக் கொத்தவரங்காய்க் கறியையும் தின்று சிரமம் தீர மெதுவாக ஆடி அசைந்து கொண்டு அவன் அறைக்குத் திரும்பினால் —

ஹா! அங்கே நிற்பது யார்? சீதா மாதிரி இருக்கிறதே!

சீதாவேதான் !

''என்ன சீதா!.... இன்றைக்கு ஒரு நாள் இங்கே தங்கிவிட்டுப் போகலாம் என்று வந்திருக்கிறாயா?....'' என்று கேட்டான் கங்காதரன் ஆவலுடன்.

'இல்லை' என்று மெதுவாகத் தலையசைத்தாள் அவள்.

''பின்னே என்ன விஷயம்?....''

''எங்கள் எல்லோரது மானமே உங்கள் கையில்தான் இருக்கிறது.....'' என்றாள் சீதா தீனமான குரலில்.

''என்ன விஷயம்?.... சொல்லேன்!'' என்றவன் அவளது விழிக்கடைகளில் திரண்டிருந்த கண்ணீர் முத்துக்களைச் சுட்டு விரலால் தட்டி விட்டான். அவை பொட்டுப் பொட்டென்று விழுந்து தெறித்த பிறகே, அவை கதாசிரியர்கள் சொல்வதுபோல் முத்துக்களல்ல, வெறும் கண்ணீர்த் துளிகள் என்பது தெரிந்தது.

''நான்தான் எங்கள் 'எக்ஸ்கர்ஷன்' கோஷ்டிக்குத் தலைவி....''

''அப்படியா? ரொம்ப சந்தோஷம்! கங்கிராட்ஸ் !......''

''அதனாலே பணம் முழுதும் என்னிடம் கொடுத்து வைத்திருந்தார்கள். நான் அதை என் கைப் பையிலே போட்டு வைத்திருந்தேன்.''

'' அந்தக் கைப் பை இப்போது தொலைந்து போய் விட்டதாக்கும்!''

''ஆமாம்.... ஆனால் அது இருக்கிற இடம் எனக்குத் தெரியும்....''

''எங்கே?....''

''உங்கள் கடைக்கு வந்து உங்களோடு பேசிக் கொண்டிருந்தேன் அல்லவா? அங்கேதான் அதை ஞாபக மறதியாக வைத்துவிட்டுப் போயிருக்கிறேன்.''

''பூ! இவ்வளவுதானா விஷயம்! நாளைக் காலையிலே கடையைத் திறந்து எடுத்துக் கொண்டால் போயிற்று....''

''அது வரைக்கும் எங்களாலே காத்திருக்க முடியாதே! விடியற் காலையிலே சாத்தனூருக்குப் புறப்படுவதற்கு ஏற்பாடு செய்திருக்கிறோம். காலையில் முதல் காரியமாக ஹோட்டல் 'பில்'லைக் கொடுத்தாக வேண்டும். இல்லாவிட்டால் இது ஒரு புது விதமான மோசடியாக்கும் என்று ஹோட்டல்காரர் நினைத்துக் கொள்ள மாட்டாரா?''

''அது கிடக்கட்டும்; கையிலே பணமில்லாமல் இன்றைக்குச் சாயங்காலம் ஏரோட்ரோமுக்கு மட்டும் எப்படிப் போனீர்களாம்?....''

'' ஐயோ !.... அதையேன் கேட்கிறீர்கள்..... எக்மோர் ஸ்டேஷனுக்குப் போன பிறகுதான் ரயில் டிக்கெட் வாங்

அன்பர்களுக்கும் ஆதரவாளர்களுக்கும்

## எமது தீபாவளி நல் வாழ்த்துக்கள்!



**In India a tradition of cordial hospitality awaits you at**

# RITZ CHAIN OF HOTELS

Designed for gracious living, our hotels provide luxurious and beautifully decorated air-conditioned apartments, each with radio, telephone and attached bath. The highest standards of efficient and courteous service awaits you at our hotels. Choicest continental and Indian cuisine.




Firpo's
CREDIT CARD HONOURED



- RITZ HOTEL BOMBAY
- RITZ HOTEL HYDERABAD
- HOTEL METROPOLE MYSORE
- RITZ CONTINENTAL HOTEL (Under Construction) CALCUTTA
- AIRLINES HOTEL BOMBAY
- RITZ HOTEL COONOOR
- HOTEL KRISHNARAJASAGAR MYSORE
- FIRPO'S RESTAURANT (Established Since 1917) CALCUTTA





Service Advtg. Studio

க் கூடக் கையில் பணமில்லை என்பது தெரிய வந்தது. பேசாமல் ஹோட்டலுக்கு நடையைக் கட்டுகிறேன்...."

"ஐயோ! வைத்தியமே! வைத்தியமே!" என்று தலையில் அடித்துக் கொண்டான் கங்காதரன். "எலெக்ட்ரிக் ட்ரெய்னுக்குப் போய் யாராவது டிக்கெட் வாங்குவார்களா?..... அது ஃபிரீ சர்வீஸ் ஆயிற்றே!..... அதுவும் உங்களைப்போல் ஏழெட்டுப் பேர் காலேஜ் பெண்களாகச் சேர்ந்து போனால் டிக்கெட் கலெக்டர்கள் மூச்சுக்கூட விடமாட்டார்களே!...." என்று அங்கலாய்த்தவன், "இப்போது என்ன செய்ய வேண்டுமென்கிறாய் நீ?...." என்று கேட்டான்.

"நீங்கள் உடனடியாகக் கடையைத் திறந்து என் கைப் பையை எடுத்துக் கொடுக்க வேண்டும்....."

"கடைச் சாவி என்னிடம் இல்லையே, சீதா..... முதலாளியிடம் அல்லவா இருக்கிறது.......!"

"அவர் வீட்டுக்குப் போய்த்தான் விஷயத்தைச் சொல்லிச் சாவியை வாங்கிக் கொள்வோமே? நீங்கள் வேறு நான் அவரைப் பார்க்க வேண்டும் என்று சொன்னீர்களே, மத்தியானம்? இப்போது பார்க்கிறேனே அவரை....."

"ஐயோ! அவர் 'மூட்' எப்படி இருக்கும் என்று சொல்வதற்கில்லையே, சீதா.... இன்றைக்குச் சீட்டு 'கலெக்ஷன்' சரியாக இல்லையென்றால் என்னென்று எரிந்து விழுவாரே!...."

"பரவாயில்லை, பயப்படாதீர்கள். நிலைமை இவ்வளவு மோசமாக இருந்தால் 'இந்தப் பெண் எவர்சில்வர் சீட்டிலே சேர வேண்டும் என்று சொன்னாள்; அழைத்துக் கொண்டு வந்தேன்!' என்று அடித்து விடுங்கள்...."

"வாட்!.... ராத்திரி பத்து மணிக்கு ஒருத்தி வந்து சீட்டிலே சேரவேண்டும் என்று சொல்வாளா என்ன!"

"உங்களுக்குப் பெண்களைப் பற்றியும் தெரியாது; எவர்சில்வரைப் பற்றியும் தெரியாது!.... பேசாமல் புறப்படுங்கள் உடனே!" என்று விரட்டினாள் சீதா.

அவசரம் அவசரமாக ஒரு டெரிலின் 'ஸ்லாக்'குக்குள் தன்னை நுழைத்துக் கொண்டு புறப்பட்டான் கங்காதரன்.

மீர்சாஹிப் பேட்டை கனிமுல்லாகான் தெருவைக் கண்டுபிடித்துக் காதர் பாட்சாவின் வீட்டையும் கண்டுபிடித்துக் கதவைத் தட்டும்போது மணி பத்தேகால்.

கதவை யாரோ தட்டுகிறார்கள் என்றவுடனேயே பாட்சாவுக்குப் பயம் வந்துவிட்டது. போன வாரம் பஷீர் ராஜ் என்கிற ஆளிடம் பெங்களூர் குதிரைப் பந்தயத்துக்கு 'டிரேபின்' ஒன்றுக்குப் பணம் வாங்கிக் கொண்டு, அவருடைய போதாத காலத்தின் கொடுமையால், அதைச் சாப்பிட்டும் விட்டார். ஆனால் அந்தப் பொல்லாத குதிரைகள் இவருடைய பிழைப்பில் மண்ணடிக்க வேண்டும் என்கிற ஒரே காரணத்துக்காக ஓடி வந்து விட்டன. பஷீர்ராஜ், 'பணத்தைக் கொண்டு வா' என்று நான்கு நாட்களாகக் கெடுபிடி செய்து கொண்டிருக்கிறான். அவர் எங்கே போவார், தொண்ணூறாயிரம் ரூபாய்க்கு.....? சாயந்திரம்கூட அவன் வந்து மிரட்டிவிட்டுப் போனான். போலீஸிலே போய் இந்தப் 'பக்கெட் ஷாப்'



"என்ன மாமா! உங்களிடம் நல்ல மசால்வடை வாசனை வருகிறதே?"
"நல்லெண்ணெயோட பட்சணம் சுட்ட எண்ணெயையும் கலந்து தேச்சண்டுட்டார், அப்பா!"

பைப் பற்றித் தகவல் கொடுக்கப் போவதாக, அவன்தான் திரும்பவும் வந்துவிட்டானோ என்ற உதைப்புடனேயே கதவைத் திறந்தவருக்குக் கங்காதரனையும் ஒரு பெண்ணையும் கண்டதும்தான் பாதி உயிர் வந்தது.

"இன்னப்பா, இந்த வேளையிலே வந்து நிக்கறியே..!.." என்றார் பாட்சா. சுருக்கமாக விஷயத்தை எடுத்துச் சொன்னான் கங்காதரன். பஷீர்ராஜும் போலீஸ்காரரும் வந்து தன்மானம் கப்பல் ஏறுவதற்குள் இவர்கள் போய்விட்டால் போதும் என்ற எண்ணத்தில் உடனடியாகச் சாவியை எடுத்துக் கொடுத்தார் பாட்சா. இருவரும் மீர்சாஹிப் பேட்டையிலிருந்து நடந்தே மவுண்ட்ரோடுக்கு வந்து சேர்ந்தார்கள்.

கடையைத் திறந்து, விளக்கைப் போட்டான் கங்காதரன். மேஜையின் மீது சீதாவின் கைப்பை இருக்கிறதா என பார்த்தான் ஆவலுடன். காணோம்!

"காணோமே!...." என்றான். அதுவே எதிரொலித்த மாதிரி இருந்தது — சீதாவும் அதே சமயத்தில் அதே வார்த்தையைச் சொன்னதால்.

"எங்கே போயிருக்கும்?...." என்று கேட்டாள் சீதா அடுத்தபடியாக.

"அதுதானே தெரியவில்லை...."

"நான் வந்தபோது இங்கே ஒரு சின்னப் பையன் இருந்தானே, அவன் எடுத்திருப்பானோ ஒரு வேளை?......" என்று சந்தேகத்தை எழுப்பினாள்.

"சேச்சே!.... தரையிலே பீடித்துண்டு ஏதாவது கிடந்தால் அதில்தான் அவன் புத்தி போகுமே தவிர, இவ்வளவு பெரிய விஷயங்களுக்கெல்லாம் போகவே போகாது!...." என்று உறுதியளித்தான் அவன்.

சுற்று முற்றும் திரும்பித் திரும்பித் தேடிப் பார்த்தார்கள். மேஜைக்கு அடியில்; கதவுக்குப் பின்னால்; குப்பைத் தொட்டியில். ஊஹூம்; ஒன்றும் கிடைக்கவே இல்லை.

திடீரென்று, "அதோ! அதோ!" என்று கூவினாள் சீதா. திரும்பிப் பார்த்த கங்காதரனுக்குப் புரிந்தது. கறுப்பும் வெள்ளையுமாகப் பூனையொன்று அவன் கடையை வட்டமிடுவது வழக்கம். அதன் வாயிலேதான் அந்தச் சின்னஞ்சிறு கைப்பை இருந்தது. பூனையோ உச்சியில் இருந்த ஒரு தட்டில் உட்கார்ந்து கொண்டு பையைக் கடிக்க முயன்று கொண்டிருந்தது.

'ஒரு பூனையைக் கவரும்படியாகப் பைக்குள் என்ன இருக்கும்' என்று அவன் மூளையைப் போட்டுக் கசக்கிக் கொண்டிருக்கும்போதே, "அச்சச்சோ!" என்றாள் சீதா.

"என்ன?.... என்ன?...."

"மத்தியானம் ஏஜ் கான்டீனிலே எல்லாரும் மசால் வடை சாப்பிட்டோம். என்னாலே பாதிக்கு மேலே சாப்பிட முடியவில்லை. அப்புறம் தின்று கொள்ளலாம் என்று அதைப் பைக்குள் போட்டு வைத்தேன். அந்த வாசனையை மோப்பம் பிடித்துக் கொண்டுதான் இந்தப் பூனை பையைத் தூக்கிக் கொண்டு போயிருக்கிறது!...."

"அப்படியா?...."

"என்ன, பார்த்துக் கொண்டே நிற்கிறீர்களே, பூனையை விரட்டுங்களேன்!" என்று அதட்டல் போட்டாள் சீதா.

"அந்தக் காலத்திலே யாரோ ஒரு தமிழ்ப் பெண் புலியையே முறத்தாலே அடித்து விரட்டினாளாம்.... ஸ்கூலிலே படித்திருப்பாயே!.... நீ என்னடாவென்றால் ஒரு பூனையை விரட்டுவதற்கு என்னைக் கூப்பிடுகிறாய்!...." என்று அலுத்துக் கொண்டவன், "உஸ்!" என்று பூனையை நோக்கிக் கையை வீசினான். அது வெறும் கைதான், அதுவும் பாசாங்குக்காக வீசப்பட்ட கைதான் என்று அந்தப் பூனைக்கு எப்படித் தெரியும்? அது கைப் பையையும் கவ்விக் கொண்டு, கண் மண் தெரியாமல் விழுந்தடித்துக்கொண்டு ஓடத் தொடங்கியது — நாலு செட் பிங்கான் தட்டுக்களைத் தட்டிவிட்டபடியே.

"போச்! போச்!...." என்று அலறினான் கங்காதரன்.

"ஒன்றும் போகவில்லை!... உள்ளேதான் இருக்கிறது பூனை!...." என்ற சீதா, பூனை வெளியே போய்விடாமல் இருக்க வேண்டுமே என்பதற்கு முன்னெச்சரிக்கையாகக் கடைக் கதவையும் மூடிச் சாத்தினாள்.

அடுத்த பதினைந்து நிமிடங்களுக்கு அங்கே பூனை வேட்டை ஜாலியாக நடந்தது. இந்தப் பக்கத்திலிருந்து அந்தப் பக்கமும், மேலும் கீழும் பூனை தாவியது. "ஹாய்! ஹூய்!" என்ற பயங்கரக் கூச்சலைக் கேட்டு, ஒவ்வொரு தாவலுக்கும் ஒரு டஜன் டம்ளர்கள், அல்லது இரண்டு டீ செட்டுகள், அல்லது முக்கால் டஜன் பிங்கான் தட்டுக்கள் என்ற விகிதப்படி விழுந்து நொறுங்கிக்கொண்டிருந்தன. பதினைந்து நிமிடங்களுக்குள் முக்கால் கடை அவுட்!

கடைசியில் அந்தக் குண்டுப் பூனைக்கே இந்த விளையாட்டு பிடிக்கவில்லை போல் இருக்கிறது. 'சே! என்ன அற்பமான மனிதர்கள்!.... கேவலம் ஓர் அரை மசால் வடைக்குப் போய் இந்தப் பாடு படுத்துகிறார்களே!' என்று அலுத்துக் கொண்டு, பையைப் போட்டுவிட்டு வாசல் பக்கமாக ஓடியது. கதவு சாத்தி

விருக்கவே, அது முட்டி மோதிக் கொண்டு திரும்பிப் பாய, அது பாய்ந்த இடத்தில் சீதா இருக்க, அவள் அலறி நடுங்கிக் கொண்டு கண்ணாடி ஜாடிகள் மேலே சாய, கணகண, கிளிங் கிளிங், டிங் டிங்....! ஒரு டஜன் ஜாடிகள் உயிர்த் தியாகம் செய்தன.

கதவைத் திறந்து விட்டு, பூனையை விரட்டிவிட்ட பிறகேதான் பிரத்தியட்ச நிலைமை புரிந்தது கங்காதரனுக்கு. அரைமணி நேரத்துக்கு அங்கே கண்ணாடி மழை பெய்ததோ என்று சந்தேகப்படும்படியாக எங்கே பார்த்தாலும், பெரிதும், சிறிதும், பொடிப் பொடியுமாகக் கண்ணாடித் துண்டுகள்; பீங்கான் சில்லுகள். பூகம்பம் நேர்ந்திருந்தால் கூட இப்படியொரு சேதம் விளைந்திருக்காது என்று சத்தியம் செய்யுமளவுக்கு எல்லாம் நொறுங்கிப் போயிருந்தன.

சீதா அவன் அருகில் வந்தாள். "என்னால் உங்களுக்கு ரொம்பச் சிரமம்...." என்றாள் மெல்ல.

"ஹஹ்ஹஹா!...." அவன் சிரித்தான். "சிரமமா?.... எனக்கா?.... நாளைக்கு வந்து இங்கே குப்பைகூட்டப் போகிறவனுக்கல்லவா சிரமமெல்லாம்? ஹஹ்ஹஹ்ஹஹ்ஹஹ்ஹஹ்ஹஹா! பெண்ணே....! நாளை என் முதலாளி வந்து பார்த்தாரானால் என்ன சொல்வார் தெரியுமா ?"

'தெரியாது' என்று தலையசைத்தாள்.

"போலீசுக்குப் புகார் கொடுப்பார். அவர்கள் வந்து எனக்குக் காப்பிடுவார்கள். கூண்டிலேற்றுவார்கள். குற்றம் சாட்டுவார்கள். அப்புறம் ஆறு மாதமோ ஒரு வருடமோ கம்பி எண்ணிப் பழகிக் கொள்ளச் சொல்வார்கள்."

"ஹா !"

"பரவாயில்லை.... ஆனால் பெண்ணே, நான் உன் கொள்ளை முகத்தைப் பார்ப்பதற்காகக் கோவை ஜெயிலுக்கு மாற்றிக் கொள்கிறேன். நீ அவ்வப்போது வந்து பார்க்கிறாயா?.... வரும்போது எனக்குப் பிடித்தமான உருளைக் கிழங்கு போண்டாவும் உடைத்த கடலையும் வாங்கிக் கொண்டு வருகிறாயா?"

'ஹா !.... என் கோவைக் கோவையில் பார்க்க வேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்தேனே! அந்த ஆசை இப்படித்தானா நிறைவேற வேண்டும்? ஈசா, ஈதென்ன சோதனை!' என்று வருத்தப்பட்ட சீதா, "அப்படியே செய்கிறேன் சுவாமி!" என்று உறுதியளித்தாள்.

சீதாவும் அவனும் கையும் மெய்யுமாக அவசரம் அவசரமாக வெளியேறும்போது அடுத்த கடைக்குள் அந்த முரட்டு மீசை ஆசாமிகள் நுழைந்ததைக் கங்காதரன் கவனிக்கவே யில்லை.

மறுநாள் அவன் கடைக்குப் போகவே இல்லை; அடுத்த நாளும் போகவில்லை. வீடு தேடி வந்த துக்காரியிடம் கடைச் சாவியையும் மேஜைச் சாவியையும் எடுத்துக் கொடுத்து, "முதலாளி கேட்டால் முந்நூற்றுப் பத்து டிகிரி ஜுரமாம் அவருக்கு என்று சொல்லிவிடு' என்று சொல்லியனுப்பினான். மூன்றாம் நாள் ஓசைப்படாமல் ஊருக்குப் போய் விடலாம் என்று பெட்டி படுக்கையைக் கட்டிக் கொண்டிருக்கும்போது பாட்சா வீடு தேடி வந்து விட்டார். அவர் பின்னாலேயே ஜம்புலிங்கம், இருதா மீசைக்காரர்கள். 'சரி, நம்மைப் பிழியத்தான் இவர்களைக் கூப்பிட்டுக் கொண்டு வந்திருக்கிறார்' என்று தீர்மானம் பண்ணி விட்டான் கங்காதரன்.

"இன்னாப்பா, உடம்பு எப்படி கீது?" என்று எடுத்த எடுப்பில் பாட்சா கேட்டதும் நடுநடுங்கிப் போய்விட்டான் கங்காதரன். அந்தச் சொற்றொடருக்கு மெட்ராஸ் பாஷையில் என்ன அர்த்தம் என்பதுதான் அவனுக்கு நன்றாகத் தெரியுமே!

பதில் பேசாமல் சும்மா இருந்தான்.

"இன்னாப்பா கேக்கறேன்.... சும்மா கீறியே?.....ஜுரம், ரொம்பாம் தேவலே தானா ?...."

கிண்டல் பண்ணுறியரோ ?....

"முன்னைக்கு இப்போ கொஞ்சம் தேவலே. ஊருக்குப் போய் 'ரெஸ்ட்' எடுத்துக்கலாம்னு பார்க்கிறேன்."

"ஊருக்கா! நல்லாயிருக்கே!..... நீ போயிட்டா அப்புறம் கடையை யார் பாத்துக்கிறதாம்?.... இந்த அநியாயத்தைக் கேளு. நீ அன்னிக்கு ராத்திரி லாவி வாங்கிக்கினு போனே பாரு. அன்னிக்கு இன்னா நடந்தது, தெரியுமா?.... கண்ணாடி பீங்கான் அல்லாம் பைஞ்சூடா பழுஞ்சப்பா!.... சொல்லு நாய்க்கரே, நீயே விளையந்தது!....."

ஜம்புலிங்க நாய்க்கர் தொண்டையைக் கனைத்துக் கொண்டார். "தம்பி.. இத பாரு.... இந்த லோமாதீங்க ரெண்டுகனே இவங்க வந்து, 'நாய்க்கரே, மிஷின் கடை வைக்கணும், இடம் கொடு'ன்னு கேட்டாங்க.... நானும் புத்திகெட்டதனமா இன்னா ஏதுன்னு கேட்டுக்காம நம்ம கடைக்குப் பக்கத்து இடத்தைக் கொடுத்திட்டேன். இவங்க இன்னா செய்தாங்கன்னு...."

"மிஷின் வச்சிருக்கானுங்கப்பா !" என்று ஆத்திரத்துடன் குறுக்கே புகுந்தார் பாட்சா.

"என்னது?.... என்னது?...."

"மிஷின்பா.... அதாம்பா மாவு மிஷின்..... அதுவும் ஒரு மிஷினு?.... மூணு! சீய்க்காய் மிஷினையும் சேத்து!"

நாயக்கர் தொடர்ந்தார்: "இவங்க இன்னா பண்ணியிருக்காங்கன்னு அன்னைக்கு ராத்திரி போயி, மிஷினெல்லாம் எப்படி ஓடுதுன்னு மூணு மிஷினையும் ஓட்டிப் பார்த்திருக்காங்க.... மூணுன்னா சும்மாவா?.... இன்னா அதிர்ச்சி இருக்கும்?.... அந்த அதிர்ச்சியிலே பக்கத்துப் பாய் கடையிலே இருக்கிற கண்ணாடி சாமான்களெல்லாம் விழுந்து உடைஞ்சு போயிருக்கப்பா!.... இன்னா அநியாயம் பாத்தியா?.... பாய் என்கிட்டே வந்து காச்சு மூச்சுன்னு சத்தம் போடறாரு. நான் இவங்ககிட்டே சத்தம் போட்டேன்...... இவங்க மிஷின்கிட்டே சத்தம் போடறாங்க....."

"மிஷின்தான் ஏற்கனவே சத்தம் போட்டுக் கொண்டிருக்கிறதே!...." என்றான் கங்காதரன் பணிவுடன்.

"கடசிலே உங்கிட்டே வந்தோம்.... நாயம் கேக்கலாம்னு.... நீயே சொல்லுப்பா!" என்றார் பாட்சா சாயிப்.

கங்காதரன் ஒரு நிமிடம் யோசித்தான். பிறகு, "நான் சொல்வதை எல்லாரும் ஒப்புக் கொள்வதானால் சொல்கிறேன்...." என்றான்.

"ஜுரூர் ! ஜுரூர் !....கட்டாயம்!..."

"மீசைக்காரர்கள் பேரிலேதான் முழுத் தப்பும்.... மூணு மிஷின் ஓடினால் அக்கம்பக்கத்திலே எவ்வளவு அதிர்ச்சி ஏற்படுமென்று அவர்கள் யோசித்திருக்க வேண்டும். அப்படிச் செய்யாததால் பாட்சாவுக்கு நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது..... எனவே, அந்த நஷ்டத்தை ஈடு கட்டுவதற்காக அவர்கள், அந்த மூணு மிஷினையும் பாட்சாவுக்குக் கொடுத்துவிட வேண்டும்.... என்ன, சரிதானா?...."

மீசைக்காரர்கள் தலையசைத்தார்கள்.

"அப்புறம் நாய்க்கர் சமாசாரம்..... ஒருவிதத்திலே பார்க்கப் போனால் மீசைக்காரர்களுக்கு இவரும் உடந்தை என்றுதான் சொல்ல வேண்டும். மிஷின் வைக்கப் போகிறார்கள் என்பது தெரிந்திருந்தும் அவர்களுக்கு அந்த இடத்தை வாடகைக்கு விட்டிருக்கிறாரே?... அதற்காக......"

"இன்னா செய்யணும்கிறே இப்போ? என்கிட்டே பைசாகூட இல்லே....."

"அவசரப்படாதீர்கள்! நீங்கள் ஒரு பைசாகூடத் தர வேண்டாம்.... ஆனால் அதற்குப் பதிலாக இன்னொன்று செய்ய வேண்டும்; பாட்சா ஆறு மாத வாடகை பாக்கி என்றீர்களே, அதைக் கேட்கக் கூடாது....."

"கடசிலே ஏமாந்தது நாங்கதானா?" என்றார்கள் மீசைக்காரர்கள்.

"பொறுங்கள். உடைந்த கண்ணாடித் துண்டுகளும், பீங்கான் துண்டுகளும் உங்களைச் சேர்ந்தவை. அவைகளை வாரி எடுத்துக் கொண்டு போங்கள்... புதிதாக வீடு கட்டுகிறவர்கள் காம்பவுண்டுச் சுவரில் பதிப்பதற்காக அவைகளைப் போட்டி போட்டுக் கொண்டு வாங்குகிறார்களா இல்லையா என்று பாருங்கள்!"

அதுவும் ஒரு நல்ல யோசனைதான் என்று மீசைக்காரர்கள் ஒப்புக்கொண்டு பெரிதாகக் கும்பிடு போட்டார்கள்.

பாட்சாவுக்கு ஆனந்தம் தாங்கவில்லை. "அந்தக் காலத்திலே கபிராக்கள்தான் இப்படிக் கொஞ்சம்கூடப் பிசகாமல் நியாயம் செய்வாங்கன்னு கேள்விப் பட்டிருக்கிறேன்..... நீயும் அதே மாதிரி சொல்றியே!" என்று கங்காதரனிடம் சொல்லிச் சொல்லி மாய்ந்து போனார்.

இப்போது மவுண்ட் ரோட் பக்கம் போனால் காதர் பாட்சாவின் கண்ணாடிக் கடையைப் பார்க்க முடியாது. பக்கத்திலிருந்த இடத்தையும் சேர்த்துப் பெரிதாக்கி, இன்னும் மூன்று மிஷின்கள் வாங்கிப் போட்டுக் கடையைப் பெரிதாக்கி விட்டார். 'காதர் மில்ஸ்' என்று பெயர்ப் பலகை தொங்குவதையும் காணலாம். வழக்கம் போல, கங்காதரன்தான் இங்கேயும் மானேஜர்.

இந்தப் புதிய வேலையை ஏற்றுக் கொண்டவுடன் அவன் கோயமுத்தூரிலிருந்த சீதாவுக்கு ஒரு கடிதம் எழுதினான் அதாவது:

"மை டியர் சீதா!

என்னவோ உங்கள் ஊரில்தான் மில்கள் அதிகம் என்று பெருமையடித்துக் கொண்டாயே! இப்போது என்ன சொல்கிறாய்?"

சீதாவை இப்போது யார் போய்க் கேட்டாலும், "நான் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறவர் மெட்ராஸிலே மில் மானேஜராக இருக்கிறார்!" என்று பெருமையாகச் சொல்லிக் கொண்டிருக்கிறாளாம்!

# காளிதாஸ ராமாயணம்

வால்மீகி செய்த ராமன் கதையைக் கம்பன், துளசிதாஸர் போன்ற பரம பக்தர்கள் தங்கள் இதயத்தில் தோய்த்துத் தாங்களாகத் தந்த வடிவத்துடன் இசைத்ததை உலகறியும். கவியுலகில் தனியிடம் பெற்ற காளிதாஸனும் தனது 'ரகுவம்ச மகா காவிய'த்தில் ராமனுடைய முன்னோரையும், பின்னோரையும் பாடுகையில் நடுவில் வெகு அற்புதமாக ராம காதையைப் பாடியிருக்கிறான். அவனது தீர்க்க திருஷ்டி வாய்ந்த கண்கள் கண்ட நூதனமான சில நிகழ்ச்சிகளை அடுத்து வரும் பக்கங்களில் ஓவியர் நடராஜன் கவினுறச் சித்திரித்துள்ளார்.

1. கர்ப்பவதியான கௌஸல்யை நித்திரை செய்கிறாள். அப்போது மகாலக்ஷ்மி கழுத்தில் கௌஸ்துப மணி மின்னத் தோன்றித் தனக்குத் தாமரைப் புஷ்ப விசிறியால் விசிறுவது போல் கனவு காண்கிறாள் கௌஸல்யை. மன்னு புகழ் கோசலையின் மணிவயிற்றிலே மகாவிஷ்ணு இருப்பதால், அடைபட்டுக் கிடக்கும் அக்கணவனுக்காக லக்ஷ்மி தேவி விசிறுகிறாள் போலும்!

2. ஸீதா கல்யாணக் காட்சியில் கவிஞனின் நோக்கைப் பார்ப்போம்: ராமன் ஹோமம் செய்யும்போது எழுந்த புகை ஸீதையின் கண்களைச் சிவப்பாக்குகிறது. காய்ந்த நிலத்தில் மழைத் துளி விழுந்தவுடன் பூமியிலிருந்து எழுந்த ஆவி, சிவப்பான கந்தள மலரைச் சூழ்ந்துகொள்வதை ராமன் பார்த்திருக்கிறான். புகையில் ஸீதையின் கண் சிவந்திருப்பது அக்காட்சியையே ராமனுக்கு நினைவூட்டுகிறதாம்.

3. காட்டிலேயும் நாட்டை இழந்த துயரம் தொடாமல் அண்ணல் வாழ்ந்த சீலத்தைப் பாருங்கள்: வனவாசத்தின்போது ஒரு மலையருகே கருவேப்பிலை மரத்தடியில் ராமனும் சீதையும் மகிழ்ந்திருக்கின்றனர். கருவேப்பிலைக் கொழுந்தை எடுத்து ஸீதையின் வெண்மையான கன்னத்தில் ராமன் ஒட்டுகிறான்.

4. பம்பை நதிக் கரையில் தம்பதியான சக்ரவாகப் பட்சிகள் தாமரையின் தாதுக்களை] ஒன்றுக் கொன்று ஊட்டிக் கொள்கின்றன. வளைந்து நெளிந்த அசோக மரக் கிளை ஒன்று அருகே பூத்து நிற்கிறது. ஸீதையைப் பிரிந்த ராமன் அசோகக் கிளையை அவளாக நினைத்து நெருங்குகிறான். அருகேயுள்ள லக்ஷ்மணன் 'அது விருட்சம்; தேவியல்ல' என்று கூறுகிறான்.

5. ராவணன் உடலில் ராமன் விட்ட அம்பு அந்த உடலைத் துளைத்துக் கொண்டு பூமியையும் துளைத்துக் கொண்டு, பாதாள உலகை அடைகிறது. ராவணனின் ரத்தம் பூசிய அவ்வம்பைக் கண்டதும், நாகர்களும், நாக கன்னிகைகளும், ராவணனால் சிறைப்பட்டிருந்த நாக கன்னிகைகளுக்கு விடுதலை வந்ததென மகிழ்கின்றனர்.

6. சிறை மீண்டு, ராமனோடு புஷ்பக விமானத்தில் அயோத்திக்குப் பறக்கும் ஸீதை, விமானத்துக்கு வெளியே கைநீட்டி, மேகங்களை அளைகிறாள். அப்போது மின்னல் ஒன்று அவள் கையைச் சுற்றிக் கொள்ள, ''உனக்கொரு புது வளையல் பார்!'' என்கிறான் ராமன்.

7. ராவண வதத்துக்குப் பின் ராம லக்ஷ்மணர்கள் அயோத்தி திரும்பியதும், கௌஸல்யையும், ஸுமித்திரையும் அவர்கள் போரில் அடைந்த காயங்களைத் தடவிப் பார்க்கிறார்கள். அக்காயங்கள் உலர்ந்து எவ்வளவோ நாட்களாகியிருந்த போதிலும் பச்சைப் புண்ணைத் தடவுவதுபோல் தயங்கிக் கண்ணீருடன் தடவுகிறார்கள். 'இதற்குக் காரணமான அபாக்கியவதி நானே' என்பது போல் ஸீதை முகத்தைக் கவிழ்த்துக் கொண்டு மாமிமார்களை வணங்குகிறாள்.

8. பட்டாபிஷேகத்துக்குப் பிறகு ராமனும் ஸீதையும் அரசனும் அரசியுமாகச் சித்திர மண்டபத்துக்குச் செல்கிறார்கள். அங்கு ஸீதையை ராவணன் எடுத்துச் சென்றது, ராமன் பரிதவித்து அவளைத் தேடியது, ஸீதை அசோக வனத்தில் துக்கித்தது போன்ற வரலாறுகள் சித்திரமாக வரையப்பட்டுள்ளன. முன்பு நடைமுறையில் அநுபவித்த அந்தத் துன்பத்தையே இப்போது ஓவியமாகக் காணுகையில் ராமனும் ஸீதையும் ரசிக்கின்றனர். ஒருவரையொருவர் பார்த்துச் சிரித்து மகிழ்கின்றனர்.



# வாயில்கள்

வனப்புடன் விளங்க விரும்பு
வோருக்கென்றே, கண்கவரும்
கோலங்களிலும், பெண்மையழகு
திகழும் வண்ணங்களிலும்
பொலியும் வாயில் சேலைகளைப்
பல்வேறு திறுசுகளிலே தயாரிக்
கின்றனர் டாடா டெக்ஸ்டைல்ஸ்
எங்கள் இதர துணிவகைகளில்
சில: கவர்ச்சிகரமான ப்ரிண்டுகள்,
நேர்த்தியான பாப்லின்கள்,
குளுமையான லான்கள் மற்றும்
கேம்ப்ரிக்குகள், கச்சிதமான
செக்குகள், ஸ்கார்ப்கள்,
கைக்குட்டைகள்.

எவருக்கும் கட்டுபடியாகும்
வகையில் பலதரப்பட்ட
துணிவகைகளை அளிக்கிறது
டாடா டெக்ஸ்டைல்ஸ்.

**TATA** *Textiles*

சில்லறை விற்பனைக் கடைகள்:
30, டூப்ளே ஸ்ட்ரீட், புதுச்சேரி.

சில்லறை ஸ்டாக்கிஸ்டுகள்:
"பாணி கார்ப்பொரேஷன்",
நேதாஜி சுபாஷ் ரோடு, சென்னை.

UKA-TT-71 TM










Lacto-Calamine

# போனஸ் போன இடம்

உண்மையில் அதுதான்! எட்டி எட்டிப் பார்த்துக் கொண்டிருந்த பூனைக் குட்டி டபக்கென்று குதித்து விடுகிறது.

"போனஸ் பதினைந்து தேதிக்குள் வந்து விடாதா மோகன்?" என்று கேட்டுக்கொண்டே அம்மா தக்காளி ரசத்தை வார்க்கிறாள்.

"இந்த வருஷம் போனஸ் கிளவ் பேசக் கூடாது. எங்கே பார்த்தாலும் 'கெரா'வும், 'லாக்கவுட்'டுமாக இருக்கிறதாக்கும்! மாசா மாசம் சம்பளம் கொடுக்கிறாங்களே, அதுவே பெரிசு தெரியுமா?"

"ஏண்டா, விளையாட்டுக்குச் சொல்றியா, நிசந்தானா?"

"சரியாய்ப் போச்சு. உன்னோடு விளையாட நேரமா இப்ப? எங்கம்பெனியிலும் தொழிலாளர் தகராறு புகைஞ்சிட்டிருக்கிறதாக்கும். தொழிற்சாலையை இழுத்து மூடிட்டான்னா, இருக்கிற ஆபீஸ்காரர்களுக்கும் நோட்டீஸை நீட்டிவிடுவார்கள்.



ராஜம் கிருஷ்ணன்

"அண்ணா, உன் டெரிலின் ஷர்ட்டை நான் 'வாஷ்' பண்ணினேன், பார்த்தாயா?"

உமா சட்டையைத் தூக்கிக் காண்பிக்கிறாள். தன் துணிகளை அழுக்குப் போகக் கசக்கி உலர்த்தச் சோம்பி அழுக்கைக் குவிக்கும் உமா அக்கறையாக அண்ணனின் சட்டையைச் சோப்புப் போட்டு உலர்த்த வேண்டுமென்றால் காரணமில்லாமலா இருக்கும்?

தட்டில் முறுமுறுவென்று உருளைக் கிழங்குத் துண்டுகள் வீற்றிருக்கின்றன. முருங்கைக்காய் சாம்பாரில் உண்மையாகவே புளியும் துவரம் பருப்பும் கூடிக் கொத்துமல்லி விதை மணக்கக் குலவுகின்றன. மோகன் உள்ளூறச் சிரித்துக் கொள்ளுகிறான். தாயானாலும் உடன் பிறந்தவர்களானாலும் சுயநலம் விதிவிலக்கல்ல. மனிதனைக் கண்ணுக்குத் தெரியாமல் ஆட்டி வைக்கும் பேராற்றல்

மோகனுக்கு என்ன பேசுவதென்றே புரியவில்லை. குற்றவாளிக் கூண்டில் நிற்பது போல் இருந்தது.

''உங்கிட்டச் சொல்வதற்கென்ன தம்பி? வயிற்றுப் பசி எரிந்துகொண்டு இருக்கும்போது சுறைய உணக்கை தூர்ந்து போய்விடும். பெரியவன் சரஸ்வதி நல்ல எடுப்பாகத் துடிப்பாக இருக்கிறான். பெற்றவன், பாவம், என்ன செய்வான்? காச நோய். இவ முந்திபோ, அவர் முந்தியோன்னு இருக்கிறாங்க. நீங்க பெரிய மனசு வைத்து ஏதானும் ஒரு வழி செய்ய வேணும் தம்பி!''

'ஆகட்டும். பார்க்கிறேன்' என்று சொன்னான்? — அவனுக்கே நினைவில்லை. சுவரில் ஒரு பெரிய வேங்கடாசலபதி படம் தொங்கிற்று. திருமாலுக்குக் கண்களை மறைத்து ஏன் நாமம் போட்டிருக்கிறார்கள் என்று சிந்தனையை ஓடவிட்டுப் பார்த்ததாக நினைவு.

''தம்பி, பொரிக வேட்டிருங்க எங்கே போனாலும். அந்தக் குழந்தைகளுக்கு யாரும் ஆதரவு இல்லாமலில்லை. நீங்கள் இருக்கிறீர்கள். முன்னே இடறி விழுந்தவர்கள் பின்னே வருபவர்களுக்கு வெளிச்சம் காட்டுபவர்கள் என்று சொல்வார்கள். தகப்பன் வாழ்க்கை, அவன்களுக்குப் படிப்பினையாயிருக்க வேணும் என்று பார்க்கிறேன். உங்க தலைமுறையில் நம்பிக்கை வைத்து, நான் எனக்குத் தெரிஞ்சதெல்லாம் பேசறேன். நீ இதைக் கட்டாயம் உன் கடமையாய்ச் செய்யணும் தம்பி...''

அவன் பிறகு அவன் தாய் தந்தை சகோதரர்களின் சுகம், நலம் விசாரித்தான். வாசல்வரை வந்து வழியனுப்பினான். அவனுடைய அமைதி அன்றிலிருந்தே குலைந்து விட்டது.

'கண்ணியமாக வாழும் குடும்பத்தினர் நாம்' என்று உறவெல்லாம் ஒரு கட்சியில் நின்று அந்த மாமாவை ஒதுக்கி வைத்திருக்கின்றனர். தாயின் ஒரே சோதரர் அவர். இருபது ஆண்டுகளுக்கு முன் மாமா சினிமா உலகை நம்பிக் கால் வைத்திருந்த காலம் அவனுக்கு நன்றாக நினைவிருக்கிறது. ''டேய், எங்க மாமா நடிச்சிருக்கார்டா'' என்று தெருவில் ஒட்டிய சுவரொட்டிகளைக் காட்டி அவன் பெருமையாகப் பேசிக் கொண்டிருந்திருக்கிறான். ''ஏண்டா, ஒரு பாஸ் கொடுக்கக் கூடாதா?'' என்று அவரைக் கேட்டு நச்சரித்த தாயார் நெடுநெடுக வீட்டம் சினிமா நடிகத் தம்பியைப் பற்றிப் பெருமையடித்துக் கொண்டிருக்கிறாள். மாமி கல்யாணம் அவனுக்கு நன்றாக நினைவிருக்கிறது. பெரிய காரில் ஐந்து விரல்களிலும் மோதிரங்கள் மின்ன, கட்டிச் சரிகை வேட்டி புரள மாமா மாமியுடன் அவர்கள் வீட்டுக்கு விருந்துண்ண வந்திருக்கிறார். அவர் நடித்த படம் பார்த்துவிட்டு, ஹோட்டலில் பாதாம் பூரியும், ஐஸ்கிரீமும் சாப்பிட்டது கூட நினைவில் இருக்கிறது. அந்தத் துறையில் முதலில் தலைநீட்டும் வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு ஒரு கதாநாயகனாகத் திகழ அவருக்கு நல்ல உடற்கட்டும் திறமையும் இல்லை என்று சொல்லிவிட முடியாது. அந்தத் தகுதியைப் பற்றிக் கொள்ள வாய்ப்பென்ற அதிர்ஷ்டம் மட்டும் அவருக்கு வரவேயில்லை. எப்போதோ வந்து எட்டிப் பார்த்துவிட்டுப் போகும் சில்லறை வேடங்களுடன் அவர் மெல்ல மெல்ல ஒதுக்கம் கண்டாலும், சினிமா உலகின் ஏனைய கவர்ச்சிகள் மட்டும் அவரைக் கவர்ந்து விழுங்கத் தவறவில்லை. போதைப் பழக்கங்கள் அனைத்தும் தேவைகளாயின. அவரைப்போன்று சினிமா உலகில் நுழைய வந்து, எட்டிப் பார்க்கும் வேடங்களுடன் நின்றுவிடும் இந்த ... இவனும் (பெயர் தெரியாது, அவனுக்கு) ஒரு பந்தமானான். குடும்



பமோ ஆண்டுக்காண்டு விரியும் பெருக்கம். அவன் உயர்நிலைப் பள்ளியில், கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த நாட்களில் மாமியும் சிறு குழந்தைகளும் அடிக்கடி வீட்டுக்கு வந்தார்கள். ஒருநேரச் சாப்பாடு, காப்பி என்று தங்கினார்கள்.

அவனுடைய தாய் சீறி விழுந்ததும் உண்டு. "எங்களுக்கே இங்கே சாண் ஏறினால் முழம் சறுக்குகிறது. அவனைச் சினிமாவும் வேண்டாம், இன்னொன்றும் வேண்டாம் என்று இழுத்து வருவதற்கு வழியுண்டானால் பார்! இங்கே வந்து சாப்பிட உட்கார்ந்தால் எப்படி?"

பிறகு மாமி வந்தே அவன் பார்க்கவில்லை. என்றேனும் குழந்தைகள் வரும். அநேகமாகப் பெரியவன்தான் வருவான்.

இப்போது நெடு நாட்களாக, ஏன் சில ஆண்டுகளாகவே அவர்கள் அவன் கண்களில் படவில்லை. எப்போதேனும் ஏதையேனும் கேள்விப்பட்டு விட்டு அம்மா பொலபொலப்பாள்.

வயிற்றுப் பிழைப்புக்காக இழிபெயரைச் சுமந்து கொண்டேனும் ஒரு தொழில் செய்பவனுக்கு இந்தச் சமுதாயத்தில் உள்ள பொறுப்புக்கூட உயர்படியில் உள்ள தன் தாயாருக்கு இல்லையே என்ற பரிதாபம் மேலிடுகிறது அவனுக்கு. வழக்கமில்லாத வழக்கமாக அவன் தன் தாயாரிடம் போய் புகல வேண்டியிருக்கிறது.

போனஸ் வாங்கிக் கொண்டு அன்று மாலையில் அவன் அலுவலகத்திலிருந்து வருகிறான். நடைபாதையில் சொல்லி வைத்தாற்போல் அந்த அம்மாள் எதிர்ப்படுகிறாள்.

அவன் அவளை எதிர்பார்க்கவில்லை. "தம்பி, ஒரு ஐந்து நிமிஷம். நீங்கள் தப்பாக நினைக்கக் கூடாது..."

"நான் இப்போது நேராக பஸ் ஏறி மாமா வீட்டுப் பக்கம்தான் போக இருந்தேன்...."

"எனக்கு அன்றைக்கே சொல்லக் கூச்சமாக இருந்தது. நீங்கள் உதவின்னு ஏதேனும் பணம் கொடுப்பதாயிருந்தால் தயவு செய்து அப்படிக் கொடுத்து விடாதிங்க... அது நன்மைக்கே உதவாது..." அவனுக்கு முதலில் அவள் கூற்றுப் புரியவில்லை.

"எனக்குச் சொல்ல இப்போதும் நாணமாயிருக்குது. பணம் அங்கே நிற்காது. அந்த பத்து ஒத்தாசை செய்வதாயிருந்தால் என்னிடம் கொடுத்து வச்சிருந்தால் நானே பொருளாக வாங்கிப் பசி நேரம் கஷ்டப்படாமல் பார்த்துக் கொள்வேன். சரஸ்வதிக்கு ஆபீஸில் எங்கேனும் பெட்டிக்குப் போக ஒரு நல்ல துணிகூட இல்லை. வீட்டுக்காரனுக்கு ஆறு மாச வாடகைப் பாக்கி. நான் உடலுழைச்ச ஏதேனும் கொடுத்தால்கூட ஆளுக்கு மூக்கில் வேர்த்துவிடும். அதுவுந்தான் முன்னெல்லாம் எங்கேனும் சமையல் வேலைன்னு போகும். இப்ப உடம்பிலே...."

அவள் சுற்றி வளைப்பதன் மர்மம் அவனுக்குப் புலனாகிறது. உள்ளம் கசிகிறது.

"நான் பணம்தான் கொடுத்து உதவலாம் என்று நினைச்சேன். வீட்டில் போனஸ் பணத்தைக்கூட அதனால் கொடுக்கவில்லை."

"தம்பி! உங்களுக்கு ஒரு குறையும் வராது. இந்தக் குணம் பார்த்த அன்றைக்கே புரிஞ்சிது...."

மோகன் யோசனையே செய்யவில்லை. தோள் பையைத் திறந்து மரக்கடை வாயிலில் நோட்டுக் கற்றையை அவளிடம் அளிக்கிறான்.

"ஐந்நூறு இருக்கிறது. எத்தனையோ கஷ்டத்தில் நீங்கள் சுயநலம் விட்டு இப்படி ஆதரவாக இருப்பது ஒரு அதிர்ஷ்டம் என்றுதான் சொல்வேன். நான் நிச்சயமாக அவளுக்கு வேலைக்கு ஏற்பாடு செய்கிறேன். கையில் பணமில்லாமல் அவர்களைப் பார்க்க எனக்கு மனமில்லை. ஞாயிற்றுக்கிழமை முடிந்தால் பார்க்கிறேன். வரட்டுமாம்மா?"

அவளுடைய கண்களில் நீர் மல்குகிறது. இரு கைகளையும் உயர்த்திக் கும்பிடுகிறாள். மோகனுக்கு இது புதிய அனுபவமாக இருக்கிறது.

அவர்கள் பல ஆண்டுகளுக்கு முன் தேனாம்பேட்டைப் பகுதியில் ஒரு சந்தில் குடியிருந்த நினைப்பு. குறுக்குத் தெருக்களில் சந்துகளில் அந்த நினைப்புடன் அவன் அரை மணி நேரம் தேடித் துருவிய பின் மாமா குடும்பத்தினரின் இல்லத்தைக் கண்டுபிடிக்கிறான்.

சந்து முனையில் சரஸ்வதியேதான் நின்றிருக்கிறாள். மாநிறம்தான். அந்த அம்மாள் கூறினாற்போல் எடுப்பும் துடிப்புமான முகம். சினிமா முகவெட்டு அவளுக்கு இருந்ததோ என்னவோ, ஆனால் ஓர் அரசியாக இருக்கத் தகுதி பெற்ற முகம். செவிகளில் ஒரு பித்தளை வளையமும், நாடா இல்லாத முடியுமாக அவர்கள் வீட்டுத் தூணில் சாய்ந்து கொண்டு நிற்பாளே அந்தப் பெண்ணா என்பதை இன்னமும் நம்ப முடியவில்லை. அவள் அவனைக் கண்டதும் ஓட்டமாய் ஓடி, மாமியையும் அடுத்துள்ள ஐந்து மக்களையும் சந்து முனைக்கு அனுப்பி வைக்கிறாள். சரஸ்வதியை எழிலரசியாக்கியிருக்கும் காலம், மாமியை எப்படி உருக்குலைத்திருக்கிறது! அவனுடைய தாயைவிட மூத்தவளாக உருமாறிப் போயிருக்கிறாள்.

"வா, வா, மோகன்தானே? எத்தனை நாளாயிற்று, பார்த்து!... குடிசை தாம்ப்பா இருக்குமிடம்..."

சாணம் மெழுகிய தரையில் அலுமினிய வட்டைகள் ஒன்றிரண்டைத் தவிர, மற்றவை மண் பாண்டங்கள்.

எங்கிருந்தோ ஒரு முக்காலியைக் கொண்டு வந்து போட்டு, "உட்காருங்கள்" என்று சரஸ்வதி உபசரிக்கிறாள்.

வறுமை எப்படி யெல்லாமோ உருக்குலைத்தும் மதியாதார் வாசல் மிதிக்காத அந்தத் தன்மையில் உறவினனாக ஒன்றும் தோன்றாமல் நிற்கிறான்.

"....அவர் எங்கே, நினைத்தால் எப்போதேனும் வருவார்... நேற்றுக்கூட சரஸ்வதியிடம் நான் சொன்னேன். 'அங்கே போய்ப் பார்த்துவிட்டு வாயேனம்மா. இரண்டு இடத்தில் பெரிக செய்தால்தானே வேலை கிடைக்கும்' என்று. அவளுக்கும் — வளர்ந்துவிட்டாள், இல்லையா? — வெட்கம்..."

அவளிடம் கொடுத்த பணம் இங்கு வந்து சேரவில்லையா? மோகனுக்குத் தன் உதவியை வெளியிட்டுக் கொள்ள நாணமாகவும் இருக்கிறது. அறிய ஆவலாகவும் இருக்கிறது.

மாமியோ மிக மகிழ்ச்சியுடன் அவர்களுடைய குடும்பத்தின் நல விசாரணை செய்கிறாள். ஓர் அரச குமாரனை வரவேற்கும் ஆரவாரத்துடன், பாவாடைச் சிறுமி ஒருத்தி சோடாக் கடையிலிருந்து ஒரு கிரஷ் வாங்கி வருகிறாள். ஒரு பூப்போட்ட கண்ணாடி டம்ளரில் சரஸ்வதி அதை ஊற்றி அவனிடம் தருகிறாள்.

அந்த அம்மாள் மொழிந்ததெல்லாம் உண்மையே. சரஸ்வதிக்கு உடுத்த நல்ல சேலைகூட இல்லை போலிருக்கு. உமா கட்டினாளே, அந்தச் சேலை... இவளுக்கு எவ்வளவு எடுப்பாக இருக்கும்!

ஐந்நூறு ரூபாயை அவளிடம் கொடுக்காமலே இருந்திருந்தால் அத்தகைய சேலை ஒன்றை வாங்கிக் கொடுத்திருக்கலாமே? — கிரஷைப் பருகிய பின்னரும் தொண்டை உலர்ந்து போகிறது. எப்படிக் கேட்பது?

"ஏதோ நீயேனும் வந்து போவதில் எத்தனையோ சந்தோஷம்..."

"சரஸ்வதியை எங்கள் கம்பெனிக்கு மனுப்போடச் சொன்னேனே...சொல்லி அனுப்பினேன்..."

"அப்படியா? யாரும் சொல்லவில்லையே! மாமாவிடமா சொன்னாய்? அவர் பார்த்ததாகச் சொல்லவில்லையே?"

"மாமாவிடம் இல்லை. மரக்கடைப் பக்கம் இருக்கிறாளே, அந்தம்மாள்..." தாவணித் தலைப்பை முறுக்கிக்கொண்டு பார்க்கும் சரஸ்வதிக்கு ஏதோ சொல்ல உதடுகள் துடிக்கின்றன.

"நீ பார்த்தாயா சரஸ்வதி?"

"முந்தாநாள் பார்த்தேன். இப்படி இவரைப் பார்த்ததாகச் சொல்லவில்லை. வேண்டப்பட்டவர்களிடம் சொல்லியிருக்கிறேன்னு சொன்னாள்."

"ஆமாம். உன்னிடம் சொல்ல என்ன வெட்கம்? எதிரே ஒரு வீடு போர்ஷன் காலி. குடிசையில் எத்தனை நாள் இருப்பது? அங்கே வீட்டுக்காரன் நூறு ரூபாய் அட்வான்ஸ் கேட்கிறான். போய்ப் பார்த்து வா. அப்பா இருந்தாலும் சொல்லு! என்று அனுப்பினேன். 'அவள் மட்டும்தான் இருந்தாள். பணம் கிடைக்கலே' என்று வந்துவிட்டாள். முன்னெல்லாம் அவளே எத்தனையோ ஒத்தாசை செய்திருக்கிறாள். இப்போதெல்லாம் அவளுக்கும் ஒன்றும் கிடைக்கலே..."

"அவள் நல்லமாதிரிதானே?"

"நல்லமாதிரிதான். இல்லாவிட்டால் அவள் வேலையைப் பார்த்துக்கொண்டு போயிருக்க மாட்டாளா?"

கசப்பை மறைத்துக் கொள்ள மாமி அசட்டுச் சிரிப்புச் சிரிக்கிறாளா?

மோகனுக்கு ஐந்நூறு ரூபாய் போன மர்மம் புரியவில்லை. மறுநாளே மரக்கடைச் சந்துக்குப் போய்ப் பார்க்கிறான். கதவில் பூட்டுத் தொங்குகிறது. அங்கு யாருக்கும் அவளைப் பற்றி விவரம் கூறத் தெரியவில்லை. அவனுக்கும் துருவி விவரம் விசாரிக்க மிகவும் வெட்கமாக இருக்கிறது.

ஊமை கெட்ட கனவு கண்டால் யாரிடம் சொல்லி அழ முடியும்?

தீபாவளி சரத்தாகவே இல்லை. உமாவுக்கு வெறும் வாயில் சேலையாக

# சுதேசி டைப் பவுண்டரி

( ஸ்தாபிதம் : 1906 )

**51, குருவப்ப செட்டித் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2**

டெலிபோன் : 84469 தபால் பெட்டி : 2433 தந்தி : "புவளு"

( இந்திய அரசாங்கத்தாரால் அங்கீகரிக்கப்பட்ட கண்டிராக்டர்கள் )

ஸ்தாபகர்



தோ. ஆறுமுக முதலியார்

கிளைக் காரியாலயங்கள் :

B-13, இண்டஸ்டிரியல் எஸ்டேட், சனத் நகர்
ஹைதராபாத்-18

போன் : 39002 தந்தி : "புவளு", செகந்திராபாத்

B-6, இண்டஸ்டிரியல் எஸ்டேட், ராஜாஜி நகர்
பெங்களூர்-10

போன் : 73305 தந்தி : "புவளு", பெங்களூர்

XIV/8310-A, கரியில் ரோடு, தபால் பெட்டி நெ. 4
எர்ணாகுளம்-8 (கேரளா)

போன் : 3207 தந்தி : "புவளு", எர்ணாகுளம்

இத் தீபாவளித் திருநாளில் நண்பர்களுக்கும் அபிமானிகளுக்கும்

**எங்களது மனமார்ந்த நல் வாழ்த்துக்கள் !**

இவை எந்தத் தயாரிப்புகட்கும் தலைசிறந்ததும், நீடித்து உழைக்கக் கூடியதும், அழகும் கவர்ச்சியும் பொருந்தியனவுமாகும். விலையுயர்ந்த நவீன யந்திர சாதனங்களால், மேனாட்டு முறைப்படி தயாரிக்கப்பெற்ற எங்கள் "கணபதி" புதிய தமிழ் எழுத்துக்களும் "ஆறுமுகம்" புதிய தெலுங்கு எழுத்துக்களும் "மணி" புதிய கன்னட எழுத்துக்களும் "சுதேசி" புதிய மலையாள எழுத்துக்களும் "கந்தர்" புதிய ஹிந்தி எழுத்துக்களும் புகழ் சிறந்த பல்லோராலும் பாராட்டப் பெற்றுள்ளன. மேலும் அச்சாபீஸ் நிர்வாகிகள் அனைவருடைய நன்மதிப்பையும் ஆதரவையும் பெற்றவையாகும்.

இந்தத் **தீபாவளி** மலரில் உபயோகிக்கப்பட்டிருக்கும் எழுத்துக்கள் "**கணபதி**" புதிய தமிழ் எழுத்துக்களே. இந்த எழுத்துக்களின் உறுதிக்கும், அழகான அமைப்பிற்கும் இந்த மலரே தக்க சான்று

பூரா விவரங்களுக்கு எழுதவும்

**தோ. ஆ. சுப்பிரமணிய முதலியார்,** நிர்வாக பாகஸ்தர்

முடிந்துவிட்ட தாங்கல். அவனுக்கும் ரங்குவுக்கும் நாலு முழ வேட்டிகள் கிடைக்கின்றன. அம்மாவும் அப்பாவும் ஒன்றும் வாங்கிக் கொள்ள வில்லை. மோகன் இந்தத் தீபாவளிகூடக் கொண்டாட இல்லாத வறுமையில் போராடும் மாமன் வீட்டையே எண்ணிக்கொண்டு அறைக்குள் படுத்திருக்கிறான்.

வெளியே பேச்சுக் குரல் கேட்கிறது.

"பெரியவர்களை நமஸ்காரம் பண்ணு, சரஸு..."

மோகன் குரல் கேட்டதும் திடுக்கென்று எழுந்து வருகிறான்.

புதியதொரு பூப்போட்ட நைலானில் வசந்த காலத்து அரசி போலவே காட்சியளிக்கிறாள் சரஸ்வதி. அவன் முன்பு கண்ட அதே ருக்மிணி கலர்ச் சேலையில் அந்த அம்மாள்.

".....அட.... வாங்கம்மா, வாங்க..." என்று முகம் மலர வரவேற்கும் மைந்தனை அம்மா விழித்து உறுத்துப் பார்க்கிறாள். சரஸ்வதியோ தயக்கத்துடன் அவனுடைய தந்தையையும் தாயையும் பணிந்தெழுகிறாள்.

"இதென்ன புதிசாயிருக்கே?..."

உமாவுக்கு இன்னமும் பண்பு தெரியவில்லை என்று மோகன் சமாளித்துக் கொள்கிறான்.

"நீங்கள்...ஊரிலேயே இல்லே என்றார்கள்?"

"ஆமாம் தம்பி. இவங்கப்பாவை ஆஸ்பத்திரியில் விட்டுப் பதினைந்து நாளாகிறது. ரொம்பக் கஷ்டமாயிருந்தது. இவர்களிடமும் சொல்வதில் பிரயோசனமில்லே... எப்படியோ... கடவுள் வழிகாட்டினார். ஆபரேஷன் செய்து போட்டிருக்காங்க. கொஞ்சம் குணம். இவர்களுக்கே நேற்றுத்தான் தெரியும். தம்பி மனசிலே என்ன நினைச்சிடுமோ என்று மனசுக்குக் கூச்சமாயிருந்தது. இந்தத் தடவை அவருக்கு உயிர் மீண்டது மோகனாலேதாம்மா.....கடவுள்தான் தம்பி மூலமாக வழி காட்டினார்..."

புற்றுக்குள் கைவிட்டாற்போல் அம்மா சீறி விழப் போகிறாளே என்ற உதறல் உண்டாகிறது மோகனுக்கு.

ஆனால் அம்மா பண்புடையவள். முகத்தை மட்டும் கோணிக்கொண்டு உள்ளே செல்கிறாள். நாவுக்கு வேலை கொடுக்கவில்லை. அப்பா எப்போதுமே நடுநிலை என்றால் நடு நிலைதான். எதற்கும் எதிரொலி காட்டாமலே கல்லைப் போல் உட்கார்ந்திருக்கத் தெரியும் அவருக்கு.

அவன் கல்லைப் போல் உட்கார்ந்திருப்பானா?

"உட்காருங்களம்மா, சரஸ்வதி, உட்காரேன்? இன்டர்வ்யூ கார்டு வந்திருக்குமே, எங்கள் கம்பெனியிலிருந்து?"

"உம்..." என்று கால் பெருவிரலைப் பார்க்கத் தலையைக் குனிந்துகொள்கிறாள் சரஸ்வதி.

மோகனுடைய கண்ணிதழ்களிலெல்லாம் கூட ஒளி மின்னுகிறது. அவர்களை உபசரிக்கும் எண்ணத்துடன் துணிவாகச் சமையலறைக்குள் நுழைகிறான்.

---

## காரணம் என்ன?



தனிச் சிறப்புடைய இந்திய நாகரிகம் புகழ்க் கோபுரத்தின் உச்சியைப் பல ஆண்டுகளுக்கு முன்பே அடைந்து விட்டது. மனித சமுதாயத்தின் வளர்ச்சிக்காகப் பாரதம் ஆற்றிய பரந்த கலைத் தொண்டு பொருள் பொதிந்ததும் போற்றத் தக்கதும் ஆகும். இந்தியப் பண்பாட்டின் அடிப்படையே இந்தியக் கலையாகும். அது போல இந்தியக் கலையின் அடிப்படையும் இந்தியப் பண்பாடாகும்.

கலைகள் அறுபத்து நான்கு என்பது வாத்ஸ்யாயனரின் கூற்று. ஜைன நூல்களோ அவற்றை எழுபத்திரண்டு என்கின்றன. மகான் புத்தரின் வாழ்க்கை வரலாற்றை வர்ணிக்கும் 'லலித விஸ்தாரம்' கலைகளின் எண்ணிக்கை எண்பத்தாறு என்கிறது.

கலை என்பது என்ன? அறிவு நூல்களின்படி, பழைய பாரம்பரியத் தத்துவத்தின்படி பார்ப்போமேயானால் பயன்படக் கூடிய எந்தக் கல்வியும் கலைதான். கைத்தொழில்கள், நுண்கலைகள் என்ற இரண்டும் கலையின் பாற்படும். பரந்த அறிவு உணர்ச்சி, விவேகம் இவைமீது எழும்பிய 'மனிதப் படைப்பே' கலை என்று ஹேமசந்திரர் கூறுகிறார். 'அமரகோச'த்தில் கலை என்பது சிற்ப சாஸ்திரத்தைக் குறிக்கும். வாத்ஸ்யாயனர் தம்முடைய காமசூத்திரத்தில் கலை என்பது கல்வி அறிவு என்கிறார். ரிக்வேதத்தின்படி கலை என்பது

# இந்தியக் கலை



டாக்டர் ஸத்யநாராயண
சஸ்திர சிகிச்சையில்
மட்டும் தேர்ந்த கலைஞர் அல்ல;
சிறந்ததோர் ஓவியக் கலைஞரும்கூட.
கத்தியையும் தூரிகையையும்
சுலபமாகக்
கையாளும் கரம் பெறுவும் பிடித்து
இந்தியக் கலையின் சிறப்பை
ஆராய்ச்சி நோக்கோடு
வர்ணிக்கிறது.
ஆங்கில மூலத்திலிருந்து
தமிழாக்கித்
தருபவர் குமாரி எஸ். லீலா.
புகைப்படங்கள் கட்டுரை
ஆசிரியரே எடுத்தவை.

□□□

வேதத்தின் பதினாறு பாகங்களையும் குறிப்பதாகும். வேதங்களில் காணப்படும் கலை என்னும் சொல் கல்வி, அறிவு என்பதன் பல அம்சங்களையே குறிக்கிறது என்று திட்டமாகச் சொல்லலாம்.

சிவபிரான், கங்கைக்கு ஆயகலைகள் அறுபத்துநான்கினையும் கற்பித்தார் என்று மகாபாரதம் கூறுகிறது. பாகவதத்தின் பத்தாவது அத்தியாயம், கிருஷ்ணனும் பலராமனும் சாந்திபனி







## டாக்டர் சி. சத்யநாராயண

என்னும் முனிவரின் கீழ், அறுபத்து நான்கே நாட்களில் அறுபத்து நான்கு கலைகளையும் கற்று முடித்தனர் என்று தெரிவிக்கிறது. இங்கு குறிப்பாகக் கட்டடக் கலை, சிற்பக் கலை, சித்திரக் கலை இவற்றை ஆராய்வோம்.

இந்தக் கலைகளின் வரலாறு, பாரத நாட்டின் வரலாற்றை விடத் தொன்மையானது. பாரத நாட்டின் கலைவடிவங்களுள் மிக மிகப் பழைமையானதை நமக்கு அறிவிக்க இப்போது ஹரப்பா, மொகெஞ்சதாரோ ஆகியவையே எஞ்சி நிற்கின்றன. மொகெஞ்சதாரோ, ஹரப்பா நாகரிகம் இந்தியக் கலை

யின் பொற்காலம் என்றே கருதப்படுகிறது. அன்று அந்தக் கலை பெற்றிருந்த முழுமை அதற்குப் பல நூற்றாண்டு காலத்துக்கு முற்பட்ட கலை உணர்வின் பலனாக இருத்தல் வேண்டும்.

சிந்து சமவெளி நாகரிகத்தின் நகரங்கள்தாம் இந்த ஹரப்பாவும், மொகெஞ்சதாரோவும். அந்த நாகரிகத்தைப் பின்வந்த எந்த நாகரிகமும் மிஞ்சவில்லை. இந்த நாகரிகத்தின் காலம் கி.மு. 3000க்கும் முற்பட்டதாகும்.

மொகெஞ்சதாரோ நமக்குத் தெரிவிப்பது என்ன? புதையுண்டு போன ஒரு நகரத்தை அது நமக்குக் காட்டுகிறது. மொகெஞ்சதாரோ என்றாலே 'மாண்டோர் நகரம்' என்றுதான் பொருள். இங்கு கட்டப்பட்ட வீடுகள் ஒழுங்கான முறையில் அமைக்கப்பட்டு, சீரான பாதைகளோடு, மிகச் சிறந்த வடிகால் வசதிகள் பெற்றதாயிருந்தன. உண்மையில் இவை யாவும் ஒப்பற்ற கட்டடக் கலையின் நுணுக்கங்களையும் சுகாதார வசதிகளையும் மனத்தில் கொண்டு அமைக்கப் பெற்றவை. நகரத்தின் மத்தியில்



மேரூரிலுள்ள ஊர்த்வ தாண்டவமூர்த்தி



பிட்சாடனர் சிற்பம் - திருவண்ணாமலை



நாகார்ஜுனகோண்டாவிலுள்ள புத்தர் சிலை



திருவண்ணாமலை அருணாசலேசுவரர் ஆலயம்

பெரிய நீச்சல் குளம் இருந்தது. அசுவமேத யாகத்தின்போது 'அவபிருத ஸ்நானம்' எனப்படும் தூய குளியலுக்காக இது கட்டப்பட்டது என்பர். அதில் தண்ணீர் நிரம்பவும் வெளியேறவும் வசதிகள் இருக்கின்றன. சவுக்காரம் வைக்கும் இடங்கள் உட்பட மிகச் சிறந்த சுகாதார வசதிகளை இது பெற்றிருந்தது என்பதைப் பல சின்னங்கள் வலியுறுத்துகின்றன.

இங்கு புதைபொருள் ஆராய்ச்சிகள் வெளிப்படுத்திய பொருள்களில் முக்கியமானவை; கற்சிலைகள், இலச்சினைகள், சிற்பங்கள், மண் பதுமைகள், நுண்ணிய வேலைப்பாடுகள் கொண்ட நகைகள், ஆடல் அழகியின் வெண்கலச் சிலை, ரிக்வேதக் கவிதைகளின் கற்பனை வளத்தை நம்மைப்பட உணர்த்தும் குறிப்புகள் கொண்ட ஒப்பற்ற தொழில் நுணுக்கப்பாடு மிகுந்த மண் இலச்சினைகள், தாயத்துக்கள் முதலியவை. எருது, யானை, காண்டா மிருகம், கலைமான்கள், புலி, மனிதர்கள், பறவைகள், மீன்கள் ஆகியவற்றின் மத்தியிலே அமர்ந்திருக்கும் ஒரு மகா யோகியாக ருத்திரர் என்னும் கடவுளை ஓர் இலச்சினை சித்திரித்துக் காட்டுகிறது. இது ரிக்வேதப் பாடல்களில் காணப்படும் கருத்துக்களை வலியுறுத்துகிறது. கண்டெடுக்கப்பட்ட பொருள் ஒவ்வொன்றும் அது மண்ணாலானதோ, கல்லாலானதோ அல்லது உலோகத்தால் உருவானதோ, எப்படியாயினும் சிறந்த வேலைப்பாட்டையே நமக்கு எடுத்துக் காட்டுகின்றன.

இங்கு கிடைத்த மட்பாண்டங்களில் காணப்படும் சித்திரக் கலை, உருவம், அலங்காரம் என்பவற்றின் சாராம்சத்தையும் அறிந்தவர்கள் அந்தக் கலைஞர்கள் என்பதை எடுத்துக் காட்டுகிறது. இது தவிர வேறு எவ்வகை கவர்ச் சித்திரங்களும் காணப்படவில்லை. கால வெள்ளத்தால் அடித்துச் செல்லப்பட்ட பல சித்திரங்கள் இருந்திருக்கக் கூடும்.

இலச்சினைகளில் காணப்படும் எழுத்துக்களையும் சித்திர எழுத்துக்களையும் கூர்ந்து நோக்குவோமானால் பிற்கால 'பிராமி' எழுத்துக்கு இது அடிப்படையாக அமைந்திருக்கலாம் என உணரலாம்.

சுருங்கக் கூறின், பிற்கால சந்ததியாரின் பண்பாட்டு வளர்ச்சிக்கு ஊற்றாக இந்த நாகரிகம் அமைந்திருந்தது எனலாம்.

இந்தியக் கலையின் வளர்ச்சியையும் வளர்ந்த முறையையும் ஆராயப்

நடராஜர்.





புருஷன், 'கலை என்பது என்ன? அது மனிதனுக்கு அறிவுறுத்தும் உண்மை யாது? இந்தியக் கலைஞனுக்கு எங்கிருந்து ஊக்கம் கிடைத்தது? இந்தியக் கலையின் சிறப்பியல்புகள் எவை?' என்பவற்றைப் புரிந்து கொள்வோம். 'உண்மையின் அழைப்புக்குப் படைக்கும் உணர்வுடைய மனித மனம் அளிக்கும் பதிலே கலையாகும்' என்று ரவீந்திரர் கூறுகிறார்.

கலை என்பது மனிதனுக்குத் தேவையான ஆன்மீக அவாவின் உண்மையான, முதன்மையான பிரதிபலிப்பே அன்றி வேறல்ல. கலையின் குறிக்கோள் வாழ்வின் முழுமையை மனிதன் உணரும் பொருட்டு, வாழ்க்கையின் மறைந்த உட்பொருளை உணர்த்துவது ஆகும்.





இடப் புறம்: ஆதிசேஷசயனமூர்த்தி

மேலே: 1. நாகார்ஜுன கொண்டாவிலுள்ள ஜாதகக் கதைச் சிற்பம்
2. சிவலீலா — ஸ்ரீசைலம் கோயில்

உணவு, உடை, உறைவிடம் இவை மூன்றும் தான் மனிதனின் அடிப்படைத் தேவைகள். கலையின்றி மனிதன் வாழ முடியும் என்பது உண்மைதான். ஆனால் அதுவும் ஒரு வாழ்வா? உயிர் வாழ்தல் என்பதற்காக மனிதன் இடையிடையே கலையை மறக்கலாம். துறக்கவும் செய்யலாம். ஆனால் மனிதனை மனிதனாக வாழ வைப்பது கலைதான்; கலையேதான். உண்மைப் பொருளின் தத்துவத்தை உணர மனிதன் கொண்டிருக்கும் அளவிலாத ஆசைகூடக் கலையிலிருந்துதான் பிறக்கிறது.

ஆதிகால மனிதனின் கலையைப் பற்றி அவனுடைய கருவிகளைக் கொண்டு நாம் அறிகிறோம். அவன் தன்னுடைய கருவிகளைத் தன்னுடைய தேவைக்கேற்ப மட்டும் தயாரித்துக் கொள்ளவில்லை. அவற்றில் அழகையும் சேர்த்துத் தன் கலைத் திறனை வெளிப்படுத்தினான். அவன் ஏன் அப்படிச் செய்ய வேண்டும்? அழகு என்பதைப் பார்த்து அனுபவிக்கும் நிலையை அவன் அடைந்து விட்டான். தன் வேலைக்காகத் தான் படைத்த கூர்மையான ஆயுதத்தின் அழகிய பிடியிலே அவன் தன்னை மறந்து லயித்தான். அதைப் பார்த்து மகிழ்ந்தான். அந்த அழகுத் தோற்றங்களே அவனுடைய கரங்களுக்குப் புதுத் திறமையையும் திறனையும் அளித்தன. அவற்றில் தன் மனம் விவரிக்க முடியாத நிறைவும் மகிழ்ச்சியும், அடைவதை உணர்ந்தான். உடலும், உள்ளமும், உடல் உணர்வுகளும், உள்ள உணர்வுகளும், ஏக்கம் நீங்கி மகிழ்வு பெற்றன. உலகத்திலுள்ள எல்லா இனத்துக்கும் இந்த அனுபவம் ஏற்பட்டுள்ளது.

தன்னைச் சிரஞ்சீவியாக்கிக் கொள்ள வேண்டி, ஆதி மனிதன் பாறையிலும், மரத்திலும், கல்லிலும் பண்ணிலும் தன்னைப் போன்ற உருவங்களை வரைந்தும் செதுக்கியும், படைத்தும் நிறைவு கொண்டான். இந்தக் கலைச் செல்வத்தையே அவன் தன் எதிர்காலச் சந்ததியினரின் கைகளில் வளரச் செய்தான்.

சித்திரக் கலை, சிற்பக் கலை, கட்டடக் கலை, எத்துறையிலாகட்டும், இந்தியக் கலைஞரின் கலைவண்ணங்கள் சுடர் விட்டுப் பிரகாசிக்கின்றன. இந்திய மகனின் கலைநோக்கு தனித்தன்மையுடையதாய் ஒளிர்கின்றது. பாரதத்தின் பரம்பரைப் பண்பாடு யாவும் பாரதக் கலைகளிலிருந்து தோன்றியவைதாம். பாரதக் கலைஞன் தன்னுடைய நாட்டின் அடிப்படைத் தர்மங்களைப் பூர்த்தி செய்யவேண்டி ஒப்பற்ற கலை வண்ணங்களைப் படைத்தான். அவனைப் பொறுத்தவரை கலை புனிதமானது; அது ஒரு வழிபாட்டு வடிவம்; அது அறத்தின் வழிபாடு; கடமை காட்டும் பயணம்; யோகத்தின் பாதை. முக்தியை அடையும் வழியும் அதுவே.

எனவே, இந்தியனுக்குக் கலைப் பற்று, உணவின் இன்றியமையாமையைப் போன்றதாகும். வயிற்றுப் பசியைப் போக்கிக் கொள்ள அவன் உணவைத் தேடுகிறான்; அதே போல் ஆன்மிகப் பசியைப் போக்கிக் கொள்ளக் கலையை நாடுகிறான். உண்மையையும், இறைவனையும் தேடி அலையும் மனிதனோடு கலையானது நெருங்கிய, பிரிக்க முடியாத, தவிர்க்க முடியாத அளவுக்கு உறவு கொண்டு விட்டது. அந்த நெருக்கமானது, கலையையே கடவுளை நாடும் வழிகளில் ஒன்றாக அமைந்து விட்டது.

உலகில் பல இனங்கள் உள்ளன. தற்காலத்தில் தாம் உயர்ந்த நாகரிகத்தை அடைந்திருப்பதாகச் சில இனங்கள் சொல்லிக் கொள்கின்றன. அவற்றிலும் கலைகள் இருக்கின்றன. ஆனால் அக்கலைகளுக்கும், இந்தியக் கலைகளுக்கும் மிகுந்த வேறுபாடு உள்ளது. அந்தமில்லாக் கடவுளை அறிவதே இந்தியக் கலையின் நோக்கமாகும். இறைவனுக்கும் இயற்கைக்கும் உள்ள தொடர்பை வெளிப்படுத்து

வதே அதன் குறிக்கோளாகும். புலன் கடந்த நுண்ணுணர்வு விதிப்படி பார்ப்போமானால், புனித அறிவின் வடித்தெடுத்த சாரமே இந்தியக் கலையாகும். இதில் வேறெந்த நாகரிகக் கலப்போ, குழப்பமோ இல்லாததால் பேரறிஞனாகத் திகழும் இந்தியக் கலைஞன், பரந்த நோக்குடையவனல்ல என்ற தீர்மானத்துக்கு வந்துவிடக் கூடாது. மற்ற இனங்கள் கண்டறிந்த உண்மைகளை உணர்ந்து சேர்க்கவும் அவன் அறிந்திருந்தான். அருகில் இருந்த நாடுகளிலிருந்து பாரதத்தின்மீது ஆக்கிரமிப்பாளர்கள் படையெடுத்து வந்தார்கள். அப்படி வந்தவர்கள் எல்லாம் தம்முடைய புதிய எண்ணங்களையும் புதிய சமூகப் பழக்கங்களையும் கொண்டு வந்தார்கள். அவர்களின் எண்ணங்களும், பழக்கங்களும் இந்தியனின் வாழ்க்கையுடன் இரண்டறக் கலந்து, உண்மையை நாடி அலைந்த அவன் எண்ணங்களுக்குப் புது மெருகிட்டன. மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது மற்றப் பண்பாட்டைப் பாரதம் பின்பற்றியதாகத் தோற்றமளித்தாலும் உண்மை அதுவல்ல. இந்தியக் கலை இவற்றையெல்லாம் தன்னுள் ஈர்த்து உள்ளடக்கிக் கொண்டது. எனினும் அதன் அடிப்படைத் தத்துவங்கள் மாறாதிருந்தன.

இவ்வளவு சக்தியையும் பலத்தையும் கொண்ட இந்தியக் கலைகளின் லட்சியங்கள் என்ன? புராதன இந்தியாவில் அஜந்தா, தக்ஷசீலம், நாளந்தா, இவை யாவும் சிறந்த பல்கலைக் கழகங்களாக இருந்தன. ஞான பீடங்களும், புண்ணிய ஸ்தலங்களும்தான் தொன்மை மிகுந்த கலைகளின் சிறப்பான உறைவிடங்களாக விளங்கின. கலைகளுக்கென்று பிரத்யேகக் காட்சி சாலைகள் புராதன இந்தியாவில் இருந்ததில்லை. ஆக, அந்த ஞான பீடங்களில், புண்ணிய ஸ்தலங்களில் நிலவிய தத்துவங்களை இந்தியக் கலை ஈர்த்து ஜீரணித்துக் கொண்டு வளர்ந்தது. இதுதான் இந்தியக் கலையின் ஜீவன். இத் தத்துவங்கள் வெறும் ஏட்டளவுடன் நின்று விடவில்லை. அவை இந்தியக் கலைஞனின் அன்றாட வாழ்க்கையில் ஒரு பகுதியாக மாறிவிட்டன. ஆண்டாண்டு காலமாக அவன் ரத்தத்தில் ஊறி வந்திருக்கிற தத்துவம் இது. இந்தியக் கலைஞன் தன்னுடைய கலை உணர்வுகளை, கலைக் கொள்கைகளைத் தன்னுடைய வாழ்க்கை முறையிலிருந்து உருவாக்கிக் கொண்டான். அவனது அன்றாடப் பழக்க வழக்கங்களும், காரியக் கிரமங்களும் ஆத்மாவின் இயல்பினை அறிய உதவின.

ஆத்மா அழிவற்றது. அந்த ஆத்மாதான் உலகத்தில் எல்லாவற்றுக்கும் அடிப்படைக் காரணம் என்பதை என்று அவன் உணர்ந்தானோ, அன்றே தனித்தன்மையும் கம்பீரமும் கொண்ட அவனது கலை தழைத்து வளரத் தொடங்கி விட்டது.

புதைபொருள் ஆராய்ச்சியாளர் இன்று பூமியைக் குடைந்து கல் தூணைக் கண்டெடுக்கின்றனர். இதில் கிரேக்கக் கலையின் சாயல் உள்ளது, அதில் ரோமாபுரிக் கலையின் சாயல் உள்ளது. இந்துக்கள் ரோமாபுரியினரின் கலையைப் பின்பற்றியுள்ளனர். இது காந்தாரக் கலை என்றெல்லாம் கூறுகிறார்கள். ஆனால் கிரேக்க நாகரிகம் உச்ச நிலை எய்துவதற்கு வெகு காலம் முன்பே இந்தியக் கலை, நாகரிகத்தின் சிகரத்தை அடைந்து, முழுமை பெற்று விளங்கியது.

தன்னுடைய கலையில் ஆழ்ந்து புதைந்திருக்கும் ஆன்மீக உண்மைகளை விவரிக்கும்போதும், கலைஞன் தன் சூழ்நிலையையோ அல்லது தான் வசித்த இடத்தில் காணப்பட்ட ஜடப்பொருள்களையோ கவனிக்காமல் இல்லை. தான் சிருஷ்டியின் ஒரு பகுதி என்பதை உணர்ந்த அவன் தானே ஒரு சிருஷ்டி கர்த்தா என்றும் உணர்ந்தான். விலங்கினமாயினும் சரி, தாவர இனமாயினும் சரி, எல்லா உயிரினங்களையும் தன் வாழ்க்கை போலவே கருதினான். அதனால்தான் தன்னுடைய படைப்பில் கொடிகள், மலர்கள், விலங்குகள், மலைகள் அனைத்துக்கும் முக்கியத்துவம் கொடுத்தான். படைப்பு முழுதும் இயற்கையைத்தான் சார்ந்திருக்கிறது என்று கண்டு இயற்கையின் புறத் தோற்றங்களிலும் நிலைகளிலும் தன்னை ஐக்கியப் படுத்திக் கொண்டான்.

இயற்கையைப் பெண் வடிவத்தில் உருவகப் படுத்தினான் இந்தியக் கலைஞன். இயற்கையின் இயல்பு சிருஷ்டித் தொழிலாகும். ஒளி, ஞானம் அல்லது ஆன்மாவை அவன் ஆண்மகனாக உருவகப் படுத்தினான். இவ்வாறாகப் பொருளுக்கும் உயிருக்கும் இயற்கைக்கும் ஆன்மாவுக்கும் உள்ள பிணைப்பை உருவகப்படுத்திக் காட்டினான் கலைஞன்.

காக்கும் கடவுளான திருமால் ஆயிரம் தலைகள் கொண்ட ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டிருப்பது இந்தியக் கலையின் உயிர்நாடியான ஒரு தோற்றம். ஆதிசேஷன் சிரஞ்சீவித் தன்மையைக் குறிக்கிறது. உலகைக் காத்து, ஆளும் தெய்வமான திருமால், பாம்பரசனான சேஷனின் மீது பள்ளி கொண்டுள்ளார். இலையுதிர் காலத்து மெல்லிய முகில் போல் பிரகாசிக்கும் அலைகளின் மீது சேஷன் மிதக்கிறான். படைக்கும் கடவுளான நான்முகன் திருமாலின் நாபியிலிருந்து கிளம்பி மேலெழும்பிய தாமரை மலரில் அமர்ந்திருக்கிறார். உலகின் செல்வச் செழிப்பைக் குறிக்கும் திருமாலின் மனைவியான இலக்குமி, தன்னுடைய தலைவனான திருமாலின் காலடியில் அமைதியே உருவாக அமர்ந்திருக்கிறாள். திருமால் ஆனந்த மயமாக யோக நித்திரை நிலையில் பள்ளி கொண்டிருக்கிறார்.

இந்தக் காட்சியின் உட்பொருள் என்ன? இந்தியத் தத்துவப்படி 'சேஷம்' என்னும் சொல் மிஞ்சியது அல்லது எஞ்சியது என்று பொருள்படும். சேஷன் என்ற ஆயிரம் தலைகள் கொண்ட பாம்பு, பல சிறிய பொருள்களின் சேர்க்கையான அண்டசராசரம் முழுவதையும் குறிக்கும். பாம்பின் ஆயிரம் தலைகளும் தனித்தனியே முழுமை உடையதாய் இருந்தாலும், எல்லையற்ற பிரபஞ்சமாகத் தோன்ற ஒன்று சேரும் பல்லாயிரக் கணக்கான பகுதிகளைக் குறிக்கின்றன. திருமாலும், இலக்குமியும், ஆணையும் பெண்ணையும் குறிக்கிறார்கள். இதுவும் எல்லையற்ற பிரபஞ்சத்தின் ஓர் எல்லைக்குட்பட்ட முழுமையான சிருஷ்டித் தத்துவத்தைப் புலப்படுத்துகிறது எனலாம். பிரபஞ்சம் தனக்குள்ளேயே படைத்து, தனக்குள்ளேயே வளர்ந்து, தனக்குள்ளேயே அழியவும் செய்கிறது. இந்தப் பேருண்மையை இக்காட்சி நமக்கு வலியுறுத்துகிறது. நான்கு திசைகளை அறிவிக்கும் நான்முகங்களைக் கொண்டவர் பிரம்மன். தாமரை மலர் முன்னேற்றம், வளர்ச்சி, படைப்பு ஆகியவற்றைக் குறிப்பதாகும். இலக்குமிதேவி அழகையும் செல்வத்தையும் குறிக்கிறாள்.

இனி ஒரு வெண்கலச் சிலையை ஆராய்வோம். இதுதான் சிவபெருமானின் ஊழிக் கூத்து. பஞ்சக் கிரியை அல்லது ஐந்தொழிலைப் பற்றி இது அறிவிக்கிறது. காலத்தால் அழிக்க முடியாத சக்தி எல்லாம் ஒன்றுசேர்ந்து ஐந்தொழிலில் அடக்கம் என்பது போல் சிவபெருமான் இதில் காட்சி யளிக்கிறார். ஊழித் தாண்டவமாடும் நிருத்திய மூர்த்தி ஆடற் கலைக்கே அரசராக, நடராஜராகப் போற்றப்படுகிறார். இந்தக் கலைக் காட்சி நம்மை உணர்ச்சி அலைகளின் உச்சிக்கே அழைத்துப் போகிறது என்பதில் ஐயமில்லை. அறியாமை என்பதன் உருவகமான அரக்கனின் சிறிய உடல் மீது நடனமாடியபடி நடராஜர் அறிவொளி பரப்பி, வாழ்வு என்ற அடிமைத் தளையிலிருந்து விடுதலை அளிக்கிறார். கலைஞன் இதனை வெறும் அலங்காரப் பொருளாக மட்டும் படைக்கவில்லை.



ஹொய்சளர்களின் கலைமரபு கொழிக்கும் சிற்பம் — ஹளேபீடு.

வழிபாட்டுக்காகப் படைத்தான். இதில் ஐந்தொழிலுக்கும் விளக்கம் காட்டப்படு கிறது. அவை வருமாறு: (1) படைத்தல் (2) காத்தல், (3) அழித்தல், (4) மாயை என்னும் திரையின் பின்னும் மறைத்தல். (5) பக்தனை ஏற்று முக்தி அளித்தல். இந்து மதப்படி இந்தத் தொழில்கள் யாவும் தனியாகவும் கூட்டாகவும், பிரம்மன், திருமால், உருத்திரர், மகேசுவரர், சதாசிவர் ஆகியோரால் நிறைவேற்றப் படுகின்றன. இவை யாவும் ஒன்று சேர்ந்து நடராஜரின் ஊழிக் கூத்தில் வெளிப்படுகின்றன. அவருடைய கையிலிருக்கும் உடுக்கை படைப்புத் தொழிலைக் குறிக்கிறது. 'அபய ஹஸ்தம்' காக்கும் தொழிலைக் குறிக்கிறது. இன்னொரு கையிலிருக்கும் அக்கினி அழிக்கும் தொழிலைக் குறிக்கிறது. அறியாமை மீதமர்ந்த பாதம் மறைத்தலையும், தூக்கிய பாதம் ஆன்மாவின் விடுதலையையும், வளைந்த கை, பக்தனுக்கு முக்தி அளிப்பதையும் குறிக்கின்றன. உருவத்தைச் சுற்றி இருக்கும் 'பிரபா மண்டலம்' இயற்கையின் முடிவற்ற ஆடலாகும். ஜீவராசிகளுடைய முடிவற்ற வாழ்க்கைச் சுழலை - காலச் சக்கரத்தைக்குறிப்பதாகும். நடராஜரின் திரு உருவத்துக்கு விளக்கம் இதுதான். தாருகா வனத்தில் முனிவர்களின் அகந்தையை அழித்து ஆடியவரே நடராஜர் என்று புராணம் கூறும் வரலாறு.

மற்றொரு கலைப் படைப்பைக் காண்போம்: புத்தரின் உருவச்சிலை. மகாயோகியின் உருவச் சிலையைப் பார்த்தே இதை உருவாக்க வேண்டும் என்ற வேகம் கலைஞனுக்கு வந்திருக்க வேண்டும். புத்தர் தாமரை அரியணையில் அமைதியே உருவாக உலகப் பற்றுத் தளைகளிலிருந்து தம்மை அறுத்துக் கொண்டு, தம் மனத்தையும், உடலையும் போராட்டங்களிலிருந்து விடுவித்துக் கொண்டு, பற்றற்ற துறவியாக அமர்ந்திருக்கிறார். அப்படி இருந்தும் மனித சக்தியினும் மேம்பட்ட பலம் படைத்தவராக அவர் தோற்றமளிப்பதில்தான் இந்தியச் சிந்தனையின் உயிர்நாடி அடங்கியிருக்கிறது. இந்த அசாதாரண சக்தியை அவர் எங்கிருந்து பெற்றிருக்கிறார்? எல்லா உயிர்களுக்கும் எல்லா அறிவுகளுக்கும் எல்லாச் சக்திகளுக்கும் பிறப்பிடமான மூலாதாரத்துடன் ஆன்மீகத் தொடர்பு கொள்வதால் ஏற்படும் சக்தியாகும் அது. உடல் பலத்தை முக்கியமாகக் கருதும் மேல்நாட்டுக் கொள்கைக்கு இது மாறுபட்டது: உடல் போராட்டத்திலோ, சிந்தனைப் போராட்டத்திலோ ஈடுபட்டு வளர்த்துக் கொள்ளும் பலமல்ல அது. அது கடவுளின் பரிசு; வழிபாட்டால், தியானத்தால், யோகத்தால், அகில உலகுடன் இணைந்த ஆத்ம பலத்தால் ஏற்பட்டதாகும்.

கலைஞன், தான் படைக்கப் போகும் உருவச்சிலை பற்றிய உட்பொருள்களை ஆராய வேண்டும். அதனுடைய உணர்ச்சிகளைப் புரிந்து கொண்டு ஆழ்ந்து சிந்திக்க வேண்டும் என்று 'சுக்கிரநீதி சாரம்' என்ற கலை நூல் கூறுகிறது. அதன் பிறகே நினைத்த பொருளின் உண்மையான பூரணக் காட்சியையோ, உருவத்தையோ அவன் உருவாக்க முடியும். கலைஞன் ஒன்றைப் படைக்கு முன் ஒரு யோகிபோல் சமாதியில் இருக்க வேண்டியது அவசியம் என்று ஆனந்த குமாரஸ்வாமி மேற்கோள் காட்டி எடுத்துரைக்கிறார்.

சமாதி என்பது சூழ்நிலைகளால் பாதிக்கப்படாமல் ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் கருத்தூன்றி இருக்கும் நிலை. சமாதி நிலையிலுள்ள கலைஞரின் மனம் வேறு எந்த எண்ணத்தாலும் வசீகரிக்கப்படாமல் அமைதியாகவும், தூய்மையாகவும் இருக்கும். அதே சமயத்தில் தான் படைக்கப் போகும் கலைப்பொருளின் உருவம், எந்த வண்ணத்தில் எந்தெந்த முத்திரைகளில் சிலை அமைய வேண்டும் என்ற நியதிகள் இவற்றை ஆழ்ந்த நோக்குடன் சிந்தித்து மனத்துக்குள் உருவாக்கிக் கொள்கிறான். அவ்வளவுதான், பிறகு அவன் செய்ய வேண்டியதெல்லாம் மனத்தில் அவன் உருவாக்கிய அந்தக் காட்சியை அவன் விரும்பியபடி ஓவியத் திரையிலோ, கல்லிலோ, மரத் துண்டிலோ, உலோகத்திலோ வடிக்க வேண்டியதுதான். இதைத்தான் யோகாப்பியாசம் என்கிறோம். இதைக் கடைப்பிடிக்கும் கலைஞன் உண்மையைத் தேடி அலையும் யோகி ஆகிறான். இது கலைஞனின் கடமையும் கூட. இதுவே இந்தியக் கலைஞனுக்கு உரிய தர்மமாகும்.

கலைப் படைப்பின்போது கலைஞன் கண்ணால் பார்க்கக்கூடிய காட்சிகளை மனத்தில் ஏற்றுக் காப்பாற்றிப் பயன்படுத்துவதோடு காதால் கேட்டுணரக் கூடிய ஒலி உருவங்களையும் ஓசை நயங்களையும் கூட நினைவில் கொண்டு பாதுகாத்துக் காட்சிப் பொருளாக வடித்துத் தர வேண்டும் என்று 'சில்ப ரத்தினம்' கூறுகிறது. இந்த வகையில்தான் இந்தியக் கலைஞர்கள் பலதரப்பட்ட இசை ஒலியை, இனிய நாதத்தைக் கண்ணால் பார்க்கக் கூடிய தெய்வ உருவங்களில் அமைத்தார்கள்.

ஒரு கலைஞனுக்கு இருக்க வேண்டிய முக்கியமான இயல்புகள் என்ன? 'சில்ப ரத்தினம்' பலமுறை வலியுறுத்தும் கருத்துக்கள் இவைதாம்: இயற்கையின் இயக்கம், விலங்கின வாழ்க்கை, உயிரற்ற ஜடப் பொருள்கள் அனைத்தையும் கூர்ந்து கவனிக்கும் திறனுடையவனாகக் கலைஞன் இருக்க வேண்டும். அதுமட்டுமல்ல; அப்படி அவன் உள்ளுணர்வு பார்த்து ரசித்தவைகளை ஆராய்ந்து நோக்கிய பின் அவற்றை எளிதாக வெளிப்படுத்தும் ஆற்றல் பெற்றுத் திகழ வேண்டும். கலையின் மொழி இருக்கிறதே அது எந்தச் சிக்கலான தத்துவத்தையும் வெளிப்படுத்தும் வகையில் இலகுவாக வளைந்து கொடுக்கக் கூடியது. அந்த மொழியைத் திறம்படக் கையாளக் கூடியவனாகக் கலைஞன் இருக்க வேண்டும். தன் கருத்துக்களைக் கெடுக்கும் எந்தத் தீய எண்ணங்களுக்கும் அவன் இடம் கொடுக்கக் கூடாது. மனத் தூய்மை அடையாவிட்டால் அவனும் தியானத்தில் முழு மனத்துடன் இறங்கித் தன் மனத்தில் நினைந்த எண்ணத்துக்கு உருக் கொடுக்க முடியாது.

ஓவியக் கலையின் ஆறு பகுதிகளை யசோதர்மர் பின்வருமாறு வர்ணிக்கிறார்.

(1) உருவ அமைப்பு

(2) அமைப்புத் தராதரம்: அதாவது வரையப் போகும் உருவத்தின் பல பகுதிகளுடைய நீள அகலங்கள், கன பரிமாணங்கள் ஆகியவை பொருத்தமாக அமையும்படி பார்த்துக்கொள்ளும் அறிவுத் திறன்

(3) பாவம்

(4) லாவண்யம்

(5) ஒருவரைப் பார்த்து வரையும்போது இம்மி அளவும் பிசகாமல் உருவ ஒற்றுமையை ஓவியத்தில் கொணரல்

(6) வர்ணச் சேர்க்கைகள் பற்றிய ஞானம்

இந்த வகை இந்தியக் கலைக்கு அஜந்தா ஓவியங்கள் நல்ல எடுத்துக்காட்டாகும்.

அவை மிக அழகாக உள்ளன என்பதுடன் ஒரு தனிப் பாணியில் தீட்டப்பட்டிருக்கின்றன. அஜந்தா, பாக், ராம்கர் குகைகள், சித்தன்னவாசல் போன்ற இடங்களில் புராதன இந்தியாவின் ஒப்பற்ற ஓவியக் கலையைக் காணுகையில் கால ஓட்டத்தில் நாம் இழந்து விட்டிருக்கக் கூடிய வேறு எத்தனையோ பல உன்னத ஓவியங்களைப் பற்றிய நினைவு எழுகிறது நமக்கு. வண்ணம், சேர்க்கை, பாவம் இவற்றின் கூட்டுறவில் உருவான இந்தச் சிறந்த சித்திரங்களை வெல்ல எந்த நாட்டு உயரிய கலைத் திறனாலும் இயலவில்லை எனலாம். இதை வரைந்த ஓவியக் கலைஞர்கள் மேற்கூறிய ஆறு விதிகளையும் நன்கு கடைப்பிடித்தனர். அவர்களுடைய முன்னோர்களும் வழி வழி கடைப்பிடித்து வந்த மரபு முறையிலிருந்து அவர்கள் சிறிதும் பிறழவில்லை என்பதை இந்த ஓவியங்கள் அறிவிக்கின்றன. இதனால்தான் அவை ஒப்பற்றவையாகவும், உயர்ந்தவையாகவும் திகழ்கின்றன.

நடனம், நாடகம், கவிதை, இசை முதலான கலைகளில் ஓர் அடிப்படையான கலைப் பண்பின் மீது கணத்துக்குக் கணம் மாறுகின்ற பல உணர்ச்சி அலைகளின் தொடர் இயங்குகிறது. அடிப்படையான கலைப் பண்பினைச் சுவை என்றும், கணத்துக்குக் கணம் மாறும் இயல்புடைய உணர்ச்சிகளைச் 'சஞ்சாரி பாவம்' என்றும் கூறுவர். சித்திரக் கலையிலும் சிற்பக் கலையிலும் ஒரே ஒரு நிலையான உணர்ச்சியைத்தான் பிரதிபலிக்க இடமுண்டு.

ஓர் ஓவியத்தையோ, ஒரு சிற்பத்தையோ காணும்போது மனித மனம் மகிழ்ச்சியை அடைகிறது என்றால், அந்தச் சிற்பம் அவனை மகிழ்விக்கவில்லை; அவனுக்குள்ள அழகுணர்ச்சி அவனை மகிழ்விக்கிறது. உதாரணமாக ஒரு நாடகத்தில் பயங்கரக் காட்சி ஒன்றினை எடுத்துக்காட்டாகக் கொள்வோம். பார்வையாளர் அந்தக் காட்சியில் நடித்துக் காட்டப்படும் பயங்கர உணர்ச்சியை அடைவதில்லை. மாறாக அந்த உணர்ச்சியை அவ்வளவு அழகாக நடித்துக் காண்பித்தது குறித்து ஆனந்தமே அடைகிறான்.

காதல், களிப்பு, அமைதி, இந்த உணர்ச்சிகளைப் பரப்பும் ஓவியங்களே வீடுகளை அலங்கரிக்க வேண்டும் என்றும், மற்ற பாவங்களை வெளிப்படுத்துபவை கோவில்களையும், அரசாங்க அரண்மனைகளையும்தான் அலங்கரிக்க வேண்டும் என்றும் ஒரு பொதுவான நம்பிக்கை இருந்து வருகிறது.

நிலையான கலைகளின் (சிற்பம், ஓவியம்) கலைச் சுவை மூன்று பிரிவுகள் உடையதாகும். 'சுக்கிரநீதி சார'த்தின்படி பார்ப்போமானால் முதலில் சாத்விகம். இதில் சாந்த உணர்வு முக்கியமானது. இந்தத் தெய்வ உருவங்கள் அமர்ந்த மோன நிலையில் இருக்கின்றன. அவை பார்ப்பவரிடத்தில் சாந்த உணர்வைத் தூண்டுகின்றன. பல இந்தியக் கோயில்களில் காணப்படும் புத்தர், தீர்த்தங்கரர்கள், தக்ஷிணாமூர்த்தி இவையெல்லாம் சாந்த உணர்வைப் பிரதிபலிப்பவை.

இரண்டாவதாக இராஜஸிகத் தோற்றங்கள்: இரதங்களை ஒட்டியவாறு காதல், களிப்பு, வீரம், அற்புதம், கருணை போன்ற உணர்ச்சிகளுக்கு உருக் கொடுக்கும் தெய்வங்களின் உருவத் தோற்றங்கள். இரதியும் மன்மதனும் கிளியின் மீதும், துர்கை சிங்கத்தின் மீதும் சாரத்தியம் செய்வது போன்ற காட்சிகளில் இராஜஸிக உணர்ச்சிகளைக் காண்கிறோம்.

மூன்றாவது பயங்கரம் ஆகும். இதைத் தீயவர்களை அழிக்கும் காட்சிகளில் வலியுறுத்துகிறார்கள். நரசிம்மர், மகிஷாசுரனைக் கொல்லும் காளி முதலியன இதற்குச் சான்றாகும். இவை அச்சம், அற்புதம், வெறுப்பு போன்ற உணர்ச்சிகளின் ஊற்றுக் கண்களாய் அமைந்தவை.

எல்லா உணர்ச்சிகளுக்கும் தொடக்கம் அன்பே, எல்லா உணர்ச்சிகளின் முடிவு அமைதியே என்பது நமது தத்துவம்.

அழகு என்பது என்ன? 'எதனுடைய பயனைப் பற்றி நாம் சிந்தியாமல் அது குறித்து மகிழ்கிறோமோ அது அழகு' என்கிறார் ரவீந்திரர். அழகு உணர்வால் ஏற்படும் மகிழ்ச்சி வேறெந்தப் பொருளாலும் ஏற்படக் கூடிய மகிழ்ச்சியைக் காட்டிலும் வேறுபட்டதும், மாறுபட்டதும் ஆகும்.

ஒரு பொருள் எல்லா நபர்களுக்கும் ஒரேபோல அழகாகத் தோன்றுமா? ஒரு மனிதனுக்கு அழகாகத் தோன்றுவது மற்றவர்களுக்கு அப்படித் தோன்றாமல் இருக்கலாம். பொதுவாக அவர்களுடைய பண்பாட்டுக்கும் மனநிலைக்கும் ஏற்றவாறு பொருள்களை அவர்கள் ரசிக்கிறார்கள்.

அழகு என்பதைக் கலையோடு தொடர்புபடுத்திப் பார்ப்போமானால் டாகுர் கூறியதை நாம் புரிந்து கொள்வது அவசியம்: ''அழகு என்னும்போது அதன் சாதாரணப் பொருளைப் பற்றி எண்ண வேண்டாம். 'அழகு என்பது உண்மையாகும். உண்மை என்பதே அழகாகும்' என்ற ஆழ்ந்த பொருளில் பார்க்க வேண்டும்'' என்கிறார் டாகுர். ஒரு கலைஞன் முதுமையால் தளர்ச்சியுற்ற ஒரு மனிதனின் விகார உருவத்தைத்தான் வரைகிறான். ஆயினும் அதனை அழகாயிருக்கிறது என்கிறோம். முதுமை என்னும் அந்த ஓவியத்தில் முழுமை கண்டு அதனைப் போற்றுகிறோம். காரணம் அதனுள் ஒளிந்திருக்கும் சத்தியத்தை நாம் பூரணமாக உணர்வதுதான். ''லைலா அப்படி ரொம்ப அழகியா என்ன?'' என்று மஜ்னுவிடம் கேட்டபோது, அவன் கூறினானாம்: ''லைலாவின் அழகினைக் காண மஜ்னுவின் கண்கள் தேவை'' என்று.

இவற்றையெல்லாம் தவிர, பொருளையே சார்ந்த பூரண அழகு என்று ஒன்று உண்மையிலேயே இருக்கிறதா? பக்தர்கள் தெய்வத்தை அழகுடன், அன்புடன், உண்மையுடன் இணைக்கிறார்கள். அது மதம் சம்பந்தப்பட்ட விஷயம். உண்மையைக் கண்டு பிடிக்கும் அனுபவமே அழகின் முழுப் பொருளாகும் என்பர் யோகியர்.

அழகு ரசனை மகிழ்ச்சி பயக்கிறது. மகிழ்ச்சியின் அடிப்படை உண்மை; அந்த உண்மைதான் அழகு. இரசிகன் இந்த அழகை உணர்கிறான். யோகி இதனை மனக் கண்ணால் காண்கிறான். பரம பக்தனோ அழகுடன் ஒன்றாக இணைந்தே விடுகிறான்.






ஐயோ பாவம்! அம்மா விட்டு விட்டுப் போயிட்டாளா?

















## தீபாவளிப் பட்டாஸ்

[கோ. கந்தசாமி]

ஆட்டம்பாம் வெடிக்கும் போது கூட்டமெல்லாம் பதறுது
அங்கே என்ன புகைச்சல் என்று முழுச்செவிடு கதறுது
ஓட்டமாகச் சிறுவரெல்லாம் ஓடி வந்து பார்க்கிறர்
ஓசை அதிகம் ஒலிக்குமிடத்தில் கூடிச்சென்று கேட்கிறர்

ஆனைவெடியும் அதிர்வெடியும் அதிகச் சத்தம் போடுது
ஆகாயத்தை நோக்கிச் சில வாணங்களும் ஓடுது
வேணமட்டும் காசு பணமும் ஒலியும் புகையாய் மாறுது
வாங்கிக் கொடுக்கும் முதுமை கொஞ்சம் இதனை எண்ணிச் சோருது

விஷ்ணுவெடி லட்சுமிவெடி விதவிதமாய் அழைக்கிறர்
வேறுபல சாமி பெயரை இதற்கு வைத்துப் பிழைக்கிறர்
ஊசிப்பட்டாஸ் ஓலைப்பட்டாஸ் உரைப்பதற்குக் காலமே
வெடித்த பிறகு தெருவினிலே ஏகப்பட்ட கூளமே



## விடாக்கண்டர்!





















# யார் அந்தக் குழந்தை?

வாண்டுமாமா

அது ஓர் அழகான தோட்டம். பள்ளிக் கூடத்துக் குழந்தைகள் மாலையில் வகுப்புகள் முடிந்ததும் குதூகலத்துடன் அந்தத் தோட்டத்தின் வழியாகத்தான் குதித்தோடி வருவார்கள்; விளையாடிப் பாடி மகிழ்வதற்காக.

அது யாரோ ஒரு பெரிய பணக்காரருடைய தோட்டமாம். அதன் நடுவில் பெரிய அரண்மனை போன்ற வீடும் உண்டு. ஆனால் அவ்வளவு பெரிய வீட்டில் யாருமில்லை. அந்தப் பெரிய வீட்டையும் தோட்டத்தையும் ஒரு கிழவன் காவல் காத்து வந்தான். அவன் ரொம்ப நல்லவன். விளையாடுவதற்குக் குதித்தோடி வரும் குழந்தைகளை விரட்டி அடிக்க மாட்டான். அவர்கள் ஆடிப் பாடி உல்லாசமாகச் சிரித்து மகிழ்வதைக் கண்டு அவனும் மகிழ்ந்து போவான்.

தோட்டத்தின் அழகைச் சொல்லி முடியாது. பட்டுப் போன்ற மெத்தென்ற புல்வெளிகள். அந்தப் பச்சை விரிப்புக்குக் கரை கட்டியதுபோல, பலவண்ண நட்சத்திரங்கள் மினுக்கிடுவதைப் போல் பல விதமான மலர்ச் செடிகள். ஆங்காங்கே தங்கள் உடலெல்லாம் மஞ்சளும் சிவப்பும் வெள்ளையும் இள நீலமுமாகப் பூத்துக் குலுங்கும் மரங்கள் தலையாட்டியபடி குழந்தைகளை வரவேற்கும். உண்டு குண்டாகச் சுவையான பழங்களைத் தரும் மா, கொய்யா, சப்போட்டா போன்ற மரங்கள் வேறு. இந்த மரங்களிலெல்லாம் வித விதமான பறவைகள் விநோதமாகக் குரலெழுப்பிக் குதூகலமாகப் பாடும். குழந்தைகள் தங்கள் விளையாட்டைக்கூட நிறுத்தி விட்டுப் பறவைகளின் இன்னிசையிலே மயங்கிப் போவார்கள். இருட்டிய பிறகும் அந்த அழகான தோட்டத்தை விட்டுப் போக அவர்களுக்கு மனமே வராது.

திடீரென்று ஒரு நாள்; விளையாடி மகிழ ஓடி வந்த குழந்தைகளை ஒரு முரட்டுக் குரல், "நீங்களெல்லாம் யார்? இங்கே எதற்காக கூச்சல் போட்டுக் கொண்டு ஓடிவருகிறீர்கள்?" என்று கர்ஜித்தது. அந்தப் பெரிய உருவத்தையும் நெருப்புப் பொறி பறக்கும் கண்களையும் கண்ட குழந்தைகள் நடுங்கிப் போய் ஓடி விட்டன.

அந்தக் குரலுக்கும் உருவத்துக்கும் உரியவர்தான் அந்தத் தோட்டத்துக்கும் பங்களாவுக்கும் சொந்தக்காரர். இத்தனை வருஷங்களாகப் பர்மாவில் இருந்த அவர் இப்போதுதான் தாய்நாடு திரும்பி இருக்கிறார். அவர் பார்வைக்கு ராட்சதனைப்போல் இருப்பார். முகத்தில் சிரிப்பே வராது. அவருக்குக் குழந்தைகளையோ அவர்களின் கூச்சலையோ பிடிக்காது. மறுநாளே அந்த அழகான தோட்டத்தைச் சுற்றிப் பெரிய சுவர் எழுப்பினார். பெரிய கதவையும் பொருத்தினார்.



இளவேனில். சுயநலக்காரனின் தோட்டத்தில் ஒன்றுமே இல்லே. 'அவன் சுயநலக்காரன்' என்று ஒதுங்கிப் போயின, வசந்தமும் இளவேனிலும்.

ஒரு நாள் அந்தச் சுயநலக்காரப் பணக்காரர் சோகத்துடன் உட்கார்ந்திருந்தார். அப்போது இனிமையானதொரு சங்கீத ஒலி கேட்டுத் துள்ளி எழுந்தார். அவரது செவிக்கு அது தேவகானம் போன்றிருந்தது. அவர் வந்த நாள் முதல் அத்தனை இனிமையான ஒலியைக் கேட்டதே இல்லே. குயில் ஒன்று அவரது ஜன்னலின் அருகே இருந்த மகிழ மரத்திலிருந்தபடி இசைத்துக் கொண்டிருந்தது. வாடைக் காற்று தன் ஊளைக் குரலே நிறுத்திவிட்டுக் கலைந்தது. சூறுவளி தன் சிறகைத் தணித்துக் கொண்டது. மரங்களில் தளிர் கண்டிருந்தது. பூக்கள் மொட்டவிழ்ந்து மலர்ந்து மணம் பரப்பலாயின. "அப்பா! வசந்தம் கடைசியில் வந்தது" என்று மகிழ்ச்சி பொங்க அவர் வெளியே ஓடி வந்தார்.

வெளியிலே அவர் ஓர் அற்புதமான காட்சியைக் கண்டார். அவர் எழுப்பி இருந்த உயர்ந்த சுவரின் ஓர் இடத்தில் ஏற்படுத்தி இருந்த ஒரு துவாரத்தின் வழியே குழந்தைகள் கும்மாளமிட்டபடி நுழைந்து வந்து கொண்டிருந்தன தோட்டத்துக்குள். அவர்களின் வரவுதான் வசந்தத்தையும் அழைத்து வந்திருந்தது அந்தத் தோட்டத்துக்கு. குழந்தைகள் மரங்களின் கிளைகளில் உட்கார்ந் திருந்தார்கள். புல்வெளியிலே புரண்டு விளையாடினார்கள். ஒவ்வொரு மரத்திலும், கிளையிலும் ஒரு குழந்தை உட்கார்ந்திருந்தது. குழந்தைகளின் வரவால் மகிழ்ந்த மரங்களும் செடிகளும் முன் போலவே பூத்துக் குலுங்கலாயின. பூவும் கனிகளும் நிறைந்தவுடன் விதம் விதமான பறவைகள் பறந்து வந்து அந்தத் தோட்டத்துக்கு இன்னும் அழகைக் கொடுத்தன. பசும் புல் தரையின் இடையிடையே பூமிக்குள்ளிருந்து மலர்கள் தலே நீட்டிப் பார்த்துச் சிரித்தன. அது மிக மிக அழகான, ரம்மியமான காட்சி. ஆனல் அந்தத் தோட்டத்தின் ஒசர ஒரு மூலேயில் மட்டும் இன்னும் பனியும் ஊதலும் மறையவில்லே. அங்கு ஒரு மரத்தினடியில் ஒரு சின்னஞ் சிறிய பையன் நின்று கொண்டிருந்தான். அவன் ரொம்பச் சின்னவனுதலால் அவனும் மரத்தின் கிளேகளே எட்டிப் பிடித்து அதன்மீது ஏறி உட்கார்ந்து மகிழ முடியவில்லே. வேதனேயுடன் அந்த மரத்தைச் சுற்றிச் சுற்றி வந்து அழுது கொண்டிருந்தான். பாவம். அந்தப் பையனின் ஸ்பரிசம் படாததால் அந்த மரத்தில் துளிர்கள் விடவில்லே.

"ஏறு குழந்தாய், ஏறு" என்று ஆர்வம் பொங்கக் கூறித் தனது கரங்களே எவ்வளவு முடியுமோ அவ்வளவு தழைத்துக் கொடுத்தது அந்த மரம். ஆனல் அந்தப் பையனும் அதைப் பற்றிக் கொள்ள முடியவில்லே. அவன் ரொம்பச் சின்னவன்!

இந்தக் காட்சி அந்தத் தோட்டத்தின் உரிமையாளரின் உள்ளத்தை உருக்கி விட்டது. "நான் எத்தனே சுயநலக்காரனுக இருந்துவிட்டேன்? வசந்தம் இத்தனே நாட்களாக வராததின் காரணம் இப்போதல்லவா தெரிகிறது? அந்தச் சின்னப் பையனே அந்த மரத்தின் மீது ஏற்றிவிட்டு அந்த மரத்தின் சோகத்தையும் மாற்றுவேன். என் தோட்டத்தைச் சுற்றி எழுப்பி இருக்கும் சுவரை இடித்துத் தள்ளுவேன்" என்று முடிவு செய்துகொண்டார். வீட்டைவிட்டுஓடோடியும்வந்தார்.

ஓடி வரும் அவரைக் கண்டதும் குழந்தைகளெல்லாம் பயந்து நடுங்கி ஓட்டமெடுத்தார்கள். மனேகரமாகக் காட்சியளித்த தோட்டம் மறுபடியும் அழகழிந்து போயிற்று. எல்லாக் குழந்தைகளும் ஓடிப் போன பிறகும் அந்தச் சின்னப் பையன் மட்டும் அதே மரத்தடியில் அப்படியே நின்று கொண்டிருந்தான், அழுது கொண்டே. ஏனென்றல், கண்ணீர் அந்தச் சின்னப் பையனின் கண்களே மறைத்துக்கொண் டிருந்ததால் அவர் வருவதை அவனுல் பார்க்க முடியவில்லே.



மனம் மாறிய அவர் மெள்ள மெள்ள அந்தப் பையனின் அருகில் வந்தார். அவனே மெள்ளத் தம் கைகளினுல் தூக்கி மரத்தின் மீது ஏற்றி விட்டார். அந்தப் பையனேத் தாங்கியதும் அந்த மரத்தில் குப்பென்று மலர்கள் பூத்துக் குலுங்கலாயின. எங்கிருந்தோ பட்சிகள் ஓடி வந்து 'கல கல' வென்று ரம்மியமாகச் சப்தமிட்டபடி வட்டமிட்டன. அழுத அந்தப் பையனுக்கு ஆனந்தம் தாங்கவில்லே. தன் இரு கைகளேயும் தூக்கி விரித்து அந்தச் சீமானின் கழுத்தைக் கட்டிக் கொண்டான். அவரது முரட்டுக் கன்னத்திலே தன் பூவிதழைப் பதித்து முத்தமிட்டுத் தன் மகிழ்ச்சியைக் காட்டிக் கொண்டான்.

ஓடி ஒளிந்த குழந்தைகள் மெள்ளத் தலேநீட்டி இந்தக் காட்சியைக் கண்டனர். அவர்களால் அசுரனுகக் கற்பனே செய்யப்பட்ட அவர் அப்படி இல்லாமல்

அந்தப் பையனிடம் அன்பாக நடந்து கொண்டதைக் கண்டு ஆச்சரியமடைந்தார்கள். இனி அவரைக் கண்டு பயப்பட வேண்டாம் என்றும் தெளிந்த அவர்கள் அச்சம் நீங்கி ஆரவாரத்துடன் தோட்டத்தினுள் புகுந்தார்கள். அந்தக் குழந்தைகளோடு வசந்தமும் வந்தது. மரங்கள் முன்போலச் சிரித்தன. பறவைகள் முன் போல இன்ப நாதம் செய்தன. பழங்கள் இனித்தன.

''குழந்தைகளே! இனி இந்தத் தோட்டம் உங்களுடையது'' என்றார் அந்தச் சிங்கப்பூர் சீமான். தம் பணியாளர்களைக் கூப்பிட்டு மதில்சுவரை இடித்துத் தள்ளும்படி கட்டளையிட்டார்.

அன்று மாலை அவ்வழியாகப் போன அந்த ஊரில் உள்ள மக்கள் சுவர்கள் சூழாத தோட்டத்தையும் அதில் தங்கள் குழந்தைகள் உற்சாகமாக விளையாடுவதையும் கண்டு வியப்படைந்து மகிழ்ந்து போனார்கள்.

நாளெல்லாம் குழந்தைகள் அங்கேயே குடியிருந்தன. குழந்தைகளோடு குழந்தைகளாக அவரும் விளையாடி மகிழ்ந்தார். தம் வாழ்நாளிலேயே அதைப் போன்ற ஆனந்தத்தைத் தாம் அநுபவித்ததில்லை என்று சொல்லிக் கொண்டார்.

ஆனால் ஒவ்வொரு நாளும் அவர் கண்கள் அந்தக் குழந்தைகளிடையே யாரையோ தேடித் தவித்தன. ''உங்கள் தோழன் — அந்தச் சின்னப் பையன், அன்று நான் மரத்தின் மேல் ஏற்றிவிட்டேனே அவன் எங்கே?'' என்று அவர்களைக் கேட்டார். அவனிடம் அவருக்குத் தனிப்பட்டதொரு பாசம் வளர்ந்து விட்டது. ஏனென்றால், அவன்தானே அவரை முதன் முதலில் கட்டியணைத்து முத்தமிட்டவன்?

''எங்களுக்குத் தெரியாதே. எங்கே போனானோ?'' என்றனர் குழந்தைகள்.

''அவனைக் கண்டால் மறக்காமல் சொல்லுங்கள். நாளைக்குக் கட்டாயம் வரும்படி'' என்று ஒவ்வொரு நாளும் அந்தக் குழந்தைகளிடம் கேட்டுக் கொள்வார். ஆனால் குழந்தைகளோ அந்தச் சிறுவனை அதற்கு முன்பு தாங்கள் பார்த்ததே இல்லை என்று கூறினார்கள். 'அவன் எங்கே வசிப்பவன் எங்கிருந்து வந்தான் என்பது எங்களுக்குத் தெரியாதே' என்ற போது அந்தப் பிரபுவுக்கு வேதனை தாங்க முடியாததாக இருந்தது.

அன்று முதல் அந்தச் செல்வந்தர் எல்லாக் குழந்தைகளிடமும் அன்பும் பரிவும் காட்டலானார். ஆனால் அவரது முதல் தோழனாக வந்த அந்தச் சின்னக் குழந்தையின் நினைவு மட்டும் அவர் உள்ளத்தை விட்டு நீங்கவேயில்லை. 'அவனை — அந்தச் சின்னக் குழந்தையை நான் எப்போது பார்ப்பேன்'' என்ற ஏக்கம் அவர் இதயத்தை அழுத்திக் கொண்டிருந்தது.

வருடங்கள் ஓடி மறைந்தன. அந்தச் செல்வந்தர் முதுமையினால் பலமிழந்து போனார். முன்போல் அவரால் குழந்தைகளுடன் விளையாட முடியவில்லை. ஒரு பெரிய சாய்வுநாற்காலியில் சாய்ந்தபடி உட்கார்ந்தவாறே குழந்தைகளின் விளையாட்டைக் கண்டு மகிழ்ந்து கொண்டிருந்தார்.

ஒரு மாரிக் காலத்துக் காலை. கிழவர் கம்பளியைப் போர்த்திக் கொண்டு ஜன்னலின் அருகில் உட்கார்ந்திருந்தார். அவரது பார்வை தூரத்தில் தோட்டத்தின் அந்த மூலையில் லயித்திருந்தது. என்றோ ஒரு நாள் யாரோ ஒரு குழந்தை அங்கு தம் கழுத்தைக் கட்டிக் கொண்டு முத்தமிட்ட அந்தக் காட்சியில் மெய்ம் மறந்து கண்களை மூடிக் கொண்டிருந்த அவர் மெல்லக் கண் திறந்தார். என்ன ஆச்சரியம்! வியப்பினால் அவர் விழிகள் விரிந்தன. இதயத் துடிப்பும் நின்று நிதானித்துப் பார்த்தது. என்ன அற்புதமான காட்சி! அந்த மரம், அதே மரம் வண்ண வண்ணப் பூக்களால் பூத்துக் குலுங்கியது. தங்கம் வெள்ளியினாலாகிய ரசகுண்டுகளைப் போல் பழங்கள் தொங்கின. அதன் கீழே, அந்த மரத்தினடியில் அவர் விரும்பிய சின்னஞ் சிறிய பையன் நின்று கொண்டிருந்தான்.

செல்வந்தர் தாம் போர்த்தியிருந்த கம்பளியை உதறி வீசி எறிந்தார். மகிழ்ச்சியினால் அவருக்கு இருபது வருஷத்து இளமை திரும்பியது. வாசலுக்கு ஓடினார். புல்வெளிகளைத் தாவிக் கடந்து ஓடினார். அந்தக் குழந்தையின் அருகில் வந்தார். ஆனந்தத்தினால் அவரது இதயம் வேகமாகத் துடித்தது. குழந்தையைக் கண்டதும் அவர் கண்கள் சிவந்தன. கோபத்தினால் அவர் உதடுகள் துடித்தன. ஏன் தெரியுமா? குழந்தையின் முதுகிலும், விலாவிலும் பட்டை பட்டையாகத் தடித்துச் சிவந்து வீங்கி இருந்தது.



''கண்ணே! உன்னை யார், எந்தப் பாவி இப்படி அடித்தது? சொல், அந்தக் கல்நெஞ்சக்காரனை கொன்று போட்டு விடுகிறேன்'' என்று கண்களில் நீர் மல்கக் குமுறினார் கிழவர்.

''இந்தத் தழும்புகள் ஒரு அன்புள்ளம் தந்த தண்டனை தான் தாத்தா, கோபப் படாதீர்கள்....!'' என்றான் குழந்தை கோமளமாகச் சிரித்துக்கொண்டே.

''யார் அது?'' என்று கேட்டுத் தடிப் புண்ட அந்த உடலைத் தன் தவிக்கும் விரல்களால் தடவிக் கொடுத்தார் கிழவர். அடுத்த நிமிஷம்! அவர் உடலில் ஏதோ மின்சாரம் பாய்ந்த மாதிரி இருந்தது. குழந்தை நின்ற இடத்தில் இப்போது... அது.... அது யார்....? அதுவும் குழந்தை தான். ஆனால்... 'ஐயோ, என்ன ஒளி....! அந்தக் கருமைக்கு இத்தனை ஒளியா? தலையிலே மயிற்பீலி. உடலிலே தான் எத்தனை நகைகள்! உள்ளத்தைச் சிலிர்க்க வைக்கிறதே அந்தச் சிரிப்பு! இடையிலே கட்டியுள்ள அரை ஞாணில் அது என்ன? வேய்ங்குழலா? ஆகா... கண்ணனா.... மணி வண்ணனா? கள்ளக் கண்ணனல்லவா ? கார்மேக வண்ணனல்லவா? ஊரார் வீட்டில் வெண்ணெய் திருடியதற்காகவா உன்னை அடித்தாள் யசோதை? இல்லை, கண்ணா, இல்லை! உலகத்து மக்களின் உள்ளங்களையெல்லாம் திருடிக் கொண்டாயே நீ. அதற்காகத்தான் இருக்கும்! ஆனாலும் அவள் கல்நெஞ்சக்காரிதான். அதற்காக இப்படியா அடிப்பது?'

கண்ணன் மோகனமாகச் சிரித்தான். ''உன் தோட்டத்தில் அன்று ஒரு முறை என்னை விளையாட அநுமதித்தாய். இன்று உன்னை நான் என்னுடைய தோட்டத்துக்கு அழைத்துப் போவதற்காக வந்திருக்கிறேன். என் தோட்டம்தான் அழியாத பிருந்தாவனம். வா....!'' என்று கைநீட்டினான் கண்ணன்.

அன்று மாலை தோட்டத்துக்குக் குழந்தைகள் விளையாட வந்தபோது பூத்துக் குலுங்கிய அந்த மரத்தடியில் கிழவர் படுத்திருந்தார். அவர் மீது அந்த மரம் தனது மலர்களைச் சொரிந்து மூடி இருந்ததைக் கண்டார்கள். தாத்தாவைத் தொட்டு எழுப்பின குழந்தைகள். அவர் எழுந்திருக்கவில்லை. என்றுமே வாடாத பூவும் விழுகாத கனிகளும்உள்ள கண்ணனின் நந்தவனத்துக்குச் சென்று என்றும் வாடாத வாழ்வு பெற்றுவிட்டார் அந்தக் கிழவர் என்பது குழந்தைகளுக்குத் தெரியுமா என்ன?

செலவைக் குறையுங்கள்

# டிவிஎஸ் விநியோகிக்கும் மோட்டார் உறுப்புகளை வாங்குங்கள்

பஸ், லாரி சொந்தக்காரர்கள் எவரை வேண்டுமானாலும் கேளுங்கள். டிவிஎஸ் விநியோகிக்கும் மோட்டார் உறுப்புகள் சிறந்தவை. நீண்ட நாள் உறுதியாக உழைக்கும்.

காரணம்: உறுப்பு உற்பத்தியாளர்களில் பெரும்பாலோர் தங்கள் தங்கள் துறைகளில் தலைசிறந்தவர்.

**உழைப்பிற்கு ஆராய்ச்சி செய்யப் பெற்ற உறுப்புகளையே டிவிஎஸ் விநியோகிக்கிறது.**




டி. வி. சுந்தரம் அய்யங்கார் & சன்ஸ் பிரைவேட் லிமிடெட்
மதுரை - திருச்சி - திருநெல்வேலி - புதுக்கோட்டை - சேலம் - கோயமுத்தூர் - திருவனந்தபுரம்
சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட், மதராஸ் - பங்களூர் - செகந்திராபாத் (A.P.)
மதராஸ் ஆட்டோ சர்வீஸ் பிரைவேட் லிமிடெட், மதராஸ் - பங்களூர்

mas-4249


இந்தத் தொழில் என்னோடு போகட்டும் என் பிள்ளையை மேல் படிப்புக்கு அயல் நாடுகளுக்கு அனுப்பிவிட்டேன்! என்கிறார் குப்பா சாஸ்திரிகள்.


AIR INDIA
சாஸ்திரிகள் பையன் ஜெர்மனிக்குப் பயணமானான்


ஜெர்மனியிலிருந்து மற்றொரு விமானம் இந்தியா வருகிறது.


விமானத்திலிருந்து இறங்கிய ஜெர்மானிய மாணவர்கள் பெருங் கூட்டமாகக் குப்பா சாஸ்திரிகள் வீட்டைத் தேடிப் போகிறார்கள்.


சாஸ்திரிகள் வீட்டில் வேதபாராயண கிளாஸ் நடக்கிறது.

# அதிர்ஷ்டப் புயல்

பி.வி.ஆர்

செண்ட்ரல் ஸ்டேஷனில் ஒரு நாள் காலையில் இறங்கிய சங்கரன் குட்டி தன்னுடைய அதிர்ஷ்டத்தை எண்ணிப் பூரித்துப் போனான். ஒத்தப் பாலத்திலிருந்து சென்னை வரை அவனும் டிக்கட் பரிசோதகர்களும் கண்ணாமூச்சி விளையாட்டு விளையாடியதில் அவனே வெற்றி பெற்றான். கையிலிருந்த ஓர் அழுக்கேறிய காக்கி பையைத் தலையணையாக வைத்துக் கொண்டு, அந்தக் கூட்டத்திலும் ஒரு பெஞ்சியினடியில் படுத்து உறங்கிய அவனை யாரும் லட்சியம் செய்யவில்லை. அவனும் யாரையும் லட்சியம் செய்யாமல் இன்பக் கனவுகளில் மூழ்கினான்.

ஆனால் ரயிலிலிருந்து இறங்கி, செண்ட்ரல் ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் நடக்க நடக்க, தன்னுடைய அதிர்ஷ்டம் ரயில் பிரயாணத்துடன் முடிந்து விட்டதோ என்ற பயம் அவனுள் திடீரென்று புகுந்து கொண்டது. ஒத்தப்பாலம் போன்ற சிறிய ஸ்டேஷனாக இருந்தால் டிக்கட் பரிசோதகர் கண்ணுக்குப் படாமல் எப்படி வெளியேறுவது என்று அவனுக்குத் தெரியும். பிரும்மாண்டமான சென்னை சென்ட்ரலில் எப்படித் தப்புவது?

கூட்டத்தோடு கூட்டமாக அவன் தயங்கித் தயங்கி நடக்க நடக்க அவனுக்கு என்ன செய்வது என்று புரியவில்லை. இந்தப் புரியாத நிலையிலும் ஒரு தெம்பு சுடர் விட்டது. அவன் பயந்தபடியே டிக்கெட் பரிசோதகர் வெளியே செல்லும் வழியில் அவனைப் பிடித்தாலும் என்ன செய்து விடுவார்? கன்னத்தில் 'பளார்' என்று ஓர் அறையைக் கொடுத்துவிட்டு, இரண்டு மணி நேரம் ஒரு மூலையில் நிற்கச் சொல்லுவார். பையை உதறிக் காட்டச் சொல்லுவார். அறுபத்தி ஏழு பைசாவுக்கு மேல் அவனிடம் ஒரு பைசாகூட இல்லை என்பதைக் கண்டதும் அவருடைய ஆத்திரம் அதிகமாகும். மேலும் இரண்டு தடவை தம்முடைய கையைப் பிரயோகம் செய்துவிட்டு, மற்றுமுள்ள பிரயாணிகளைக் கவனிக்க ஆரம்பித்து விடுவார்.'

இந்த மாதிரிச் சிந்தனை பிறந்து வளர வளர, தெம்பு எனும் சுடர் தைரியம் என்ற ஜோதியாகப் பிரகாசிக்க ஆரம்பித்தது. ஆனால் அதே சமயத்தில் ஒரு வேதனையும் பிறந்தது. முதன் முதலாக ஒரு பெரிய மாகாணத்தின் தலைநகருக்குள் அவன் கால் வைக்கிறான். அந்த வேளையில் அடியும் உதையுமா அவனை வரவேற்க வேண்டும்?

ஆனால் சங்கரன் குட்டியின் அதிர்ஷ்டம் இருக்கிறதே, அது ஒரு தொடர் கதை. டிக்கட் பரிசோதகர் நிற்கும் இடத்தில் ஒரு சிறு கூட்டம் கூடியிருந்தது. (அவனுக்காகத்தான்! ஆனால் வரவேற்க அல்ல!) மூன்று வடக்கத்திக்காரர்களும், டிக்கெட் பரிசோதகரும் இந்தியிலும் ஆங்கிலத்திலும் யுத்தம் செய்து கொண்டிருந்தார்கள். இரண்டு தமிழர்கள், அவர்களுடைய யுத்தம் தொடர்ந்து நீடிப்பதற்குத் தங்களால் இயன்ற வரைக்கும் உதவி செய்து கொண்டிருந்தார்கள். இந்த ஆறுபேர்கள் எங்கே திடீரென்று தங்களுடைய பேச்சுக்களை முடித்துவிட்டுக் கிளம்பி விடுவார்களோ என்ற ஆதங்கத்தில், சுமார் இருபது பேர்கள் அவர்களைச் சுற்றி ஒரு கோட்டையாக நின்று காவல் காத்துக் கொண்டே, ரசித்து நின்றார்கள்.

ஒரு பெருங் கூட்டமே டிக்கெட் இல்லாமல் பிரயாணம் செய்து விட்டு இப்போது மாட்டிக் கொண்டிருக்கிறது என்று நினைத்த சங்கரன் குட்டி கூட்டத்தை விட்டுச் சற்று ஒதுங்கி நின்றான். தனியாக மாட்டிக் கொண்டால் ஓரிரு அறைகளுடன் நின்று விடும். கூட்டத்தில் ஒரு வழக்கு வாய்த்து விட்டால் ஜெயில் வாசமே ஏற்பட்டு விடலாமே! இப்படிப்பட்ட எண்ணம் அவனுள் ஓடிக் கொண்டிருக்கையில், சில போர்ட்டர்களும், பிரயாணிகளும் கூட்டத்தையோ, அதன் மையத்தில் நின்று கொண்டிருக்கும் டிக்கெட் பரிசோதகரையோ லட்சியம் செய்யாமல், ஒரு ஓரமாகக் கோட்டையின் விளிம்பை அழுத்திக் கொண்டு வெளியேறினார்கள். இதைப் பார்த்துவிட்ட சங்கரன் குட்டியும் அவசர அவசரமாக வெளியேறினான்.

மெதுவாக அவன் வால்டாக்ஸ் ரோட்டில் இறங்கி நடக்கலானான். பசி வயிற்றைக் கிள்ளியது. ஒத்தப் பாலமாக இருந்தால், கையில் இருக்கிற அறுபத்தி ஏழு பைசாவை மூன்று நாட்களுக்கு வைத்துக் கொண்டு, வேக வைத்த மரவள்ளிக் கிழங்கும், பிட்டும் சாப்பிடலாம். ஆனால் இது மெட்ராஸ் அல்லவா? பிட்டும் கிழங்கும் எங்கே கிடைக்கும்? வால்டாக்ஸ் ரோடு நடைபாதையிலே இன்னும் கொஞ்ச தூரம் போனால் அவன் நினைக்கிற பிட்டு (சர்க்கரை) வள்ளிக் கிழங்கு, மூகண்டை எல்லாம் கிடைக்கும் என்று அவனுக்குத் தெரியவில்லை. அவனுடைய கண்ணில் ஒரு சாதாரண ஓட்டல்தான் தெரிந்தது.

ஓட்டலில் சாப்பிட்டுக் கொண்டிருக்கையில்தான், தன்னுடைய நாட்டுப் பிரஜைகள் அநேகம் பேர் அங்கு இருக்கிறார்கள் என்ற உண்மை அவனுக்குப் புலப்பட்டது. தைரியமாக ஒரு சிப்பந்தியிடம் தன்னுடைய அபிலாஷையைத்





தன்னுடைய தாய்மொழியில் சொன்னான். அந்தச் செப்பந்தி மலையாளம், தமிழ், மெட்ராஸ் தமிழ் ஆகிய மூன்று பாஷைகளின் கலவையில், "நேத்து ஒரு ஆளு இவ்விடந்து பூட்டான். கல்லாப் பெட்டியிலே முதலாளி சாமி குந்தியிருக்கு. போய் விசாரி" என்றான்.

பில்லுடன் ஐம்பதுபைசாவை நீட்டிய சங்கரன் குட்டி, "சாமி!" என்று அழைத்தான்.

கன்னங் கரேல் என்றிருந்த முதலாளி, "என்னப்பா?" என்று விசாரித்தார். அவருடைய இடது கை, வலது கைச் சதைக்குள் எதையோ தேடிக் கொண்டிருந்தது. எலும்பு இருக்கிறதா என்று தேடுகிறார் என்றுதான் நினைத்தான் சங்கரன் குட்டி. அடுத்த கணம் தன்னுடைய ஊகத்துக்கும், ஆராய்ச்சிக்கும் இது தருணம் அல்ல என்ற எண்ணம் பிறக்கவே, "சொந்தஊர் ஒத்தப்பாலம் சார். பேரு சங்கரன் குட்டி!" என்றான்.

முதலாளி சிரித்தார். அவர் சிரித்தார் என்றால் எதிராளி வசமாக மாட்டிக் கொண்டு விட்டான் என்று அர்த்தம்.

முதலாளி ஏன அப்படித் திடீரென்று சிரிக்க ஆரம்பித்தார் என்று சங்கரன் குட்டிக்குப் புரியவில்லை. விழித்தான்.

"வேலை வேணுமா?"

தலையை வெகு வேகமாக ஆட்டி விட்டு வாயாலும், "ஆமாம், ஸார்!" என்றான் குட்டி.

"இதுக்கு முன்னாலே எங்கே வேலை செஞ்சிருக்கே?"

"கோயமுத்தூரிலே மூணு மாசம் பணி எடுத்திருக்கேன்."

"க்ளீனர் வேலையா?"

"ஆமாம்."

"என்ன சம்பளம் வாங்கினே?"

"முதல் மாசம் பத்து ரூபா... அப்புறம் பதினைஞ்சு ரூபா....!"

"கோயமுத்தூர் பணக்காரங்க ஊர். கொடுக்க முடியும்!"

சங்கரன் குட்டி வாய் திறக்காமல் அவரையே பார்த்துக் கொண்டு நின்றான்.

"இந்த ஊர் பெரிய ஊராணாலும் பணம் இல்லாத ஊர் தம்பி!" என்றார் முதலாளி தொடர்ந்து.

சங்கரன் குட்டி ஒன்றும் புரியாமல் திகைத்துவிட்டு, இலேசாகச் சிரித்தான். அச்சிரிப்பில் இருபத்திரண்டு காரட் அசடு வழிந்தது. அந்த அசட்டுத்தனம் மறைவதற்குள் முதலாளி, "முதல் மாசம் அஞ்சு ரூபாய்... ரெண்டாம் மாசம் எட்டு ரூபாய்.... போ... டேய், கோவிந்தா! இவனே அழைச்சுக்கிட்டுப் போ... உன் பேரு என்ன சொன்னே? குட்டி! என்ன குட்டி, சங்கரன் குட்டி தானே! போ.... முதல்லே குளி... அப்புறம் வேலையை ஆரம்பி!" என்று மூச்சு விடாமல் ஒப்பித்தார்.

சங்கரன் குட்டியால் அதிர்ஷ்டப் புயலைத் தாள முடியவில்லை. கோவிந்தன் குட்டியைப் பின்தொடர்ந்து நகர்ந்தான். ஓட்டலின் பின்கட்டை அடைந்த போது, சென்னையில் இவ்வளவு எளிதாக எப்படி வேலை கிடைக்கிறது என்ற அதிசயம்தான் அவன் மனத்துள் மோதியது. நாடெல்லாம் வேலையில்லாத் திண்டாட்டம் ஜனப் பெருக்கத்தோடு போட்டி போட்டுக் கொண்டு பூதம் போல் வளருகையில், அவனுக்கு எப்படி வந்த அரை மணி நேரத்தில் வேலை கிடைக்கிறது! மெதுவாகக் கோவிந்தன் குட்டியை விசாரித்தான்.

"உனக்கு இங்கே சரியாக அஞ்சு மாசம்தான்!"

"அப்புறம்?"

"அனுப்பி விடுவார்..... யாரையும் அஞ்சு மாசத்துக்கு மேலே வைச்சுக்க மாட்டார்!" என்று சொன்ன அவன், தொடர்ந்து தொழிலாளர் சங்க விதிகளையும் ஆறு மாதங்களுக்கு மேல் இருந்தால் முதலாளிக்கு ஏற்படக்கூடிய பிரச்னைகளையும் ஒருவாறு தெளிவாக்கினான்.

ஒருவாறாக ஒத்தப்பாலம் கோமேதவி இல்லத்து சங்கரன் குட்டி, சென்னை வால்டாக்ஸ் ரோடு ஓட்டல் ஒன்றில் வேலையை ஆரம்பித்தான். இருபது வயது வரையில் ஊரெல்லாம் சுற்றி விட்டு, தாயாரை மிரட்டியும், அழவைத்தும் பணம் பறித்து அலைந்த அவன் இப்படி மேஜை துடைக்கும் சிப்பந்தி ஆகி விட்டதை நினைத்து சந்தோஷப்பட்டான். இனி மேல்தான் வாழ்க்கையே ஆரம்பிக்கப் போகிறது என்ற எண்ணம் வேரூன்றி நின்றது.

க் க் க்

ஒரு மாதம் சென்றது.

அந்த ஓட்டலின் சரித்திரத்தைக் கேட்கக் கேட்கச் சங்கரன் குட்டி பூரித்துப் போனான். கோவிந்தன் குட்டி டாக்ஸி டிரைவர் கண்ணுவீரத்தைப் பற்றி ஒரு பிரபந்தமே பாடிவிட்டான். அப்புக் குட்டன், சங்குண்ணி, ஸ்ரீகண்டன் முதலான எத்தனையோ பேர்களுக்கு வாழ்வளித்தவன் டாக்ஸி டிரைவர் கண்ணுவீரம். சென்னையில் இருக்கிற எல்லா ஓட்டல்களையும் விட்டு விட்டு வால்டாக்ஸ் ரோட்டில் இருக்கும் ஒரு சாதாரண ஓட்டலுக்கே தினம் தினம் மூன்று வேளை 'நாஷ்டா' பண்ண ஒருவன் வருகிறான் என்றால் அது எதற்காக இருக்கும்? அந்த ஓட்டலின் சப்ளையர்களாக இருக்கும் ஜீவன்களுக்கே புது வாழ்வு கொடுக்கத்தான்.



கண்ணுவீரத்தின் கருணைக்கு எப்படியும் தான் பாத்திரமாகி விட வேண்டும் என்று துடித்த சங்கரன் குட்டி தன் அவல நிலையைக் கண்டு மனம் புழுங்கினான். அப்புக் குட்டன், சங்குண்ணி முதலானோர் ஸப்ளையர்கள். ஆனால் அவன் ஒரு மேஜை துடைக்கும் இயந்திரம்.

இரவும் பகலும் முதலாளியின் காலைப் பிடிக்கலானான். அவருடைய காலைப் பிடித்து வெற்றி பெற்று விட்டான். அப்புறம் இருக்கவே இருக்கிறது கண்ணுவீரத்தின் கால்கள்!

ஒரு நாள் ஒரு லைப்ளேயருடைய ஐந்து மாத காலம் முடிவடைந்தது. சங்கரன் குட்டிக்கும் பதவி உயர்வு கிடைத்தது. கண்ணாயிரத்தை எப்படிக் கவனித்துக் கொள்ள வேண்டும் என்பதைக் கோவிந்தன்குட்டி சாங்கோபாங்கமாகச் சொல்லிக் கொடுத்தான்.

சங்கரன் குட்டியின் அதிர்ஷ்டத் தொடர்கதை, அவனுடைய வாழ்க்கை என்ற ரசிகப் பெருமக்களுக்குத் தேவையாக இருந்ததால் நீண்டு கொண்டே போயிற்று. காலை ஏழு மணி, பிற்பகல் மூன்று மணி, இரவு ஏழரை மணி என்று முக்கால பூஜைகளுக்குக் கண்ணாயிரம் எழுந்தருள, சங்கரன் குட்டி தவறாமல் வேளைக்கு ஒன்னேகால் ரூபாய்க்கு நைவேத்தியம் படைத்து விட்டு, நாற்பது பைசாவும் ஐம்பது பைசாவுமாகக் கணக்கு எழுதி பில்லும் கொடுக்கலானான். என்றுமே செய் நன்றியை மறக்காத கண்ணாயிரம், லைப்ளேயர் பதவிக்கு ஏறின இரண்டாம் மாதமே ஐலண்டு மைதானத்திலும், கடற்கரைச் சாலையிலும் சங்கரன் குட்டிக்குப் பயிற்சி அளிக்க ஆரம்பித்தான்.

மேலே வளர்த்துவானேன் ?

சென்னையில், ஓட்டல் க்ளீனராக ஆரம்பித்த சங்கரன் குட்டி டாக்ஸி டிரைவராக உயர்ந்து விட்டான்.

இந்த ஏழு வருடங்களில், ஒரே முதலாளியிடம், ஒரு புகாரும் இல்லாமல் வெற்றிப் பாதையில் தளர்நடை போட்ட அவன் டாக்ஸி டிரைவர்களில் மன்னன். மன்னர்களில் டாக்ஸி டிரைவர். அடிபட்ட கிழவியைத் தக்க சமயத்திலே ஆஸ்பத்திரியில் சேர்த்ததற்குப் போலீஸார் அளித்த பாராட்டுப் பத்திரம், ஒரு 'ஆந்திரவாடு' மறந்துவிட்டுப் போன பத்தாயிரம் ரூபாயை அவரிடமே சேர்ப்பித்ததற்குக் கிடைத்த நற்சாட்சிப் பத்திரமும் இருநூறு ரூபாய்ப் பரிசும், இன்னும் எத்தனையோ இது போன்ற பரிசுகளும் வெகுமதிகளும் குவிந்தன. சங்கரன் குட்டி மட்டும் பட்டணத்து நாயக்கராக இருந்திருந்தால், முதலாளி தம் பெண்ணையே அவனுக்குக் கொடுத்திருப்பார்! அதை ஒரு நாள் அவர் வாய் விட்டும் அவனிடமே சொல்லி விட்டார்.

அப்போது பெருமையால் சிரித்த குட்டி, அவர் தலை மறைந்ததும்தான் ஒரு பெரிய உண்மையைக் கண்டு பிடித்தான்! பெண், கலியாணம் என்ற வார்த்தைகள் அவனைத் தட்டி எழுப்பி உட்கார வைத்தன. அவன் 'ஸ்டியரிங்'கைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான்.

இந்த ஏழு வருஷத்தில் அவன் எப்படி அம்முவை மறந்து விட்டான் ? எந்த அம்முவுடன் பத்து ஆண்டுகளுக்கு முன்பு திருச்சூர் பூரம் என்றும், பகவதி உற்சவம் என்றும் போனானோ, அந்த அம்முவை அவனால் இத்தனை காலமாக எப்படி நினைக்காமல் இருக்க முடிந்தது? அந்தக் காலத்தில் அவனும் அம்முவுமாக எத்தனை சினிமாக்கள் பார்த்திருக்கிறார்கள்! என்னதான் அம்முவின் அப்பன் கோச்சனும் அம்மா குஞ்சுக் குட்டியும் அவனை நெருங்க ஒட்டாமல் அடித்தாலும் அவன் அம்முவின் சிநேகத்தையும் அபிமானத்தையும் பெற்றிருந்தானே ?

இப்போது நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலையில் ஒரு மரத்தடியில், காரினுள்ளேயே அமர்ந்து கொண்டு அவன் தன் நினைவிலேயே மூழ்கிக் கிடக்கையில், மனக்கண் முன் பாரதப் புழையும், அதன் கரைகளில் மண்டிக் கிடந்த தென்னந்தோப்பும் எழுந்தன.

அவனுடைய பன்னிரண்டாவது வயதில் தகப்பனார் இறந்து போனார். அப்போது பக்கத்து வீட்டு நாலு வயது அம்முதான் அவனுடைய துக்கத்துக்கு மருந்தாக இருந்தாள். தகப்பனார் இறந்த பிறகுதான், தாயாருக்கு அவனுடைய வீடு ஒன்றைத் தவிர வேறு ஏதும் சொத்து கிடையாது என்று தெரிந்தது. சங்கரனுடைய ஒரு அண்ணன் எர்ணாகுளத்தில் பீடி சுற்றும் தொழிலில் ஈடுபட்டு, கொஞ்ச நாட்களுக்குப் பிறகு தொழிலாளர்களிடையே அமைதி இருந்தால் அது ஆபத்து என்று நினைத்துக் கலகம் மூட்ட ஆரம்பித்தான். அவனுடைய முயற்சி வெற்றி அளிக்கவே, பொது உடைமைக்காரர்கள் அவனை அள்ளிக் கொண்டு போனார்கள். பெரிய பெரிய இடங்களில் கலகங்களுக்கு ஆரம்ப விழா ஏற்பாடு செய்ய. ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் அவன் மந்திரியாகி விடுவான். சங்கரனுடைய இரண்டு சகோதரிகளுக்கும் 'முண்டு' கொடுத்தாகி விட்டது. இப்போது அவர்கள் பரசுராமருடைய புண்ணிய பூமியிலேயே எங்கேயோ இருந்து கொண்டு, பிள்ளையும் பெண்ணுமாகப் பெற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

தாயார் கோமேதகி இன்னும் பழங்காலப் பெருமையை நினைத்தவளாய், அசை போடும் பசுவைப் போல் வாழ்ந்து வருகிறாள். வீட்டைச் சுற்றி இருக்கும் இருபது தென்னை மரங்களும், நேந்திர மரங்களும் அவளுடைய ஜீவனத்தை ஓட்டி வருகின்றன.

* * *

சங்கரன் குட்டி மற்ற எல்லோரையும் மறந்துவிட்டு அம்முவையே தியானம் பண்ண ஆரம்பித்தான். சதா சர்வ காலமும் தியானம் செய்தால் தியான மூர்த்தியே எழுந்தருள மாட்டாரா ? ஆனால் அவன் விஷயத்தில் அது பலிக்கவில்லை. யாரோ ஒரு நாட்டுப்புறத்தான் வந்தான். ''என்னுங்க, ஒங்க வண்டியிலே என்னை ஏத்திக்கிட்டு எழும்பூர் சேஷன் போவீங்களா? துட்டு கொடுத்துப் போடறேனுங்க!'' என்று கேட்டுக் கொண்டே.

நாள் செல்லச் செல்ல சங்கரன் குட்டிக்கு எதுவுமே பிடிக்கவில்லை. மசால் தோசைக்குப் பதிலாக வெறும் தோசையே சாப்பிடலானான். அவன் ஓட்டும் டாக்ஸியின் முதலாளி வேலுசாமி நாயக்கராக இல்லாமல், அம்முவின் தகப்பனார் கோச்சனாக இருந்திருக்கக் கூடாதா என்று ஏங்கினான். இன்னொரு நாள் முதலாளியின் பெண் அம்முவாக இருக்கக் கூடாதா என்று புலம்பினான்.

அவன் சென்னைக்கு வரும்போது பத்தொன்பது வயது முடிந்திருந்தது. பதினொரு வயது அம்மு பாவாடையும் குப்பாயமுமாய், தலையைக் கோடாலி முடிச்சாகப் போட்டுக் கொண்டு சூரிய ஒளியில் முகமெல்லாம் மஞ்சள் பிரகாசிக்க பள்ளிக்கூடம் சென்று கொண்டிருந்தாள்.

ஒரு நாள் அவன், ''அம்மு!'' என்று அவளைக் கூப்பிட்டான்.

''எந்தா சங்கரன்?'' அவள் நின்றாள். அவளுடைய சிறு உதடுகள் துடித்தன.

''இனி இவிடே நான் இருக்கான் தரம் (வழி) இல்லா?''

''பணி ஒந்நும் கிட்டியிலே?''

''இப்போ! ஈ ஒத்தப்பாலத்தில் கிட்டவும் கிட்டில்லா அது கொண்டு...''

''அது கொண்டு?'' இப்போது அம்முவின் குரலில் பயம் தொனித்தது.

''நான் மெட்ராஸ் போகாம் போறு....''

''என்னே விஷமப்படுத்தான் அல்லே நீ போவுந்நது......'' அம்முவின் கண்களில் நீர் மல்கியது.

''கரையருதே, அம்மு.... நான் நிச்சயமாயிட்டு மடங்கி வரும்.''

''நான் நின்னே விஸ்வசிக்கில்லா....நீ என்னெ மறந்து போவும்....''

''குருவாயூரப்பன் சத்தியம், நான் மறக்கில்லா!''

குருவாயூரப்பன் மீது சத்தியம் என்றதும் அம்மு துள்ளிக் கொண்டு ஓடி விட்டாள். அவனும் அன்று சாயந்திரமே ரயிலேறி விட்டான்.

* * *

இப்போது நினைத்தபோது, தான் எத்தனை பெரிய பாவி என்று தெரிந்தது சங்கரனுக்கு. குருவாயூரப்பன் மீது சத்தியம் செய்த அவன் எவ்வளவு எளிதாக அம்முவை மறந்து விட்டான். இப்போது அவனுடைய காளைப் பருவத்தின் முதிர்ச்சியில் அம்முவின் நினைவு தோன்றியிருக்கிறது என்றும், அது ஒருவிதத்தில் வெறும் சுயநலம்தான்.

நாட்கள் செல்லச் செல்ல, ஒரு மாதம் 'லீவ்' வாங்கிக் கொண்டு ஒத்தப்பாலம் சென்று, அம்முவைக் குருவாயூரப்பன் சந்நிதானத்திலேயே கலியாணம் செய்து கொண்டு அழைத்து வர வேண்டும் என்ற திட்டம்தான் வலுவேறிக் கொண்டேயிருந்தது. ஆனால் மனத்தில் ஒரு பயமும் உதித்தது. இப்போது பதினெட்டு வயது முடிந்து பத்தொன்பது வயதாயிருக்கும் அம்முவுக்குக் கலியாணம் ஆகியிருக்குமா ? அப்படியே கலியாணம் ஆகியிராவிட்டாலும், அந்தக் காலத்தில் 'சோம்பேறி' என்று அவனை விரட்டி விரட்டி அடித்த கோச்சனும் குஞ்சுக் குட்டியும் பருவத் திளைப்பில் இருக்கும் அம்முவை அவனுக்குக் கொடுப்பார்களா? இந்த இரண்டாம் பயம், உதித்த சுவட்டிலேயே மறைந்தது. சங்கரன் குட்டி இப்போது சோம்பேறி அல்ல. மெட்ராஸ் டாக்ஸி டிரைவர். மலையாளம், மெட்ராஸ் தமிழ், நெல்லூர் தெலுங்கு அரைகுறை இங்லீஷ் எல்லாம் கற்றவன் கையில் சேர்த்து வைத்த ஐந்நூறு ரூபாய் வேறு இருக்கிறது. அவனை இனி மேல் யார் சோம்பேறி என்று சொல்லுவார்கள்? இருந்தாலும், கோச்சன் பணக்காரர். ஐந்நூறு ரூபாயையும், டாக்ஸி டிரைவர் பதவியையும் கண்டு மயங்கிவிட மாட்டார். அவர் மயங்க வேண்டுமானால் பத்து மடங்கு பணமாவது இருக்க வேண்டும். என்ன செய்வது?

# இலவசம்




**சிந்தால் டாய்லெட்
பவுடரின் விலையில்
35 பைசா மிச்சம்**

பிடிக்க உதவும்
ஒரு கூப்பன்




வாடை அகற்றும் மேனியழகு சோப்பாகிய ஒவ்வொரு சிந்தால் சோப்பின் மேலுறைக்குள்ளும் ஒரு விசேஷக் கூப்பன் உள்ளது—அதைக் கொடுத்து சிந்தால் டாய்லெட் பவுடர் (லார்ஜ், பேமிலி, அல்லது எகானமி சைஸ்) எந்த ஒரு டப்பா வாங்கினாலும் உங்களுக்கு 35 பைசா மிச்சமாகும்.

மென்மணமூட்டப்பட்ட சிந்தால் சோப்பிலும், டாய்லெட் பவுடரிலும், விசேஷ அழகுசாதனப் பொருளாகிய ஜி11 (ஹெக்ஸாக்ளோரோபீன்) அடங்கியுள்ளது.

**சிந்தால் சோப் அதிக நாள் நீடித்துழைக்கும்,
சிக்கனமாக பயன் தரும்.
நாள்முழுதுக்குமான புத்துணர்ச்சிக்கு
இருமடங்கு உறுதிபெறவே.**

சங்கரன்குட்டி இந்தப் பயத்தையும், தயக்கத்தையும் தன்னுள் புதைத்துக் கொண்டே தொழில் நடத்தி வருகையில் ஒரு நாள் சென்னையில் அவனுக்கு மட்டும் பிரத்தியேகமாகப் புயல் ஒன்று அடித்தது. அது ஓர் அதிர்ஷ்டப் புயல்.

மாலை ஐந்து மணிக்கு சிந்தாதிரிப் பேட்டைக் கடைத்தெருவில், சூட்டும் டையும் அணிந்த ஓர் இளைஞன் புன்முறுவலும் பென்சில் மீசையுமாக டாக்ஸியில் ஏறினான். சென்டிரல், மயிலாப்பூர், அடையாறு என்று அவன் சென்னையின் பல க்ஷேத்திரங்களைத் தரிசனம் செய்து கொண்டு மீண்டும் சென்டிரலிலேயே இறங்கி, மலையாளம் கலந்த தமிழில், "இந்தா இதை பக்ஷீஸாக வைச்சுக்கோ!" என்று சொல்லி ஸ்டேஷனை நோக்கிச் சென்றான். அப்போது மணி சரியாக ஏழு இருபது. அதே சமயத்தில் நாயக்கர் ஏழரை மணிக்கு வண்டியைக் கொண்டு வரச் சொன்னது சங்கரனுக்கு ஞாபகம் வந்தது. 'ஷெட் போர்டை' மாட்டி விட்டு விரைந்தான். ஜெனரல் ஆஸ்பத்திரி பக்கமாகச் செல்லுகையில் பின் ஸீட்டில் ஏதோ ஒரு வெள்ளை நிறக் காகிதம் நிழல் போலத் தெரிந்ததை அரைக் கண்ணால் பார்த்தான். ஒரு நீண்ட உறை.

நாயக்கர் வீட்டு வாசலில் வண்டியை நிறுத்திய அவன் அந்தக் கவரை எடுத்தான். ஏதோ ஆபீஸ் சமாச்சாரம் என்று நினைத்துக் கவரைப் பிரித்தான். அடுத்த கணம் அவனுடைய கண்கள், முன்னொரு தடவை 'ஆத்திரவாடு'வின் பத்தாயிரம் ரூபாயைப் பார்த்தபோது கூசினது போலக் கூசின. அவன் எண்ண ஆரம்பிப்பதற்குள் நாயக்கருடைய குரல் திண்ணையிலிருந்து கேட்கவே, அதை அப்படியே நிஜார்ப் பையில் திணித்துக் கொண்டு அவரைக் கவனிக்க ஓடினான்.

* * *

நாலாயிரத்து எண்ணூறு ரூபாய்! வெகுமதிகளும், நற்சாட்சிப் பத்திரங்களும் வாங்கின சங்கரன் குட்டி இப்போது என்ன செய்வான்? அந்த இளைஞன் ரயிலைப் பிடிக்க ஓடினது தான் தெரியுமே தவிர, அவனுடைய விலாசம் தெரியாது. போலீஸில் ஒப்படைத்து, பேப்பரில் விளம்பரம் கொடுத்துப் பணத்தைச் சேர்த்துவிடுவது ஒன்றுதான் வழி. என்ன செய்வது?

சரமாரியாக எழுந்த கேள்விகளுக்கு இடையே அம்முவின் உருவம் தோன்றியது. கோச்சன் அளிக்கக்கூடிய வரவேற்பு தெரிந்தது. இந்தப் பணத்தைப் பார்த்த பின்பும் அவனை அவர் சோம்பேறி என்று கூப்பிட்டால், கண்டிப்பாக அவருக்குப் பைத்தியம்தான் பிடித்திருக்கும்!

மூன்றாம் நாளே ஒரு மாசம் 'லீவ்' வாங்கிக் கொண்டு கொச்சி மெயிலில் ஏறினான் அவன்.

* * *

இருபத்தெட்டாம் வயதில் ஒத்தப் பாலத்தைப் பார்த்த போது அவன் மனம் பூரித்தது. அன்று பார்த்த ஒத்தப் பாலமேதான். அதே கடை வீதி. அதே கடைகள்! எங்கேயெல்லாமோ ஐந்தாண்டுத் திட்டங்கள், எதையெல்லாமோ மாற்றியிருக்கின்றன. ஒத்தப் பாலம் மட்டும் மாறவில்லை.

**"உங்களுக்கு மோட்டார்சைக்கிள், ஸ்கூட்டர், வைரமோதிரம், கார், இதுகளிலே எது வேணும், அப்பா கேட்கச் சொன்னார்!"**

**"???...!"**

**"இவைகளை எல்லாம் மாதத் தவணைகளில் பணம் கட்டி வாங்கற சீட்டுக் கம்பெனியை அப்பா ஆரம்பிச்சிருக்கார்!"**

மாந்தோப்பில் புகுந்து, ஒற்றையடிப் பாதை வழியாக நெல் வயல்களைக் கடந்து பாரதப் புழையின் கரையோரத்தில் உள்ள தென்னந் தோப்பின் ஓரமாக நடந்து, அவனுடைய வீடான கோமேதில் இல்லத்தினுள் நுழைந்தான். கோமேதில் திண்ணைக் குறட்டில் உட்கார்ந்து கொண்டு 'மாத்ரு பூமி' படித்துக்கொண்டிருந்தாள்.

"அம்மே!" என்று அவன் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தான்.

"என்டே மோனே!" என்று தாயார் கண்ணீர் வடித்தாள்.

* * *

சுமார் பத்து மணிக்கு அம்முவின் வீட்டை நோக்கி நடந்தான். பக்கத்து வீடானாலும் முப்பது கெஜ தூரம் இருந்தது. அதை நெருங்கிய போதுதான், பழைய வீடு இருந்த இடத்தில் ஒரு பங்களா இருப்பதை அவன் உணர்ந்தான். அந்த உணர்ச்சியே பலவிதமான பயத்தை விளைவித்தது. நடுங்கிக் கொண்டே நடந்து வீட்டு வாசலின் முன் நின்றான். போர்ட்டிகோவுக்கு முன்னால் ஒரு சிறு கார் நின்று கொண்டிருந்தது.

காம்பவுண்டு கேட்டருகே, ஆங்கிலத்திலும் மலையாளத்திலும் எழுதியிருந்த பெயர்ப் பலகையைப் பார்த்ததும் அவனுக்குத் தலை சுற்றியது. "டாக்டர் கே. அம்முக்குட்டி, எம். பி. பி. எஸ்." என்ற எழுத்துக்கள் தேனீக்கள் போல அவனைச் சுற்றிப் பறந்துகொட்டலாயின.

இந்த அம்முக்குட்டி தன் அம்முவாக இல்லாமல் இருக்கக் கூடாதா என்று வேண்டிக் கொண்டே, கேட்டை மெதுவாகத் திறந்தான். இருபதாவது வயதில் அம்மு ஒரு டாக்டர் என்பதை அவன் மனம் நம்ப மறுத்தது.

வாசலில் யாரும் இல்லை. மெல்ல மெல்ல நடந்து அவன் கூடத்தினுள் கால் வைப்பதற்கும், டாக்டர் அம்மு அங்கே வருவதற்கும் சரியாக இருந்தது.

"அம்மு!" எப்படியோ அவன் கூப்பிட்டு விட்டான்.

அம்மு திடீரென்று நின்றாள்..... "லேன்!" என்று ஆரம்பித்தவள், நிறுத்திவிட்டு, "நீ...நீ... நீ......" என்று இழுத்தாள்.

"ஞானே! நின்டே சங்கரன் குட்டி தன்னே!"

"இருக்கின்.... இருக்கின்...நல்ல சமயத்தில் நீ வந்நுட்டுண்டு...!"

"இருபதாம் பிராயத்திலே நீ ஒரு லேடி டாக்டர்!" என்றான் சங்கரன். அதே சமயத்தில் தனக்கும் ஒரு புதுப் பதவியைத் தேடிக் கொண்டான்.

"நீ என்னா செய்யுந்நது?"

"இப்போ மெட்ராஸிலே... அவிடெ போய், மூனு கொல்லம் மெக்கானிகல் என்ஜினீயரிங் படிச்சு....... இப்போ......!"

அம்முவின் வியப்பு அடங்குவதற்குள், "யாரான அது? அட..... நம்மடே சங்கரனு..... மெக்கானிகல் என்ஜினீயரா! பேஷ்.... பலே பேஷ்!" என்று குரல் கேட்டது. அபிஷேகம் செய்த கோச்சன் அவனருகே வந்தார். சங்கரனுடைய உடல் நடுங்கியது.

"வெரி குட்! வெரிகுட்....!" என்ற அம்மு, "அச்சா, நல்ல சமயத்தில் நம்ம சங்கரன் வந்நுட்டுண்டு..." என்றாள்.

"அதே..... அதே !" என்ற கோச்சன், "சங்கரா, நீயும் குருவாயூர் வரணும்!" என்றவர், "நாளெ அவிடெ அம்முவின்டே விவாகமாண!"

சங்கரனுடைய தலை சுற்றத் தயாராக இருந்தது. அது ஆரம்பிப்பதற்குள், மாடியிலிருந்து ஒருவன், புன்முறுவலும் பென்சில் மீசையுமாய் இறங்கி வந்தான்.

"இவரான அம்முவின்டே பர்த்தா!" என்று கோச்சன் அறிமுகம் செய்துவிட்டு பாக்கையும் பாக்கு வெட்டியையும் எடுத்தார்.

ஒரு தடவை பார்த்த சங்கரனால் இன்னொரு தடவை ஏறிட்டுப் பார்க்க முடியவில்லை.

"பாஸ்கரன்! சங்கரன் குட்டியாண. அடுத்த மடத்து கோமேதயிலின் புத்திரனு."

"ஓ..மெட்ராஸ் டாக்ஸி டிரைவர்.." என்ற பாஸ்கரன், "டிரைவர் என்டே கவர் ஒன்னு நிந்தன்டே வண்டியில் வைச்சு மறந்து போய்..... நிங்ஙள் கண்டோ!" என்று கேட்டான்.

தலையை ஆட்ட முடியாமல் ஆட்டிய சங்கரன், "அந்தப் பணத்தைத் தருவதற்காகத்தான் உங்களைத் தேடிக் கொண்டிருக்கிறேன். இதோ உங்கள் பணம்!" என்று கூறிக் கவரைக் கொடுத்துவிட்டு நல்ல பெயராவது மிஞ்சட்டும் என்று படுவேகமாக அவ்விடத்தை விட்டு அகன்றான்.

"டிரைவரா?" என்று ஏககாலத்தில் அம்முவும் கோச்சனும் கேட்டதோ அதைத் தொடர்ந்து, "அதே" என்று பென்சில் மீசைக்காரன் குரல் கொடுத்ததோ அவன் காதுகளில் விழவில்லை.

அதிர்ஷ்டப் புயலுக்குப்பின் இப்படி ஓர் அமைதி ஏற்பட்டதை நினைத்து அவன் மனம் நொந்து கொண்டது.

# விசுவரூபம்

நன்றாக இருள் கவிந்துவிட்டது. கீழே நிறை வெள்ளமாய் அசைந்தோடும் ஆடிக் காவிரி. மேல் வானத்தில் பளிச்சிடும் மின்னல் கீற்றுகள். எங்கேயோ 'டொக்' 'டொக்' என்று அடிக்கும் மரங்கொத்தியின் சத்தமும், எதிர்க் கரை வாழைக் கொல்லையிலிருந்து மொத்தமாய் தார்களை ஏற்றி வரும் பரிசல், ஆற்றைக் கிழிக்கும் ஓசையும், அடுத்து நின்ற சவுக்குத் தோப்பிலிருந்து வரும் "ஹோ" வென்ற இரைச்சலுமாக அந்த வேளை களை கட்டி நின்றது.

சாத்தமுடி படித்துறையில் உயரத்திலிருந்த துளசி மாடத்துக்குப் பின்புறத்தில் யார் கண்ணிலும் படாமல் சுருண்டு கிடந்த "திவட்டி"யை, மாலைக் கடன்களை முடிக்க வந்த ஞானஸ்கந்தக் குருக்கள் எப்படியோ பார்த்து விட்டார். அந்த வேளையில் இப்படிச் சோர்ந்து படுத்திருக்கிறானே, உடம்புக்கு என்னவோ ஏதோ என்ற கவலையோடு கீழ்ப் படியில் நின்றவாறே உரக்கக் குரல் கொடுத்தார்.

"ஏய் திவட்டி!"

பதிலில்லை.

"ஏலே, உன்னைத்தாண்டா!"

பதிலில்லை.

"ஏய், தடிப்பயலே, பொழுது சாயற நேரத்திலே என்னடா தூக்கம்?"

ஒன்றுக்குமே பதில் இல்லை. ஐயருக்குக் கவலை வந்துவிட்டது. கையில் குழைத்துக் கொண்டிருந்த விபூதியைக்கூட அணிந்துகொள்ளாமல், மளமளவென்று படிகளில் ஏறி, துளசி மாடத்தருகில் வந்து நின்றார். அவர் எழுந்து வருவதைப் பார்த்த திவட்டி கண்ணைக் கசக்கிக் கொண்டே எழுந்து, பவ்யமாக நின்றான். தலை பூமியை நோக்கியும் கால் கட்டை விரல் மணலைக் கீறிக் கொண்டும் நின்றன.

"என்னடாலே.... என்ன ஆச்சு?"

திவட்டி பதிலே பேசவில்லை. ஆனால், கைரேகை மறையும் அவ்வேளையிலும் அவன் கண்களிலிருந்து முத்துக்கள் உதிர்வதைக் குருக்கள் பார்த்து விட்டார்.

"சொல்லித் தொலையேண்டா! ஏன் அழுவுறே? உடம்புக்கு என்ன பண்ணுது?"

திவட்டி விக்கி விக்கி அழ ஆரம்பித்தான். ஐயர் நிலைகொள்ளாமல் தவியாய்த் தவித்தார்.

"சொன்னாத்தானேடா ஏதாவது பரிகாரம் பண்ணலாம்?"

"............"

"சொல்லித்தொலை
கட்டு அப்புறம்
அழுவேண்டா!"

பனிச்சென்று அழு
கையை நிறுத்தினா
திவட்டி. நேரடியாகக்
குருக்களய்யாவின் விழி
களை ஊடுருவினான்.
பிறகு ஆவேசம் கலந்த
குரலில் உரக்கப் பேசி
னான்.

"ஐயா! நம்ம கோயி
லிலே இருக்குதே, அது
சாமியா, இல்லே,

வெறுங்கல்லா? தெரியா
மத்தான் கேக்கறேன்.
சொல்லுங்க...."

ஐயர் வாயடைத்துப் போய் நின்றார். திவட்டியா இப்படிப்பேசுகிறான் என்ற தோரணையில் அவரது புருவங்கள் உயர்ந்து நெளிந்தன.

"இல்லே, தெரியாமல் தான் கேக்கறேன்...... நீங்கள்ளெல்லாம் படிச்சவங்க. சாமிக்குப் பக்கத்திலேயே பொழுதன்னிக்கும் நின்னுக்கிட்டு அவரோட அந்தரங்கம் பேசறவங்க... இந்த வெவரத்தை எனக்குக் கொஞ்சம் சொல்லுங்க..."

ஐயருக்குக் குழப்பத்தை விடப் பயம்தான் அதிகமாகி விட்டது. சந்தடியற்ற, மனுஷ சஞ்சாரமற்ற அவ்விடத்தில் இது போன்ற பயங்கரமான நேரடிப் பதிலே யில்லாத ஒரு சூட்சுமமான கேள்

தங்கக் கடிகாரம், வைரக் கடுக்கன் அதெல்லாம் பாத்தீங்களா? சாமி! நல்லாக் கேளுங்க! அவருடைய கட்சிக்கு இன்னைத் தேதியிலே அவரு மாவட்டத் தலைவராம். நாளைக்கு மந்திரி வேலை கெடச்சாலும் கெடைக்குமுன்னு சொன்னாரு. ஐயா! நேரமாத் தான் கேக்குறேன். இந்தக் கோவில்லே இருக்கிற சாமிக்குச் சொரணையே கெடயாதுங்களா? என் கண் முன்னாலே இந்தத் தெய்வத்தைப் புழுதியை வாரித் தூத்திப்பிட்டுப் போன பய, இன்னிக்கு ராசாவாட்டமா செப்பும் சிங்காரமுமா அங்கிருந்து திரும்பி வரான். நாய் படாத பாடுபட்டு, ஒடம்பைப் பாக்காம, உசிரைப் பாக்காம, ராப்பகலா இந்தச் சாமியைச் சுத்திச் சுத்தி வர்ற நான் வெறும் பயலா, தீவட்டி தூக்கறவனு கேடு கெட்ட பொளப்பு பொளச்சிகிட்டிருக்கேனுங்களே! உலகத்துக்கு நியாயம் செய்யற சாமிங்களா அது?''

குருக்களுக்கு நா வறண்டுவிட்டது. ''காளியண்ணனின் வருகைதான் இவ்வளவு குழப்பத்துக்கும் காரணமா?'' என்ற தோரணையில் தலையை ஆட்டிக்கொண்டே அவனுடன் வார்த்தையாட விரும்பாமல் அவ்விடத்தை விட்டு அகன்றார்.

அர்த்தஜாமப் பூஜைக்குக் கோவிலுக்குப் போகும்போது ஞானஸ்கந்தக் குருக்களுக்குச் சிந்தனை பிடிபடாமல் கிளைவிட்டுப் பல்வேறு திசைகளில் ஓடியது. ''ஏய் தீவட்டி! கர்மாவைச் செய்யறதுக்குத்தான் நமக்கு அதிகாரம். பலனை அநுபவிக்க, எதிர்பார்க்க இல்லேன்னு பகவானே சொல்லியிருக்காரு, தெரிஞ்சுக்கோ!'' என்று கத்த வேண்டும்போல் ஒரு கணம் தோன்றியது. ஆனால் அடுத்த கணமே, ''நீ சும்மாக் கெட சாமி! பகவான் உங்ககிட்ட மாத்திரம் தனியா வந்து சொல்லிட்டுப் போனாரோ? அவர் என்ன உங்களுக்கு மாமனா, மச்சானா?'' என்று அவன் திருப்பிக் கேட்டால் என்ன செய்வது என்று நினைத்த குருக்களுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. அந்தச் சிரிப்பின் இதம் மறையு முன்னரே சிந்தனை இடறென்று தத்துவ விசாரணையில் இறங்கிவிட்டது. ''தீவட்டி போன்ற பாமர மக்களுக்குப் பகவான் கூறிய உண்மையைப் புரியும்படியாக எடுத்துச் சொல்ல யார் இருக்கிறார்கள்? அதற்குச் சரியான மனிதர்கள் இல்லாததனால்தான் அவனுக்குக் குதர்க்க புத்தி தோன்றுகிறது. ஆனால்... ஆனால்... உண்மையிலேயே அவன் பேசியது குதர்க்கம்தானா?''

தீவட்டி நிறைவேறா ஆசையின் வெறியில் பேசிய பேச்சுக்கள் சாதாரண, கல்வியறிவில்லாத ஒரு பாமரனிடமிருந்து வரக் கூடியவையா யிருந்தாலும், அவைகளில் ஏதோ ஓர் இடத்தில் நியாயம் இடறுவது போலவே தோன்றியது குருக்களுக்கு. அநாத ரட்சகன், தீனதயாளன், கருணாகரன் என்று ஆயிரம் நாமாக்களைத் தரித்துக் கொண்டிருக்கும் அந்த ஆண்டவன், கேவலம் ஒரு தீவட்டி தூக்குபவனின் காலைச் சரி செய்ய முடியவில்லையென்றால் அதைக் கையாலாகாத்தனம் என்று கூறுவதா? அல்லது கருமித்தனம் என்று கூறுவதா? விழித்த கண்களை மூடாமல் அனவரதமும் எங்கணும் பரவி, எல்லாவிடத்திலும் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருக்கும்



அவர்: ஏண்டாப்பா! செவ்வாய்க் கிழமை வெள்ளிக்கிழமை தவறாமல் என் பெண்ணை வந்து பார்த்துப் பேசி விட்டுப் போறயே! சிவனேன்னு என் பெண்ணைக் கலியாணம் பண்ணிக் கொண்டு விடேன்!

அவன்: ஐயையோ! வேண்டாம், அப்புறம் செவ்வாய்க்கிழமை வெள்ளிக்கிழமை நான் எங்கு போவது?

---

அந்தப் பகவானுக்கு உரல் மாதிரி இருக்கும் அந்தப் பயலின் கால் கண்களில் படவில்லையா? தானாக ஒன்றையும் பதிலுக்கு எதிர்பார்க்காவிட்டாலும் கூட அவனுக்கு நன்மை பயக்க வேண்டிய கடமை அந்த ஆண்டவனுக்குக் கிடையாதா? இல்லை, குதிரை வண்டிக் காரனைப் போல் சவாரியை ஏற்றுவதற்கு முன் கூலியை நிர்ணயித்துக் கொள்ள வேண்டுமா? ஆண்டவனே! இதில் எது நியாயம்? நம் கண் முன்னால் அயோக்கியத்தனம் செய்பவனெல்லாம் அடுக்கு மாளிகைகள் கட்டிக் கொண்டு போவது ஒருபுறம். ஆயுட்காலம் முழுதும் ஆண்டவனுக்காக உடல், பொருள் ஆவி யாவற்றையும் அர்ப்பணித்துவிட்டுக் கடைசியில் நடுத்தெருவில் நிற்கும் அப்பாவிகள் ஒருபுறம்! இரண்டு நிலைகளுக்கும் கர்த்தா அவன்! எல்லாம் அவன் செயல்! குறித்த நேரத்துக்கு விளையும் சூரியோதயத்திலிருந்து மீண்டும் குறித்த நேரத்தில் ஏற்படும் மறு உதயமும், அதற்கு நடுவில் அவசரம் அவசரமாக நடக்கும் ஆயிரமாயிரம் அயோக்கியத்தனங்கள் உட்பட, யாவும் குறித்தபடி திட்டமிட்டபடி, நிர்ணயித்தபடி நடக்கும் அவன் செயல்!

''நல்ல பகவான்டா!'' என்று நினைத்த குருக்களின் இதழ்களில் ஈரமில்லாப் புன்னகையொன்று நெளிந்து, நெளிந்த சுருக்கில் மறைந்தது.

கர்ப்பக் கிருஹத்தில் நுழையும்போது குருக்களுக்குத் தான் சுவாதீனத்தில் இருக்கிறோமா என்றே சந்தேகம் வந்துவிட்டது. என்றுமே இல்லாத ஒரு நடுக்கமும் படபடப்பும் தோன்றின. பூஜைத் தட்டையும் நைவேத்தியத்தையும் கீழே வைத்து விட்டுக் குனிந்த நிலையிலேயே சில நிமிஷங்கள் நின்றார். நிமிர்ந்து மூல விக்கிரகத்தின் முகத்தை நேருக்கு நேர் பார்ப்பதற்கே அவருக்கு என்னவோ போலிருந்தது. பிறகு நடந்தவை யாவும் குருக்கள் செய்தாரா அல்லது பகவானாக நடத்திக் கொண்டாரா என்பது தெரியாது. மூலவரின் மேலிருந்த வஸ்திரம் விருட்டென்று களையப்பட்டது. குனிந்த நிலையிலேயே நின்றிருந்த குருக்களின் இடது கை, பக்கத்திலிருந்த அண்டாவைத் துழாவி ஒரு செம்பு ஜலத்தை மொண்டது. வலது கை அதை வாங்கி வாங்கிக் கொட்டியது. பிறகு, பக்கத்துக் கொடியிலிருந்த காய்ந்த வஸ்திரம் ஒன்று குருக்களின் கைகளில் தாவி, அதே துரிதத்தில் மூலவரின் உடலைச் சுற்றிக்கொண்டது. தட்டிலிருந்த பூமாலை இறைவனின் கழுத்தைக் கவ்வியது. பூஜை மணியின் நாக்கு இரண்டு முறை நடுங்கி ஓய்ந்தது. வில்லைக் கற்பூரம் தீக்குளித்துத் தன்னைத் தானே நாசமாக்கிக் கொண்டது. நைவேத்தியத்தின் மேலிருந்த ஈரத் துணி இறந்து மூடிக் கொண்டபோது வாசலில் கண்டாமணி விடாமல் ஒலித்தது.

கர்ப்பக் கிருஹத்தை விட்டுக் கிளம்பிக் கதவை இழுத்து மூடுவதற்கு முன் குருக்கள் ஒரு முறை திரும்பிப் பார்த்தார். அவருக்கு இருந்த பரபரப்பில் அவர் அப்படிப் பார்க்க வேண்டிய அவசியமில்லைதான். ஆயினும் ஏதோ ஒன்று அவரைப் பற்றி இழுப்பது போலிருந்தது. திரும்பியபோது ஸ்வாமியின் நெற்றியிலிருந்த சந்தன வட்டத்தைக் காணவில்லை. குருக்கள் அருகில் வந்தார். கொஞ்சம் சந்தனத்தை எடுத்து உருட்டிக் காலணா அளவு வட்டமாக்கி அவ்வில்லையை எடுத்துப் பகவானின் நெற்றியில் வைத்து உள்ளங் கையால் ஓர் அழுத்து அழுத்தினார். படபடப்பில் அப்படிச் செய்தாரா அல்லது வேண்டுமென்றே அப்படி அழுத்தினாரா என்பது அவருக்கே புரியவில்லை. ஆனால், என்றையும் விட இன்று அந்த அழுத்தலில் ஓர் அமானுஷ்ய வேகம் இருந்தது என்பதை அவரால் உணராமல் இருக்க முடியவில்லை. ''ஏன் அப்படிச் செய்தேன்? ஏன், ஏன், ஏன்?'' என்று லட்சக்கணக்கான ''ஏன்''கள் இதயத்தைக் குடைய ஆரம்பிக்கவே, குருக்களுக்கு முத்து முத்தாய் வியர்க்க ஆரம்பித்துவிட்டது. பயம் பற்றிக்கொண்டது. கண்கள் இருண்டு, தலை சுற்றுவதுபோலிருந்தது. ''இந்த இருட்டறையில் என்னையும் இந்த ஸ்வாமியையும் மட்டும் தனியாக வைத்து வேடிக்கை பார்க்கிறதே இந்த உலகம்!'' என்று ஏதோ ஒரு சிந்தனை திடுமெனக் கிளம்பி அது படருமுன்னரே எல்லாம் சூன்யமாகிவிட்டது.

மீண்டும் கண் விழித்தபோது ஞானஸ்கந்தக் குருக்கள் வீட்டு முற்றத்தில் கட்டிலில் இருந்தார். குளம் கட்டிய விழிகளில் நிலவொளி மோதிச் சிதறியது. நீல வானை வெறித்து நின்ற அவர் முகம் எங்கோ, எதையோ தேடும் பாவத்தில் மூழ்கியிருந்தது. சிந்தித்தோ, உடலை வருத்தியோ தேடக் கூடிய தேடல் அல்ல அது. நின்ற இடத்திலேயே தன்னுள் தான் மூழ்கி, துருவித் துருவி அலசி அலசித் தேடும் ஆன்மீகத் தேடல். பிரகிருதியின் முடிவிலா இயக்கத்தில் தோன்றி மறையும் சுக துக்கங்களின் நிஜ ஸ்வரூபத்தை இனம் கண்டுகொள்ளத் துடிக்கும் தேடல்.

திடீரென்று உடலைச் சிலுப்பிக் கொண்டு எழுந்தார் குருக்கள். தேடல் குழப்பத்தில் முடிந்தது போதும்! பக்கத்தில் இருந்த செம்பிலிருந்து ஒரு விழுங்குத் தண்ணீரைக் குடித்தார். நாம் கட்டிலுக்கு எப்படி வந்தோம், கோவிலில் நமக்கு நேர்ந்தது என்ன என்பதைப் பற்றி ஒரு கணம் யோசித்தார். பிறகு எரிச்சலுடன் ''வழக்கமாக வருகிற மயக்கம் இன்றும் வந்திருக்கும். வேறு என்ன? எவனாவது வீட்டிலே கொண்டு வந்து போட்டிருப்பான். அதுக்குப் போய் அநாவசியமாய் ஆயிரம் அர்த்தம் பண்ணிப்பானேன்? நான் எண்ணிய எண்ணத்துக்காகப் பகவான் தண்டனை கொடுத்துட்டார்னு கற்பனை பண்ணிப்பானேன்? அவர் தண்டனை கொடுக்கிறதுக்கு ஏதாவது காரணம் இருக்கணுமா என்ன?

'சாமியாம் சாமி! நிவேட்டி கிடக்கட்டும். நானே இருக்கேனே! நாற்பது வருஷங்களா இந்தச் சாமிக்குக் கொஞ்சமாவா செஞ்சிருப்பேன்? எனக்கு என்னத்தை வாரிக் கொடுத்திட்டார்? மொட்டை மாடு கொம்பு மாடு எல்லாமே ஒண்ணுத்தான் போயிடறது! கைக் குழந்தைக்குச் செய்வாப் போல நான் தவறாமல் எண்ணெய் குளுப்பாட்டி, வஸ்திரத்தைக் கட்டிவிட்டுப் பூவாப் போட்டு, கற்பூரமா கொளுத்தியதுக்கு எனக்கு என்ன கெடச்சுது? தொட்டுத் தொட்டுப் பார்த்து, தடவித் தடவிக் கொடுத்து, நேரம் தாண்டாம வாயிலே வைட்டாத குறைதான், நைவேத்தியத்தைக் கொண்டு கொண்டு வந்து கொடுத்தேனே, 'அப்பா! உனக்குப் போடாமெ நான் சாப்பிட்டா எனக்குச் ஜீரிக்காதுடா'ன்னு அவசர அவசரமா எவ்வளவு தடவை ஓடியிருப்பேன்? மூத்த பெண் பிரசவத்துக்குக் கூடப் பக்கத்திலே இல்லாமல் அவனுக்கு அன்னாபிஷேகம் செஞ்சு வைத்தேனே! எனக்கு என்னத்தை வாரிக் கொடுத்திட்டார் அந்தப் பகவான்? இல்லே, தெரியாமத் தான் கேக்கறேன். எனக்கு என்ன செஞ்சுட்டார்ங்கறேன்?''

குருக்களுக்கு நெஞ்சு அடைபாய்க் கனத்தது. மாமேருவை மண்டையில் ஏற்றி வைத்தாற்போல் ஒரு பாரம்; இடை சொல்லாமல் ஒரு தவிப்பு. உள் எங்கோ வேறு 'விண் விண்' என்று தெறிப்பதுபோல் ஓர் உணர்ச்சி.

நிவேட்டியுடன் தன் நிலைமையை ஒப்பிட்டுப் பார்த்ததால் வந்த அனர்த்தத்தை அவர் உணர்வதற்கு முன்—தூசு தும்பட்டை, பச்சை ஓலை, வாடிய பூ, அழுகிய வாழைக் கட்டை, அழுக்கு நுரை யாவையும் அடித்து வரும் புது வெள்ளம் போல் நாற்பது வருஷத்து அநுபவங்கள் மிதந்துவர ஆரம்பித்தன!

மணமான ஒரே ஆண்டில் கோவில் வேட்டுச் சத்தத்தில் மனைவிக்குக் காது போனது —

முதல் குழந்தை பிறந்த மூன்றும் நாளே விக்கல் கண்டு செத்தது —

இரண்டாவது பெண் கல்யாணமான இரண்டாண்டுகளில் கையில் குழந்தையுடன் வெள்ளைப் புடவையைச் சுற்றிக் கொண்டு வீடு திரும்பியது —

மூன்றாவது பையன் ராணுவத்தில் சேருகிறேன் என்று ஓடிப்போய் இன்று வரை தகவல் தெரியாமல் இருப்பது—



''எனக்குப் பிடிச்சதெல்லாம் அவளுக்குப் பிடிக்கிறது...எனக்குப் பிடிச்ச பழம் அவளுக்குப் பிடிக்கிறது! எனக்கு என்ன சாப்பாடு பிடிக்கிறதோ அதுவே அவளுக்குப் பிடிக்கிறது...எனக்குப் பிடிச்ச சினிமா அவளுக்குப் பிடிக்கிறது! ஆனால்.... அவளை எனக்குப் பிடிக்கவில்லை! அவளுக்கு என்னைப் பிடிக்கவில்லையே!''

---

நான்காவது பையனுக்குக் கட்டுப் போட்டால்கூட சம்ஸ்கிருதம் ஏறாமல், மளிகைக் கடையில் கணக்கு எழுதப் போனது. —

பிதுரார்ஜிதச் சொத்தான வீட்டையும் நிலத்தையும் கொஞ்சம் கொஞ்சமாகப் பறி கொடுத்துவிட்டு, இன்று கோவில் மணியை விட்டால் வேறு வழி இல்லையென்றிருப்பது —

குதிர் நிறைய நெல்லை வைத்துக் கொண்டு போவோருக்கும் வருவோருக்குமாக வாரி வாரி வழங்கிய நிலை மாறி, பொட்டணத்தில் அரிசியைக் கட்டும்படி 'பிண்டம் பெருங்காய'மானது —

மந்திரவாதியின் பெட்டியிலிருந்து கருள் கருளாக அந்தமில்லாமல் நீண்டு நீண்டு வளர்ந்து கொண்டே இருக்கும் வண்ண நாடாவைப் போல், நினைவுத் துகள்களெல்லாம் ஒன்றன் பின் ஒன்றாக ஒட்டிக் கொண்டு நெடிய பாம்பாகப் படமெடுத்து ஆடியது.

அப்பப்பா! எவ்வளவு கொடுமை!

பாட்டன், முப்பாட்டன், முப்பாட்டனுக்கு முப்பாட்டன் என்று, பரம்பரை பரம்பரையாக, தலைமுறை தலைமுறையாக, ஜன்ம ஜன்மமாக, யுகம் யுகமாகப் பகவானுக்கு வண்ண வண்ண மலர்களால் செய்த அர்ச்சனைகளெல்லாம் கல்லுருண்டைகளாகத் திரும்பி வந்து மண்டையிலும், நெற்றியிலும் முகத்திலும், நெஞ்சிலும் சூறாவளி வேகத்தில் மாறி மாறி அடிப்பது போல் எவ்வளவு விதமான அநுபவங்கள்! கர்ம பலன், பூர்வ ஜன்ம வினை, தொடரும் பாவம், செய்வினை, கொடுப்பினை என்று எவ்வளவு அழகழகாகச் சமாதானம் சொல்லி விடுகிறார்கள்! பிணியாலும், பசியாலும், சாவாலும் மற்றவர் இழைக்கும் கொடுமைகளாலும் அல்லல் படுவதுதான் பிறவியின் பயன் என்றால், பேசாமல் அந்த ஆண்டவன் சிருஷ்டிக்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்துவிட்டு வேறு உபயோகமான காரியம் ஏதாவது செய்யலாமே!

இரவின் பேரமைதி வண்டாய்க் குடையக் குருக்களுக்குத் துக்கம் பந்து பந்தாய் நெஞ்சை அடைத்தது. நூல் பறந்த பட்டமாய் ஹுங்காரத்துடன் துள்ளித் துள்ளிப் பாய்ந்த நினைவோட்டத்தைத் தடுத்து நிறுத்துவது பெரும் பாடாயிருந்தது.

வாசலில் கேட்ட இரட்டை மாட்டு வண்டியின் சதங்கை ஒலி கவனத்தை ஈர்த்தது.

''நா...ங் கோப்புரானே! ஹாஹாம் ம்.... என்ன ஆட்டமா போடறீங்க? வேராப் போங்கடா.... ஹைஹை ஹாய் ட்ரீயோ!....''

சதங்கை ஒலி வேகமாகி இரைச்சிட்டவாறே வில் வண்டி மளமள வென்று நகர்ந்தது.

குருக்களுக்குப் புரிந்து விட்டது. ஊர் பட்டாமணியம் டவுனுக்குப் போய் விட்டு வீடு திரும்பிக் கொண்டிருக்கிறார். அவர் எங்கிருந்து திரும்புகிறார் என்பது குருக்களுக்குத் தெரியும். ஏன், ஊரறிந்த ரகசியம்கூட. முதல் மனைவிக்குச் சந்ததி இல்லாததால் அவளைத் தள்ளி வைத்து விட்டு, குத்து விளக்காட்டமா இளை ஒருத்தியை இரண்டாந்தாரமாகக் கொண்டு, அதுவும் போதாமல் இப்பொழுது டவுனுக்குப் போய் வந்து கொண்டிருக்கிறார். பட்டாமணியம் தகதகவென்று மின்னும் நல்ல சிவப்பு. ஆறடி உயரம். நோய் நொடி இல்லாத நல்ல போஷாக்கான உடல்; நிரம்பி வழியும் ஐசுவரியம். 'விட்ட சீட்டுச் செல்லும்' வைபோகம். அந்த வட்டாரத்தில் கொடி கட்டிப் பறக்கும் செல்வாக்கு. இவ்வளவும் இருந்துவிட்டால் அடாவடி நடவடிக்கைகளைப் பற்றி யார் கவலைப் படுகிறார்கள்? வாழைக் கொல்லையில் நடந்த இரு கொலைகளில் ஒன்றிலாவது இவருக்கும் சம்பந்தம் உண்டு என்பது ஊர்ப் பேச்சு. ஆயினும் அவர் கோவிலுக்கு வரும் அழகையும் அடக்கத்தையும் பார்த்தால் அவருடைய பரம எதிரியின் மனமும் நெகிழ்ந்துவிடும். கண்களிலும் முகத்திலும் பக்தி பாவம் பெருக்கெடுத்து ஓட, சிவப்பு மயில்கண் வேஷ்டியும், இடுப்பைச் சுற்றிய வெண் பட்டும், நெற்றியில் குங்கும விபூதிகளும், மார்பில் ருத்ராட்ச, துளசி மாலைகளும், காதிலும் கைகளிலும் வைரக் கடுக்கன்களும், மோதிரங்களுமாய், அவர் நெடுஞ்சாண்கிடையாக யோகாசனம் செய்வது போல் கீழே விழுந்து நமஸ்கரித்துவிட்டுப் பிறகு, விழிக்கடைகளில் நீர் பெருகப் பிரசாதத்துக்காகவும் பரி வட்டத்துக்காகவும் குனிந்து நிற்கும் போது, ஞானஸ்கந்தக் குருக்கள் உருகி விடுவார். முழுசாக இரண்டு வெள்ளி நாணயங்கள் தட்டில் தட்சிணையாக விழும்போது அவருக்கு அழுகையே வந்துவிடும்.

இப்பொழுது அந்தக் காட்சியை நினைத்துப் பார்த்த குருக்களுக்குப் பற்றிக் கொண்டு வந்தது.

''என்ன நடிப்பு! ஆனா என்ன பண்றது? அந்த நடிப்புக்குத்தானே பகவான் மசிகிறார்! காசாகவும், பொருளாகவும் வீடாகவும், நிலமாகவும் அந்த மாதிரி ஆள்களுக்குத்தானே அள்ளி வீசுகிறார்!''

விலவண்டிச் சத்தம் ஓய்ந்துவிட்டது. ஞானஸ்கந்தர் மீண்டும் படுத்துக் கொண்டு நீல வானை வெறிக்க ஆரம்பித்து விட்டார். ஓரிரு சமயங்களில் 'இன்று ஏன் நமக்குப் புத்தி இப்படிப் போகிறது!' என்றும் அவருக்குத் தோன்றியது.

திடீரென்று கூடத்திலிருந்து மனைவியின் குரல் கேட்டுத் திரும்பினார்.

"என்ன பண்றது?"

"தூக்கம் வரலே..."

"அழகாகத்தான் இருக்கு! எதைப் பத்தியாவது நெனச்சுண்டு மண்டையை உடைச்சுக்கிறதே வேலையாப் போயிடுத்து. அப்புறம் மயக்கம் போட்டுக் கீழே விழ வேண்டியது! இப்போ என்ன வந்துடுத்தாம்?"

"ஒண்ணும் வரலே. தூக்கம்கூட வரலே!"

"எதாயிருந்தாலும் பகவான் மேல் பாரத்தைப் போட்டுட்டு அக்கடான்னு படுத்துக்கோங்கோ..."

"ஆஹா, அப்படியே செஞ்சுடறேன். என் தலையிலே இருக்கிற பாரத்தைப் பகவான் தலையிலே தூக்கிப் போடறத்துக்குத் தெம்பு எனக்கு இருந்ததுன்னா நான் ஏன் இப்படி இருக்கேன்? அவர்தான் நாம் சொல்றது எங்கே காதுலே விழுந்துடப் போறதோ, ஆறுதலா ரெண்டு வார்த்தை பதில் பேசறப்பலே ஆயிடப் போறதோன்னு கல்லாச் சமைஞ்சுட்டாரே! ஹூம்.... அதெல்லாம் உனக்கு எதுக்கு? நீபாட்டுக்கு உன் வேலையைப் பார்த்துண்டு தூங்கு!"

"அது என்னவோ போங்கோ! இப்படி ராக்கண் முழிச்சா உடம்பு என்னத்துக்காகும்!" என்று முனகிவிட்டு அந்த அம்மாள் ஒருக்களித்துப் படுத்துக்கொண்டு நன்றாகத் தூங்கவும் ஆரம்பித்து விட்டாள்.

குருக்கள் வெள்ளி முளைக்கும் வரையில் 'கூட்டல் — கழித்தல்' கணக்கிலே ஈடுபட்டுவிட்டு, ஒவ்வொரு முறையும் தப்புத் தப்பாகப் போட்டு, கடைசியில் பூஜ்யம் வாங்கிய மாணவனைப் போல் முகம் வெளிறிப் போய்க் கொல்லைப் பக்கம் எழுந்து போனார்.

பல் துலக்கும்போது காளியண்ணனின் ஞாபகம் வரவே, "மாவட்டத் தலைவரா? பலே!" என்று தலையை இலேசாக ஒரு முறை ஆட்டிவிட்டுக் கேலிப் புன்னகை ஒன்றை உதிர்த்தார்.

ஒரே ஒரு முறை மட்டும், "நான் தானு அல்லது திவட்டியா?" என்ற சந்தேகம் எழுந்தது.

பிறகு, தலையில் ஒரு சொட்டு எண்ணெயை வைத்துச் சூடு பறக்கத் தேய்த்துக் கொண்டு ஆற்றுக்குக் கிளம்புவதற்காக ரேழியில் போனபோது, திவட்டி அவசரம் அவசரமாக வந்து கொண்டிருந்தான். கையில் ஒரு செய்தித்தாள் மொரமொரத்தது. வாயெல்லாம் பல்லாக அவன் நின்ற கோலத்தைப் பார்த்தவுடன் குருக்களுக்கு ஆச்சரியமாக இருந்தது. "நேற்று சாயங்காலம் படித்துறையில் பார்த்த பயலா இவன்?" என்று அதிசயித்தார்.

திவட்டி, "சாமி! இந்தக் கூத்தைப் பார்த்தீங்களா?" என்று பத்திரிகையைக் குருக்களிடம் நீட்டினான்.

குருக்கள் ரேழியைத் தாண்டி வெளியில் விசாலமான திண்ணையில் வந்து கால் மேல் கால் போட்டு உட்கார்ந்து, நிதானமாக அவனை ஒரு முறை பார்த்து விட்டு, "என்னடா போட்டிருக்கு அந்தப் பேப்பரிலே?" என்று கூறியவாறே அதை அவனிடமிருந்து வாங்கி விழிகளை ஓட்டினார்.

முதல் பக்கத்தில் பெரிய போட்டோ ஒன்றில் யாரோ ஒருவன் கையில் தீப்பந்தத்தைப் பிடித்துக் கொண்டு தலை தெறிக்க ஓடுவது போலிருந்தது. அதன் கீழே கொட்டை எழுத்துக்களில் "தலைவரின் பிறந்த நாள் விழா! திருச்சியிலிருந்து ஜோதி புறப்பட்டு விட்டது!" என்று போட்டிருந்தது.

"என்னடா இதெல்லாம்?"

"நல்லாப் பாருங்க! போட்டோவிலே இருக்கிறது யாருன்னு பாருங்க!"

"யார்ரா அவன்?"

"என்னங்க சாமி? நம்ம காளியண்ணனை அடையாளம் தெரியலீங்களா?"

"என்னடா சொல்றே நீ?"

"ஆமாமுங்க, அவரேதானுங்க!"

"ஏன் இப்படித் தலைதெறிக்க ஓடறான்? கையிலே திவட்டியை வேறு புடிச்சுண்டு...?"

"திவட்டின்னு சொல்லாதீங்க!"

"பின்னே?"

"ஜோதி!"

"ஜோதியா?"

"ஆமாம், ஜோதி, ஜோதி, ஜோதி" என்று கூறி வயிறு குலுங்கச் சிரித்தான் திவட்டி.

"வேடிக்கையா யிருக்கே! ஹூம்... அதைத் தூக்கிண்டு?"

"இரண்டு கல்லுக்கு ஒருத்தன் மேனிக்கு அதை மாத்தி மாத்தித் தூக்கிண்டு பட்டணத்துக்கு ஓட வேண்டியது..."

"பட்டணத்துக்கா?"

"ஆமாங்க, ஆமாம்! பட்டணத்துலே தலைவர் தயாரா நின்னுக்கிட்டிருப்பார். அவர் கையிலே இந்த ஜோதியைக் கொடுத்திட்டு..."

"கொடுத்துட்டு?"

"ஒரு மாலையைப் போட்டு..."

"போட்டுட்டு?"

"வாழ்க, வாழ்கன்னு பத்து ஆர்த்தி கத்த வேண்டியது..."

"கத்திட்டா?"

"தலைவரைப் புடிச்ச சனியன் எல்லாம் பட்டுன்னு தெறிச்சுப் போயி அவர் நூறு ஆயிசு சம்முன்னு இருப்பாரு!" என்று கூறி மீண்டும் திவட்டி குலுங்கக் குலுங்கச் சிரித்தான். குருக்களுக்கும் சிரிப்பு வந்துவிட்டது. திவட்டி மேலும் தொடர்ந்தான்—

"சாமியோவ்! அந்தக் காளியண்ணன் என்னை எம்மா எனக்காரமாப் பேசிட்டுப் போனாரு! இப்போ பார்த்தீங்களா? அவரும் திவட்டிதான் தூக்கறாரு. அதுவும் யாருக்கு? மனுஷனுக்கு! இன்னிக்கு இருந்து நாளைக்குப் போகக்குன்னு போற மனுஷனுக்கு! நான் தூக்கறது தெய்வத்துக்குச் சாமி! அண்ணன் இருக்காரே, அவரு திவட்டியைத் தூக்கிக்கிட்டு இரைக்க இரைக்க ஓடுறதுக்கு அவருக்கு மந்திரி பதவி! நான் தூக்கிக்கிட்டு மெள்ள நடந்தாலே என் வயிறு நெறம்பிடும் சாமி! அந்தக் கூட்டமத்தைக் கவனிச்சீங்களா?"

கூட்டமத்தைப் பற்றி யெல்லாம் பேசும் திவட்டியைப் பார்க்கப் பார்க்க



பேரன்: பாட்டீ! அம்மா சொல்றா. நீ கண்ணை மூடிண்டாம் ஒலகமே அஸ்தமிச்சுப் போயிடும்னு நீ நினைக்கிறயாம்! சீக்கிரம் இருட்டு வரமாட்டேங்கறது. நீ கண்ணை மூடு, பாட்டி! வாணங்களெல்லாம் கொளுத்தணும்.

பேத்தி: உம்.....சீக்கிரம் மூடு பாட்டீ...ச...ச...!

ஞானஸ்கந்தருக்கு ஆச்சரியமாயிருந்தது. "இந்த மனிதர்களெல்லாம் எவ்வளவு சுலபமாகத் திருப்தி அடைந்துவிடுகிறார்கள். அவனுக்குப் படும் நியாயம் தான் தெய்வ நியாயம் என்று நம்பி எவ்வளவு சந்தோஷப்படுகிறான்! அவன் போடும் 'கூட்டல் — கழித்தல்' கணக்கே வேறு விதமாக இருக்கிறதே! நாளைக்குக் காளியண்ணனுக்கு மந்திரிப் பதவி வந்தால் அவனுக்கு ஏற்படக் கூடிய ராஜபோகத்தைப் பற்றி இந்தப் பயல் இப்பொழுது நினைத்துப் பார்த்தானா? அல்லது அந்தச் சமயத்தில் பழையபடி படித்துறையில் பேயாட்டம் ஆடுவானா? அல்லது அதுவும் தெய்வ நியாயம்தான் என்று சும்மா கிடப்பானா?" என்று எண்ணினார் குருக்கள்.

ஆனால் தீவட்டி மட்டும் பேசிக் கொண்டே போனான்.

"சாமி! 'என்னடா இந்தப் பயல் நேத்து சாயரட்சை வரை ஏதோ கப்பல் கவுந்துட்டாப்பலே தலையிலே கைவச்சுக் குந்திக்கிட்டிருந்தான். இப்ப என்னடான்னு கடவுளுக்கு வக்காலத்து வாங்கிட்டுப் பேசறானேன்னு நெனக்காதீங்க. முழு சமாசாரத்தையும் கேட்டாத்தானுங்க உங்களுக்கு விஷயம் விளங்கும். இந்தப் படத்தைப் பார்த்த அப்புறம்தான் எனக்குப் புத்தித் தெளிவு ஏற்பட்டதுன்னு நெனச்சுடாதீங்க... ஐயா, கேட்டுக்கிட்டு இருக்கீங்களா?"

குருக்கள் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டார். உடலில் ரோமாஞ்சனி ஏற்படுவது காலை நேரத்து ஊதல் காற்றினாலா, அல்லது இதயத்துக்குள் ஏதாவது ஊறுகிறதா என்று அவருக்குப் பிடிபடவில்லை.

"நேத்து நீங்க போயிட்டீங்களா? அப்புறமா, வயங்கரை வழியாக் கால் போன வாக்கிலே போய்க்கிட்டிருந்தேனுங்க. மண்டைக்குள்ளே ஓர் எலி புகுந்துக்கிட்டு மூளையெல்லாம் கடிச்சுக் கடிச்சுத் துப்பற மாதிரி ஒரு வேதனை. 'லே தீவட்டி, ஏண்டா உனக்குப் புத்தி தறி கெட்டுப் போச்சு'ன்னு என் உள்ளார இருந்துக்கிட்டு யாரோ கேக்கற மாதிரி இருந்துச்சு. நேத்து வரையில் நல்லாத்தானுங்களே இருந்தேன்? திடீர்னு பிசாசு புடிச்சுக்கிட்டு ஆடணும்னு அதுக்கு ஒரு காரணம் வாணுமுங்களா? அப்பத்தான் எனக்கு ஒரு ரோசனை தோணிச்சுங்க. காளியண்ணன் ஊருக்கே திரும்பி வராமே இருந்தா, நான் என்ன செஞ்சிருப்பேன்? அவரு வந்ததுனாலேதானே, அவருடைய சில்க் ஜிப்பாவையும் வைர மோதிரத்தையும் பார்த்ததுனாலேதானே எனக்குப் புத்தி பேதலிச்சுப் போச்சு? ஏனுங்க, இந்தக் காது இன்னிக்கு நேத்திக்கு வந்ததுங்களா? எட்டு வருஷங்களாக இப்படியேதானுங்களே இருக்குது? அவன் மாதிரி ஆகணும், இவன் மாதிரி இருக்கணும்னு அது நடக்கக் கூடிய விசயங்களா? அந்த ஆசைக்கு முடிவேதுங்க? அதெல்லாம் விட்டுத் தள்ளுங்க! இப்போ நீங்களே இருக்கிறீங்க! இந்தச் சாமிக்கு உங்களையும் காட்டிலும் இன்னொருத்தன் செஞ்சிருக்க முடியுமா? நான் எந்த மூலைங்க? என்னை விட்டுத் தள்ளுங்க. உங்க விசயத்துக்கு வாங்க. நீங்க இந்த ஆண்டவனுக்கு உழைச்ச மாதிரி எந்தப் பயலுங்க உழைச்சிருப்பான்? அப்பேர்ப்பட்ட உங்களுக்கே என்ன ஆச்சுது? மயிலேபோல, உசிரோட, மகளை வாரிக் கொடுத்தீங்களே. அதுக்காக நீங்க இந்தச் சாமிக்கிட்டே கோவிச்சுக்கிட்டீங்களா? சொல்லுங்க சாமி..."

குருக்களுக்கு மண்டைக்குள் ஓர் அவுட்டு வெடித்துப் பொல பொலவென்று கொட்டியது. பிறகு ரத்தம் உறைந்தது. மூச்சுக் காற்றே உறைந்து உடலே கல்லாக, உலகமே கல்லாக ஸ்தம்பித்து விட்டது போலவும், இதயத்தை யாரோ வெளியே இழுத்துப் போட்டுப் பாம்பை அடிப்பது போல் மடார் மடார் என்று அடிப்பது போலவும், தலை கீழாக நிற்பது போலவும் அசுர வேகத்தில் சுற்றும் சக்கரத்தின் விளிம்பில் கால்கள் மட்டும் வஜ்ஜிரம் போட்டாற் போல் ஒட்டிக் கொண்டு, உடல் அந்தரத்தில் சுற்றுவது போலவும் கணத்தில் என்னென்னவோ தோன்றி மறைந்தன.

"அதுக்காக நீங்க இந்தச் சாமிகிட்ட கோவிச்சுக்கிட்டீங்களா என்ன?"

மீண்டும் மீண்டும் இதே வார்த்தைகள் சிந்தனைப் பீடத்தில் நர்த்தனமாடின.

"மோசம் போனேனே!" என்று இதயத்துக்குள் அவருக்கு மட்டும் கேட்கும் ஒரு பேரிரைச்சல் காதுகளைக் குப்குப்பென்று அடைத்தது. அந்த இரைச்சல் எந்த நிமிஷம் தலையைப் பிளந்து கொண்டு வெளியே வந்துவிடுமோ என்று பற்களை இறுகக் கடித்துக் கொண்டார் குருக்கள். உடலும் உள்ளமும் விதிர் விதிர்க்க, கண்ணீர் தாரை தாரையாக வழிந்தோடியது.

"சாமி! மன்னிச்சுக்குங்க. தெரியாமே வொபயப்படுத்திட்டேன்..... மறந்துடுங்க... உங்க பொறுமைக்கும் நல்ல குணத்துக்கும் காலம் இப்படியே போயிடாதுங்க...சாமி! அழுவாதீங்க."

ஞானஸ்கந்தர் மிக மிகப் பிரயாசையுடன் அழுகையை நிறுத்தப் பார்த்தார். அந்தச் சமயத்தில் அழுவது அவருக்கு மிகவும் இதமாக இருந்தது. அஞ்ஞானம் உடலிலிருந்து சொட்டுச் சொட்டாக வடிவதை அவர் உணர்ந்தார்.

"எதுக்குச் சொல்றேன்னு கேட்டா, வயங்கரையிலே நடக்கும்போது இப்படியெல்லாம் தோணிச்சுங்க..."

"போதும்டா தீவட்டி!" என்று 'ஓ'வென்று கத்தினார் குருக்கள்.

"இன்னும் ஒரே ஒரு விசயம் சொல்லிடறேனுங்க... தெய்வம் கல்லா இருக்கற வரை அது எல்லாத்தையும் ஏத்துக்குது. சிக்காளின்னு பாக்காம, அயோக்கியன்னு பாக்காம, யார் எதைச் சொன்னாலும் ஏத்துக்குது. அர்ச்சனையும் ஏத்துக்குது. திட்டும் வாங்கிக்கிது. நாமதான் எப்போதும் சந்தேகக் கண்ணோடே பார்க்கிறோம். திட்டறவனை, அயோக்கியத்தனம் பண்றவனை, பகவான் தண்டிக்கிறானென்னு மேல்பார்வை பார்க்கிறதா நம்ம வேலை? அது போக்கிரித்தனம் இல்லீங்களா? காளியண்ணனைப் பொறுத்தவரை மனுஷனுக்குப் பந்தம் புடிக்கிறதே ஆண்டவன் அவருக்குக் கொடுத்த தண்டனைன்னு தோணுது. அது அப்படி இல்லாட்டிகூட அதைப் பத்தி நமக்கு என்னங்க அக்கறை? எல்லாத்துலேயும் ஏதோ ஒரு நியாயம் இருக்குதுங்க. கோயில் நடக்கறதுலேந்து கோபுரம் கட்டறது வரை எல்லாக் காரியத்திலேயும் ஏதோ ஒரு நியாயம் இருக்கணும்னுதான் தோணுது.... அது இல்லேன்னு தோணற அதே சமயத்திலே நமக்குக் கடவுள் நம்பிக்கை போயிடுச்சுன்னுதான் அர்த்தம்... என்னங்க நான் சொல்றது?

குருக்கள் நிஷ்டையில் இருப்பது போல் உட்கார்ந்து கண்களை மூடிய வண்ணம் இருந்தார். தீவட்டி சொல்லும் ஒவ்வொரு வார்த்தையும் கண்டாமணி போல் கணீர் கணீரென்று ஒலித்துக் கொண்டிருந்தது. அவர், 'நீ சொல்வது யாவும் சரிதான்' என்று தலை யாட்டவுமில்லை. இல்லையென்று மறுக்கவும் இல்லை. கண்ணீர் மட்டும் வழிந்து கொண்டே இருந்தது.

"நம்ம பாட்டை நாம பாத்துக்கிட்டுப் போனாப் போறாதுங்களா? தன்னை விட்டுட்டு மத்தவங்களைப் பத்தியே ஒவ்வொருத்தனும் நெனச்சுக்கிட்டு இருந்தா, உலகத்துலே வேலை நடக்க வாணுமுங்களா? என்னங்க நான் சொல்றது?"

பதிலில்லை.

"பொழுது விடியுதா, பொழுது சாயுதான்னுகூடப் பாக்காம உழைக்கறதுதானுங்க நம்ம வேலை. இப்போ நீங்க இல்லீங்களா? சாமியோவ், கேக்கறீங்களா?"

பதிலில்லை.

"கூலிக்கு உழைக்கிற புத்தி போயிடணுங்க... எதுக்குங்க கூலி? ஒரு தரம் வாங்கினா அப்புறம் இன்னொரு வாட்டி கைநீட்டவாணுமுங்களா? கூலியைத்தான் முன்னுக்கு முன்னாடியே வேலை தொடங்கறதுக்கு முன்னாடியே கொடுத்துட்டாருங்களே! இந்த உடம்பும் அதுக்குள்ளே பொதைஞ்சிருக்கிற உசுரும் வேறே என்னங்க... ஐயா, நான் சொல்றது சரிதானுங்களே?"

திண்ணை குருக்ஷேத்திரமாகவும், தான் அர்ஜுனனாகவும், தீவட்டி கண்ணனாகவும் மாறிவிட்டதைப் போன்ற உணர்வில் குருக்கள் விசுவ திருஷ்டியில் மெய் சிலிர்த்தார்.

"கூலிக்கு உழைக்கிற புத்தி போயிடணுங்க..."

"டேய் தீவட்டி! நமக்குக் கர்மாவைச் செய்யறதுக்குத்தாண்டா அதிகாரம்... பலனை எதிர்பார்க்கறதுக்கு அதிகாரமில்லேன்னு பகவானே சொல்லியிருக்காருடா..."

"அட போங்க சாமி! பகவான் உங்ககிட்ட மாத்திரம் வந்து தனியாச் சொன்னாரா? என்கிட்டக்கூடத்தான் வந்து சொன்னாரு...."

"இவனுக்கு எப்படி இவ்வளவு ஞானம் வந்தது?"

"ஏன் வரக் கூடாது? கீதாசாரியனே ஒரு மாட்டிடையன்தானே!"

ஞானஸ்கந்தர் கண் விரித்து, விழிகள் கண்ணீரை ஊடுருவிப் பார்வை படர்கையில் —

தீவட்டி விந்தி விந்தி ஒரு காலை ஊன்றி, இன்னொரு காலை புளி மூட்டையை இழுப்பதுபோல் இழுத்துக் கொண்டு தெருவில் இறங்கிக் கொண்டிருந்தான். ★

தபால் வருவதற்கு இன்னும் நேரம் இருக்கிறது. தெருவில் காலை வேளையின் பரபரப்பு இப்போதுதான் தொடங்குகிறது. கோகிலம் திண்ணையை ஒட்டித் தூணில் சாய்ந்தபடி நின்று கொண்டிருந்தாள். அவள் அப்படி நின்ற நிலை, அவளது மனத்தின் எண்ணச் சுமையின் அழுத்தத்தில் ஏற்பட்ட தளர்ச்சியின் மௌன வெளியீடாக இருந்தது.

கனவு ஒன்றின் முடிவில் வாழ்வைத் தொடங்கும் மனத்துடிப்போ, இல்லாவிட்டால் வாழ்வையே ஓர் ஏக்கம் நிறைந்த கனவுக்குள் முடிந்துக் கொள்ளும் அவஸ்தையோ அவளை அலைக்கழித்துக் கொண்டிருந்தது. நாள் தவறாமல் இரவும் பகலும், காலத்தின் ஒவ்வொரு துளியிலும் — அவள் எதிர்பார்த்துக்கொண்டே யிருக்கிறாள்.

'நீ யாரை அல்லது எதை எதிர்பார்க்கிறாய்?' என்று தன்னையே ஆத்ம பரிசோதனை செய்துகொள்ளுகிற மாதிரி கேட்டுக் கொள்ள வேண்டும் போல் அவளுக்கு ஆசையாய் இருக்கிறது. வெகு நாட்களுக்கு முன்பே பிறந்த ஆசை இது. ஆனால் அவளிடம் தன்னைத் தானே அப்படிக் கேட்டுக் கொள்ளும் தைரியம் இல்லை. அவளுக்குள் அந்தக் கேள்வி வார்த்தை என்னும் உருவம் பெறாமல் வெறும் ஆசையாய் — மௌன உருவிலேயே — இன்னமும் உறங்குகிறது.

வானத்தில் குவிந்து வருவது வெற்றுமேகக் கூட்டமாகவே இருந்தாலும் இருக்கட்டும். மழைத் துளிகளைத் தூவாத அந்த மேகங்கள் மனத்துக்குக் கொஞ்சம் நம்பிக்கையைத் தருகின்றன. சூனிய வெளியைவிட இது ஆறுதலாய் இருக்கிறது. நெஞ்சின் தூரத்து விளிம்பில் ஆசை இப்படித்தான் குவிந்து எட்டிப் பார்க்கிறது. அதை ஏன் ஊதிக் கலைக்க வேண்டும் ?

கோகிலம் தெருவில் ஓடிய உணர்வற்ற பார்வையில் மனத்தைப் பதிக்க முயன்றாள்.

யார் யாரோ வேகமாகவும் மெதுவாகவும் நடக்கிறார்கள். வடக்கேயிருந்து வில்வண்டி ஒன்று ஓடிவரும் இரைச்சல் மற்ற ஓசைகளை அழுத்திக் கொண்டு மேலெழும்பிற்று. வண்டி வாசலைத் தாண்டிச் செல்லும்போது, அதற்குள் உட்கார்ந்திருக்கும் சந்துவின் உருவம் தெரிந்தது. அவன் முகத்தை—அந்தப் பார்வையை — நேராகக் காண நேர்ந்த கோகிலம் திடுக்கிட்டாள். அதிகமாய்ப் போனால் அவனுக்குப் பதினாறு வயதிருக்கும். பள்ளிக்கூடத்துக்குப் போகிற பையன். ஆனால் அவனுடைய அந்தப் பார்வை?

'அவன் தினமும் என்னை இப்படியேதான் பார்த்துக் கொண்டிருக்கிறானோ? வைத்த கண்களை எடுக்கவேயில்லையே! கோகிலம் அவனுடைய அந்தப் பார்வையை இன்று தான் நேராகத் தாங்கிக்கொண்டிருக்கிறாள். அவன் தினமும் இப்படித்தான் பார்த்துக் கொண்டு போகிறானோ?

அவளுடைய முகத்தில் சின்னச் சிரிப்பு இழைந்தது. புதிதாக நம்பிக்கை பிறந்தது போல், 'நானும் ஒரு சாதாரணப் பெண் தான்' என்று அவள் தனக்குள் சொல்லிக் கொண்டாள். நூறு தடவைகள் அவள் அப்படிச் சொல்லிக் கொள்ள வேண்டும் போல் தோன்றியது அவளுக்கு. கோகிலத்துக்கு இப்போது இருபத்தெட்டு வயது ஆகிவிட்டது. பத்து வருஷங்களுக்கு மேல் ஆவலையும் உணர்ச்சிகளையும் சுமந்து நின்று அலுத்துப் போயிற்று. இப்பொழுது நினைவே ஏக்கமாகி, அதுவும் சூனியமாகப் போய் நிரம்பிக் கனக்கிறது. இது கனவின் முடிவு போலும், வாழ்வே கனவாகப் போனதின் ஆரம்பம் போலும் மாறிமாறித் தோன்றுகிறது.

இருபத்தெட்டு வயது!

'இனிமேல் எனக்கென்று எதுவுமே இல்லையோ?' என்று தளர்ந்து போய்த் திரும்பித் திரும்பிப் பார்க்கிறாள் அவள். அவளுக்குச் சந்தேகம் வந்து விடுகிறது. தான் சாதாரணப் பெண்ணாக இல்லையோ என்று அவள் தனக்குள் அந்தரங்கமாய் நினைக்க ஆரம்பித்து விடுகிறாள்.

மறுபடியும் சந்துவின் பார்வை உள்ளே நுழைந்து எட்டிப் பார்த்தது. கொஞ்சம் நிம்மதி — ஆறுதலின் தளிர்ப்பு. எதற்கு



என்றும் தெரியாமல் — எப்படி வந்தது என்றும் புரியாமல் சின்ன ஆறுதல். போன மாதம் ராதாவின் கல்யாணத்தின் போது கூட்டத்தில் பெண்களின் கூட்டத்தோடு ஒண்டிக் கொண்டிருந்தாள் கோகிலம்.

''யாருடா அது, கோகிலமா?'' நான்கு வருஷங்களுக்கு முன்பே கல்யாணமாகி ஊரை விட்டுப் போய் இப்போது தான் திரும்பி வந்திருக்கும் ஜானகி, பக்கத்தில் நின்றவ ளிடம் கேட்டாள்.

''ஆமாம், கோகிலமே தான்.''

''இன்னும் கல்யாணமாக லையா அவளுக்கு?''

''கல்யாணமா? கோகிலத்துக்கா? ம்.... ஆகாமலே போயிடும். இப்போதுதானே இருபத்தெட்டோ, இருபத் தொன்பதோ ஆகிறது?''

இரண்டு பேரும் பேசிக் கொண்ட ரகசியம் இது. வேண்டுமென்றே, கோகிலத்துக்கும் கேட்கிற குரலில் பேசிக் கொண்ட ரகசியம்.

ஜானகி ஒருதடவை ஜாடையாய் அவள் பக்கம் திரும்பிக் கூடப் பார்த்தாள். ஏதோ அதிசயத்தைப் பார்க்கும் சுவாரசி யம் நிரம்பி வழிந்தது அந்தப் பார்வையில். 'இனிமேல் உனக்கு எப்போ கல்யாணம் நடக்கப் போகிறது?' என்று கேட்பது போலிருந்தது. ஒதுங்கித் தூண் மறைவில் நகர்ந்து கொண்டாள் கோகிலம்.

அன்று இரவு முழுதும் எத்தனை கனவுகள்!

பொழுது விடிந்ததும் தன்னையே கண்ணாடியில் பார்த்துக் கொண்டு வெகு நேரம் நின்றாள் கோகிலம். கண்களில் அந்தப் படபடப்பு இல்லை. இதழ்களில் வறட்சி படர்ந்திருந்தது. 'நான் அழகாய் இல்லையோ?' என்று அவள் தன்னையே கேட்டுக் கொண்ட கேள்விக்கு, 'நான் அழகாய் இல்லாமல் இல்லை' என்று சுற்றி வளைத்துச் சமாதானமும் சொல்லிக் கொண்டாள்.

அப்படியானாலும் அவள் ஏன் எதிர்பார்க்கக் கூடாது? ஏன் காத்துக்கொண்டிருக்கக் கூடாது?

இன்னமும் தபால் வர நேரம் இருக்கிறது......

''அக்கா, ஏ அக்கா!'' சங்கரன் பள்ளிக்கூடத் துக்குக் கிளம்பத் தயா ராய் நின்று கொண்டு அழைத்தான்.

கோகிலம் கொஞ்சம் கூட அசையாமல் நின் றாள். 'உம்' என்று நினைப்போடு ஒட்டாத அவள் உதடுகள் முன கின.

''நாழியாச்சு, வாயேன் அக்கா!''

''இதோ வந்துட்டேன்.''

''நீ இப்படியே சொல்லிக் கொண்டு நில்லு. கடையிலே இன்னிக்குத் தபாலும் வராது. நானும் நேரம் கழிச்சுப் போய்ப் பள்ளிக்கூடத்திலே திட்டு வாங் கிக்க வேண்டியதுதான்.''

''என்னடா சொன்னே?'' என்று அதிர்ச்சியோடு கேட்டுக் கொண்டே வீட்டுக்குள் சென் றாள் கோகிலம்.

'அபசகுனம் மாதிரி சொல்லி தொலைக்கிறானே' என்று ஆத் திரம் குமிழியிட்டது.

''ஒண்ணுமில்லே அக்கா!'' என்று எட்டு வயதுச் சின்ன முகம் கெஞ்சியது.

அவளுடைய ஏமாற்றத்துக் கும் கோபத்துக்கும் அவனா கார ணம்? கோகிலத்துக்கு யாரையுமே காரணமாய்ச் சொல்ல முடியவில்லை. அவளுடைய அம்மா போய் ஆறு வருஷங்களாகி விட்டன.

அம்மா இருந்தால்.....

இல்லாதவளைப் பற்றி நினைக்கும்போதே இருக் கிறவரைப் பற்றின நினைப்பும் வந்தது.

அப்பா இருக்கிறார். இருபது மைல் தூரத்தில் இருந்து கொண்டு, மூன்று மாதங்களுக்கு ஒரு தடவை வந்து எட்டிப் பார்த்துவிட்டுப் போகிறது கூட அவருக்குப் பெரிய காரியமாய் இருக்கிறது.

ஹூம்! அவர்களுக்குத் தனியாய் ஒரு வழி இருக்கிறது. ஆனால்....ஆனால்...கோகிலத்துக்கு?

சங்கரன் தட்டை எடுத்து வைத்துக் கொண் டான். கோகிலம் பழைய சாதத்தைப் பிழிந்து போட்டு மோர் ஊற்றினாள்.



பத்து நிமிஷங்களில் சங்கரன் புஸ்தகப் பையுடன் புறப்பட்டு விட்டான். "அக்கா, போயிட்டு வரேன்."

"சரி."

தயங்கி நின்றபடியே, "அக்கா !" என்றான் மறுபடியும், இழையும் குரலில்.

"உம்.... என்னடா, வேணும்?"

"உனக்கு என் மேலே கோபமா?"

"அதெல்லாம் இல்லே."

"தபால் வராதுன்னு சொன்னேனே, அதுக்காகக் கோபம் வரலியா?"

"அதுதான் சொல்லி விட்டேனே. எனக்குக் கோபமுமில்லே; ஒன்றுமில்லே!"

"இல்லே, அக்கா ! அவசரத்திலே சொல்லி விட்டேன். தபால் வந்துவிடும். நிச்சயமாய் இன்னிக்கு இல்லாவிட்டால் நாளைக்காவது —"

"போடா, உனக்கு எதுக்கு அந்தக் கவலே? தபால் எப்போ வந்தாலும் சரி. வராமலே இருந்தாலும் இருந்துவிட்டுப் போகட்டும்."

கோகிலம் நிமிர்ந்து அவனை விழித்துப் பார்த்தாள். சங்கரன் தலையைக் குனிந்து கொண்டு மெதுவாய்ப் பள்ளிக்கூடத்துக்குப் போய் விட்டான்.

## 2

வெயில் தாழ்வாரத்தின் பாதி தூரத்துக்கு இறங்கி வந்துவிட்டது. வீட்டில் கோகிலத்தைத் தவிர இப்பொழுது யாரும் இல்லே.

கொஞ்ச நேரத்துக்கு முன்னால் சங்கரன் போகும்போது சொன்ன வார்த்தைகள் — அவன் தயங்கிக் கொண்டே குழைந்து பேசிய அந்தக் குரல் — எல்லாம் நெஞ்சில் வந்து அடைத்துக் கொண்டன. அப்பாவுக்கு ஏன் இந்தக் குரல் பிடிக்காமல் போய்விட்டது?

அவருக்கு இதைவிட வேறு ஒரு குரல்—வேறே ஒரு முகமும், பேச்சும்—பிடித்துப் போய் விட்டன. அவருக்கென்று ஒரு பாதை. அந்தத் தனிப் பாதையில் அவர் பிரிந்து போய் விட்டார். கோகிலமும் சங்கரனும் தன்னைப் பின்தொடர்ந்து வருவதைக்கூட அவர் விரும்பவில்லே. அவரே வேறே ஒருத்தியைப் பின் தொடர்ந்து போய்க் கொண்டிருக்கிறாரே !

ஊரில் எல்லாரும் அதைப் பற்றி அதிசயமாய்ப் பேசி ஓய்ந்துவிட்டார்கள். 'இத்தனை வயசுக்கு மேலே இப்படி ஒரு சபலமா?' என்று கேட்டவர்களைக் கோகிலம் அலட்சியமாய்ச் சிரித்தே சமாளித்து விட்டாள். ஆனால் 'இத்தனை பெரிய பெண் கல்யாணத்துக்கு நிற்கிறபோது, அவளுக்கு ஒரு வழியைக் காட்டாமல் மனுஷனுக்குப் புத்தி தடுமாறிப் போச்சே ?' என்கிற கேள்வி மட்டும் அவள் இதயத்தின் அடி ஆழத்தில் மோதி ஓயாமல் எதிரொலித்துக் கொண்டேயிருக்கிறது.

அப்பா ஏன் என் கல்யாணத்தை ஒரேயடியாய் மறந்து விட்டார்? இனிமேல் எனக்குக் கல்யாணமே நடக்காது என்று?

கோகிலத்துக்கு எல்லாமே முடிந்து விட்டது என்ற குறை பெரிதாய் வந்து கவிந்து கொள்கிறது.

இனிமேல், இனி மேல் ?

இனிமேல் எதுவுமே இல்லேயா?

ஏன் இல்லே ?



**"என்ன இது! ஜலதாரைகிட்டே உட்கார்ந்துண்டு என்ன யோசனை?"**

**"தண்ணியோடு கலந்து இவ்வளவு நல்லெண்ணெய் வீணாகப் போகிறதே. இந்தத் தண்ணீரை யெல்லாம் தேக்கி வைத்து இதிலுள்ள நல்லெண்ணெயை விஞ்ஞானத்தின் மூலம் மறுபடி தனியா எடுக்க முடியுமான்னு யோசிக்கிறேன் !"**

---

தாழ்வாரத்தில், இடைகழி வாசலுக்குப் பக்கத்தில், ஒரு கையால் பிரயாணப் பையை அணைத்துக் கொண்டு நின்றபடி, 'நான் போய்த் தபால் எழுதுகிறேன். அதற்குள் நீயும் நன்றாய் யோசித்து முடிவு செய்து வைத்துக் கொள்' என்று மாதவன் சொல்லிவிட்டுப் போனானே!

அவனுடைய கடிதத்தைத்தான் கோகிலம் ஒரு மாதமாய் எதிர்பார்க்கிறாள். முதலில் ஒரு வாரம் அவளிடம் பொங்கி வழிந்த ஆவல், அவளுக்கே அதிசயமாய் இருந்தது. தனக்குப் பத்து வயது குறைந்து விட்டதோ என்று நினைத்து, நினைத்து அவள் மயங்கினாள். அவளிடம் நம்பிக்கை ஆவலாய்ப் பெருகியது. 'உனக்கு இனிமேல் எப்போ கல்யாணம் ஆகப் போகிறது?' என்று என்றோ ஒரு பார்வை கேள்வியாய் விழுந்ததை நினைத்து, 'எனக்கும் ஒரு நாள் கல்யாணம் நிச்சயமாய் நடக்கத்தான் போகிறது' என்று தனக்குள் ஓயாமல் பதில் சொல்லிக் கொண்டேயிருந்தாள்.

பிறகு ஒவ்வொரு நாளாய் ஒரு மாதமும் ஆகிவிட்டது.

இப்பொழுது மாதவனிடமிருந்து கடிதம் வரும் என்று எதிர்பார்ப்பது அவளுக்கு ஆறுதலாய் இருக்கிறது. அவன் வார்த்தையில் சந்தேகப்படுவதும் கூட அவளால் முடியாத காரியம். முடிவில் அது வெறும் பிரமையாய்ப் போய்விடப் போகிறது என்று எப்போதாவது தோன்றும் மன நடுக்கத்தை உதறித் தள்ளிவிட்டு அவள் மயக்கத்துக்குள்ளேயே ஒடுங்கிக் கொள்ளுகிறாள். அவளுக்கு வாழ்வின் நிஜத்தைவிடக் கனவில் லயிப்புத்தான் ஏதோ இருக்கிறது என்று தோன்றியது. அவள் புரிந்து கொண்டாலும், அவளால் புரிந்து கொள்ளவே முடியா விட்டாலும் — அவளுடைய கனவின் ஆதாரம் மாதவன்தான்.

திடீரென்று போன மாதம் வாசலில் வந்து நின்ற குதிரை வண்டியிலிருந்து அவன் இறங்கினான். ஜன்னல் வழியாகக் கோகிலம் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"மாமி, மாமி!"

கதவைத் திறந்துவிட்டு ஒரு நிமிஷம் அடையாளம் புரியாமல் நின்றாள் கோகிலம்.

"நான்.... நான்தான் மாதவன்."

"ஓ!"

அவனைப் பார்த்து எத்தனைக் காலமாகி விட்டது!

"மாமா இல்லேயா....மாமி?"

"அப்பாவா? அவர் ஊரில் இல்லே. அம்மா போய் —"

"மாமி போயாச்சா ?"

"அஞ்சு வருஷமாச்சு."

"மாமியை நினைத்துக் கொண்டே வந்தேன். நான் ஊரை விட்டுப் போய்ப் பத்து வருஷங்கள் இருக்குமா? மேலேயே இருக்கும். போகிற அன்னிக்குக் கடைசியாய் மாமி கையாலேதான் சாப்பிட்டு விட்டுப் போனேன்."

அவன் மலைத்துப் போய் நின்றான்.

"இப்போ நானும் இவனுந்தான் இங்கே இருக்கோம். அப்பா எப்போதாவது வருவார்" என்று தம்பியைக் காட்டிக் கோகிலம் பேச்சை மாற்றினாள். மாதவனின் பெட்டியும் படுக்கையும் வெளியிலேயே வைக்கப்பட்டிருப்பது அவளுக்கு ஞாபகம் வந்தது.

கொஞ்ச நேரத்தில் அவன் புறப்பட்டு விட்டான்.

அவனுக்குக் கிராமத்தில், அதே தெருவின் கோடியில் ஒரு வீடு இருந்தது. பாதி இடிந்து விழுந்துவிட்ட அதை விற்று விட்டுப் போகத்தான் வந்தானாம்!

"இரண்டு நாட்கள் தங்குவேன். அப்புறம் வருகிறேன்" என்று சொல்லி விட்டுப் போனான் மாதவன்.

மறுபடியும் அவன் வருவான் என்று அவள் எதிர்பார்க்கவில்லே. ஆனால் அவன் வந்தான். அவளைப் பற்றியும், அவள் குடும்பம் இருக்கிற நிலைமையையும் அவனுக்கு யாரோ சொல்லியிருக்க வேண்டும். அக்கறையோடு, மனசைத் தொடுகிற மாதிரி இருந்தது அவன் பேச்சு. அந்தப் பேச்சோடு அவன் ஏதோ சொல்ல நினைத்ததும் மெல்லிய இழையாய் அவள் உணர்வில் ஊடுருவிச் சென்றது. கடைசியில் ஊருக்குப் புறப்படும்போதும் வந்தான்.

"கோகிலம்...!" தயங்கிக்கொண்டே அவளைப் பார்த்தான் மாதவன்.

அந்த அழைப்பும், பார்வையும்?

"உம்."

"உனக்குச் சம்மதம் என்றால்—என்னை உனக்குப் பிடித்திருந்தால்—"

இந்த அரைகுறை வார்த்தைகளால் அவன் என்ன சொல்ல வருகிறான் என்று அவளுக்குப் புரிந்து விட்டது. ஆனால் அதை நம்புவதற்கும், நம்பி ஏற்றுக் கொள்வதற்கும் அந்த அவசரத்தில் அவளால் முடியவில்லே.

"எனக்கு முப்பத்தைந்து முடிஞ்சு போச்சு. இத்தனை காலமும் கல்யாணம் செய்து கொள்ள வேணும் என்கிற நினைப்பே இல்லே; வசதியும் இல்லே. இப்போ தேவலே. சௌகரியமாவே இருக்கேன். உன்னைப் பார்த்ததும்தான் அந்த நினைப்பு — இத்தனை நாளுக்கப்புறம் — வந்தது. காலமும் வயசும் தப்பிப்

**This fun-filled moment...**

**...could have been missed by a complicated camera.**

**got it.**

With double-quick CLICK III, all you do is just aim—and shoot. Get instant success from the first day with Agfa CLICK III...and start taking bright, fun-filled pictures (12 big, 6 x 6 cm. pictures on each '120' roll).



Yours for Rs. 46.50 only —taxes extra. CLICK III makes a wonderful gift, too!

Ever-ready case and flash gun cost extra

***the world-famous camera***
***best to start with...best to stay with!***



Made under Agfa supervision by: The New India Industries Ltd., Baroda.
Sole Distributors:
AGFA-GEVAERT INDIA LIMITED Bombay • New Delhi • Calcutta • Madras

**For sparkling prints and enlargements insist on Agfa Photo Papers**

CMAG-87

# புதிய!

## டினோபால் 'எகானமி பேக்'




இப்பொழுது டினோபால் இந்தப் புதிய எகானமி பேக்கிலும் கிடைக்கிறது. துணிகளை வெண்மை பளிச்சிடச் செய்ய உங்களுக்காகும் செலவு முன்பைவிட மிகக் குறைவே. இன்றே வாங்கிப் பாருங்கள்! ஒரு பேக் பல நாட்களுக்கு வரும்; தவிர, செலவும் குறைவு! உங்கள் துணிகளை வெண்மை பளிச்சிடச் செய்ய எப்பொழுதும், விஞ்ஞான ரீதியாகத் தயாரிக்கப்படும் டினோபால் உபயோகியுங்கள். கால் டீஸ்பூன், ஒரு வாளித் துணிகளை வெண்மை பளிச்சிடச் செய்யப் போதுமானது.

**பளிச்சிடும் வெண்மைக்கு—டினோபால்**

---

**தேர்ந்தெடுக்க 3 விதமான பேக்குகள் உள்ளன:**




'வாளிக்கொரு பேக்கெட்'




'ரெகுலர் பேக்'




'புதிய எகானமி பேக்'

---



டினோபால் என்பது ஜே. ஆர். கெய்கீ எஸ். ஏ. பாஸ், ஸ்விட்ஸர்லாந்து அவர்களின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட்மார்க்காகும்

சுஹ்ரித் கெய்கீ லிமிடெட், த. பெ. 365, பம்பாய்-1 பி.ஆர்.

---

shilpi sgt 27a/67tm

போச்சு என்கிறது எனக்குத் தெரியும். இருந்தாலும் உன்னைக் கேட்கிறேன்.''

நிஜமாகவா? என்னைப் பார்த்தா?

'' எனக்கும் வயசு இருபத்தெட்டு முடியப் போகிறது. அம்மா இருந்த போதே தவியாய்த் தவிச்சாள். அப்புறம் அப்பா ரெண்டு மூணு வருஷங்கள் நிஜமாவே வரன் தேடி அலைஞ்சார். கொஞ்சம் கொஞ்சமா அலுப்புத்தான் பெருகிண்டே வந்தது. ஊருக்காகக் கொஞ்ச காலம், 'கோகிலத்தோடே கலியாணத்தை இந்தத் தை மாசத்திலே நடத்திப்பிடணும். முடியாட்டா ஆனி மாசத்துக்குள்ளேயாவது கண்டிப்பா முடிச்சுடணும்' என்று சொல்லிக் கொண்டிருந்தார். ஆனால் அதுக்குள்ளே கல்யாணத்துக்கு வச்சிருந்த பணமெல்லாம் கரைய ஆரம்பிச்சுடுத்து. அப்புறம், கடைசியிலே, அவருக்கே கல்யாணம் மாதிரி — அதை எப்படிச் சொல்றது.' இல்லே எப்படிச் சொன்னால் என்ன? ஏதோ நடந்து போச்சு. எனக்குத் துணையாய்த் தம்பி இங்கே இருக்கான். அப்பா அங்கே தனி ஜாகை போட்டிருக்கார்.''

''அதெல்லாம் எதுக்கு இப்போ கோகிலம்! நான் போய்த் தபால் எழுதுகிறேன். நீயும் அதுக்குள்ளே நன்றாய் யோசித்துப் பார்த்து முடிவு செய்து வை.''

கோகிலம் அவனை நிமிர்ந்து பார்த்து விட்டுத் தன் தலையைக் குனிந்து கொண்டாள்.

'நிச்சயமாய்த்தான் சொல்கிறீர்களா? என்னை எனக்காகவே உங்களுக்குப் பிடித்திருக்கிறதா? நானும் ஒரு சாதாரணப் பெண்ணும் — என்னைப் பார்த்தும் ஒருவர் ஆசைப்படுகிறவளாய் — இருக்கிறேனா?'

மாதவனிடம் கேட்கத் துடித்த அத்தனை கேள்விகளையும் கோகிலம் தனக்குள்ளேயே கேட்டுக் கொண்டு நின்றாள்.

## 3

**LIT**திக் கனவில் விழித்துக் கொண்டது போல் அவள் நினைவிலிருந்து மீண்டாள். 'தபால் வருகிற நேரமாகிவிட்டதே' என்று சொல்லிக் கொண்டே வாசலுக்கு வந்தாள்.

தபால்காரர் மெதுவாய் நாலைந்து வீடுகளுக்கு அப்பால் வந்து கொண்டிருந்தார். கோகிலம் மூச்சைப் பிடித்துக் கொண்டு காத்திருந்தாள்.

அடுத்த வீட்டு வாசலுக்கு அவர் வந்துவிட்டார்.

இன்றைக்குத் தபால் வரலாம். இல்லை நிச்சயமாய் வந்துவிடும். ஒருநாள் ஒரு மாசமாய்ச் செய்ததைப் போலவே 'ஒன்றுமில்லையே!' என்று கையைக் காட்டிவிட்டுப் போய் விடுவாரோ ?

தபால்காரர் நேராகப் போய்விடவில்லை. நின்று ஒரு தடவை கடித வரிசையைப் புரட்டினார்.

''கோகிலம்....''

''நான்....நான்தான்.''

உறை ஒன்று எதிரே வந்து விழுந்தது.

கோகிலம் அதை எடுத்துக் கொண்டு வீட்டுக்குள் ஓடினாள். ஊஞ்சலில் போய் உட்கார்ந்து கொண்டு பிரித்துக் கடிதத்தை எடுத்தாள்.

கோகிலம்,

கொஞ்சம் தாமதமாகவே இதை எழுதுகிறேன். உன்னிடம் நேராக ஒரு விஷயத்தைச் சொல்லாமல் வந்து விட்டேன்.

உன்னை நான் உனக்காகவேதான் கல்யாணம் செய்து கொள்ள ஆசைப்படுகிறேன். ஆனால் உன் தம்பி சங்கரனை உன்னோடு இங்கே அழைத்துக் கொண்டு வர சௌகரியப்படாது. அவனை எப்படியாவது உன் அப்பா விடமே அனுப்பிவிடு. இதைப் பற்றி நீ என்ன நினைப்பாயோ என்றுதான் கடிதம் எழுதத் தாமதமாயிற்று.

உன் பதில் கிடைத்ததும் இங்கேயே ஒரு கோவிலில் நம் கல்யாணத்துக்கு ஏற்பாடுகள் செய்து விடுகிறேன்.

மாதவன்.

ஊஞ்சலின் அசைவோடு அவள் எண்ணங்களும் முன்னும் பின்னுமாய் ஊசலாடின.

எப்பொழுதோ ஒரு தடவை அவள் அப்பா வந்திருந்தார். அவர் திரும்பிப் போகும் சமயம் சங்கரனும் அவரோடு புறப்படத் தயாராகக் கிளம்பினான். அவர் விரும்பவில்லை என்பதை அப்பாவின் முகமே தெளிவாகக் காட்டியது.

சங்கரனைச் சமாதானம் பண்ணுவதற்குள் இரண்டு பஸ்களைத் தவறவிட்டாயிற்று. அவன் பிடிவாதத்துடன் அழுது கொண்டேயிருந்தான்.

கடைசியில் அவனை அடித்துத் துடிக்கத் துடிக்க அழ வைத்து விட்டுப் போய் விட்டார் அப்பா.

இப்பொழுது?

இப்பொழுதும் அவர் விரும்பமாட்டார். சங்கரனைத் தம்மோடு அழைத்துக் கொண்டு போக முடியாததற்கு நூறு சமாதானங்கள் சொல்லுவார்.

ஆனால் ஒரே பேச்சில் கோகிலம் அவருக்குப் பதில் சொல்லிவிடலாம்.

அவளுக்கென்று ஒரு வழி வேண்டாமா? அவர்தான் அந்த வழியைக் காட்டவில்லை. அவளாகவே தேடிக் கொண்டாள். அதில் போகாதே என்று அவர் எப்படிச்சொல்ல முடியும்? அவனைத்





நடிக்க அவரால் முடியாது. நடித்தாலும் அவள் நிற்கப் போகிறதில்லை.

ஒரு முடிவுக்கு வரும்போது சங்கரனின் உருவம் ஒரு நிழலைப்போல் எதிரே வந்து நின்றது.

அவள் சமாதானங்களைத் தேடிக் கொண்டிருக்கவில்லை. முடிவு செய்து விட்டாள். அப்பா அவளைத் தள்ளிவைத்துக் கொள்ளாவிட்டால் பள்ளிக் கூடத்து விடுதியில் சேர்த்து விடட்டுமே! கோகிலம் அவசரமாய்க் கிணற்றடிக்குப் போனாள். ராட்டினம் புதிய வேகத்தில் சுழன்றது. குடம் குடமாய்த் தண்ணீர் வந்து கொட்டிக் கொண்டேயிருந்தது.

அடுப்பில் உலைநீர் சீக்கிரமாகவே கொதிக்கத் தொடங்கியது. சமையல் கூட அந்தச் சுருக்கிலேயே முடிந்து விட்டது.

நடுநடுவே உணர்ச்சிகள் வந்து கழிந்தன. அவள் கண நேரம் நின்று திரும்பிப் பார்த்துவிட்டு உடனே நகர்ந்து கொண்டாள். பழைய நினைவுகளை விட்டு நகர்ந்து கொண்டேயிருந்தாள். புதிய கனவுகளை நெருங்கி, நெருங்கி.

தாழ்வாரத்தில் உட்கார்ந்து இழைய இழையச் சீவிப் பின்னிக்கொள்ள ஆரம்பித்தாள் கோகிலம். கடைசியில் தன்னைக் கண்ணாடியில் பார்த்துக்கொள்ள வேண்டும் என்ற ஆசை நிறைந்து ததும்ப ஆரம்பித்தது.

சங்கரன் சாயங்காலம்தான் வருவான். 'இன்னிக்குத் தபால் வந்துவிடும்' என்று சொல்லி விட்டுப் போனானே! இதோ கடிதம் வந்துவிட்டது. அவன் வந்ததும் சொல்ல வேண்டும். அவனை அழைத்துக் கொண்டு அப்பாவைப் பார்க்கப் போக வேண்டும். சங்கரன் சந்தோஷப்படுவானோ? அவன் மனசுக்குள் அழுகை வெடித்துக் கொண்டு வருமோ? அதை மறைத்துக் கொண்டு அவன், 'நான்தான் சொன்னேனே அக்கா ?' என்று கேட்பான். அப்புறம்—

பின்னல் முடிந்து விட்டது. சிந்தனை முடியவில்லை. அதைப் பாதியிலேயே விட்டு விட்டு எழுந்து போய்க் கூடத்துச் சுவரில் மாட்டியிருந்த கண்ணாடிக்கு எதிரே அவள் நின்றாள்.

'உனக்கு வழி பிறந்து விட்டது.'

எனக்கா? எனக்கா?

அதுதான் அப்பொழுதே முடிவாய்த் தீர்மானித்து விட்டாளே! சங்கரனை அழைத்துக் கொண்டு போய் அப்பாவிடம் சொல்லி....

''கோகிலம், கோகிலம்!''

வாசல் கதவைப் பிளந்து எடுத்து விடுகிற மாதிரி யாரோ தட்டினார்கள்.

கையிலிருந்த பூவை இன்னும் தலையில் சூட்டிக் கொள்ளவில்லை. கோகிலம் ஓடினாள். 'இன்னிக்கு ஏன் எல்லாம் ஒரே அவசரமாய், படபடப்பாய் இருக்கு?'

சாமண்ணு வீட்டு மாமி வந்து நிற்பதைப் பார்க்கவே மனசு 'திக்'கென்று அடித்துக் கொண்டது.

''அடி கோகிலம்!''

''ஏன் மாமி?''

கனமாய் ஒரு விநாடிக்கு மௌனத் துறுத்தது.

''என்ன மாமி, சொல்லுங்களேன்.''

''சங்கரன் ஆற்றங்கரைப் படித்துறையிலே போய் நின்றானாம். வெள்ளம் சுழித்துக் கொண்டே போகிறது. அதிலே விழுந்து — பட்டாமணியார் வீட்டுத் திண்ணையிலே கொண்டு வந்து போட்டிருக்கு.''

''ஐயோ ! அப்புறம்? சங்கரன் இருக்கானா ?''

''இல்லே. அவன் போ...போய்....''

தெருவோடு ஓடின ஓட்டத்தில் பாக்கி காதில் விழவே இல்லை.

ஒரு மாதம் எப்படியோ கழிந்துவிட்டது — தனியாய் அந்த வீட்டில்.

''இத்தனை நாட்களாவது துணை என்று அவன் இருந்தான். இனி மேல் நீ மட்டும் ஒண்டியாய் எப்படி இருப்பே?''

எல்லாரும் இப்படியேதான் கேட்டார்கள். அப்பாகூட அடக்க முடியாமல் ஒரு தடவை கேட்டு விட்டார். கோகிலம் தன்னையே கேட்டுக் கொண்டேயிருந்தாள்.

மாதவனின் கடிதத்துக்கு இன்னும் பதில் எழுதவில்லை. இப்பொழுது எழுதினால் என்ன?

'என்னை எனக்காகவே ஆசைப்படும் ஒருவர் வேண்டும்' என்ற ஆவலின் தீவிரம் இன்று இல்லை. ஆனாலும் அவளுக்கு ஒரு வழி மட்டும் நிச்சயமாய்த் தேவையாய் இருக்கிறது.

கோகிலம் கடிதம் எழுதினாள்.

எழுதிவிட்டு ஆவலோடு பதிலுக்காகப் போய்க் காத்துக் கொண்டு நிற்கவில்லை. சந்துயின் வில்வண்டி தெருவோடு போகிற ஓசை, மற்ற இரைச்சல்களையெல்லாம் அடக்கிக் கொண்டு கேட்கும் போது அவள் எட்டிப் பார்க்கவில்லை. அவளுடைய பார்வையில் புதிய உணர்ச்சியோடு, 'நானும் ஒரு சாதாரணப் பெண்தான். எனக்கும் ஒரு நாள்' என்று அவள் உள்ளத்திலே நினைப்புக் களைப் புரளவிடவில்லை.

ஆனால் மூன்றாம் நாளே மாதவனிடமிருந்து பதில் வந்து விட்டது.

மெதுவாக நடந்து போய், நிதானமாக அந்தக் கடிதத்தை எடுத்து அங்கேயே நின்று படிக்க ஆரம்பித்தாள் கோகிலம்.

''உன்னிடமிருந்து ஒரு மாதமாய்ப் பதிலே வரவில்லை. அதனால் உனக்கு இஷ்டமில்லை என்று இங்கே வேறு இடத்தில் — வேறே ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்கிறதாகப் போன வாரம்தான் முடிவு செய்து விட்டேன்.''

கோகிலம் திரும்பி வீட்டுக்குள் வந்து சேர்ந்தாள்.

வெயில் தாழ்வாரத்தின் பாதியிலேயேதான் நின்றது. 'இன்னிக்குத் தபால் சீக்கிரமே வந்து விட்டது.'

நாளை முதல் தபால் சீக்கிரமாகத்தான் வரட்டும். இல்லை நேரம் கழித்துத்தான் வந்து விட்டுப் போகட்டுமே!

இங்கே கழுத்துமட்டும் ஆழம் !



இங்கே கணுக்கால் ஆழம்தான் !



# வலியா?

## வேகமாக குணம்பெற 2 அனாஸின் சாப்பிடுங்கள்



உடல்வலி தனியாக வருவது அரிது. படபடப்பும், வாட்டமும், சோர்வும் கூடவே வரும். இவை யாவுமே உங்கள் வலியை மேலும் பெருக்குவதால், நீங்கள் வேதனைப்படுகிறீர்கள். உடனே 2 அனாஸின் சாப்பிட்டு 4 வழிகளில் நிவாரணம் கிட்டுவதை காணுங்கள்.

1. வலியைத் தணிக்கிறது அனாஸின்—வேகமாக
2. சோர்வை வெல்லுகிறது அனாஸின் —வேகமாக
3. வாட்டத்தைப் போக்குகிறது அனாஸின் —வேகமாக
4. படபடப்பை ஆற்றுகிறது அனாஸின் —வேகமாக

காரணம், பல மருந்துகள் இணைந்த அனாஸின்—டாக்டரே குறித்துக் கொடுத்த மருந்துச்சீட்டுபோல் பத்திரமானது. எனவே, வலி தணிக்கும் மற்றெந்த சாதனங்களையும் விட, அதிக மக்கள் அனாஸின் உபயோகிப்பதில் வியப்பில்லை.

அடுத்த தடவை உடல்வலி கண்டால் அனாஸின் சாப்பிடுங்கள். அனாஸின், தலைவலி, சளி, ஃப்ளூ, பல்வலி ஆகியவற்றையும் தணிக்கிறது. ஆகையால் எப்போதும் அனாஸின் உங்கள் கைவசமிருக்கட்டும்

தவறாமல் எப்போதும் வாங்குங்கள் அனாஸின்

# அனாஸின்

சிறந்தது ஏனெனில் அது
4 வழிகளில்
வேலை செய்கிறது




Regd. user: Geoffrey Manners & Co. Ltd.

# வீரத்தில் ஈரம்

வரலாறு தந்த வீர நிகழ்ச்சிகளில் நான்கைப் பொறுக்கி அவற்றில் ஈரம் எப்படி உள்ளுறை பொருளாக இடம் பெற்றிருக்கிறது என்பதைச் சித்திரிக்கும் பணியை இங்கு ஏற்றிருக்கிறார் கவிஞர் 'கல்பனா'. அவற்றுக்கான வரலாற்றுப் பகைப்புலன் இதோ:

(1) மகாராஷ்டிரத்தின் வீர வரலாற்றைப் படைத்த மன்னன் சத்ரபதி சிவாஜிக்கு ஒரே மகிழ்ச்சி! வசமாகாது என்று எண்ணியிருந்த கல்யாண் கோட்டை அவன் ஆதிக்கத்துக்கு வந்துவிட்டது. அவன் மகிழ்ச்சியைப் பிரதிபலிப்பதே போல் வீரர்கள் விண்ணதிர வாழ்த்தொலி எழுப்பினர்.

அவர்கள் மத்தியிலே மிதந்து வரும் மூடுபல்லக்கு? அதில் இருப்பவள் 'கல்யாண்' கோட்டையின் காவலனான மௌலானாவின் மருமகள். ஈடு இணையற்ற அழகி. தோல்வியுற்றவர்களின் உடைமைகளைச் சூறையாடி வருவது அந்தக் காலத்துப் பழக்கம். பெண்ணையும் உடைமையாக மதித்த வீரர்கள், தங்கள் வீரத் தலைவனுக்கு அவளைப் பரிசாகத் தரலாம் என்று ஆசையோடு கொண்டு வருகிறார்கள்.

பல்லக்கில் இருப்பவள் ஒரு பெண்; அதுவும் பிறன் மனைவி என்பதை அறிந்ததும் வீரன் சிவாஜி ருத்ரமூர்த்தியாகிறான். அடாது செய்த செயலுக்குப் படாத பாடுபடுத்தி விடுவதாகத் தன் வீரர்களைக் கடிகிறான்.

பெண் என்றால் பராசக்தியாகப் போற்றும் அவன் கண்களுக்கு அந்தப் பெண் பவானியாகக் காட்சி தருகிறாள்; அவளே ஜீஜா பாயியாகத் தோற்றமளிக்கிறாள். ஓடிப்போய் அவள் காலடிகளில் விழுந்து பணிந்து, "அன்னையே! பிழையைப் பொறுத்தருள வேண்டும்!" என்று தனது வீர விழிகளில் ஈரம் கசிய வேண்டுகிறான். அதோடு தானே முன் நின்று அவளை மரியாதையோடு அவளைச் சேர்ந்தவர்களிடம் அனுப்பி வைக்கிறான்.

(2) 'இப்படி ஒரு வீரமா? இப்படி ஓர் ஈரமா?' சிந்திக்க வைக்கும் சிவாஜிக்குத் தானும் சளைத்தவன் அல்ல என்பதைக் காட்டுகிறான் மங்கோலிய மன்னன் செங்கிஸ்கான்.

வாழ்நாள் முழுவதும் வீரப் போரிலேயே செலவிட்ட அவன் வாழ்வு முதுமையை அடைந்தபோது, கஜ்ஜாக்கைச் சேர்ந்த நாரிகை ஒருத்தியின்பால் மனத்தைப் பறிகொடுத்து விடுகிறான். 'போதும் போதும் இந்த வயதிலா காதல்?' என்று அவன் தன் மனத்தைக் கேட்கிறான். 'மனிதன் மூப்புதட்டலாம், ஆனால் மனித மனமோ, காதலோ மூப்பு தட்டுவதில்லை' என்று மறுத்துக் கூறிவிடுகிறது அவன் மனம்.

இந்தச் சமயத்தில்தான், அவனுக்குத் தன் பேரன் துலாகூ கானும், தான் காதலிப்பவளையே காதலிக்கிறான் என்னும் இரகசியம் தெரிய வருகிறது. ஆயினும் தன் பேரன் தானே என்று விட்டுக் கொடுக்க அவனுக்கு மனம் வரவில்லை. ஆகவே, அவனைத் தன் பாதையிலிருந்து விலக்க எண்ணி ஒரு போருக்கு அனுப்புகிறான். அப்போரில் அவன் வீர மரணம் எய்துவானே ஒழியத் திரும்பி வரமாட்டான் என்ற எண்ணம். எனவே, 'இப்போரில் நீ வெற்றி கண்டால், உன் காதலுக்குக் குறுக்காக நிற்க மாட்டேன்' என்றும் ஆசை காட்டுகிறான்.

துலாகூ கானுக்கு ஒரே உற்சாகம். தன் ஆசை நிறைவேறப் போகிறது என்ற மனமகிழ்ச்சியில், செங்கிஸ்கான் நினைத்ததற்கு மாறாக, வெற்றி வாகை சூடித் திரும்புகிறான். செங்கிஸ்கானுக்குச் சோதனைக் கட்டமாகி விடுகிறது. அவ்வழகியை மறந்து உயிர் வாழ முடியாது என்று தோன்றவே, ஒரு நாள் அழகியோடு துலாகூவையும் அழைத்துக் கொண்டு ஆற்றங்கரைக்குப் போகிறான். 'உனக்கும் வேண்டாம், எனக்கும் வேண்டாம். ஆற்றுக்கு இரையாக்கி விடுவோம் இவளை!' என்கிறான்.

என்ன கல்நெஞ்சம்? துலாகூ கான் மூடிய வாயைத் திறக்கவில்லை. செங்கிஸ்கான் சொன்ன வாயோடு அவளைத் தூக்கி ஆற்றில் விட்டும் எறிந்து விடுகிறான். அவள் நீரைக் குடித்து மூழ்கித் தத்தளிப்பதைக் காணச் சகியாமல் துலாகூ கான் கண்களை மூடிக் கொள்கிறான்.

செங்கிஸ்கானுக்கோ தன் உயிரே ஆற்றோடு போவது போலிருக்கிறது! பொத்தென்று நீரில் குதித்து நீந்துகிறான். எதற்காக? அவளைக் கரை சேர்ப்பதற்காக. கரை சேர்த்த பின் என்ன செய்வானோ என்ற கவலை நமக்கு எதற்கு? நெஞ்சில் ஈரம் கசிய அவளைக் கரை சேர்ப்பவன் அவள் வாழ்க்கையையும் கரை சேர்க்காமல் விடுவானா?

(3) இப்படி எண்ணமிடும் வேளையிலே மாவீரன் நெப்போலியன் நம் நினைவிலே தோன்றுகிறான்.

வியன்னாவை வசப்படுத்தத் திட்டமிட்டவனின் ஆணையைச் சிரமேற்கொண்டு பத்தே மணி நேரத்துக்குள் கோட்டை கொத்தளங்கள் தரைமட்டமாக்கப்படுகின்றன. வியன்னாவின் அரசன் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு ஓடுகிறான். அதுவும் எப்படி? நோய்வாய்ப்பட்டிருக்கும் தன் ஒரே மகனை நிர்க்கதியாக விட்டு விட்டு. அவனுக்குத் தன் உயிர்தான் வெல்லமாக இருக்கிறது.

அரச குமாரன் அரண்மனையிலே நோய்வாய்ப்பட்டு உயிருக்கு மன்றாடுகிறான் என்ற செய்தி நெப்போலியனுக்கு எட்டுகிறது. அடுத்த கணம் எட்டுத் திக்கும் உத்தரவு போகிறது. போரை நிறுத்தும்படி. அதுமட்டுமா? அரச குமாரனுக்கு ஊறு நேரா வண்ணம் காப்பாற்ற வேண்டிய பணியை நெப்போலியனே மேற்கொள்ளுகிறான். பெற்ற தந்தையிடம் காணாத ஈரத்தைப் பெரு வீரனிடம் காணும் பொழுதே அரச குமாரன் நெட்டுயிர்த்துப் போகிறான்.

(4) இந்த வீரப் பெரு வரிசையிலே கங்கை கொண்ட சோழன் என்னும் விருது பெற்ற இராஜேந்திரனுக்கு இடம் இல்லாமல் போகுமா? அவன் வடநாடு சென்றது வெறும் திக்விஜயத்துக்காக மட்டுமா? அல்ல. கஜினி முகம்மதுவினால் பாரத நாட்டுக்கு ஏற்பட்ட சோதனையைக் களைபிடுங்கி எறிய; பாரத தேசம் என்றுமே ஒன்றுதான் என்பதை நிலைநாட்ட.

கங்கையைக் குடங்களில் ஏந்திச் சோழ நாட்டுக்கு எடுத்து வரும் அரசர்களோடு ஒட்டரதேசத்து அமாத்தியர் பண்டித மகாசயரும் ஒருவராக இருந்தார். காரணம், அவர் வேங்கி நாட்டு இளவரசன் ராஜ ராஜ நரேந்திரனின் காதல் கடிமண விவகாரத்தில் குறுக்கே புகுந்து கெடுக்க முனைந்ததுதான். இராஜேந்திரனின் பார்வையிலே படச் செய்து அவருக்குத் தகுந்த தண்டனை வாங்கித் தரவேண்டுமென்று வேங்கி நாட்டு இளவரசனே செய்த ஏற்பாடு இது.

அமாத்தியருக்கும் குலை நடுக்கம்தான். உள்ளத்தில் உதறல், விழிகளில் மிரட்சி — இவற்றோடு வரும் அவரைப் பார்த்து இராஜேந்திரன் அனல் தெறிக்க ஆணையிடுகிறான். "அமாத்தியரே ! நீர் செய்த குற்றத்துக்குத் தகுந்த தண்டனை என்ன, தெரியுமா? நீர் கொண்டு வந்திருக்கும் கங்கை நீரால் எம்பெருமானை நீராட்ட வேண்டும். உமது உள்ளத்தில் படிந்திருக்கும் கறையையும் மாசையும் கழுவிக் கொள்ள வேண்டும். பகை — பூசலுக்கு இடம் கொடாமல், நன்மை—தீமையை உணர்ந்து நடந்து கொள்ளக் கற்க வேண்டும். இதுவே நான் உமக்கு அளிக்கும் தண்டனை."

அந்த வீர தண்டனையில்தான் எத்தனை ஈரம், பாருங்கள்!

கங்கை நீரால் ஆண்டவனுக்கு முழுக்காட்டிய அதே நேரத்தில் அமாத்தியரின் மனத்தில் உறைந்திருந்த நாகாசுரன் மடிந்தொழிந்தான். கங்கை கொண்ட சோழனின் ஈரக் கசிவு அவரை ஆட்கொண்டது.

தீபாவளி நன்னாளில் கங்கை ஸ்நானம் செய்து, அதே கையோடு காவேரி ஸ்நானமும் செய்து மகிழும் சோழ நாட்டு வீர பரம்பரை குணத்தை — ஈரம் கசியப் பாரதத்துக்கு மட்டுமென்ன, பாருக்குமே எடுத்து ஓதுவோம் !

# அசடு

என். பத்மா

"என்ன முடிவு பண்ணினே?" பெரியம்மாள் கொடியில் துணி உலர்த்தும் சாக்கில் சச்சுவைப் பார்க்காமலேயே கேட்டாள்.

சச்சு புதிதாக வந்திருந்த சஞ்சிகையில் பதித்த கண்களை எடுக்காமலேயே பதில் கூறினாள் — "என் முடிவு எதற்கு? எப்படியும் நீதான் நிச்சயம் பண்ணிவிட்டாயே!"

பெரியம்மாவுக்கு ஆற்றாமை தாங்காமல் ஆத்திரம் வந்தது. "கடன்காரி! என் தலையில் கட்டினுளே, உன்னே!" — வெடித்து விழுந்தன சொற்கள்.

சிரித்துக் கொண்டே புத்தகத்தில் முகத்தை இன்னும் ஆழமாகப் பதித்துக் கொண்டாள் சச்சு.

"அசடு! என்ன சிரிப்பு வேண்டிக்கிடக்கு!" பெரியம்மா அலுப்புடன் அவள் அருகில் வந்து உட்கார்ந்தது கூட அவளை அசைக்கவில்லை. பெரியம்மாவுக்கோ விஷயத்தை அத்துடன் விட்டுவிட்டுத் தோல்வியை ஒப்புக்கொள்வதில் இஷ்டமில்லை.

அவள் தொடர்ந்தாள், "பையன்.."

சச்சு தலையை நிமிர்த்திப் பெரியம்மாவைப் பார்த்தாள். பின் நிதானமாகச் சொல்ல ஆரம்பித்தாள்.

"பையன் ராஜாவாட்டம் இருக்கான். நீயோ எனக்கு வங்கி, ஒட்டியாணத்திலிருந்து கழனி, காடு வரை எல்லாம் கொடுக்கப் போகிறாய். பொருத்தம் பேஷாக இருக்கே!"

சச்சுவின் குரலில் இருந்த நிதானமும் ஏளனமும் உள்ளே குமுறும் எரிமலையைப் போர்த்தும் ஒரு போர்வைதான் என்று பெரியம்மாவுக்கா தெரியாது!

"இந்த 'எடுப்பு'க்கெல்லாம் ஒண்ணும் குறைச்சல் இல்லே" பெரியம்மா கனத்திலிருந்து பின்வாங்கினாள்.

சச்சுவால் தொடர்ந்து படிக்க முடியவில்லை. அந்த 'ராஜா' அவளைப் பெண் பார்க்க வந்தது. நினைவுக்கு வந்தது. 'ராஜா'வின் அம்மாவுக்கு நகைகள் விஷயத்'லேயே திருப்தி.

"நீ...நீ...இந்தக் காலத்திலே யார் இத்தனை நகைகள் வைத்திருக்கிறார்கள்? இதெல்லாம்தான் ஒரு பெண்ணுக்குச் சொத்துன்னு யார் நினைக்கிறார்கள்?" என்று அசட்டுச் சிரிப்புடன் 'ராஜா'வின் அம்மா தன் திருப்தியைத் தெரிவித்துவிட்டாள். பையனும் தன்னுடைய 'ராஜாத்தன'த்துக்கு இந்தப் பெண்ணின் கறுப்பு நிறமும், நீண்ட பற்களும், சதைப் பற்றில்லாத உடல் வாகும், சரிப்பட்டு வருமா என்று யோசித்ததாகவே தெரியவில்லை. மோட்டு வளையைப் பார்த்தபடியே, தாயாரின் பேச்சு சாமர்த்தியத்தை ரசித்துத் தலையை ஆட்டியவாறு உட்கார்ந்திருந்தான் அவன். அவர்களுக்கு எதில் நாட்டமென்று சச்சுவுக்குப் புரிந்து விட்டது. 'ஆனால் இந்தப் பெரியம்மா, இப்படி ஒன்றும் தெரியாதவளாக இருக்கிறாளே! ஒருவேளை எல்லாம் புரிந்தும், புரியாத பாவனையில் இருக்கிறாளோ!'

சச்சு பிறந்தவுடனேயே தன் தாயை 'விழுங்கிவிட்டவள்'. தந்தைக்கு வேறு புதுக் குடும்பம் ஒன்று ஏற்பட்டுவிட்டதால், அறியாப் பிராயத்திலேயே 'விதவை' வந்துவிட்ட பெரியம்மாதான் அவளுக்கு ஒரே துணை. லட்சுமி கடாட்சம் மட்டும் பூரணமாக இருந்து, வாழ்க்கையை வளம்பட வைத்திருக்காவிட்டால், அவள் வாழ்க்கையே வேறு விதமாக அமைந்திருக்கும்! பெரியம்மாவின் கட்டுப்பாட்டுக்குள் வளர்ந்திருந்தாலும், அவள் மனத்தில் அசாதாரண முதிர்ச்சியை அடைந்திருந்தாள். அவள் மனமே அவளுக்கு உற்ற தோழியாக இருந்தது. மணிக் கணக்கில் கற்பனை உலகில் சஞ்சரிக்கப் பழகிக் கொண்டுவிட்டாளாதலால் வெளியார்களின் தோழமை அவளுக்கு அவசியமாகவே இருக்கவில்லை. தனக்குத் தானே பேசிக் கொள்வதும், சிரித்துக் கொள்வதும், அவளுக்குச் சகஜமாக இருந்தது. மனத்தில் பட்டதை உடைத்துப் பேசும் அவள் வழக்கம் மேல் பூச்சு அதிகமாக உள்ள இந்த உலகத்தில் யாருக்குத்தான் பிடிக்கும்? மற்றவர்கள் சச்சுவை 'அசடு' என்று ஒதுக்கி வைத்தார்கள். ஆனால், தன் அந்தரங்கம் தன்னை 'சமத்து'



என்றும், 'கெட்டிக்காரி' என்றும் தட்டிக் கொடுத்து உற்சாகமூட்ட இருந்ததால், அவள் உலகத்தாரின் அசட்டுப் பட்டத்தைப்பற்றித் துளிக்கூடக் கவலைப்படவில்லை. அழகும் இல்லாமல் வெளியார்களுடன் இணைந்து நடக்கும் சாதுரியமும் இல்லாமல் இருந்த சச்சுவின் கல்யாணம் பெரியம்மாவுக்கு ஒரு பிரச்னையாக அமைந்ததில் வியப்பென்ன ?

எப்படியோ, பெரியம்மாவின் மனம் போலவே சச்சுவின் கல்யாணம், அந்த 'ராஜா'வுடன் நிச்சயமாகிவிட்டது. சச்சுவின் விருப்பு, வெறுப்பு பற்றியெல்லாம் ஒருவருமே கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. ஏன்? சச்சுவே கவலைப்படவில்லையே! கல்யாணத்தன்று அவளே வலுவில் தன்னை சர்வாலங்கார பூஷிதையாக அலங்கரித்துக் கொண்டதைப் பார்த்துப் பெரியம்மா வியந்தாள். சச்சு ஓரக்கண்ணால் இதைக் கவனித்து விட்டுக் கூறினாள், ''எல்லா நகைகளும் இருக்கட்டும்; முக்கியமாக — உண்மையாக தானம் கொடுக்கப் போவது இவைகளைத்தானே!'' — பெரியம்மா கடிந்து கொண்டாள்: ''அசட்டுப் பிசட்டென்று பேசாதே!''

மணமாகி, சச்சு புக்ககம் போய்விட்டாள். தன் கணவன் 'ராஜா'வாகவே மிடுக்காக ஒதுங்கி இருந்ததிலிருந்தும், இந்தப் புது அம்மா (!) தன்னிடமிருந்து பிள்ளையைப் பாதுகாத்ததிலிருந்துமே, சச்சுவுக்குத் தனக்கு அந்த வீட்டில் என்ன ஸ்தானம் என்பது புரிந்து விட்டது. சச்சு மிகவும் உற்சாகமாகவே இருந்ததுதான் அம்மாவுக்கும் பிள்ளைக்கும் அதிசயமாக இருந்தது. வீட்டு வேலைகளைச் செய்வதிலும், அக்கம் பக்கத்துக் குழந்தைகளின் விளையாட்டில் 'தாச்சி'யாக இருப்பதிலுமே அவள் போது போய்விட்டது. இவை எல்லாவற்றையும் விடச் சச்சுவுக்கு மிகவும் பிடித்தமான பொழுது போக்கு — கிணற்றங் கரையில் தோய்க்கும் கல்லில் உட்கார்ந்து, 'தன்னைப் போன்ற உள்ளமும் எண்ணங்களும் கொண்டவனாக தன் கணவன் வாய்த்திருந்தால் தன் வாழ்க்கை எப்படி அமைந்திருக்கும்' என்று எண்ணிப் பார்ப்பதுதான். உள்ளத்தாலேயே வாழ்வதில் ஒரு தனி இன்பம் கண்டாள் அந்தப் பேதை.

சச்சுவின் கணவனின் வாழ்க்கையில் ஏற்பட்ட ஏற்றத் தாழ்வுகள் எதுவுமே அவளைப் பாதிக்கவில்லை. உல்லாசமாக அவன் வெளியே திரிந்ததையும் அந்த உல்லாசத்துக்கு விலையாக அவளுடைய நகைகள் மறைந்ததையும் அவள் துளியும் சலனமில்லாமல் கவனித்து வந்தாள். அவளுடைய ஒரே குறை—இதைப் பெரியம்மாவுக்குத் தெரியாமல் ஒளித்து வைக்க முடியாததுதான்.

''ஏண்டி, உன் உடம்பு இப்படி இருக்கு? விசேஷம் ஒன்றும் இல்லையே?'' பெரியம்மா அவளைப் பார்த்துச் சம்பிரதாயமாகவே விசாரித்தபோதுகூட சச்சுவின் மாமியார் முந்திக் கொண்டு, ''ஒரு விசேஷத்துக்கும் இப்போது அவசரமில்லை. சனியில்லாமல் இருக்கட்டும் அவர்கள்!'' என்று பதில் கூறினாள்.

பெரியம்மா சச்சுவைத் தன்னுடன் வந்து சில நாட்கள் இருக்கும்படி அழைத்ததற்கும் சச்சு மறுத்துவிட்டாள்.

''வெளியேற்றுவோமா வென்று இருந்தது முன்பு! இப்போது எதற்கு இந்த உபசாரம்?'' சச்சு விளையாட்டாகச் சொன்னபோது அவளுடைய துடுக்குத்தனம் பழக்கப்பட்டிருந்தாலும் பெரியம்மாவின் கண்கள் கலங்கி விட்டன. அப்போது வந்து போனதுதான் பெரியம்மா; சில நாட்களிலேயே சச்சு தன் மாமியாருடன் அவளை வழியனுப்பச் செல்ல நேர்ந்தது. பெரியம்மாவைக் கரை ஏற்றிய பிறகு அந்த வீட்டில் இருந்தவற்றை யெல்லாம் ஒரு துரும்பு கூட விடாமல் சச்சு தன் மாமியாருக்கு இணையாக மூட்டை கட்டியதைப் பார்த்து ஊரே அதிசயித்தது. இந்த அசட்டின் சாமர்த்தியத்தைப் பாரேன்!''



என்று அவர்கள் கூறியதையும் அந்த அசடு கேட்டு ரசித்தது.

சச்சுவின் கதையின் அடுத்த திருப்பம் அவள் கணவனின் மறுமணம். இவ்வளவு நாட்களுக்குப் பிறகு அதற்கு என்ன அவசியம் ஏற்பட்டதோ, சச்சுவுக்குத் தெரியாது. ஆனால் ''கோர்ட்டு, வக்கீல், கேஸ் என்று ஏதாவது வரப் போகிறதே'' என்று அவள் கணவன் தயங்கியபோது, ''இந்த அசட்டுக்கு அவ்வளவு தைரியம் ஏது?'' என்று அவள் மாமியார் சமாதானம் கூறியதும் அவள் காதில் விழுந்தது. அவன் தன் புது மனைவியைத் தனியாக வைத்து விட்டபடியால், இந்த நிகழ்ச்சியும் சச்சுவைப் பாதிக்கவில்லை. தன்னுடையவர் என்று ஒருநாளும் பாவிக்காத கணவனின் மறுமணமும் அவளுக்கு இழப்பாக இல்லை.

பொல்லாதவர்கள் லேசில் போக மாட்டார்கள் என்று சொல்வார்கள். சச்சுவின் மாமியார் நல்லவளோ, பொல்லாதவளோ ஒரு நாள் கூடப் படுக்கை போடாமல் பயணம் கிளம்பி விட்டாள். 'துக்கத்துக்கு வந்தவர்களில் சிலர், ''இந்த அசட்டுக்கு இனிமேலாவது விடியணும்' என்று அநுதாபத்துடன் சொன்னபோது சச்சுவுக்குச் சிரிப்பு வந்தது. தன் அவல நிலை தான் நினைத்தது போல் ரகஸ்யமாக இல்லை என்பதில் சச்சுவுக்குக் கொஞ்சம் ஏமாற்றமே!

வந்த கூட்டமெல்லாம் கலைந்து சென்றது. சச்சு அன்றுதான் முதன் முதலாகத் தன் கணவனுடன் அந்த வீட்டில் தனியாக இருந்தாள். இரவு, வேலையெல்லாம் முடிந்த பிறகு, வழக்கம் போல் சமையலறையிலேயே, தலைப்பை உதறிப் போட்டுக் கொண்டு படுத்தவள், காலடிச் சத்தம் கேட்டு நிமிர்ந்தாள். எதிரே அவள் கணவன்... அவனைப் பார்க்க அவளுக்குப் பரிதாபமாக இருந்தது. தாய் ஒருத்தியே உறவென்று நம்பியிருந்த அவன் திடீரென்று அநாதையாகி விட்டது போல் தோன்றியது.

'அந்தப் பெண்ணையும் இங்கேயே அழைத்து வந்து விடலாம்' — கணவனுக்குச் சமாதானம் கூற நினைத்தாள் அவள். அவள் சொற்கள் அவளுடைய தொண்டையை அடைத்து நிற்கும் விதமாக அவன், அசட்டுச் சிரிப்புடன் ''இந்தச் சமையலறையிலே நீ எதுக்குப் படுத்துக்கணும்?'' என்றான்.

உலகம் குறிப்பிட்ட 'விடிவு காலம்' இதுதான் என்பது சச்சுவுக்குப் புரிந்தது. ஒரு பார்வை பார்த்து விட்டுச் சரேலென வெளியே சென்றான் அந்த அசடு. அவள் பார்வையில் இருந்த ஏளனம் அவனைக் குறுக வைத்தது.

கிணற்றங் கரையில் அமர்ந்திருந்த சச்சுவுக்கு இரவு போனதே தெரியவில்லை. அவள் சுய உணர்வு வந்து மறுபடியும் வீட்டுக்குள் சென்றபோது அது காலியாக இருந்தது. அவள் ஒரு காகிதத் துண்டில் எழுதினாள்—

''உங்களுக்கு உங்கள் அம்மாவிடமாவது உண்மையான அன்பு உண்டென்று நினைத்திருந்தேன். இப்போதோ அவளிடம் உங்களுக்கு இருந்ததும் வெறும் பயம்தான் என்று தோன்றுகிறது. என்னுடைய உடைமைகளில் உங்களுக்குச் சேரவேண்டியதையெல்லாம் ஏற்கனவே சந்தோஷமாக கொடுத்தாகிவிட்டது. எஞ்சி இருப்பதை அடைய உங்களுக்குத் தகுதி இருப்பதாக நான் கருதவில்லை.—சச்சு''

பரந்த உலகின் பல்வேறு சோதனைகளை ஏற்க சச்சு தன் துணிமணிகளுடன் வெளியேறினாள். கையில் 'பிரஷ்'ஷுடன் கிணற்றங்கரையில் நின்று கொண்டிருந்த பக்கத்து வீட்டு மாமா தன் மனைவியைப் பார்த்து, ''இந்த அசடு காலங் காத்தாலே எங்கே கிளம்பிடுத்து?'' என்று கேட்டது சச்சுவைச் சிறிது தயங்க வைத்தது. உடனேயே, ''உன்னை உருவாக்கியதில் நான் பெருமைப்படுகிறேன். உன் சமத்து யாருக்கு வரும்?'' என்று அவள் மனம் அளித்த நற்சாட்சிப் பத்திரம் அவள் கால்களுக்கு அசாதாரண வலுவை அளித்தது.

# மலையாள முக்குவர்கள்

பிலோ இருதயநாத்



தென்னகத்தில் எங்கெங்கு ஆதிவாசிகள் இருக்கிறார்களோ அங்கெல்லாம் போய் அவர்களுடன் நெருங்கிப் பழகிப் பல அதிசயமான, சுவையான செய்திகளைத் தரும் மானிட இயல் அறிஞர் பிலோ இருதயநாத் மேற்குக் கடற்கரையில் வாழும் முக்குவர்களைப் பற்றிய ரசமான செய்திகளை விளக்குகிறார்.

முக்குவர்கள் என்பவர்கள் கேரளத்தில் மேற்குக் கடற்கரை ஓரங்களில் மீன் பிடிக்கும் ஆதிவாசிகள். கடற்கரையை அடுத்துச் சிலர் கல் வீடுகளிலும், பலர் தென்னை ஓலைக் குடிசைகளிலும் வாழ்கின்றனர். கடற்கரையில் ஏராளமான தென்னை மரங்களை இவர்கள் பயிர் செய்கின்றனர். இவர்களுக்குத் தாயகம் அரபிக் கடல் கரையோரம் என்று கூறுகின்றனர்.

இவர்கள் பண்டைக் காலத்தில் அரபிக் கடலிலிருக்கும் பல தீவுகளுக்குப் போவதுண்டாம். இவர்களின் தொழில் வளமுள்ள மாதம் ஜூன் முதல் ஆகஸ்டு முடிய ஆகும். அப்போது மீன் பிடிக்கும் தொழில் தலை தூக்கி இருக்குமாம்.

இவர்கள் கடலைத் ''தாய்'' என்றும், ''ஜோதி நட்சத்திரம்'' என்றும், கடலில் அதிகமாக மீன் கிடைத்தால் ''தாயின் ஆசி'' என்றும், கிடைக்காவிட்டால், ''அது தாயின் கோபம்'' என்றும் கூறுகின்றனர். முன்பு இவர்களிடமிருந்த சாமான்கள் மீன் பிடிப்பதற்குரிய கருவிகளும், மண் பாத்திரங்களும்தான். தற்காலத்தில் வீட்டில் நல்ல எவர்சில்வர் பாத்திரங்களும் இருக்கின்றன.

இவர்களுக்குள் பொன்னில்லம், செம்பில்லம், காரில்லம், காச்சில்லம் என நான்கு பிரிவுகள் உண்டு. இவர்கள் மிகவும் துணிகரமான பழக்கமுடையவர்கள். இவர்களுடைய சம்பிரதாய அடையாளங்கள் சில உண்டு. தலையில் ஓலைக் குடை, தடி, அரைக்குச் சிவப்புத் துணி, எப்பொழுதும் இடுப்பில் வைத்துக் கொள்ளும் பெருக் கத்தி முதலியன அவர்களுடைய குடும்ப அடையாளங்கள்.

பெண்கள் கீழ் முண்டுடன் பண்டைக் காலத்தில் எல்லாப் பணிகளையும் செய்தார்கள். ஆனால் இன்று மேல் சட்டையும் அணிந்திருக்கின்றனர். இவர்கள் வெள்ளி நகைகளை அதிகமாக உபயோகிக்கின்றனர்.

குழந்தை பிறந்ததும் தென்னை ஓலையில் அதனைப் படுக்க வைக்கின்றனர். குழந்தை பிறந்த இருபத்தெட்டாம் நாளில் நாமகரணம் செய்கின்றனர். அப்பொழுது குழந்தை, தகப்பனாரின் மடியில் படுக்க வைக்கப்பட்டிருக்கும். தகப்பன் கடலை நோக்கிக் கிழக்குப் பக்கமாகச் சற்றுத் திரும்பி உட்கார வேண்டுமாம்.

குழந்தைக்குப் பெயர் கொடுக்கும் நாளில் அவர்களுக்கு என்ன உணவு சமைக்கச் சக்தி இருக்கிறதோ அந்த உணவுகளைச் சமைப்பார்கள். முக்குவர்களில் தென்பகுதியில் வாழும் பலர் முகம்மதியர்களாக மாறி வாழ்ந்தாலும், அவர்கள் தம் மூதாதையர்களின் குடும்பப் பழக்கவழக்கங்களைக் கைவிடுவதில்லை. தங்களை மற்றவர்கள் உதாசீனம் செய்து விட்டார்கள் என்று தமக்குள் நினைத்துக் கொண்டதே சிலர் முகம்மதியராக மாறியதற்குக் காரணமாம். மேலும், அப்படித் தென் கோடியில் வந்து குடியேறிய

(மேலே) ஓய்வு நேரங்களில் மீன் பிடிப்பதற்குப் பயன்படும் பலவிதமான வலைகளைப் பின்னும் முக்குவ மங்கைகள்.

(அருகே) முடியாத்தி ஈழவர்கள் உபயோகிக்கும் நீண்ட காம்புடைய அகப்பையுடன் கட்டுரையாசிரியர்.









சிலர் பணக்கார முக்குவர்களுக்கு அடிமைகளாக இல்லாமல் சுதந்திரமாக மீன் பிடித்து வாழ்ந்தார்களாம்.

பண்டைக் காலத்தில் மாப்பிள்ளைமார்கள் முக்குவர்களின் பெண்களைத் திருமணம் செய்து கொண்டார்கள். அந்த உறவில் ஆண் குழந்தையை ஒரு வெள்ளிக்கிழமையில் மாப்பிள்ளை இனத்தாரிடம் சடங்குகள் செய்து ஒப்படைத்துவிட வேண்டும். முக்குவர்கள் முகம்மதியர்களாக மாறுவது சர்வ சாதாரணமான காரியமாம். அப்படி மாறிய முக்குவர்கள், ''புதிய இஸ்லாமியர்'' என அழைக்கப்படுவர். முக்குவப் பெண் ருதுவான போதும், மாதவிடாய்க் காலங்களிலும் தனிமையில் ஐந்து நாட்கள் இருக்க வேண்டும். அவர்கள் மற்றவர்களைப் போல் எதையும் தொட முடியாது. ஐந்தாம் நாள் சாணத்தால் சுத்தம் செய்து வீட்டுக்குள் வரவேண்டும். சிலர் கோவில் தீர்த்தம் வாங்கித் தெளித்துக் கொண்டும் வீட்டுக்குள் வருவதுண்டு.



புதிதாக ருதுவான பெண்ணாக இருந்தால் அவள் இருக்கும் அறையில் பேய், பிசாசு, கெட்ட காற்று ஒன்றும் வராமல் இருக்க இரும்புத் துண்டை வாசற்படியில் கட்டி வைப்பதுண்டு. அவள் படுத்துறங்குவது ஓலைப் பாயில் தான். பண்டைக் காலத்தில் ருதுவான பெண்கள் வெளியில் வரக் கூடாது. ஆனால் தற்காலத்தில் பள்ளிக்குச் செல்கின்றனர்.



பெண்கள் ருதுவானதும் சிலர் ஏழு நாட்களும் சிலர் பதினொன்று நாட்களும் அவளைத் தனிமையில் இருக்கும்படி செய்வார்கள். அவள் தினம் குளிக்கத் தனிக் குடிசையை மணலில் கட்டுவார்கள். ருதுவான வளைப் பெண்கள் மாத்திரம் வந்து பார்ப்பார்கள். ருதுவான பெண்ணின் குடும்பத்தினர் பெண்ணைத் தங்கள் வீட்டுக்குள் அழைக்கும் சடங்கு செய்யும் வரையில் சைவ சாப்பாடுதான் சாப்பிடுவார்கள். மேலும் அக்குடும்பத்தாரில் ஆண்கள் உட்பட யாரும் கோவிலுக்குள் போகக் கூடாது.

ருதுவான பெண்ணைக் கடைசி நாளன்று தேங்காயெண்ணெய் அல்லது நல்லெண்ணெயைத் தலையில் தேய்த்து ஓடைக்கோ அல்லது தனிக் குளத்





○ கடலில் பிடித்த மீன்களை இத்தகைய கூடைகளில் வைத்து கொண்டு பத்து மைல் தூரம் செல்லுவார்கள்.

○ முக்குவரின் மீன்பிடி படகு.

○ ஓலைத் தொப்பி தயாரிக்கிறது.

○ இரண்டு விதமான ஓலைத் தொப்பிகளை அணிந்துள்ள முக்குவர்.



துக்கோ வாத்தியத்துடன் அழைத்துச் செல்லுவார்கள்.

அவள் குளித்தபின் குளத்திலிருந்து, அவள் இல்லம் வரையில் நடக்கும் பாதையில் முதலில் வெற்றிலையைப் பரப்புவார்கள். பிறகு அதன் மேல் கோடித் துணியை விரிப்பார்கள். ருதுவான பெண் அந்தத் துணியின் மேல்தான் நடந்து வரவேண்டும். அவளைச் சூழ்ந்து வரும் பெண்கள் தங்கள் வாயால், 'குளுகுளுகுளு' என்று குரலோசையை எழுப்பிக் கொண்டே வருவார்கள். இக் குரலோசையின் சத்தத்தைக் கேட்டதும் ஆண்கள் எல்லோரும் ஓடி மறைந்து கொள்ளுவார்களாம். ருதுவான பெண் குளித்துவிட்டு வீடு திரும்புவதற்குள், சில மங்கையர்கள் கூடி அவள் உபயோகப்படுத்திய சாமான்களை சுத்தம் செய்து, அவள் இருந்த இடத்தைச் சாணத்தால் மெழுகி, கோவில் தீர்த்தத்தைக் கொண்டு வந்து வீடு முழுவதும் தெளித்திருப்பார்கள். அவளுக்கு அவரவர்களின் சக்திக்குத் தகுந்தபடி விருந்து செய்வார்கள். ருதுவான நேரத்தில் என்ன நட்சத்திரம் என்று பார்த்து நன்மை தீமைகளைப் பற்றிக் கோவில் பூசாரியைக் கலந்து ஆலோசித்துத் தீமைகளை நிவர்த்தி செய்ய ஏதாவது சடங்கு செய்து விடுவார்கள்.

விதவைகள் தவிர மற்ற பெண்கள் நெற்றியில் திலகம் வைத்துக் கொள்கின்றனர். விதவைகள் மறுமணம் செய்துகொண்டால் திலகம் வைத்துக் கொள்ளலாம். எக்காரணத்தைக் கொண்டும் முக்குவர் இனத்தில் உடம்பில் பச்சை குத்திக்கொள்வதில்லை. யாராவது வீட்டை விட்டு வெளியே போகும்போது தும்மினால், உடனே அவர் பக்கத்தில் துப்பிவிட்டுப் போவார்கள். குழந்தைகள் யாராவது தும்மினால், தாயும் கூடவே போலித் தும்மல் தும்மி அதன் தீமையை விலக்கிவிடுவாள்.

திருமணம் செய்வதில் இவர்கள் ஒரு கட்டுப்பாடு வைத்திருக்கிறார்கள். பெண்கள் பதினாறு வயதுக்கு மேலும் ஆண்கள் இருபத்தோரு வயதுக்கு மேலும்தான் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்பதே அது. திருமணத்துக்கு முகூர்த்த நாள் பார்ப்பது, பந்தக்கால் நடுவது முதலிய சடங்குகளும் நடைபெறுகின்றன.

முதல் நாள் மணமகள் சில வரிசைகளுடன் சுமங்கலிகள், உறவினர்கள் புடைசூழ மணமகனின் இல்லத்துக்குப் போவாள். இரு சம்பந்தி வீட்டாரும் கிராமத் தலைவர் முன்னிலையிலும் மற்றவர்களின் முன்னிலையிலும் வெள்ளிக் காசு மாற்றிக் கொள்வதுண்டு. மணப்பெண்ணின் சம்மதத்தை ரகசியமாகச் சுமங்கலிகள் கேட்டுத் தெரிந்துகொண்ட பின்தான் ஒரு சுமங்கலி பெண்ணுக்குத் திருமணப் புடவை உடுத்துவாள்.

வசதி உள்ளவர்கள் ஒற்றைப்படையில் இருபத்தோரு பொன் காசுகளைப் பெண்ணின் கழுத்தில் கட்டுவதுண்டு. மேற்குக் கடற் கரையிலேயே சில பகுதியில் வாழும் முக்குவர்கள் தங்கள் திருமணச் சடங்கை மூன்று நாட்கள் கூடச் செய்வதுண்டு.

பொதுவாக ஆண்கள் ஒரே திருமணம்தான் செய்து கொள்ள வேண்டு மெனினும் சில காரணங்களை முன்னிட்டு இரண்டு மூன்றும் செய்துகொள்வதுண்டு. பஞ்சாயத்தின் மூலம் விவாக ரத்து செய்த பின் மறுமணம் செய்து கொள்ளலாம். விவாக ரத்து செய்தால் குழந்தைகள் கணவனைத்தான் சேரும்.

அண்ணன் மரணமடைந்தால், அண்ணியைத் தம்பி திருமணம் செய்து கொள்ளலாம். இன்று காதல் விவாகம் மலிந்துவிட்டதாம்.

திருமணச் சடங்குகள் யாவும் செய்ய முக்குவர் குலத்திலேயே புரோகிதர் ஒருவர் உண்டு. பந்தலில் தம்பதிகள் கிழக்கு நோக்கி உட்கார்ந்தாலும் சற்று கடலைப் பார்ப்பதைப் போல்தான் உட்கார வேண்டும்.

கர்ப்பவதியாக இருக்கும் மங்கையர்களுக்கு ஐந்து, ஏழு மாதங்களில் ''புளிக்குடி'' அல்லது ''நெய்குடி'' சடங்கு செய்வதுண்டு. தேங்காய்க் கொப்பரையில் எண்ணெய் எடுத்து, கர்ப்பவதிக்கு நாக்கிலும் வயிற்றின் மேற்பகுதியிலும் தடவுவர். இச்சடங்கு சுமங்கலிகளால் மருத்துவச்சியின் முன்னிலையில் செய்யப்படுகிறது. மனைவி கர்ப்பவதியான நாள் முதல் குழந்தை பிறந்து மூன்று நாட்கள் வரையில் கணவன் தலை மயிரையும், தாடியையும் சவரம் செய்து கொள்ளக் கூடாது. தாயை ஏழாம் நாள் மருத்துவச்சி கடல் நீரால் சுத்தம் செய்து தீட்டு நீக்குவாள்.

எந்த ஊரிலும் எந்தக் குலத்திலும் கேள்விப்படாததோர் செய்தி இவர்களிடம் கேள்விப்பட்டேன். குழந்தையை ஈன்றெடுத்த தாய் தன் குழந்தைக்கு நான்கு நாட்கள்வரையில் பால் கொடுக்கக் கூடாதாம். ஏனென்றால் அந்தத் தாயின் பால் நன்றாக இராதாம். ஆகையால் கைக்குழந்தை வைத்திருக்கும் மற்றொரு தாய்தான் அக்குழந்தைக்கு நான்கு நாட்கள்வரையில் பால் கொடுப்பாளாம். பிரசவமான அறைக்குள் மூன்று நாட்கள் வரையில் பூனை, நாய் முதலியவைகள் போகக் கூடாது. மேலும் கர்ப்பவதியாக இருக்கும் காலத்தில் சூரிய கிரகணமோ, சந்திரகிரகணமோ பிடிக்கும் நாளில் கிரகணம் பிடிக்கும் முன் வேகவைத்த ஆகாரம் ஒன்றும் சாப்பிடக் கூடாதாம். ஆண் குழந்தை பிறந்தால் உடனே அந்த வீட்டில் இருக்கும் ஆண்கள் யாராவது வெளியில் வந்து குரல் கொடுத்துக் கத்துவார். பெண் குழந்தை பிறந்தால் அந்த வீட்டு மங்கையர்களில் ஒருத்தி வெளியில் வந்து தேங்காயின் பாதி மூடியைத் தட்டிச் சத்தம் செய்வாள்.

குழந்தைக்கு மேல் வரிசைப் பல் முதலில் விழுகிறதா அல்லது கீழ் வரிசைப் பல்லா என்று கவனித்து அதற்குச் சாந்திச் சடங்கு செய்கிறார்கள்.

ஆண்களுக்கும் பெண்களுக்கும் ஈமச்சடங்கு ஒன்றேதான். இறந்தவர்களைப் புதைப்பதுதான் சட்டம். மரணமடைந்தவனின் விரலில் பொன் மோதிரம் போட்டு, அதை எடுத்து விதவையின் கையில் கொடுப்பார்கள். அதை அவள் தன் கணவரின் உறவினர்களின் கையில் கொடுத்து விடுவாள். மனைவியின் தாலியை வெட்டி எடுத்து அதை மரணமடைந்த கணவனின் பக்கத்தில் வைப்பாள். அப்பொழுது விதவைக்கு வெள்ளைத் துணி போடப்படும். மரணமடைந்தவருடைய மூத்த மகனும் முக்கியமான உறவினரும் கடலில் குளித்துவிட்டு மடியுடன் சடலத்தின் மூக்கில் அரிசி, பூ, பொன் துண்டு முதலியவற்றை வைப்பார்கள்.

குழியில் வைப்பதற்கு முன் ஆணுக்கும் பெண்ணுக்கும் நகம் வெட்டிச் சந்தனம் பூசுவார்கள். பெண்ணாக இருந்தால் பொன் துண்டை வாயில் வைப்பதுண்டு. ஆணாக இருந்தால் வெற்றிலை அல்லது துளசியை வாயில் வைப்பார்கள். மறுபடியும் மகனும், முக்கியமானவரும் கடலில் குளித்துவிட்டு மடியுடன் சமாதியை மும்முறை சுற்ற வேண்டும். மகன் ஒரு பானை நிறையக் கடல் நீரைச் சுமந்து சமாதியைச் சுற்ற வேண்டும். மூன்றாம் சுற்றில் தண்ணீர்ப் பானையை உடைத்து விடுகிறான். மயானச் சடங்கு முடித்துக் கொண்டு வீட்டுக்கு வரும்பொழுது மகனும், சடங்கு செய்த முக்கியமானவரும் திரும்பிப் பார்க்கக் கூடாது. வழியில் நாவித ஸ்திரீ அவர்கள் மீது தண்ணீரும் அரிசியும் தூவிய பின் தங்கள் வீட்டுக்கு வருவார்கள். ஈமச் சடங்கின் தீட்டு ஏழு நாட்கள் வரையில் இருக்குமாம். மகன் அந்த ஏழு நாட்களில் உப்பும் புளியும் சாப்பிடக் கூடாது. பதினான்காம் நாள் அன்று ஒன்பது அல்லது பதினொரு சிறு பையன்கள் கடலில் குளித்த பின் உணவைக் கடலின் அருகில் சமைத்து மரண

மடைந்த ஆத்மாவுக்குச் சாந்தி செய்வார்கள். பிறகு அந்தப் பையன்கள் சாவு நிகழ்ந்த வீட்டுக்கு வருவார்கள். அவர்களின் தலையின் மேல் பெரிய கிளிஞ்சலில் (சிப்பியில்) விளக்கு வைப்பார்கள். அந்த விளக்கை அவர்கள் எடுத்து ஏழு சிறு நெற்குவியல் மேல் வைத்து விடுவார்கள். மரணமடைந்தவருடைய தலைமயிர், நகம், அரிசி, வாழைப் பழம் முதலியவைகளைப் புதிய பானையில் வைத்துக் கடலில் கொண்டு போய் விடுகின்றனர். மூத்த மகன் அன்று குளித்த பின் மரணமடைந்தவரின் அறையில் தரையில் அடுப்பு வைத்துச் சமையல் செய்து தரையில் மனித உருவம் வரைந்து அதன் மேல் பச்சைத் துணியைப் போர்த்துவான். பிறகு அந்த அறையில் சமைத்ததை அந்த உருவத்துக்குப் படைப்பார்கள். படியில் உள்ளே விளக்கு வைத்து, வரைந்த உருவத்தின் ஒரு பகுதியில் அப்படியை வைப்பார்கள். மேற்கூறிய நெற் குவியலையும் மரணமடைந்தவரின் உருவத்தையும் மகன் மும்முறை சுற்றியபின் அரிசியை நான்கு திசைகளிலும் எறிவார்கள். அத்துடன் ஈமச்சடங்கு முடிகிறது.

இவர்களுக்குத் தனிச் சங்கத்தின் தலைவனே ஊர்த் தலைவனும் கூட. அத்தலைவனுக்கு "துறையில் அரையன்", "ஆறு கட்டி", "கடவன்", "காரணவன்" என்று பல பெயர்கள் உண்டு. தலைவன் கிராமத்தில் உண்டாகும் எல்லா விவகாரங்களையும் கவனித்துக் கொள்ள வேண்டும். குற்றம் பெரிய சிக்கலாக இருந்தால், பஞ்சாயத்துக் கூட்டத்தில் பலரைக் கூட்டித் தீர்ப்புச் செய்வதுண்டு. குற்றவாளியின் அபராதம் கோவில் நன்மைக்காகவும், கிராம நன்மைக்காகவும் செலவு செய்யப்படும். இந்தத் தலைவர்கள் பண்டைக் காலத்தில் அரசனைப் போல் கையில் அடையாளக் கோல் வைத்திருப்பதும் உண்டாம்.

தமிழ்நாட்டில் எப்படி மீனவர்களில் சிலர் கோவில்களில் தேர் இழுக்கவும் சுவாமி தூக்கவும் கலந்து கொள்ளுகின்றனரோ அப்படியே முக்குவர்களும் கோவில்களில் பல்லக்குத் தூக்கும் பணியில் ஈடுபடுகின்றனர்.

இவர்கள் படகிலேயே அதிக மைல்கள் கடலில் போகக் கூடியவர்கள். சில இடங்களில் கடற் கரையோரமாக ஏராளமான தென்னைகளை வைத்துப் பயிர் செய்து பிழைக்கின்றனர். இவர்கள் மாமரத்தின் அடிமரத்தை அப்படியே குடைந்து அழகான படகு செய்கின்றனர். படகில் எட்டுப் பேர் கடலின் மேல் போவார்கள். இன்று படகு செய்ய ரூபாய் இரண்டாயிரம் முதல் மூவாயிரம் அல்லது நாலாயிரம் வரையில் கூடச் செலவாகுமாம்.

ஆண்களும், பெண்களும் சேர்ந்து பல வகை மீன்களைப் பிடிக்கப் பலவகை வலைகளைப் பின்னுகின்றனர். படகில் சென்று சிறிய மீன் முதல் பெரிய சுறாமீன்கூடப் பிடிப்பார்களாம். படகு கரைக்கு வந்தவுடன் விலைபேசி ஊர்களுக்கு அனுப்பவோ, கடைவீதிக்கு எடுத்துச் செல்லவோ அல்லது ஐஸ் போட்டு லாரிகளில் வெளியூர்களுக்கு அனுப்பவோ செய்வர்.

விற்பனையாகாத மீன்களை உடனே உப்பிட்டுக் கருவாடாக்குகின்றனர். பதம் செய்த மீன், இறால் முதலியவைகளைச் சிங்கப்பூர், மலேயா, இலங்கை முதலிய இடங்களுக்கு ஏஜண்டுகள் மூலம் அனுப்புகின்றனர். மலையாளக் கடற்கரையில் பிடிக்கும் எல்லா வகை மீன்களிலும் 'மத்தி', 'அயிலே' என்ற மீன்கள் மிகவும் முக்கியமானவை. "அயிலாத் தல அளியனுக்கும் கொடுக்கருது" என்கின்றனர். அயிலே மீனின் தலையைத் தன் மச்சானுக்கும் கொடுக்க மாட்டார்கள் என்பது பொருள்.

சிலசமயங்களில் ஓராளுவுக்கு நூறு, இருநூறு மீன்கள்கூடக் கிடைக்குமாம். இந்த மீன்கள் சாதாரணமாய் ஆறு அங்குலம் முதல் ஓரடி வரையில் நீளமிருக்கும். பொடி மீன்கள், ஊனமடைந்த மீன்கள் முதலியன தென்னை / காப்பித் தோட்டங்களுக்கு எருவாக வாங்கப்படுகின்றன. சிலர் இந்த மீன்களில் எண்ணெய் எடுத்து வெளியூர்களுக்கனுப்புவர்.

ஓலையால் மீனவர்களின் தொப்பி பின்னி அதை விற்பனை செய்கின்றனர். அந்த ஓலைத் தொப்பியில் முன்னும் பின்னும் மாட்டிக்கொள்ளக் கயிறு கட்டியிருக்கின்றனர். எவ்வளவு காற்று அடித்தாலும் அது கீழே விழுவதில்லை.

இவர்களுக்கு முக்கிய தெய்வம் பத்திரகாளி. சுவர் எழுப்பிக் குடிசை போல் கோவில் கட்டி, மரத்தால் செய்யப்பட்ட காளிக்கு ஓர் ஆண்டில் நான்கு முறை சேவல் பலி கொடுப்பார்கள். முக்குவர்கள் ஈசுவரனையும் வணங்குவார்கள். இவர்களுக்குப் பேய், பிசாசு, மந்திரம், தந்திரம் முதலியவைகளில் நம்பிக்கை உண்டு. இவர்கள் கோவலனுக்கும் கண்ணகிக்கும் பொங்கல் இடுவதுண்டு. பிள்ளையார் வணக்கம் விசேஷமாய்ச் செய்வார்கள்.

இவர்கள் அரபிக் கடல் அருகிலிருக்கும் ஏதோ ஒரு தீவிலிருந்து வந்தவர்கள் எனக் கருதப்படுகின்றனர். 1908 கெஜெட்டில், இந்த முக்குவர்கள் இலங்கையிலிருந்து வந்தவர்கள் என்றும், அவர்களுடைய குலத்தொழில் சுண்ணாம்புச் சூளை போடுவதும், பல்லக்குத் தூக்குவதும்தான் என்றும் கூறப்படுகிறது.

இந்தியாவிலேயே ஜாதி வேற்றுமை தலைதூக்கி ஆடிய நாடு கேரள நாடுதான். அப்படி இருந்த நாட்டில் இன்று முக்குவர்களுடன் எல்லோரும் கூடிப் பழகுகின்றனர். உழைப்பும் திறனும் படைத்த இம் மக்கள், சமுதாயத்தில் மதிப்புப் பெற்றிருப்பதைக் காண நமக்கும் மனம் நிறைகிறது.



# மின்னுவதெல்லாம் பொன்னல்ல!

பொன்னா? ஏக விலையிருக்குமே!

ஆமாம். மின்னுவதெல்லாம் பொன்னென்று எண்ணி வாங்கினால் அப்படித்தான். இதைப் போலவே சிலர் 'சங்கர் பிராண்ட்' டின்களில் அடைத்த போலி கால்ஷியம் கார்பைடை வாங்கி, உபயோகித்துப் பார்க்கும்போது அதன் குறைவான தரத்தை உணர்கின்றனர்.

அதாவது உண்மையான 'சங்கர் பிராண்ட்' மார்க் பொதித்த டின்களில் அடைத்த கால்ஷியம் கார்பைடை வாங்கினால் கூட அப்பொருளின் தரத்திற்கு உத்திரவாதம் இல்லையா?

ஆம். 'சங்கர் பிராண்ட்' கால்ஷியம் கார்பைட் 'இந்திய தர கட்டுப்பாட்டின்படி தயாராகும் முதல் ரக தயாரிப்பாகும்.
அப்படியானால் நான் எப்படி உண்மையான 'சங்கர் பிராண்ட்' கால்ஷியம் கார்பைடையே எப்போதும் வாங்குவது?

***ஒரே வழி. உங்கள்தேவைக்கு, 'சங்கர் பிராண்ட்' கால்ஷியம் கார்பைடின் விற்பனைக்கு பூரண உரிமை பெற்றவர்களையே அணுகுங்கள். அவர்கள் விலாசம்:***





## சங்கர் பிராண்ட் கால்ஷியம் கார்பைட்

## ஸ்ரீ கிருஷ்ணா & சன்ஸ்,

**சென்னை**
சயர் மேன்ஷன்,
123, மவுண்ட் ரோடு,
சென்னை-6

**கல்கத்தா**
8, ரிட்சீ ரோடு,
கல்கத்தா-19

**டெல்லி**
138, ஜோர்பாக்
புதுடெல்லி-3



வெள்ளேக்காராளெல்லாம் தொட்டிக்குள்ளே உக்காந்து
குளிப்பாளாமே! நம்ம தொட்டி எப்படி?



'கல்ஃப்'ன்னு தண்ணி ரொம்ப ஜோராக் கொட்டுது.
ஜூராத் தண்ணியும் ஐஸ் மாதிரி இருக்கு.

அலுமினியம் பாத்திர 'பாத் டப்' குளியல் ரொம்ப ஜோர்!
போங்கோ! நீங்க என்ன சொல்றேள்?



ஒருவழியா ஸ்நானம் முடிஞ்சுட்டுது. ஆனா
எழுந்திருக்கத்தான் மனசில்லே.

புகைப்படங்கள்: சரோஜா சீனிவாசன்



# தலைவலி தீர்ந்தது



## ஏ.எஸ்.ராகவன்

முன்பெல்லாம் கவிதாவுக்கு வாரம் ஒரு முறை தலைவலி வரும். ஆயுர்வேதம், யுனானி, ஹோமியோபதி, அலோபதி மருந்துவகைகளெல்லாம் தனித்தனியேயும் சங்கமித்தும் ஒரு வழியாக அந்தத் தலைவலியை விரட்டிய நேரம் பார்த்துப் புதிதாக ஒரு திருகுவலி வந்து விட்டது. இப்போது தலைவலி தினசரி வருகிறது.

மாதுவுக்கு இது தெரியாது. இதென்ன, அவனுக்கு எதுவுமே தெரியாது.

ஏதடா வீட்டிலே ஒருத்தி, போதுக்கும் பாட்டுக்கும் இந்தப் பத்துக் குடித்தனக்காரர்களிடையே, குழாயடியில் மல்லுக்கு நின்று, டிப்போப் பாலுக்குச் சண்டை போட்டு, எப்படியோ சம்சாரத்தில் ஈடு கொடுக்கிறாளே, இரவில் சாப்பாட்டுக் கடை ஆனதும் சற்றுக் கண்ணயரட்டுமே என்கிற கரிசனம் இல்லாமல், அந்த அருமை நண்பன் ரகுவுடன் 'லெக்லெக்கே' என்று பாதி ராத்திரி வரையில் வம்பளக்க ஆரம்பித்து விடுகிறான்! அது என்னதான் பேசுவார்களோ — வாய் வலிக்காதா?—பேச்சு ஓயவே ஓயாது.

இரண்டு பேருமே ஒரே ஊர்க் காரர்கள். ஒன்றாகப் படித்தவர்கள். 'அடே' போட்டுப் பேசுகிற அந்நியோன்யம். தலைச்சன் பிரசவத்துக்கு மனைவியை ஊருக்கு அனுப்பி விட்டுத் தான் மட்டும் 'ஹாய்'யாக ஹோட்டல் சாப்பாடு சாப்பிட்டுக் கொண்டு ராத்திரியானால் இங்கே வந்து விடுகிறான், நண்பன் ரகு. அவன் வருவதற்குக் கொஞ்சம் தாமதமும் ஆயிற்றோ, மாது குட்டி போட்ட பூனை மாதிரி உள்ளுக்கும் வாசலுக்குமாக அலைவான். இருவருக்கிடையே ரகசியம் எதுவும் இராது போலிருக்கிறது. கவிதாவுக்கு நாக்கைப் பிடுங்கிக் கொள்ளலாம் போல [illegible] இருந்தது.

சில நாட்களில் வேதாந்தபரமாக உரையாடல் நடக்கும். எதிரே வெற்றிலைச் செல்லமும், வாய் கொப்புளிக்கக் கூஜாவில் நீரும் இருந்து விட்டால் வேதாந்தம் தானே கொப்புளிக்குமோ என்னவோ!

ஆரம்பத்தில் கவிதா பொருட்படுத்தவில்லை. நாளாக ஆக இதே கதையாகப் போகவே, "இந்தாருங்கள், விடிந்தால் உங்களுக்கு ஆபீசு கிடையாதா? இதென்ன ஒரு நாளைப்போல் விளக்கைப் போட்டுக் கொண்டு ஆகாததும் போகாததும் பேசிக் கொண்டு?" என்றாள்.

மாது சிரித்தான். "ரொம்ப சரி! நாளையிலிருந்து மாற்றிக் கொள்கிறேன்" என்றான்.

நைச்சியமாகத்தான் அப்படிச் சொன்னான் என்பது மறுநாள் அல்லவா புரிகிறது! இரவில் ஆண்கள் பேசுகிற பேச்சு பொழுது விடிந்தால் போச்சு!

மறு நாள் ரகு வந்ததும், "டேய், என் மனைவி சண்டை போடுகிறாள். விளக்கைப் போட்டுக் கொண்டு, லேட் சாரானுக்குக் கேடாக, என்ன பேச்சு என்கிறாள்....." என்றான் மாது.

"நியாயம்தானே!" என்றான் ரகு.

கவிதாவுக்கு அவமானமாக இருந்தது. இப்படியா போட்டு உடைப்பது!

"இந்தாருங்கோ...!" என்றாள்.

"என்னமா.....? சொல்லேன்.....!"

"இப்படி வாங்கோ!"

"அட, என்னமா ரகசியம்? ரகுதானே இருக்கிறான், சும்மா சொல்லேன்....."

"வாங்கோன்னா!"

ரகு இச்சமயம் ஒரு சிரிப்பை மலர்த்தி, "போய்க் கேட்டு வாடா, மாது!" என்று சொல்லவே, உள்ளே போனான்.

"விளக்கை வேண்டுமானாலும் போட்டுக் கொண்டு பேசுங்கள். வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. ஆனால் பேசுவதை யார் காதிலும் விழாதபடி பேசுங்கள். இது ஸ்டோர். பத்துக் குடித்தனக்காரா பொழங்கற இடம்!" என்றாள் கவிதா.

"சரி, சரி. இதைச் சொல்லத்தான் கூப்பிட்டாயோ? எனக்குத் தெரியாதாக்கும்!" என்று பொரிந்தான் மாது.

"உங்களுக்கென்ன? நான் அல்லவா கேட்கிறவர்களுக்கும் பதில் சொல்ல வேண்டியிருக்கு!"

"இனிமேல் என்னிடம் வந்து கேட்கச் சொல்லு. மனசை விட்டுப் பேசக்கூடவா சுதந்திரம் இல்லே!"

ஆனால் ரகுவின் ஏற்பாடோ என்னவோ, அன்று முழுதும் சுருதி அடங்கியே இருந்தது பேச்சில். பரம ரகசியமாக இரண்டு பேரும் கிசுகிசுத்தார்கள்.

"தலையை வலிக்கிறது எனக்கு" என்றாள் சுசீலா மறுநாள்.

"வழக்கமாக வருகிற விருந்தாளி தானே! தலையைச் சுற்றி மூலையிலே வை. சரியாகி விடும்..." என்றான்.

"அந்தக் காரியத்தை நீங்களே செய்து விடுங்கள். உபயோகமாக இருக்கும். என்னால் ஏன் உங்களுக்குச் சிரமம்?" என்று சுசீலா அழத் தொடங்கினாள்.

"அழாதே. மருந்து வாங்கிக் கொண்டு வருகிறேன்!" என்று புறப்பட்டான்.

ஆனால் அந்த மருந்தா அவளுக்கு வேண்டும்! இது சரீரத்தைப் பிடித்த நோய் அல்லவே!

கசமுசவும், சுருதிக் குறைப்பும் அன்றோடு சரி. மறுநாளே உச்ச ஸ்தாயியில் உரையாடல் கல கலக்க ஆரம்பித்து விட்டது. ஆனால் விளக்கு அணைக்கப் பட்டு விட்டது. முன்னேற்பாடாக ரகு ஒரு டார்ச் விளக்கு கொண்டு வந்திருந்தான். பம்பாயில் வேலை பார்த்தபோது யாரோ ஒரு பஞ்சாபிக்காரி ரகுவைப் பார்த்துக் காதலிக்கத் தொடங்கிவிட்டாளாம். அந்தச் சம்பவத்தை அன்று பிரவசனம் செய்தான் ரகு. ஒருவேளை பஞ்சாபிக்காரிக்குக் கண் பார்வை மங்கலாக இருந்திருக்குமோ என்னவோ?

பல்லைக் கடித்தவாறே தலையணையில் புழுங்கினாள் சுசீலா.

இருட்டில் தட்டித் தடவிக்கொண்டு, அலமாரியில் இருந்த ஆறின பாலை மடக்கு மடக்கென்று குடித்துவிட்டு, பூனைபோல் வந்தான் மாது.

"நான் ஊருக்குப் போய்ப் பத்து நாட்கள் இருந்துவிட்டு வருகிறேன்" என்றாள் அவள் ஆத்திரத்தோடு.

"ரொம்ப சரி....!" என்றான் அவன்.

"என்ன ரொம்ப சரி.....!"

"நானும் ரகுவும் குற்றாலம் போவதாகத் திட்டம் போட்டிருக்கோம். இந்தச் சமயம் நீ ஊருக்குப் போவதானால் போய் வந்து விடலாம்."

"என்னை அனுப்பி விட்டுக் கும்மாளம் போடலாம் என்று பார்க்கிறீர்களா?"

மாது வியப்புடன் அவளைப் பார்த்தான். "உனக்கு ஏன் வர வர இப்படிக் கற்பனை போகிறது, சுசி?" என்றான்.

"பின்னே என்ன, உங்களுக்குப் பெண்டாட்டி, குழந்தை குட்டிகளைப் பற்றி அக்கறை இல்லே. அந்த நண்பர் தான் பெரிசு! ஏனென்றால் அவரை ஒரு பஞ்சாபிக்காரியே ஆசைப்பட்டாள்!"

"கழுதை, ஒட்டுக் கேட்டாயா?"

"ஒட்டுக் கேட்கணுமோ? காதில் வந்து அறைகிற மாதிரி பேசுறரே!"

மாது சிரித்தான். உரக்கச் சிரித்தான்.

"போதும். யார் காதிலாவது விழப் போகிறது...?"

சிரிப்பை நிறுத்திவிட்டு மாது கேட்டானே கேள்வி! "ஆமாம், எப்போது நீ ஊருக்குப் புறப்படப் போகிறாய்?"

"நான் போகப் போவதில்லே!"

"ஏன்?"

"நானும் குற்றாலம் வருகிறேன் உங்களோடு."

"அது நடக்காது."

"ஏன் நடக்காது?"

மாதுவின் பேச்சு வன்மை, சமாதானத் திட்டங்கள், எதுவும் பலிக்கவில்லை அவளிடம். கடைசியில் தலைவலி மாதுவைத் தொற்றிக் கொண்டது!

"டேய், உம்மணாமூஞ்சி! ஏன் இன்றைக்குப் பேயறைந்த மாதிரி இருக்கிறாய்?" என்று கேட்டபடியே ரகு வந்தான் மறு நாள்.

"பேய் அறைந்தால் பரவாயில்லே. மனைவி அறைந்து விட்டாள்..." என்று நடந்தவற்றைப் பிட்டுப் பிட்டு வைத்தான் மாது நண்பன் முன்.

மௌனமாகவே இருந்தான் நெடு நேரம். பிறகு சொன்னான்: "மாது, இனிமேல் நானும் நீயும் 'ஓவரா' எதைப் பத்தியும் பேசக் கூடாது. கொஞ்சம் 'கண்ட்ரோல்' தேவை நமக்குள். என்னால் உன் குடும்ப சௌஜன்யம் கெட்டுப் போகக் கூடாது, பார்!" என்றான்.

"போடா, முட்டாள்! சுசீலா அப்படி நினைக்கிறவளில்லே. யாரோ அவள் மனசைக் கலைத்திருக்கிறார்கள்"

"எப்படியோ மனசு கலைந்துவிட்டதில்லையா ?"

"ஊஹூம்..... அவள் ஓர் அசடு. அவ்வளவுதான்."

"கெக்கெக்கே!"

அவள் அசடு என்பதில் இருவருக்கும் பரம சந்தோஷம். அசடுதான். அவர்களுடைய போக்கை இவ்வளவு நாட்கள் அனுமதித்ததே அசடு! சுசீலா கதவைப் படேரென்று சாத்தினாள். ஒரு பாட்டம் அழ வேண்டும் போலிருந்தது. தலைவலி வேறு 'விண்விண்' என்று தெறித்தது வலப்புறத்தில். போதாத குறைக்குப் பாலுப் பயல் சிணுங்கி அழ ஆரம்பித்து விட்டான். தூளியில் மாதுக் குட்டி ஒரு துள்ளுத் துள்ளி வீல் என்று கத்தினாள்.

"எல்லாம் பிசாசுகள்.... எனக்கு வாய்த்தது எல்லாமே பிசாசுகள்தான்!"

இந்த உருமலைத் தங்களின் மானுஷீகத்துக்கு ஏற்பட்ட அவமதிப்பாக உரத்த குரலில் பாலுவும் மாதுவும் மறுப்புத் தெரிவிக்கவே, சுசீலா ஆளுக்கு ஓர் அறை அறைந்து கதவுக்கு வெளியே தள்ளினாள்.

மாது ஓடிப் போய்க் குழந்தைகளைத் தூக்கினான்.

"நான் வருகிறேன்டா, மாது...." என்று எழுந்தான் ரகு.

"மணி பத்துத்தானடா ஆகிறது!"

"பரவாயில்லே. எனக்கு மனசு சரியாயில்லே.....!"

"அடபோடா முட்டாள். சுசீலாவுக்குத் தலைவலியடா. நான்தான் சொன்னேனே அவள் ஒரு அசடு. அவள் வார்த்தையைப் பெரிதுபடுத்தக் கூடாது."

ரகு நிற்கவில்லை. புறப்பட்டே விட்டான். உள்ளே வந்த மாது குதித்த குதியைப் பார்க்க வேண்டுமே!

"ஆமாம், நான் எப்படிப் போனால் என்ன? நண்பரின் மனசுதான் பெரிசு உங்களுக்கு!" என்றாள் சுசீலா.

"அதுக்குச் சொல்லலேடி. என்ன தான் இருந்தாலும், இப்படிப் பேய் அறைகிற மாதிரி குழந்தைகளை....."

"நான் பேய்தான். நன்றாகச் சொல்லுங்கோ. இந்த ஸ்டோர் முழுதும் காதிலே விழுறாப்போல் சொல்லுங்கோ."

"சரி. இப்போ என்ன செய்யச் சொல்கிறாய் நீ?"

"அது உங்களுக்கே தெரியும்."

"நாளைக்கு ரகு வரட்டும். இனிமேல் இந்த மாதிரி அரட்டை யெல்லாம் வேண்டாம்னு சொல்லிவிடுகிறேன் சரிதானே?"

"எனக்காக நீங்கள் ஏன், பாவம், அவருடன் விரோதித்துக் கொள்கிறீர்கள்?"

"அது என் பொறுப்பு. அசடு மாதிரி ஏதாவது சொல்லாதே."

'அப்பாடா!' என்று பெருமூச்சு விட்டாள் சுசீலா. அவன் நல்லவன் தான். அந்தப் பாழாய்ப் போன நண்பன் வந்த பிறகுதானே எல்லாமே மாறிப் போயிருந்தது!

**ம**று நாள் ரகு வரவில்லை.

அதற்கடுத்த நாளும் ரகு வரவில்லை.

மாது பத்து மணிக்கு மேல் இருப்புக் கொள்ளாமல் துண்டைப் போட்டுக் கொண்டு கிளம்பி விட்டான்.

ஒன்றுமில்லை. தந்தி வந்ததாம் ஊரிலிருந்து. தங்கச்சிக்குப் பிரசவமல்லவா? பெண் குழந்தை பிறந்திருக்கிறது. ரகு போய் நிற்கவும் குழந்தை 'குவா' என்று குரல் கொடுக்கவும் சரியாக இருந்ததாம். குழந்தை மகாலட்சுமி மாதிரி இருக்கிறாளாம். என்ன பெயர் வைக்கலாம்? மாதுரி! நன்றாக இல்லே? நன்றாக இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, வேறு பெயர் வைப்பதாக உத்தேசமில்லை ரகுவுக்கு.

இருவரும் பதினொரு மணிக்கு வந்து சேர்ந்தார்கள்.

சுசீலாவுக்கு இரட்டைத் தலைவலி வந்து விட்டது. முதல் நாள் வராததும் சேர்ந்து!

ஆனால் நண்பர்களுக்குள் இப்போது புது ஏற்பாடு போலிருக்கிறது. இருவரும் எதிரும் புதிருமாக வீற்றிருப்பார்களே தவிர ஒரு வார்த்தை பேசமாட்டார்கள். அடிக்கடி தலையை மட்டும் ஆட்டிப் பிரமாதமாக ரசிப்பார்கள். பன்னிரண்டு ஆனதும் ரகு எழுந்திருப்பான். மாது ஒரு முறுவலுடன் விடை கொடுப்பான்.

ஒரு வாரம் இதே போல் நீண்டது.

சுசீலாவால் பொறுக்க முடியவில்லை.

"என்னைப் பழி வாங்கத்தானே இந்த மௌன நாடகம்? நான் ஊருக்குப் போகிறேன்" என்றாள்.

அவன் சொன்னான்: "சுசி, உனக்காக நாங்கள் பேச்சை நிறுத்திக் கொள்ளவில்லை. மனசிலே தோணித்து. நிறுத்தி விட்டோம். இதோ பாரு, பேசினால்தான் மனசு வெளிப்படுமா?"

சுசீலா அவனை வியப்புடன் பார்த்தாள். மாது சிரித்தான்.

இதெல்லாம் நல்லதுக்கில்லே. எந்த விபரீதத்துக்கு முன்னோடியோ! இதைப் போல் எங்காவது கண்டதுண்டா, கேட்டதுண்டா! பூதம் காத்த மாதிரி கூடத்தில் பன்னிரண்டு மணி வரையில் மௌன சம்பாஷணை அழகுதான்!

அவள் பயந்தபடியே ஆயிற்று.

பாலுப் பயலுக்கு அனலாகக் கொதித்தது உடம்பு. மாதுக்குட்டி பிழிந்த நார் போலக் கிடந்தாள். குழந்தைகள் இருவருமே இப்படிப் படுத்து விட்டதும் சுசீலா பதைத்தாள். மாது டாக்டரை அழைத்து வர ஓடினான்.

வாசற்புறம் 'சரக் சரக்' என்று செருப்பொலி கேட்டது. ரகு வந்தான்!

"குழந்தைகளுக்கு உடம்பு சரியில்லை. அவர் டாக்டரை அழைத்து வரப் போயிருக்கிறார்" என்றாள் சுசீலா.

அவன் நின்றான். குழந்தையையே பார்த்தான். பிறகு அருகில் வந்து நாடி பிடித்துப் பார்த்தான்.

"என்ன காய்ச்சலாக இருக்கும்? இப்போது ஊரெல்லாம் டைபாயிட் பரவலாக இருக்கிறதாம். அதுதானோ?"

அவன் தலையை ஆட்டினான் பலமாக, 'ஊஹூம். அது இல்லை....' என்கிறாற் போல.

"எனக்கென்னவோ பயமாக இருக்கிறது. நேற்றைக்கெல்லாம் நன்றாக விளையாடிக் கொண்டிருந்த குழந்தைகளுக்குத் திடீரென்று இப்படி வந்து விட்டதே. கையும் ஓடவில்லை, காலும் ஓடவில்லை எனக்கு..." ஷீலா விம்மினாள்.

பக்கத்து வீட்டுக்காரர் வந்து எட்டிப் பார்த்தார்.

"அவர் போய் அரைமணி இருக்குமே! இன்னும் வரவில்லையாம்மா?" என்று கேட்டார் அவர்.

ராகு எழுந்தான். "நான் போய்ப் பார்த்துவிட்டு வருகிறேன்" என்றவாறே செருப்பைக்கூட மாட்டிக் கொள்ளாமல் ஓடினான்.

சற்று நேரத்துக்கெல்லாம் டாக்டருடன் மாதுவும் ராகுவும் வந்தார்கள். 'ஒன்றும் பயப்பட வேண்டியதில்லை. இந்த மருந்துகளை வாங்கி வாருங்கள். இஞ்செக்ஷன் போடுகிறேன்' என்றார் டாக்டர். ராகு ஓடினான் கடைக்கு. நான்கு மணி நேரத்துக்கு ஒரு மாத்திரையும், அவுன்ஸ் மருந்தும் தர வேண்டுமாம். டாக்டர் விளக்கமாகச் சொல்லிவிட்டு மீண்டும் காலையில் வருவதாக உறுதி கூறி விட்டுப் போனார்.

ராகு மாலுக் குட்டியின் அருகிலும் மாது பாலுப் பயலின் அருகிலும் அமர்ந்து மணி பிசகாமல் மருந்தும் மாத்திரையும் தந்து கொண்டிருந்தனர்.

இரவு நீண்டு கொண்டிருந்தது.

"நீ போய்ப் படுத்துக் கொள், ஷீ! உனக்கு ஒத்துக் கொள்ளாது. நாங்கள் நிசாசரர்கள்...." என்றான் மாது.

ராகு அதை ஆமோதிப்பதுபோலத் தலையை ஆட்டினான்.

"குழந்தை மிரள மிரள விழிக்கிறானே, ஏன்?" என்றாள் ஷீலா.

"உனக்கு ரொம்பப் பயந்த மனசு. டாக்டர்தான் பயப்பட வேண்டாம் என்றாரே!" என்றான் மாது.

ஷீலா சமையற்கட்டின் நிலைப்படியிலேயே தலை வைத்துப் படுத்தாள். தூக்கமும் இல்லாமல் விழிப்பும் இல்லாமல் ஓர் அயர்ச்சி.

உள்ளே நண்பர்களுக்குள் காரசாரமான விவாதம் நடப்பது கேட்டது.

"நீ ஒரு முட்டாள்டா, மாது.... டாக்டரை அழைத்து வரப் போனவன் அத்தனை நாழி என்ன செய்தாய்? ஏதடா அவள் வீட்டிலே தவிக்க—கையைப் பிசைந்து கொண்டு நிற்பாளே என்கிற ஞானம் வேண்டாம்?" என்றான் ராகு.

"நான் போன நேரத்தில் டாக்டருக்கு அவசர கேஸ்.... ஒரு நொடியில் வருகிறேன் என்று என்னைக் காக்க வைத்து விட்டார்" என்றான் மாது.

"எதற்கும் முன் யோசனை வேண்டும். டாக்டரை அழைத்து வர ஒரு நடை, மருந்து வாங்க இன்னொரு நடை என்று அலைய வேண்டுமோ?.... ஏன், ஒரு வண்டியை வைத்துக் குழந்தைகளை ஆஸ்பத்திரிக்கேகொண்டுபோயிருக்கலாமே?"

"தோணவில்லை, போயேன்......"

"உனக்கு எதுதான் தோணித்து? எப்போதும் மசமசப்பும், அவசரக் கோலமும்தான்..... அடிநாளிலிருந்தே"

"நீ மட்டும் என்னவாம்?" என்றான் மாது. "உன் தங்கை மீனு படுத்த படுக்கையாய்க் கிடந்தபோது, நானல்லவா வேலூருக்கு ஓடி டாக்டரை அழைத்து வந்தேன்! நீ நாட்டு வைத்தியர் சிங்காரத்தை அழைத்து வருகிறேன் என்று போனாய். போனாய் ஆளையே காணோமே!"

"கெக்கெக்கே!"

ஒரு பத்துநாள் மௌனத்துக்குப் பிறகு அந்தச் சிரிப்பொலி வீட்டுச் சுவர்களுக்குப் புது சக்தியை வழங்குவது போல் அல்லவா நீண்டது!

ஷீலாவுக்குப் பட்டென்று கனவு கலைந்தது. ஆமாம். கனவுதான் அதெல்லாம்!

உள்ளே சோகத்தை அடை காத்துக் கொண்டிருந்தார்கள் மாதுவும் ராகுவும். விடிவிளக்கின் மங்கிய ஒளியில் அவர்களைப் பார்க்கப் பார்க்கச் ஷீலாவுக்கு அழுகை வந்து விட்டது. தனிமையில் அந்தரங்கத்தில் மௌனமாகவும் வாய் விட்டும் மனசைப் பரிமாறிக் கொள்ளும் அவர்களுடைய நட்பின் உயர்ந்த பாங்கு அவளுடைய கண்களைக் கூசச் செய்தது. மௌன சம்பாஷணையில் மனசை உருக்கி, வேதனைக்கு வேலி கட்டி, வியாதிக்குக் காவல் காக்கும் அபூர்வ நண்பர்கள்!

"ஷீ, நீ தூங்கவில்லை?" என்றான் மாது.

"நீங்கள் இரண்டு பேரும் தூங்காமல் உட்கார்ந்திருக்கிறீர்களே....!" என்று அங்கலாய்த்தாள் ஷீலா.

"எங்களுக்கென்ன? இது வஜ்ர சரீரம். நீ பூஞ்சை.... புசுக்குனு தலைவலி வந்து விடும் உனக்கு. போய்ப் படு...."

"இனிமேல் எனக்குத் தலைவலி வராது."

மாது அவளை நிமிர்ந்து பார்த்தான். அவளோ வெற்றிலைச் செல்லத்தையும் கூஜா நீரையும் கூடத்துக்கு மாற்றினாள். நண்பர்கள் இடத்தைக் காலி செய்யலாம் இனிமேல். அவள் கண் விழித்துப் பார்த்துக் கொள்வாள்.

மௌனமாக இருவரும் கூடத்துச் சாய்வு நாற்காலிகளுக்குச் சென்று அமர்ந்தார்கள்.

மறு நாள் பாலுவும் மாலுவும் குதித்து விளையாடிக் கொண்டிருந்த போது ராகு வந்தான். வியாதி போன சுவடே தெரியவில்லை.

"டேய், பசங்களா! நேற்று அழ வைத்துவிட்டு இன்று கும்மாளமா போடுகிறீர்கள்? எங்கே உங்க அப்பா? டேய் மாது, நேற்று பிழியப் பிழிய அழுதாயேடா, இன்றைக்குப் பார்த்தாயா?" என்றான் ராகு.

"நீ மட்டும் அழாமல் இருந்தாயோ. ரொம்பத் தைரியசாலி மாதிரி என்னைச் சொல்ல வந்து விட்டாயே"

"கெக்கெக்கே!"

ஷீலாவுக்கு இப்போதெல்லாம் தலைவலி வருவதே இல்லை. மனச் சாளரத்தைத் திறந்து வைத்தபின் அங்கே யாருடைய கண் பார்வையோ காற்றின் தீட்சண்யமோ என்ன செய்து விடும்? உண்மையான அன்பு சிரிக்கிற நேரத்தில் சிரிக்கும், அழுகிற நேரத்தில் அழும். அக்கம்பக்கம் பார்க்க வேண்டிய அவசியம் அதற்கு இல்லையே!

# வைரஸ் ஆராய்ச்சி







டாக்டர் சி. ஆர். கிருஷ்ணமூர்த்தி

மருத்துவ விஞ்ஞானத் துறையில் ஆராய்ச்சி யாளர்களின் கவனத்தை இன்று பெருவாரி யாகக் கவரும் விஷயங்களாவன: புற்றுநோய் (Cancer) தோன்றுவதின் மர்மம், இருதய நோயின் தோற்றுவாய், வைரஸ் (Type Virus) நோய்களின் தன்மை. விஞ்ஞான ஆராய்ச்சிக்கெனச் செலவு செய்யப்படும் தொகையை அளவுகோலாக வைத்துப் பார்த்தால், வான்வெளி ஆராய்ச்சிக்கும், ராணுவத் துறை ஆராய்ச்சிக்கும் அடுத்தபடியாக, உயிர் மருத்துவ விஞ்ஞானத்தில் அடிப் படை ஆராய்ச்சிக்கே (fundamental research in bio medical sciences) அதிக அளவில் பணம் செலவிடப்படுகிறது. நீண்ட வாதப் பிரதிவாதங்களுக்குப் பிறகு ஜனாதிபதி ஜான்ஸன் இவ்வாண்டில் ஐக்கிய அமெரிக்க நாட்டில் அடிப்படை மருத்துவ ஆராய்ச்சிக்கு 2.5 மில்லியன் டாலர் (2500,000,000×7 ரூபாய்) செலவு செய்ய அமெரிக்க நாடாளு மன்றத்திடமிருந்து அனுமதி பெற்றுள்ளார்!

1940க்குமுன் விஷக் கிருமிகள் தோற்றுவிக்கும் காலரா (Cholera), தொண்டை அடைப்பான் (Diphtheria) டைபாய்டு, க்ஷயம், வயிற்றுப்போக்கு போன்ற வியாதிகள் மனிதனின் முக்கிய எதிரிகளாக இருந்தன.

ஸல்பா—மருந்துகளும், பெனிஸிலின், ஸ்ட்ரெப்டோமைசின், க்ளோரோமைஸிடின், டெராமைஸின் போன்ற ஆன்டிபயோடிக் மருந்துகளும் கண்டுபிடிக்கப்பட்டதிலிருந்து கிருமி வியாதிகளை அடக்கி அடியோடு அழித்துவிட வழி ஏற்பட்டது. நிமோனியா, காசம் போன்ற கொடும் வியாதிகள் தற்போது 1940க்கு முன் அளவு அச்சத்தை விளைவிப்பதில்லை. முன்னெச்சரிக்கையாகப் பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொண்டால் காசம், தொழுநோய் போன்ற கிருமி ரோகங்களை அழித்துவிட முடியும் என்ற நம்பிக்கை பிறந்துள்ளது.

ஆனால் வைரஸ் எனும் சிறிதினும் சிறிய உயிரினங்களால் தோன்றும் வைசூரி, மணல்வாரி, வெறி நாய்க்கடி (Rabies) பொன்னுக்கு வீங்கி (Mumps) மஞ்சக் காமாலை (Viral Hepatitis) இன்ப்ளுவன்ஸா (Influenza) மூளை அழற்சி (Encephalitis) இளம்பிள்ளை வாதம் (Polio) போன்ற வியாதிகள் நம்மிடையே இன்னும் தலைவிரித்தாடிப் பெரும் உயிர்ச் சேதத்தையும் உடல் தொல்லைகளையும் விளைவிக்கின்றன. மனிதனை மட்டுமல்ல, நமக்குதவும் கால்நடைப் பிராணிகளான ஆடு, மாடு,



குதிரை, நாய் கோழி] போன்ற மிருகங்களையும் பல வைரஸ் வியாதிகள் பாதிக்கின்றன. நியு காஸில் வைரஸ் (New Castle Virus) ராணிகெட் வைரஸ் (Ranikhet Virus) போன்றவை கோழிகளைத் தாக்கிப் பண்ணைகளில் பெருத்த நஷ்டத்தை உண்டாக்குகின்றன. இதே போல கோமாரி வைரஸ் (Foot and Mouth Virus) பசு மாடுகளைத் தாக்கி நாசம் செய்வதும் நம் நாட்டில் சகஜம்.

வைரஸ் நோய்கள் தாவர இனங்களையும் தாக்கவல்லவை. வைரஸ் எனும் சிறு ஜீவராசியொன்றிருப்பதை விஞ்ஞானிகள் கண்டுபிடித்ததே புகையிலைச் செடியிலிருந்துதான். புகையிலையை இந்த வைரஸ் தாக்கும் போது இலையில் சில மாற்றங்களையும் வர்ணம் கரைவதையும் காணலாம். இந்த வியாதியை புகையிலை மொஸேய்க் வியாதி (Tobacco Mosaic Disease) என்பர். இவ்வாறு மொஸேய்க் வியாதியுடைய புகையிலைகளிலிருந்து பெருமானகமொன்றைப் பளிங்குப் படிகங்களாக (Crystals) பிரித்தெடுக்கலாம். இந்தப் பெரும் மானகத்தை மீண்டும் நன்ருக வளர்ந்திருக்கும் புகையிலையில் தேய்த்தால் சிறிது காலத்துக்குள் மொஸேய்க் வியாதி தோன்றுகிறது.

இந்த வியாதியினால் புகையிலையின் தரம் குறைந்து பயிர் அடியோடு நாசமாகிறது. இதே போல, வாழை, வெள்ளரி, வெற்றிலை, தக்காளி போன்ற காய்கறிப் பயிர்களிலும் வைரஸ் நோய் தோன்றலாம். இம்மாதிரி தோன்றும் வியாதியைத் தடுப்பதற்குத் தற்போது மார்க்கமேது மில்லை; வியாதிக்குள்ளான பயிரை வேரோடு பிடுங்கி எறிய வேண்டியதுதான்.

### வைரஸின் தன்மை

**வை**ரஸின் தன்மை எத்தகையது? உயிர் செல்லை அது எவ்வாறு தாக்கிச் சுயநலத்துக்குப் பயனுக்கிக் கொள்கிறது? பாக்டீரியா (Bacteria) போன்ற ஏனைய கிருமிகளைப் போல வைரஸும் இனப் பெருக்கம் செய்து கொள்ளும் சக்தியைப் பெற்றிருக்கிறதா? வைரஸை ஓர் உயிரினமாகக் கருதலாமா? வைரஸ் ஏன் குறித்த சில உயிரணுக்களை மட்டும் தாக்குகின்றது? வைரஸ் நோய்



வராமல் உயிர் உடலையும் பயிர்களையும் காப்பாற்றிக் கொள்ள வழி ஏதாகிலும் உண்டா? இந்தக் கேள்விகள் தாம் இன்று நடத்தப்படும் அடிப்படை உயிர் நூலாராய்ச்சியின் முக்கிய பிரச்னைகள்.

வெறி நாய்க் கடியால் ரேபீஸ் வராமல் தடுப்பதற்கு ஊசி போடுதலையும் (Vaccination) ஸீரம் சிகிச்சையையும் லூயி பாஸ்ச்சர் ஏறக்குறைய நூறு ஆண்டுகளுக்குமுன் கண்டுபிடித்தார். இதைப் பின்பற்றி, குழந்தைகளைப் பாதிக்கும் இளம்பிள்ளை வாதம் (போலியோ) எனும் கொடிய வியாதியைத் தடுப்பதற்கு இன்று வாக்ஸின் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. நம் நாட்டில் 1970க்குள் வைசூரியின் கொடிய ஆட்சியை ஒழிப்பதற்கென அகில இந்திய அம்மை குத்தும் திட்டம் இரண்டு வருஷ காலமாக நடைமுறையில் இருந்து வருகிறது. ஆனால் வேகமாகப் பரவும் மஞ்சக்காமாலை, மூளை அழற்சி போன்ற வைரஸ் வியாதிகளுக்கு எதிராக வாக்ஸின் தயாராகவில்லை. இன்னும் எண்ணற்ற வியாதிகள் வைரஸால் தோன்றுபவை.

தற்போது வைரஸ் விளைவிக்கும் வியாதிகளை ஒழிக்க வாக்ஸின் தடுப்பு முறை ஒன்றுதான் நம்மிடமிருக்கும் ஆயுதம். இந்த முறை வைசூரி போன்ற சில வியாதிகள் வராமல் தடுக்க உதவுமெனினும், மற்றும் பல வைரஸ் வியாதிகளைத் தடுக்க இது நமக்குப் பயன்பட வில்லை.

தடுப்பு ஊசிகள் ஒருபுறமிருக்க, மற்ற நோய்களுக்கு மருந்து கொடுத்துக் குணமாக்குவது போல வைரஸ் நோய் கண்ட நோயாளிக்கும் சிகிச்சை செய்து குணமாக்குவது என்ற ஒரு லட்சியத்தை அடைய ஆராய்ச்சியாளர் பல்லாண்டுகளாக முயன்று வருகின்றனர். இரண்டு வருஷங்களுக்குமுன் சென்னை தொற்று நோய் ஆஸ்பத்திரியில் பிரிட்டிஷ் மருத்துவ கௌன்சிலும் இந்தியன் மருத்துவ ஆராய்ச்சிக் கௌன்சிலும் சேர்ந்து ஆங்கிலக் கம்பெனியொன்று தயாரித்த செயற்கை மருந்து ஒன்றைப் பெரிய அம்மை போட்ட நோயாளிகளுக்கு அளித்துப் பரிசீலனை செய்தன. வைரஸ் ஆராய்ச்சியின் வரலாற்றிலேயே அப்போதுதான் முதன் முதலாகச் சிகிச்சை முறை கையாளப்பட்டது எனலாம். சில நோயாளிகளுக்குக் கண் பார்வை பாதிக்கப் படாமல் தடுக்க இந்த மருந்தினால் இயன்றதெனினும், எதிர்பார்த்த அளவுக்கு வெற்றி கிட்டவில்லை. ஆனால் இந்தப் பரிட்சையின் விளைவாக வைரஸ் நோய்களைச் சிகிச்சை முறையில் குணப்படுத்தலாம் என்ற நம்பிக்கை ஊர்ஜிதமாயிற்று.

## வைரஸைப் பற்றிய ஆராய்ச்சி

இன்று நம்மிடமுள்ள அடிப்படை உயிர்நூல் விஞ்ஞான அறிவை மாத்திரம் வைத்துக் கொண்டு வைரஸ் நோய்களுக்குச் சிகிச்சை முறை காண்பது முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைகொள்வதுபோலத் தான். இதற்குக் காரணம் வைரஸைப் பற்றி அடிப்படையான உண்மைகளை நாம் இன்னமும் முழுமையாகத் தெரிந்து கொள்ளவில்லை என்பதுதான். வைரஸ் ஆராய்ச்சிக்கு, அடிப்படை உயிர்நூல் ஆராய்ச்சி இன்றியமையாதது.

உயிர் அணுக்களை (Cell) தாக்கி உட்கருவின் வளர் சக்திகளையும் சிருஷ்டிப்புத் திறனையும் தன் வளர்ச்சிக்காகவும், இனப் பெருக்கத்துக்காகவும் பயனாக்கிக் கொள்ளும் ஓர் ஒட்டுண்ணியாக (Parasite) வைரஸை நாம் கருதலாம். ஆனால் மலேரியா போன்ற ஏனைய ஒட்டுண்ணிகளுக்கும் வைரஸ்களுக்கும் இடையே முக்கியமான வேற்றுமையொன்று உண்டு. விருந்தளிக்கும் உயிரணுவின் ஒத்துழைப்பில்லாமல் வைரஸ் வளருவதுமில்லை; இனத்தைப் பெருக்கிக் கொள்வதுமில்லை. ரஸாயன முறையில் பிரித்த வைரஸை எவ்வளவு நாட்கள் வேண்டுமானாலும் தாக்கும் சக்தி குன்றாமல் வைத்திருக்கலாம். அந்த நிலையில் அது அசைவின்றிப் பரம சாதுவாக உயிரற்ற ஒரு ஜடப் பொருளாகவே இருந்து வரும். ஆனால் விருந்தளிக்கும் உயிரணுக்குள் (Host Cell) பிரவேசம் செய்தவுடன் வளர்ந்து இன்னல்களை விளைவித்து, தன் இனத்தையும் பெருக்கிக் கொள்கிறது. உயிரினத்தின் சுபாவ குணங்களைப் பெற்று விடுகிறது. ஆதலால் வைரஸை ஜடப் பொருளுமல்ல, உயிர்ப் பொருளுமல்ல, விந்தைமிக்க நடுநிலையில் இருக்கும் பொருளாகவே கருத வேண்டும்.

## வைரஸின் வடிவம்

வைரஸ்களை நோயுற்று மடியும் உயிரணுக்களிலிருந்து ரசாயனக் கருவிகளைக் கொண்டு சுத்தம் செய்து பிரித்து எடுத்தபின் கோழி முட்டையிலோ செயற்கையாக வளர்க்கப்படும் திசுக்களிலோ (Tissue Culture) விட்டு இனப் பெருக்கம் செய்து பிறகு மீண்டும் சுத்தம் செய்து பரிட்சைகளுக்கெனத் தயார் செய்கின்றனர் ஆராய்ச்சியாளர்கள். பாக்டீரியா போன்ற சிறு கிருமிகள் கல்நார் (Asbestos) வடிகட்டி வழியாக வடிவதில்லை. வைரஸ் மிகவும் சிறிய வடிவம் கொண்டிருப்பதால் வடிகட்டி வழியாக எளிதாகப் போகும் தன்மையுடையது. வைரஸின் நீளம், ஒரு மில்லி மீட்டர் நீளத்தைப் பத்து லட்சம் பாகமாகப் பிரித்தால் கிடைக்கும் ஒரு பிரிவின் நீளம் கொண்டது. இந்தச் சிறு வடிவத்தைச் சாதாரண மைக்ரோஸ்கோப் வழியாகக் காண முடியாது. எலக்ட்ரான் மைக்ராஸ்கோப்பின் (Electron Microscope) துணை கொண்டு இம்மாதிரி ஒரு வைரஸைப் பார்க்கும்போது அது நாலு பக்கமும் முத்துக்களைப் பதிய வைத்த ஒரு கம்பல் போலக் காட்சியளிக்கும். முன்னர் குறிப்பிட்ட புகையிலை மொஸெய்க் வைரஸின் வடிவம் ஏறக்குறைய ஒரு வாழைக் குலையைப் போலிருக்கும்.

வைரஸ்களைப் பொதுவாக இரண்டு ஜாதிகளாகப் பிரிக்கலாம்: 1. ஆர். என். ஏ. (R. N. A) வகுப்பு, 2. டி. என். ஏ. (T.N.A.) வகுப்பு.

டி. என். ஏ. ஃபாஜ் (T. N. A. Phage) ஒரு பாக்டீரியா உயிரணுவைத் தாக்கும்போது, பாக்டீரியா உடன் மடிவதில்லை. அதைச் சிறிது நேரம் உயிர் வாழ வைத்து, பாக்டீரியா அளிக்கும் உணவை உட்கொண்டு, பாக்டீரியாவின் கருவிகளைக் கொண்டே தன் இனப் பெருக்கத்துக்கு வேண்டிய பொருள்களை வைரஸ் சிருஷ்டி செய்து கொள்கிறது. விருந்தளிக்கும் வீட்டின் சொந்தக்காரரைச் சில நாட்கள் வாழவிட்டு அவர் சொத்தை அபகரித்துத் தனக்கு அடைக்கலம் தந்தவரையே கொன்று உயிர் வாழும் ஒரு விசித்திர விருந்தாளியின் வாழ்க்கைதான் வைரஸின் வாழ்வு.

## ஊக்கம் தரவேண்டும்

உயிரணுவில் நிகழும் எண்ணற்ற சம்பவங்களைக் குறித்து ஆராய்ச்சி மும்முரமாக நடந்து வருகிறது. ஒரு உயிரணு செயலாற்றும் சூட்சமத்தைக் கண்டு விட்டால் உயிரணுவைத் தாக்கும் வைரஸ் நோய்களின் மர்மத்தையும், ஏன், புற்று நோயின் மர்மத்தையும் கூடக் கண்டுபிடித்து வெற்றி கொள்ளலாம். விண்வெளிக்கு மனிதனை அனுப்பிச் சந்திர மண்டலத்தைக் காணும் முயற்சியில் செலவழிக்கப்படும் பணத்தில் லட்சத்தில் ஒரு பாகமாவது உயிரணு ஆராய்ச்சிக்கென ஒதுக்கப்பட்டு அவ்வாராய்ச்சியில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு ஆக்கமும் ஊக்கமும் அளிக்க வேண்டும்.



**உங்கள் பொறுப்புக்கள் பெருகப் பெருக சேமிக்கவேண்டிய உங்கள் தேவையும் பெருகும்**

எதிர்காலம் நிச்சயமற்றது. பொறுப்புகளைத் தாங்கி வருவது அவற்றுக்கு ஈடுகொடுக்கத் தயாராய் இருக்கிறீர்களா நீங்கள்? இன்றே சேமிக்கத் தொடங்குங்கள். நாளையத் தேவைகளை நிறைவுசெய்துகொள்ள, சவால் விடும் எதிர்காலத்தை எதிர்கொள்ள... சேமியுங்கள். சேமியுங்கள் ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவிலே. உங்களுக்கு உதவி புரியவே 2100 கிளைகளையும், மற்றும் துணைபங்களையும் உடையது ஸ்டேட் பாங்க்.

**சேவை புரிவதற்கே ஸ்டேட் பாங்க்**

S. 247C TM

சேவைக்கோர் அனுமன் என்றும் சிரஞ்சீவியாக வாழ்வான்
சேவையே எங்கள் மூச்சு! சீக்கிரம் சரக்கைச் சேர்ப்போம்!!



# ABT Parcel Service

ABT பார்சல் சர்வீஸ்

கோயமுத்தூர் - 18

Grams: "SANJEEVI" Telex: 262 Phone: 23366 (3 Lines)

# தென்னாட்டுக் கோபுரங்கள்

எம். கே. ரங்கஸ்வாமி ஐயங்கார்

நம் பாரத தேசத்தின் விசேஷ அம்சம் கன்யாகுமரியிலிருந்து இமயமலை வரை பரவியிருக்கும் புனிதமான க்ஷேத்திரங்களும், ஆலயங்களுமே. வடநாட்டிலிருக்கும் பத்ரிநாத், ஹரித்வாரம், ரிஷிகேசம், புரி, துவாரகை, பண்டரிபுரம் போன்ற க்ஷேத்திரங்களுக்குத் தென்னாட்டவர்களும், தென்னாட்டிலுள்ள ராமேச்வரம் மதுரை, ஸ்ரீரங்கம், காஞ்சீபுரம், திருப்பதி போன்ற க்ஷேத்திரங்களுக்கு வடநாட்டவர்களும் ஆயிரக்கணக்கில் வருவதை இன்றும் காண்கிறோம். நம் நாட்டில் பல பாஷைகள் பேசுபவர்களிடம் சகோதர மனப்பான்மையை உண்டாக்க நம் ஆலயங்கள் உதவுகின்றன என்று சொன்னால் அது மிகையாகாது.

நம் நாட்டில் உள்ள ஆலயங்களும் அவைகளில் காணப்படும் சிற்ப நுணுக்கங்களும் உலகப் பிரசித்திபெற்றவை. தென்னாட்டிலுள்ள ஆலயங்கள் அவைகளுடைய வானளாவிய கோபுரங்களால் ஒரு தனிச் சிறப்பை அடைந்திருக்கின்றன. இக்கோபுரங்கள் ஜனங்களுக்குக் கடவுளை ஞாபகப்படுத்திக் கொண்டிருக்கும் வண்ணம் பல மைல்களுக்கு அப்பாலிருந்தும் தெரியும்படி உயரமாகக் கட்டப்பட்டிருக்கின்றன. கோபுரம் கண்ணில் தென்பட்டவுடனேயே கைகூப்பிக் கடவுளை நினைக்கும் வழக்கத்தை இன்றும் நடைமுறையில் காண்கிறோம்.

கோபுரங்களைத் தரிசிப்பதே ஈசுவரனை வணங்கும் பலனைத் தரும் என்பது நம்பிக்கை. ஆரம்ப காலத்தில் பக்தர்கள் கர்ப்பக் கிருகத்தின் மேலிருக்கும் விமானத்தைத் தரிசித்து இப்புண்ணியத்தை அடைந்தனர். பிறகு கர்ப்பகிருகத்துக்கு வழிகாட்டிக் கொண்டு ஆலயத்தை பத்திரமாகக் காத்து வரும் பிரகாரத்தின் மீதுள்ள கோபுரத்துக்கு இந்த மகிமை ஏற்பட்டு விட்டது.

கோபுரம் என்ற பதமே 'குப்' (காப்பாற்று) என்ற பொருளுள்ள வடமொழிச் சொல்லிலிருந்து வந்தது. கோவிலைக் காப்பாற்றுவதற்குக் கோபுர வாசல்களில் பெரிய கதவுகளை அமைத்தார்கள்.

தென்னாட்டுச் சிற்பங்களைப் பல்லவ, சோழ, பாண்டிய விஜயநகர பாணிகளாகப் பிரித்து எழுதியிருக்கிறார்கள். அதில் கோபுர அமைப்புக்கள் பாண்டியர் காலத்தில் ஏற்பட்டு விஸ்தரிக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. பல்லவ சோழ காலங்களிலும் ஆலயங்களுக்குக் கர்ப்பக் கிருகத்தைச் சுற்றிப் பிரகாரமும் பிராகார வாசலும் இருந்தன. அவைகள் முதலில் அதிக உயரமில்லாத அமைப்பிலிருந்தன. விசுவகர்மா வாஸ்து சாஸ்திரத்திலேயே கோவில் வாசலில் அமைக்கப்படும் கோபுரங்கள் இரண்டு அடுக்குகளாகவும் (த்விதளம்) மூன்று அடுக்குகளாகவும் (த்ரிதளம்) ஒன்பது அடுக்குகள்

திருவண்ணாமலை அருணாசலேச்வரர் ஆலய கோபுரங்களின் 'பறவை நோக்கு'





வரை எப்படிக் கெட்டியாகவும் அழகாகவும் அமைக்கப்படலாம் என்று விவரித்திருக்கிறது.

பல்லவ, சோழ காலத்தில் கர்ப்ப கிருகத்தின் பெருமை குன்றக் கூடாதெனக் கருதி, அதன் மேல் உள்ள விமானத்தைவிட, கோபுர வாயில் அமைப்புகளைச் சிறியதாகக் கட்டினார்கள். ராஜ ராஜ சோழன் அமைத்த தஞ்சை பெரிய கோயிலில் கர்ப்பகிருக விமானம் இருநூறு அடி உயரமானது. ஆனால் அதன் வெளிக் கோபுரம் ஐம்பது அடி உயரத்துக்குத்தான் கட்டப் பட்டிருப்பதைக் காணலாம். ஆனால் தஞ்சை பெரிய கோயில் பாணியிலேயே அமைக்கப்பட்ட கங்கை கொண்ட சோழபுரம், தாராசுரம், திரிபுவனம் கோயில்களில் படிப் படியாக முன் வாயில் கோபுரம் பெரிதாக அமைக்கப்பட்டுள்ளன.

பாண்டியர் காலத்திலேயே கோபுரம் ஏற்பட்டதாகப் பொதுவில் சொன்னாலும் சோழ மன்னர்களும், கோபுரப் பணிகளில் ஈடு



ஸ்ரீரங்கம் ரங்கநாதர் ஆலயத்தின் முடிவு பெறாத ராஜ கோபுரத் தூண்கள்



கபாலி கோயில் கோபுரமும் மயிலாகச் சிவனுக்குப் பூஜை செய்த பார்வதி அம்மன் கோயிலும்



சிதம்பரம் நடராஜப் பெருமான் கிழக் கோபுரம். இதன் அடி வரிசையில் அற்புதமான சிற்பச் செல்வங்களைக் காணலாம்.

பட்டிருந்தார்கள் என்பதற்குச் சிதம்பரம் நடராஜர் கோயிலில் ஏழு அடுக்குகளுடன் மிகவும் உன்னதமாகவும் அழகிய சிற்பங்களுடன் சோழ மன்னன் குலோத்துங்கனால் கட்டப்பட்ட கிழக்குக் கோபுரம் சான்று. இந்தக் கோபுரத்தில் பரத நாட்டிய அபிநயங்களை அடுக்கடுக்காக அழகாகச் செதுக்கியிருப்பதைக் காணலாம்.

இதே ஆலயத்தில் அமைந்திருக்கும் மேற்குக் கோபுரம் சுந்தர பாண்டியனால் கட்டப்பட்டது. வடக்கு வாசலில் மட்டும் கோபுரம் இல்லாமல் இருந்தது. விஜயநகர மன்னர் கிருஷ்ண தேவராயர் கலிங்க தேசத்தை ஜெயித்து நடராஜரைத் தரிசிக்க வந்தபொழுது இக்குறையைநீக்கி ஓர் உன்னத கோபுரத்தை அழகிய சிற்பங்களுடன் வடக்கு வாசலில் கட்டுவித்தார். இவ்வாயிலில் அம்மன்னர் உருவச் சிலையைக் காணலாம்.

சாதாரணமாக ஒவ்வொரு கோபுர வாயிலிலும் நான்கு பெரிய கருங்கல் தூண்களைக் காணலாம். இத்தூண்களில் ஒரு கன்னிகையையும், வளைந்து வளைந்து போகும் கொடியையும் அவைகளில் சிற்பங்களையும் பொறித்திருப்பார்கள். இவைகளை அடுத்துக் கனமான கதவுகளை வைத்திருக்கிறார்கள். சில இடங்களில் இக்கதவுகளிலும் அழகிய சிற்பங்களைக் காணலாம்.

கோபுர அமைப்பு அஸ்திவாரம் முதல் கோபுர வாயிலின் முடியும் தளம் வரை, கருங்கல்லாலும், அதன் மேல் மாடம் மாடமாக வாசல்களுடன் செங்கல், சுண்ணாம்பு, சுதையாலும் ஆனது. மேல் பாகத்தில் சில கோபுரங்களில் கணக்கற்ற சிற்பங்கள் சுதையில் (Stucco) செய்து வர்ணமும் கொடுத்திருக்கிறார்கள். கோபுர உச்சியில் பல கலசங்களை அமைத்து, கோபுரத்தின் அழகுக்குச் சிகரமாகச் செய்திருக்கிறார்கள். மாடியில்லாமல் விமானத்தைப் போலவே குறுகிய அமைப்புடன் கோபுரம் கட்டுவது முண்டு. ஆனால் இது அபூர்வம். விஜயநகரம் என்ற ஹம்பியில் விருபாக்ஷர் கோயிற் முன்னுள்ள கோபுரம் இப்படிக் கட்டப்பட்டதேயாகும்.

சாதாரணமாகக் கோபுரம் முன் பக்கம், பின் பக்கம் அகலமாகவும் பக்க வாட்டில் அகலம் குறைந்தும் காணப்படும். ஆனால் நாலு பக்கமும் ஒரே அளவில் கட்டி மத்தியபாகத்தில் சிறிது வெளியே நீட்டிக் கொண்டிருக்கும்படி அமைப்பதுமுண்டு. இப்படி அமைத்த கோபுரங்கள் நான்கு பக்கங்களிலிருந்தும் ஒரே மாதிரி காட்சியளிக்கும். இந்த அமைப்பை ஸ்ரீரங்கம் கோயில் ரங்கவிலாசத்துக்குத் தெற்கேயுள்ள கோபுரத்தில் காணலாம். இதற்கு நான்குமுகன் வாசல் என்று பெயர்.

பாடல் பெற்ற பழைய கோவில்களுக்கு முன்னமேயே கோபுரம் இருந்த போதிலும் பிற்காலத்தில் வந்த பல மன்னர்கள் தங்கள் பணியாக மற்ற வாசல்களிலும் புதிய கோபுரங்களைக் கட்டியமைத்தார்கள். ஸ்ரீரங்கத்தில் நான்கு வாசல்களிலும் மற்ற சில பிரகார வாசல்களிலும் கோபுரங்களிருந்தும், விஜயநகர மன்னர் அச்சுத தேவராயர் ஏழாவது பிராகார வாசல்களில் பெரிய அளவில் நான்கு கோபுரங்களைக் கட்ட ஆரம்பித்தார். அவைகளில் தெற்கு வாசலில் கருங்கல்லால் அமைக்கப்பட்ட பாகம் மட்டும் முடிவு பெற்று நிற்கிறது. மற்ற வாசல்களில் இந்தப் பிரம்மாண்டமான கோபுரங்கள், தளத்தின் மேல் சுமார் பத்தடி வரை கட்டப்பட்டு நின்றுவிட்டன. இப்படி முடிவு பெறாத கோபுரங்களில் கோபுர அமைப்புக்கு அவசியமான நான்கு தூண்கள் வானளாவி நிற்பதைக் காண்கிறோம். இவை பூமிக்குள் பத்து அடியும் அதற்கு மேல் நாற்பது அடியும் உள்ளன. இவைகளைக் காவேரி, கொள்ளிடம் தாண்டி எப்படிக் கொண்டு வந்து அமைத்தார்கள் என்பது இக்காலத்து என்ஜினீயர்களுக்கும் ஆச்சரியத்தை உண்டாக்குகிறது.

இன்று நம்மால் பெரும் கோபுரம் கட்டுவது பெரும்பாலும் முடியாத காரியம் என்றே சொல்லலாம். ஆனால் இருக்கிற கோபுரங்களைப் படம் பிடித்துப் பத்திரிகைகளிலும் காலண்டர்களிலும் பிரசாரம் செய்வது இப்போது வெகுவாகப் பரவியுள்ளது. இது விஷயமாக என் நீண்ட கால அநுபவத்திலிருந்து சில யோசனைகள் சொல்ல விரும்புகிறேன்.

கோயில்களின் அழகையும் அமைப்பையும் படங்களில் பிரதிபலிக்கும்படி எடுப்பதற்குச் சிலவிசேஷ முயற்சிகளைக் கையாள வேண்டும். கோபுரங்களை நேரே நின்று படம் எடுத்தால் படத்தில் கோபுரங்கள் அட்டையில் எழுதிய சித்திரம் போல் காணப்படும். ஆனால் இவைகளை வேறு கோணங்களிலிருந்து கோயிலின் சில முக்கியமான பாகங்களுடன் சேர்த்துப் படம் எடுத்தால் அவைகளின் விசேஷம் புலப்படும்.

உதாரணமாக வடமேற்கு மூலையிலிருந்து எடுத்த மயிலை கபாலி கோயில் படத்தில் பார்வதியம்மன் மயிலாகச் சிவனுக்குப் பூஜை செய்யும் சுற்றுக் கோயிலையும் காணலாம். கோபுரத்தை அடுத்துள்ள புஷ்கரணியில் கோபுரத்தின் பிரதிபிம்பத்துடன் சேர்த்துப் படம் எடுப்பது கோபுரத்தின் சிறப்பையும் புஷ்கரணியின் அழகையும்





- திருக்கழுக்குன்றத்தின் கீழுள்ள கோயிலின் அழகான கோபுரமும் அருகேயுள்ள திருக்குன்றமும்.
- காஞ்சி ஏகாம்பரேசுவரர் கோயில் முகப்புக் கோபுரம். கோயிலின் முன்னால் உள்ள ஒரு மண்டபத்திலிருந்து நோக்கினால் இந்தக் காட்சியைக் காணலாம்.
- கருங்கல் வேலை சிற்ப அமைப்புக்கள் எதுவுமே இல்லாத அபூர்வமான படைப்பு இந்த நெடிதுயர்ந்து நிற்கும் மங்களகிரிக் கோயில் கோபுரம்.





எடுத்துக்காட்டும். மதுரை பொற்றாமரையுடன் கூடிய கோபுரங்களைப் படத்தில் பார்க்கலாம். அப்படிப் புஷ்கரணியில்லாத கோவில்களிலும் கொஞ்சம் மழை ஜலம் மூலையில் தேங்கியிருப்பதை உபயோகித்து ஒரு பெரிய குளத்தில் கோபுரம் பிரதிபலிப்பதுபோல் படம் எடுக்க முடியும். இதைக் கபாலி கோயில் படத்தில் காணலாம். பல கோபுரங்களைச் சேர்த்து உயரத்திலிருந்து ஒரு படமாக [எடுக்கலாம். இதைப் பறவை நோக்கு (Bird's eye view) என்பார்கள். இப்படி எடுத்த படங்கள், கோயில்களின் சிறப்பையும், இக் கோயில்களைக் கட்ட முன்னோர்கள் என்ன அரும்பாடு பட்டிருப்பார்கள் என்பதையும் தெளி வாகக் காட்டுகின்றன. நம்மால் இம்மாதிரிக் கோயில்கள் கட்ட இப்பொழுது இயலாவிடினும், இவைகளைப் பிரசாரம் செய்யும் ஆர்வம் மிகுந்து வருவதும், பாழடைந்த பல கோபுரங்களுக்குத் திருப்பணிகள் நடைபெறுவதும் மகிழ்ச்சிக்குரிய விஷயங்கள்.





□ மயிலாப்பூர் கபாலி கோயிலின் சந்நிதித் தெருவில் திருக்குளத்தைக் கொண்டுவந்திருக்கிறார், கட்டுரை ஆசிரியர்!

□ மதுரைக் கோயிலின் அழகிய கோபுரத் தோற்றம்.

□ கோபுர வாயிலின் வழியே தோன்றுவது வேலூர் ஜலகண்டேசுவரர் ஆலயத்தின் கோபுரம்.

[இக் கட்டுரையில் இடம்பெற்றுள்ள புகைப்படங்கள் கட்டுரை ஆசிரியரே எடுத்தவை.]

# என்ன குழந்தை?

**கதிர்**

"மதுரையிலிருந்து மாப்பிள்ளை கடிதம் போட்டிருக்கிறார். நல்ல சமாசாரம்.....!"

"சரி, படியேன் அதை !"

"....மாமாவுக்கு, தாரா இங்கு மிக நல்ல முறையில் நர்ஸிங் ஹோமில் இன்று காலை குழந்தைக்குத் தாயானாள். தாயும் குழந்தையும் நலம்.... வணக்கம், வரதராஜன்!"

இந்தக் கடிதத்தைப் படித்துவிட்டு, மாமியார் திருமதி உஷா தேவியம்மாளால் தனக்கு ஏற்பட்ட உள்ளப்பூரிப்பை அடக்கிக் கொள்ள முடியவில்லை.

"நான் இப்போதே நமது அம்பாஸிடர் காரை எடுத்துக்கொண்டு லேடீஸ் கிளப்புக்குப் போய் எல்லாருக்கும் ஸ்வீட்டு வழங்கிவிட்டு வரப் போகிறேன்!" என்று கூறி, அங்கிருந்து நகர முயன்றாள்.

"பொறு.... மை டியர்.... பொறு!" என்று அமர்த்திய மிஸ்டர் புண்ணியகோடி மறுபடியும் ஒரு முறை அந்தக் கடிதத்தைப் படித்து அதில் ஏதாவது மர்மம் ஒளிந்து கொண்டிருக்கிறதா என்பதை ஆராயச் சொன்னார். வாழ்நாள் முழுதும் ஆராய்ச்சித் துறையில் மூழ்கிப் போன, ரிடையர்ட் புரொபசர் ஆயிற்றே, புண்ணியகோடி!

இந்தக் கடிதத்தை நன்கு கவனமாகப் படிக்கும்படி அவர் கூறியதில் ஒரு காரணமும் இருக்கத்தான் இருந்தது.

"என்ன! சஸ்பென்ஸா? மர்மமா? எனக்கொன்றும் தெரியவில்லையே. கடிதத்தில், தாரா குழந்தையை ஈன்றெடுத்திருக்கிறாள் என்று மாப்பிள்ளை எழுதியிருக்கிறார். தாயும் குழந்தையும் நலம் என்றுதானே எழுதியிருக்கிறார்? இதில் என்ன மர்மம் இருக்கிறது?"

மிஸ்டர் புண்ணியகோடி தமது புருவங்களை மேலே மேலே உயர்த்திவிட்டபடி ஸ்ரீமதி புண்ணியகோடியை ஒரு முறை அனுதாபத்துடன் பார்த்தார்.

"என்ன மர்மம் என்பதுதெரியவில்லையா? நான் சொல்லட்டுமா?"

"ஓ ! சொல்லுங்க!"

"'தாராவுக்குக் குழந்தை பிறந்திருக்கிறது' என்று எழுதிய மாப்பிள்ளை, அது என்ன குழந்தை. ஆணா, பெண்ணா என்பதை எழுதவில்லை. கவனித்தாயா?"

"ஆமாங்க. அதைப் பற்றிக் குறிப்பிடவில்லை. இதற்குக் காரணம்.... கடிதம் எழுதுகிற அவசரத்தில் ஏற்படக் கூடிய மறதியாக இருக்கலாம்..... நீங்க என்ன நினைக்கிறீங்க ?"

"நான் அவ்வாறு நினைக்கவில்லை. நம்ப மாப்பிள்ளை இருக்கிறாரே, அவருக்கும் என்னைப் போலவே சில விஷயங்களில் பிடிவாதமான புதிய சிந்தனைகள் உண்டு என்று தெரிகிறது."

"ஆமாம், ஆமாம். உங்க பக்கத்தில் இருந்து அந்தப் புதிய சிந்தனைகளைப் பார்த்தவர்தான் அவரும். ஞாபகமில்லையா? ஒரு நாள், நம்ப வீட்டு வேலைக்காரி பொன்னம்மாள் பிரசவித்திருப்பதாக அவளுடைய தாய் இங்கே வந்து கூறினாள். அப்போது நான் அந்தத் தாயாரைப் பார்த்து, 'என்ன குழந்தை? ஆணா, பெண்ணா ?' என்று கேட்டேன். உடனே நீங்க குறுக்கிட்டு, 'இது என்ன பத்தாம் பசலிக் கேள்வி? ஆணானாலும் பெண்ணானாலும் எல்லாம் நல்லது தான். ஒன்றும் தள்ளுபடியாகிவிடாது' என்று என் மீது எரிந்து விழுந்தீங்க இல்லையா ? அப்போது நம்ப மாப்பிள்ளையும் அருகே தான் இருந்து இதைக் கேட்டுக்கிட்டு இருந்தார். ஆகையினாலே உங்க குணம், தெரிந்துதான் வேண்டுமென்றே தன்னுடைய முற்போக்கான கருத்தையும் இப்படிக் காட்டியிருக்கிறார் என்று நினைக்கிறேன்!" இவ்வாறு கூறிவிட்டுத் திருமதி புண்ணியகோடி நகைப்பொலி எழுப்பினாள்.

"அப்படியேதான் இருக்கட்டுமே; யார் வேண்டாம் என்கிறது? என் குணத்தையும் மனப்போக்கையும் அறிந்தே ஆணா பெண்ணா என்பதை அவர் எழுதவில்லை என்றும் ரொம்ப மகிழ்வுதான். எப்படியும் அடுத்தபடியாக வரப் போகிற கடிதங்களில் பிறந்த குழந்தை ஆணா, பெண்ணா என்பது தானாகவே வெளிப்படாமலா போகும்? அப்போது பார்த்துக் கொள்ளலாம். இப்போது அதை அறிவதற்காக நான் என் அவசரத்தைக் காட்டப் போவதில்லை. அது பலவீனத்தை வெளிப்படுத்திக் கொண்டதாக முடியும்!" என்றார் புண்ணியகோடி.

"இதில் பலவீனம் என்ன இருக்கிறது?" என்று கேட்டாள் திருமதி புண்ணியகோடி.



"பிறந்திருக்கும் குழந்தை பெண்ணாக இருக்குமோ என்று மனத்தில் தோன்றுமானாலும் அது ஒரு பலவீனம் தான். நிச்சயம். ஆணாகத்தான் இருக்கும் என்று அழுத்தமாக நம்பிக்கை வெளியிடுவதும் ஒருவிதத்தில் பலவீனம்தான். இந்த ஆண், பெண் பிறவியில் உள்ள விசித்திரமே இதுபோன்ற மனப் புரட்சிகள்தாம்!"

"எதற்கும், இன்னும் பொறுத்திருந்து பார்ப்போம். மேற்கொண்டு கடிதம் வராமற் போகாது. பேரன், பேத்தியா என்பது தெரிந்து போயிடும்" என்று கூறிவிட்டுத் திருமதி புண்ணியகோடி உள்ளே சென்றாள். ஆனால், அவளுக்கு ஒரு காரியமும் ஓடவில்லை. அங்கங்கே மலைத்து மலைத்து அப்படியே சிந்தனையில் ஆழ்ந்து நின்று விட்டாள். மிஸ்டர் புண்ணியகோடியும் அதே மாதிரி ஒரு நிலைமையில் சிக்கிக் கொண்டு தவிக்காமலில்லை. சில சமயங்களில் தம்மையறியாமல் மாப்பிள்ளையை மனத்துக்குள் அவர் கடிந்து கொள்ளவும் தவறவில்லை.

"நல்ல மாப்புள்ளே இவரு! என்னோடே இப்படியா விளையாடணும்! சுத்தப் பொறுப்பில்லாத புள்ளே. இவ்ரோடே தாரா எப்படித்தான் அன்றாடம் குடித்தனம் பண்ணுதோ?" என்று கடிந்து கொள்கிறார்.

உள்ளூற அவர் மனத்தில், பிறந்த குழந்தை பெண்ணாயிருக்குமோ?... அதனால்தான் அதை ஒரு குறைவாகக் கருதி, மாப்பிள்ளை விவரம் தெரிவிக்காமல் கடிதத்தில் மழுப்பிவிட்டாரோ என்றெல்லாம் தோன்றுகிறது. அன்று முழுவதும் வேறு ஒருவிதமான தகவலும் வரவில்லை.

மறு நாள் மீண்டும் ஒரு கடிதம் வருகிறது. அதில் மாப்பிள்ளை பின்வருமாறு எழுதியிருந்தார்:

"மதிப்புக்குரிய மாமா அவர்களுக்கு. குழந்தைக்கு என்ன பெயர் வைக்கலாம் என்பதைப் பற்றித் தங்கள் மகள் தாராவும் நானும் சிந்தித்ததில் இரண்டு பெயர் இருவருக்கும் பிடித்திருக்கிறது. முத்து, ரத்தினம் — இந்த இரண்டும் தான். இதில் எதை நீங்கள் தேர்ந்தெடுப்பீர்கள்? பணிவன்பு, மாப்பிள்ளை

வரதராஜன்"

"இதிலே ஏதோ குறும்புத்தனமும் கலந்திருக்கிறது. மாப்புள்ளே நம்மோடே ஏதோ விளையாடுகிறார் என்று நினைக்கிறேன். முத்து, ரத்தினம் — இந்த மாதிரிப் பெயர்களை ஆணுக்கும் வைக்கலாம், பெண்ணுக்கும் வைக்கலாம்!" என்றார் புண்ணியகோடி.

"சுத்த விளையாட்டுப்புள்ளையாகத்தான் இருக்கிறது. எதற்கும் ஒரு கடிதம் எழுதிப் போட்டு விடுங்க. 'இஷ்டம் போல் ஒரு பெயரை வைத்துக் கொள்ளுங்க. இரண்டும் நன்றாக இருக்கிறது' என்று எழுதிப் போட்டு விடுங்க!" என்று யோசனை கூறினாள் திருமதி உஷாதேவியம்மாள். அவ்வாறே ஒரு கடிதம் எழுதிப் போட்டுவிட்டு உட்கார்ந்தார் புண்ணியகோடி. இருந்தாலும் அவருக்கு மனது கேட்கவில்லை. "அது என்ன நெஞ்சு அழுத்தம் மாப்பிள்ளைக்கு? குழந்தை ஆணு, பெண்ணு என்பதை ஒரு சஸ்பென்ஸாக வைத்து விளையாட்டா?.....!" பொருமுகிறார் அவர். மறுபடியும் இரண்டு நாட்கள். இந்த சஸ்பென்ஸ் பாரத்தைச் சுமந்து பார்க்கிறார் புரொபசர். அவரால் முடியவில்லை. டபார் என்று நெஞ்சு வெடித்து விடும்போல் இருக்கிறது அவருக்கு.

"உஷா... உஷா....!" மனைவியை அழைத்தார் அவர்.

"என்ன, முடிவு பண்ணினீங்க?"

"முடிவு பண்ணியாகி விட்டது. குழந்தையைப் போய் நேரில் பார்த்து விட்டு வரலாம் என்றுதான். கிளம்பு, கிளம்பு. இன்று பிற்பகலே காரை எடுத்துக் கொண்டு மதுரைக்குப் புறப்படுவோம்!" என்று கட்டளை பிறப்பித்து விட்டார் புரொபசர்.

மாலை ஐந்து மணி சுமாருக்குத் திண்டிவனத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறது அவர்களுடைய கார். சாதாரணமாக இம்மாதிரி நீண்டதூரம் வெளியூர்களுக்குச் செல்வதாயிருந்தால், திருமதி உஷாதேவியம்மாள் தான் காரை ஓட்டுவது வழக்கம். ஆனால் இன்று புண்ணியகோடியே காரை ஓட்டிக் கொண்டு சென்றார். முன் சீட்டில் அவருக்குப் பக்கத்திலேயே உஷாதேவி அமர்ந்து கொண்டிருந்தாள். அந்த நெடுஞ்சாலையில் அந்தப் பகுதியில் லாரிப் போக்குவரத்தும் அதிகம்.

எதிர்நோக்கி வரும் லாரிகள் ஒவ்வொன்றும் அசுர வேகத்தில் வந்து கொண்டிருந்தன. சில சமயங்களில் பின்னாலிருந்து ஹாரன் அடித்து ஓடும் சாலைப் போக்குவரத்து விதிகளின்படி 'சைட்' கேட்டு 'ஓவர்டேக்' செய்யாதபடி விருட்டென்று சில பூதாகாரமான லாரிகள் அவர்களை முந்திக் கொண்டு செல்லும்.

கண்மண் தெரியாமல் அப்படித் தோன்றி மறையும் லாரிகளையெல்லாம் புரொபசர், "அசுரன், பகாசுரன், நரகாசுரன்!" என்று பெயர் சூட்டிப் பற்களைக் கடித்துக் கொள்வார்.

ஏதோ ஒரு திருப்பம். அப்போது குறுக்கே ஒரு நொண்டி மாடு. நெடுஞ்சாலையைக் கடப்பதா அல்லது வேண்டாமா என்று தயங்கியபடி நின்று நின்று அடி வைத்துக் கொண்டிருந்தது. எதிரே மிக வேகமாக வந்து கொண்டிருந்த லாரி அசுரன் ஒன்று நொண்டி மாட்டின் மீது மோதிவிடக் கூடாது என்ற கருத்தில் திடீரென்று ஒரு பக்கமாகத் திருப்பப்படுகிறது. பாவம், அதே பக்கம்தானா புரொபசரும் தமது காரைத் திருப்ப வேண்டும்? பக்கத்திலிருந்த திருமதி உஷாதேவியம்மாள், "ஆ....!" என்று அலறி விட்டு புண்ணியகோடி கையிலிருந்த ஸ்டியரிங்கைச் சற்றே எதிர்ப்புறமாக நகர்த்தி விட்டாள்!

"கிரீச்!" என்று பிரேக்குகள் கத்தும் சத்தம். டமால் என்று ஒரு மோதல் பேரொலி! எதிரே வந்த லாரி அசுரன் சாலை ஓரத்திலிருந்த மரம் ஒன்றுடன் முட்டிக் கொண்டது.

நல்ல வேளை, உயிர்ச் சேதம் ஒன்றும் ஏற்படவில்லை. பத்திரிகையில் ஒரு 'காலம்' மூன்று அங்குலம், 'கோர முடிவு! லாரி மோட்டார் விபத்து!' என்ற தலைப்பில் வெளியாக வேண்டிய செய்தி, மயிரிழையில் வெளியாகாமல் தப்பிற்று. லாரிக்கு முன் பக்கம்தான் சேதம். அதை ஓட்டி வந்த டிரைவர் சிறிது காயத்துடன் தப்பியதும் ஆச்சரியம்தான்! லாரி உராய்ந்ததால், புரொபசரின் காருக்கும் இலேசான காயம் ஏற்படாமல் போகவில்லை. வழவழவென்றிருந்த காரின் 'மட்கார்டுகள்' இரண்டு மூன்று இடங்களில் அப்பளம் சுட்டதுபோல் வடு ஏற்பட்டிருந்தது.

இந்த விபத்து காரணமாக ஏற்பட்ட அதிர்ச்சியின் விளைவாக புரொபசரின் மனத்திலும் ஒரு மாற்றம் உண்டாயிற்று. மதுரை போகும் எண்ணத்தை அங்கேயே கைவிட்டு, "சென்னை திரும்பி விடலாம்" என்றார் உஷாவைப் பார்த்து.

கார் சென்னையை நோக்கித் திரும்பிற்று. ஸ்டியரிங்கை இப்போது உஷா தேவியம்மாள்தான் பிடித்துக் காரை ஓட்டி வந்தாள். அருகில் சாய்ந்தபடி, அமர்ந்து வந்த புரொபசர் புண்ணியகோடி மனைவியைப் பார்த்துச் சொல்ல ஆரம்பித்தார்:

"ஏதோ புராணங்களில் சொல்வார்களே! அது இன்று நிஜமாகவே நம் விஷயத்தில் நடந்தது.....!"

"என்ன, அது?" என்று கேட்டாள் உஷாதேவி.

"நீ மட்டும், அப்போது லாரி நம் காருடன் மோதுவதற்கு இருந்த நேரத்தில், சட்டென்று என் கையிலிருந்த ஸ்டியரிங்கைத் திருப்பியிராவிட்டால்,— நாம் இருவரும் மதுரையும் போயிருக்க மாட்டோம், சென்னையும் திரும்பியிருக்கமுடியாது. லாரி அசுரனை நேருக்கு நேர் மோதும் நிலையில் நான் பார்த்த அந்த ஒரு கணத்தில் எனக்கே என்ன செய்வதென்று தெரியாத ஒரு மயக்க நிலை ஏற்பட்டு விட்டது. நல்ல வேளை நீ கைகொடுத்துக் காரைத் திருப்பினாய். அதன் விளைவாக லாரி அசுரனும் மரத்தோடு மோதி அடிபட்டுச் சாய்ந்தான். இது எப்படி இருக்கிறதென்றால், அந்தப் புராணத்தில் வருமே சம்பவம். கிருஷ்ணனை நரகாசுரன் எதிர்த்த போது, பக்கத்திலிருந்த பாமா, அந்த அசுரனிடமிருந்து கண்ணனையும் காப்பாற்றினாள். தேருக்கும் பழுதில்லாமல் அதையும் காப்பாற்றினாள் என்று கூறுவார்களே. அந்த நினைவு அப்போது எனக்கு ஏற்பட்டது!" என்றார் புரொபசர்.

சென்னை திரும்பியதும் அவர்களுக்காக மதுரையிலிருந்து வந்த கடிதம் ஒன்று காத்திருந்தது. மாப்பிள்ளைக்கும் என்ன தோன்றிற்றோ என்னவோ, சஸ்பென்ஸ் திரையை விலக்கி விட்டு, "உமா!" என்று குழந்தைக்குப் பெயர் வைக்கலாமா என்று அதில் கேட்டிருந்தான். "பெண்ணாக இருந்தால்தான் இந்த சஸ்பென்ஸ், இந்தப் புதிர் எல்லாம்!" என்றாள் மாமியார் உஷாதேவியம்மாள்.

"உமா என்ற பெயருக்குப் பதிலாக 'பாமா' என்று பெயர் வைக்கவும்.... உலகில் அசுரத்தனங்களுக்கு இன்னும் குறைவில்லை. அவற்றினின்று ஆண்களைக் காத்திட 'பாமா'க்கள் நிறைய வேண்டும்!" என்று அப்போதே ஒரு பதில் கடிதம் எழுதிப் போட்டார் புண்ணியகோடி.

- பதினொரு கவிஞர்களின்
- கருத்துக்
- குவியல்களைத்
- தொகுத்தளித்திருக்கிறோம்.

# கவியரங்கம்





## மறந்த கதை

"துறைவன்"

திறந்துரைப்பேன் நெஞ்சே நீ
திகைக்க வேண்டா!
சிறந்ததொரு வழியிதனின்
மற்றொன் றில்லை.
பிறைநுதலாள் நமைமறந்து
பிரிந்த தெல்லாம்
மறந்திருக்கப் பழகிடலாம்
வாராய் வாராய்

வாசமலர் அவள்போலே
புவியில் உண்டு
பேசமொழி மிழற்றுகின்ற
கிளிகள் உண்டு
ஆசைவெறி கமழ்கின்ற
ஆடல் உண்டு
ஊசலிடும் மனமே நீ
உளைய வேண்டா!

புதிதான உணர்வுகளால்
பழைமை மங்கும்
மதியிலுறும் இயற்கையிது
மறதி நன்று!
விதிவசத்தால் அவள் அகன்று
போனாள், நெஞ்சே
அதனாலென்? மறந்திடலும்
அரிதோ சொல்வாய்

கவிதையிலே அவள்போதும்
கனவு கிட்டும்.
புவிமகிழ அந்திவண்ணப்
புதுமை நீட்டும்
செவியினிலே தேன்பாய்ச்சக்
குயில்கள் பாடும்
அவளையினி மறந்திடுநீ
அருமை நெஞ்சே

வந்துதொடும் இளந்தென்றல்
அவளே போல,
சிந்திவிழும் மெல்லருவி
அவளே போல,
அந்திசெயும் பிறைமுறுவல்
அவளே போல,
சிந்தனையேன்? நெஞ்சே நீ
திருந்தாய் போதும்

முயற்சியுண்டேல் மறந்துவிடல்
முடியும் நம்மால்
பயிற்சியொரு சிறிதுபெறப்
பார்ப்போம், அஞ்சேல்
செயற்படுதல் தளர்ந்தனை நீ
அவளை எண்ணி
மயற்பட்டாய், என்வார்த்தை
மதித்தாய் இல்லை

மன்னுலகில் மறத்தல்மிக
எளிது கண்டாய்
மின்னலென விளையாடும்
அழகின் சிற்பச்
சன்னலிலே பூந்திரைபோல்
அசைந்தாள், கண்ணால்
கன்னமிட்டாள், என்இதயங்
கவர்ந்தாள், சென்றாள்

அடடா! யான் அவள்நினைவில்
அமிழ்ந்தேன், காணும்
விடமுடியா நினைவுகளில்
வீழ்ந்த நெஞ்சை
நடமிடத் தானணியும்
சதங்கை யாக்க
அடங்கொண்டாள், இனிநம்மால்
ஆவ தென்னோ?

பின்னைஇனி என்செய்ய!
பேசாதே! யான்
என்னைமறந் தென்னிதயம்
அவட்கே தந்தேன்!
பொன்னுலக வானகம்யான்.
போந்தாள் கன்னி
தன்னொளியால் வானமெலாம்
தழுவிக் கொண்டாள்.

# காத்திருக்கும் கண்கள்

பாதை வழிச் சூனியத்தைப்
பார்த்திருக்கும் - அந்தப்
பார்வையிலே ஆர்வமெலாம்
சேர்த்திருக்கும் - நெடுங்

காத வழித் தொலைவினிலே
காத்திருக்கும் - எனைக்
காண்பதற்காய் நோன்பிருக்கும்
கண்ணிரண்டே!... உன்றன்

கண்ணுக்குள்ளே எத்தனையெத்தனை
கனவுகளோ? - அந்தக்
கனவுக்குள்ளே எத்தனையெத்தனை
நினைவுகளோ? - உன்றன்

நினைவுக்குள்ளே தழைப்பதெத்தனை
உறவுகளோ? - அதை
நினைத்து நினைத்துத் தவிப்பதெத்தனை
இரவுகளோ?... நந்தம்

கனவும் நினைவும் பலிக்குமொரு
காலம் வரும் - அந்தக்
காலம் இரவும் உறவும் சேரும்
நேரம் வரும் - அன்று

நினைத்து நினைத்துப் பட்ட துன்பம்
மாய்ந்து விடும் - காதல்
நெஞ்சிரண்டும் கலந்து இன்பில்
தோய்ந்து விடும்!..

திருச்சிற்றம்பலக் கவிராயர்

# பெண்மை நிறைவதுதான்!

நெஞ்சக் கனவொரு பங்கப் பனித்திரள்
நித்திரை யாக்கிவிட! - அன்பு
முத்திரை தேக்கிவிட! - அதன்

கொஞ்சும் விழித்திரை கொஞ்சம் விழித்திடக்
கோடி நிலாச் சிரிக்கும்! - எழில்
சூடி எலாம் பிறக்கும்!

தத்தித் தவழ்ந்திடும் சித்திரப் பொன்னுரு
தாவி அருகில் வரும்! - என்றன்
ஆவி பெருக வரும்! - அந்தக்

கொத்து மலர்ச்செண்டு புத்தம் புதுநகை
கொட்டி அளந்து வரும்! - என்னுள்
ஒட்டித் துலங்க வரும்!

கன்னம் இரண்டுமே பொன்னை வழித்திடக்
காணும் சிறுகுழிப்பும்! - கவைத்
தேனின் உறவழைக்கும்! - அவன்

பண்ணின் ஒலியெனப் பின்னும் மழலையும்
பாசம் குழைத்து வரும்! - எந்த
மாகம் அழிக்க வரும்!

அள்ளி எடுத்தவன் விண்ணும் இதழ்களில்
ஆயிரம் தந்திடுவேன்! - முத்தம்
மாயனும் சிந்திடுவான்! - அந்தப்

பின்னைப் பெருமகன் உள்ள வரைக்குமென்
பெண்மை நிறைவது தான்! - இந்த
உண்மை புரிவது தான்!

மதி ஒளி

காணும் பொருட்குக் கண்ணுண்டு!
  கள்ளப் பொருட்கோ யாதுண்டு?
பூணும் அணிக்குப் பொன்னுண்டு!
  போலி யணிக்கோ யாதுண்டு?

ஆடும் கலைக்கோர் அழகுண்டு!
  *ஆமைக் கலைக்கோ யாதுண்டு?
பாடும் இசைக்குப் பண்ணுண்டு!
  பாப இசைக்கோ யாதுண்டு?

எரியும் தீக்கு நீருண்டு!
  எரியும் வயிற்றுக் கெதுவுண்டு?
தெரியும் புகைக்குத் தெளிவுண்டு!
  தீமைப் புகைக்கோ யாதுண்டு?

படிக்கும் படிப்புக் குயர்வுண்டு!
  பழிக்கும் படிப்புக் கெதுவுண்டு?
அடிக்கும் கைக்குத் தடுப்புண்டு!
  அழிக்கும் கைக்கோ யாதுண்டு?

தேகப் பிணிக்கு மருந்துண்டு!
  சிந்தைப் பிணிக்கோ யாதுண்டு?

மூக உயிர்க்குச் சைகையுண்டு!
  மூட உயிர்க்கோ யாதுண்டு?
சொல்லும் கலைக்கு மாற்றுண்டு!
  கோபக் கலைக்கோ யாதுண்டு?
வெல்லும் படைக்குத் தடையுண்டு!
  கேடப் படைக்கோ யாதுண்டு?

ஓடும் நதிக்குப் பொலிவுண்டு!
  ஊழின் நதிக்கோ யாதுண்டு?
வாடும் பயிர்க்கு மழையுண்டு!
  வஞ்சப் பயிர்க்கோ யாதுண்டு?
கருதும் செஞ்சுக் கொளியுண்டு!
  கபட செஞ்சுக் கெதுவுண்டு?
சுருதி மொழிக்கு மெய்யுண்டு!
  சூழ்ச்சி மொழிக்கோ எதுவுண்டு?
கூறும் இந்த உண்மையெலாம்
  கூர்ந்து தெளிய யாதுண்டு?
மாறில் லாத நெறிசெல்லும்
  வல்ல ஞான மதியுண்டே!

* ஆமையென்பது பொறாமையைக் குறிப்பிடும்.



தெருவேநான் செல்கின்றேன்
  திரும்பியும்வந் துனைமீறியேன்
பெருநாளுன் உறவடைந்த
  திருநாள்தான் எனினுமின்று
உருக்குலைந்து தேய்ந்திடநான்
  பருக்கைக்கல் எழுடக்தேன்
இருப்பினும்நீ விருப்புடனென்
  செருப்புக்கால் தனைப்பொறுத்தாய்

உள்ளமெலாம் கவர்அணங்கு
  உன்னகத்தே உறைகின்றாள்
கள்ளனைப்போல் பதுங்கிவந்து
  கண்டதெலாம் அறிவாய்நீ
எத்தனைநாள் எதுசமயம்
  எதுவேனை எனக்கருதேன்
பித்தனைப்போல் ஊசலிட்டுப்
  பெருஞ்சுமையாய் உனக்கானேன்

என்னுசைக் கடல்வெள்ளம்
  ஏங்குநெஞ்சில் கரைபுரளப்
பன்னுடகள் நடந்தபெரும்
  பாரமதால் வைந்தனையோ?

ஒருசிலநாள் நம்பிக்கை
  உளத்தோங்கத் திரும்பிடுங்கால்
அருட்புத் தெருவெனவே
  அணைத்துமுத்த மிடவிழைவேன்

மற்றதுயர் நாட்களிலே
  மனஞ்சோர்ந்து திரும்பியுனைப்
பற்றறவே துவென்பேன்
  பண்பிழந்தே சீறிடுவேன்

சிரித்துமுகம் காட்டிவிடில்
  தீப்பிழம்பாய் உனையடுத்தேன்
சொரித்தகொடும் புருவமெனில்
  சீர்ஓடை யாய்ப்பாய்ந்தேன்
சொல்லையின்பம் நீயறிவாய்
  கொடுந்துயரும் நீயறிவாய்
உள்ளமதில் தூமையைப்போல்
  உதவினைநீ வாழ்த்தறியேன்

உன்வடிவம் மேடுபள்ளம்
  உன்மணமேல் வாமறிவேன்
என்னுடன்நீ இணைந்ததுபோல்
  யாரிணைந்தார் என்றுதும்
எங்கிருந்தோ வந்தவளை
  என்னவளென் றிணித்தேற்றும்
பங்குகொண்டாய் கனவெல்லாம்
  பதைக்கின்றேன் உனைப்பிரிய

இன்றுமனக் கோட்டையெலாம்
  இடிந்ததுகண் ணீர்சொரிந்து
உன்றனிடம் விடைபெற்றே
  ஊரறியா தேகிடுவேன்

வாழ்வுமிதோர் நெடுந்தெருவாம்
  வாழ்ந்துமறைந் திடும்பொழுதில்
ஊழ்வினையைத் துரைத்திடுமோர்
  ஒருசொல்லும் இதுவாமோ?

குறிப்பு : தெருவேநான் செல்கின்றேன், திரும்பியும் வந்துனை மீறிவேன் என்ற முதல் இரண்டு வரிகளையும் ஒவ்வொரு செய்யுளின் இறுதியிலும் சேர்த்துப் பாடும்பொழுதுதான் கவிதையின் முழு கருவும், அதன் உட்கருத்தும் நன்கு புலனாகும்.

# நடை ஓவியம்!

தமிழ்முடி

ஓவியம் நடந்து வருகிறது — உயிர்
ஓவியம் நடந்து வருகிறது — நடை
ஓவியம் நடந்து வருகிறது — ஆடா
ஓவியம் நடந்து வருகிறது!

காவியப் புலவர் அற்புதமாய் — உயிர்
கற்பனை செய்த பேரழகு — மனக்
கண்ணால் கண்ட வடிவழகு — முகக்
கண்ணால் காண உருவான (ஓவியம்)

குழலும் யாழும் கூடிக்கலந்து
மழலையும் தமிழுமாய் மாறிப் பிறந்து
வழங்கும் தெவிட்டா மதுரச்சுவையை
அழகிய மொழியால் அள்ளிச்சொரியும்
(ஓவியம்)

வானிலா மேக எழிலுடை அணிந்து
வானவில்' பாதை வழியாய்இறங்கி
நானில மீதில் நேருலாசெய்ய
மானிடப் பெண்ணாய் வந்ததுபோன்ற
(ஓவியம்)



# நிலவுக்கு ஒருசொல்

மின்னூர் சீனிவாசன்

மலையில் ஆடி நடந்ததனாலோ - கடல்
அலைமேல் ஓடிப் படர்ந்ததனாலோ
கலை சேர் நிலவே களைத்தனை நீயே! - எழில்
கனியும் முகமே வெளுத்தனை நீயே

இருளாம் திரையை மாற்றிடும் நிலவே. - அமுத
இன்பம் உயிரில் ஏற்றிடும் நிலவே!
திரளும் வெண்ணெய் போலவே வந்தாய். - காதல்
தீயை நெஞ்சில் தூவவே வந்தாய்!

காதல் தூது சென்றதனாலோ - வான்
கடலில் நீந்தி வந்ததனாலோ
சீதப் பனியின் வாடையினாலோ - ஒளி
சிந்தும் நிலவே தேய்ந்ததுன் முகமே!

அல்லி மகளின் காதலினாலோ - அவள்
அழகில் உருகிக் கரைந்தனையோ நீ!
செல்லும் வழியில் கருமுகிலாலோ - உன்
சிட்டு முகத்தில் மறுவதும் ஏற்றாய்!



# இதற்குத் தானோ?

## நெல்லை ஆ. கணபதி





அப்பப்பா! மிகத்தொல்லை! போதும்! போதும்!
அவனோடு படுகின்ற துயரம் போதும்!
எப்போ நான் எழுந்தாலும் காலை நேரம்
ஏனத்தான்! உங்களைத்தான்! கேட்பீர் அத்தான்!
உப்(பு) அத்தான்! பருப்(பு) அத்தான்! இல்லை அத்தான்
ஓடுங்கள் கடைக்கு! அத்தான் என்பாள்! நானும்
தப்பத்தான் வழி பார்ப்பேன்! தடையாய் நிற்பாள்!
சரியாத்தான்! நடையில்தான் காண்பேன்! தொல்லை!



நானுந்தான்! கடைக்குத்தான்! சென்றே மீள்வேன்!
நாயகியோ எதிர் நின்று வெளிந்தே வாடிக்
காணுந்தான்! கையில்தான் கன மாய்த்தான்
காய்கறியின் கூடையைத்தான் வாங்கிச் சென்று
"யானுந்தான் பார்க்கின்றேன்?" தினந்தோறும்தான்
"இதுதான்! தும்வழக்கம்தான்! மோசம்!" என்பாள்!
மானந்தான் பறிபோகும்; விவரம்கேட்டால்
"மஞ்சள் நிறம் பருப்புக்கேன் இல்லை?" என்பாள்!



அதையேதான் வேறொருவன் தெருவில் விற்றால்
ஐந்தாறு வீட்டுப்பெண் எல்லாம் சேர்ந்து
எதையோதம் செயல்திறத்தால் பெற்ற தைப்போல்
இரண்டுபடி மூன்றுபடி எனவே கொள்வர்:
"இதையேதான் வாங்கிவந்தேன்!" என்றால் இல்லை
"இதுவேறு! அமெரிக்க விஞ்ஞா னத்தால்
சதைஏதும் நீங்காமல் நிறத்தை மட்டும்
தருந்தபடி போக்கியது!" என்றே சொல்வாள்!



:ரிதான்! போ! எனச்சொல்வேன்! அன்பாய் வந்து
"சாப்பிடுங்கள்" என்றந்தப் பருப்பை மட்டும்
பரிமாறி நின்றிடுவாள்! சுவையைப் பற்றிப்
பாரதமே பாடிடுவாள்! எந்தன் கூற்று
"சரிதானு?" என்றிடுவாள்! சுவைத்துப் பார்த்தால்
நாக்கிலவை இரண்டுமேஒன் றாய்த்தான் தோன்றும்!
மரியாதைக் காய் நானும் "ஆமாம்" என்றால்
மறுநாளே "ஒருமூடை" வீட்டில் காண்பேன்!



எதிர்வீட்டுக் காரிஒரு சேலை வாங்கி
இடுப்பினிலே அதையணிந்து நாங்கள் காணக்
குதிபோல நின்றிடுவாள்! வீட்டில் உள்ள
குடம்தட்டு தம்ளரெல்லாம் தானம் போட்டுச்
சதிர்ஆடும்! கதவெல்லாம் "டாம்; டும்" என்னும்!
தானும்ஒரு சேலையினை வாங்கிக் கொண்டால்
கதிர்விசும் முகமதியில்! களிப்பும் தோன்றும்!
கதவுகுடம் தட்டெல்லாம் சரியாய் நிற்கும்!



என்வீட்டில் இவனால்தான் துன்பம் என்று
என்னனியொரு நண்பனிடம் கூறப் போனேன்!
தன்வீட்டுத் துயர்தாங்க இயலா மல்தான்
தனியாகத் தெருவினிலே நிற்ப தாக
முன்கூறி மனம்வாடி நிற்கக் கண்டேன்!
மூவுலகும் ஆளுகின்ற இறைவன் கூடப்
பெண்முன்னே படும்பாட்டைப் புராணம் பாடிப்
பெரியவர்கள் வைத்ததுவும் இதற்குத் தானோ?





# மணிச் சிட்டு!

தமிழழகன்

சின்னஞ் சிறுமணிச் சிட்டிது பார்! - முல்லைச்
சிறகென விம்மிடும் மொட்டிது பார்!
என்னரு கேவரும் பிஞ்சினைப் பார்! - அதன்
இளமைத் துடிப்புறும் நெஞ்சினைப் பார்!

உருளும் சிறிய விழிகளைப் பார்! - கரும்
உணர்த்துக்கள் பேசும் மொழிகளைப் பார்!
புரளும் செல் மூக்கும் பொரியினைப் பார்! - அந்தப்
பொரிமூக்கு செல் குத்தும் சிறிய செல் பார்!

இரை முனைக் காம்புக் கால்களைப் பார்! - அசை
கீழ்மேல் அசைத்திடும் வால்களைப் பார்!
எதிப் பிடிக்க நம் எண்ணமும் பார்! - ஆயின்
எண்ணிப் பிடிபடா வண்ணமும் பார்!

காற்றுக்கு நீந்தும் கனவிது பார்! - பகற்
காலமும் நீந்தும் நிலவிது பார்!
சேற்றுக்குப் பூவாத தாமரை போல் - வர்ணச்
சித்திரத் தாரிகைச் சாமரை பார்!

கட்டுதிட் டங்களாம் கட்டமில்லை; - பாது
காப்பென் றிதற்கொரு சட்டமில்லை;
எட்டுமட் டும்விண்ணைச் சுற்றிடலாம் - எளில்
எல்லார்க்கும் பேறிது வாய்ப்ப தென்றோ?

# ஞான ஆனந்தம்

வித்துவான் வி. துரைசாமி எம். ஏ

மாரன் வளர்த்த குழற்காடு - நல்ல
மல்லிகை பூத்து மணக்கையிலே
சோரன் எனவண்டு வந்ததம்மா - ஒன்றும்
சொல்லாம லேகலம் உண்டதம்மா!

ஈசன் கழுத்தில் இருக்கும்விடம் - இந்த
ஏந்திழை கண்ணில் இறங்கியதோ
நேசம் வளர்த்திடு நின்விழிகள் - எனை
நித்தம் தளிர்த்திடச் செய்வதுமேன்?

காந்தையர் என்ற பெயர் வகுத்தான் - கம்பன்
காந்தத் தியல்பினைக் கண்டதனால்
சாந்துய ரத்தினைத் தந்திடினும் - பெண்கள்
சாகசம் மீண்டும் உயிர் தருமே.

செங்கரம் பற்றிடச் சென்றுகையில் - அவள்
செவ்வத ரங்கள் முறுவலிக்க
அங்கயற் கண்ணியாய் மின்னலிட்டாள்! - ஞான
ஆனந்தம் மேவிட மோனமுற்றேன்.

# எண்ணத்தினின்று வந்தாள்!

''மதுமி''

சோலையி லோர்மயில் ஆடக்கண்டே - அதன்
சொக்கும் 'எழில் தந்ததார்' எனவே;
''வாலையி யற்கை யளித்தது காண்! - இந்த
வண்ணச் சிறகும் ஒயில் நடமும்.''

சோகக் குயிற்குரல் கூவிடவும் - சென்று
''சொல்லு! குரல் தந்த தார்?'' எனவும்
''மோகக் குரல் தந்த மோகினியும் - இங்கு
முந்தும் இயற்கைச் செயல்'' எனவும்;

வீசிடும் தென்றற் சிலுசிலுப்பின் - இதம்
வீணையில் மென் விரலாய்த் தடவ,
''விகம் நளினத்தைத் தந்ததெவர்?'' - என
''விந்தை யியற்கை யளித்த'' தென்றான்

மெல்ல! மணம் சிந்தும் மல்லிகையின் - மணம்
மேனி மயக்குதல் யார் செயலோ?''
''சொல்லு'' எனவே வினவிடவும் - மலர்
''சொக்கும் இயற்கைப் பரிசளிப்பே'' என;

மங்கை யியற்கையைத் தேடிச் சென்றேன் - அவன்
மாலை மயக்கலில் வந்து நின்றான்.
''பொங்கு குயிற்குரல், ஆடும் மயில் - நடம்
போதை தரும் மணம், தென்றல், இவை

''எத்தனை இன்பங்கள் நீ படைத்தாய் - அவை
அத்தனையும் தரல் வேண்டுமடி!
இத்தினம், இக்கணம், இப்போதே - அவை
என்னை யடைந்திடச் செய்.'' எனவும்,

கன்னி யொருத்தியைக் கொண்டு தந்தான் - அவள்
காதல் மனத்தி லெனையிணைத்தாள்
என்னென்ன இன்சுவை இங்குளவோ? - அவை
என்னிடம் சேர்ந்தது இன்பமடா?

சோலைக் குயிற்குரல் கேட்கவில்லை - இங்கு
சொக்கும் மயில்நடம் தோணவில்லை.
மாலை மலர் மணம் தென்றலெலாம் - இந்த
மங்கையிடத்திலே நான் நுகர்ந்தேன்

''இத்தனை வல்லமை ஏதடியோ?'' - நீயுஞ்
இத்தனை இன்பச் சுவை கலப்போ?
இத்தினம் எங்கே மறைந்திருந்தாய்? - இப்போ
என்னிடம் ஏனோ பறந்து வந்தாய்?''

அஞ்சி வினவச் சிரித்துச் சொன்னாள் - ''உன்றன்
எண்ணத் தினின்று இறங்கி வந்தேன்
நெஞ்சச் சிறை விட்டு நேரில் வந்தேன்'' -
[என்று நீலிக் கவிதை கலகலத்தாள்.



**உங்களை நாள் முழுவதும் மனோ உல்லாசத்துடன்
வைக்கக்கூடிய பவுடர்...**

# பாண்ட்ஸ்
# ட்ரீம்ஃப்ளவர் டால்க்

எல்லா காலநிலைகளிலும் நீங்களும் உங்கள்
குடும்பத்தில் அனைவரும் தினமும் உபயோகிக்கச்
சிறந்தது பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்.
அதை உடம்பில் தூவிக்கொண்டால் அனுபவமாகும்
ஆனந்தமே அலாதி. அதன் உள்ளம் கவரும் நறுமணம்
உங்களையும் உங்களைச் சூழ்ந்துள்ளவர்களையும்
மகிழ வைக்கும். வியர்வையை விரைவில் உறிஞ்சும்
தன்மை உள்ளதால் வியர்த்துக் கொட்டும் கோடையில்
உபயோகிக்க அது விசேஷமானது. பாண்ட்ஸ் ட்ரீம்-
ஃப்ளவர் டால்க்கை உடம்பில் தூவிக்கொண்டு
நாள் முழுவதும் புத்துணர்ச்சியுடனும் மனோ
உல்லாசத்துடனும் இருங்கள்... உடலைத்
தழுவி நிற்கும் நறுமணத்துடன் திகழுங்கள்!

**யாவரும் வாங்கக்கூடிய விலையில்
நறுமணம் கமழும்,
உயர்ரக டால்கம் பவுடர்**






**சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்**
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன்
யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)

விம்பிளாம் என்ற பெயரில் வழங்கி வந்த சாரங்கி வாத்தியம் கந்தருவக் குரலிலே இழைந்து தெய்வ மறைகளை இசைத்தது. புல்லாங் குழல் காற்றிலே இன்னொலியை இணைத்து வழிபாடு செய்தது. வீணை அதைப் பின் தொடர்ந்தது. சின்ன மேளம் என்னும் முகவீணை ஒலிக் கோடுகளிலும் இசைக் கோலம் போடுவதற்காகச் சுவரங்களை அங்கங்கே பிடித்துப் போட்டு வைத்தது!

ஆலவாய் அழகனின் கோவில் நடன மண்டபத்தில் பூமகள் என்ற பெயர் தாங்கிய அழகுக் கன்னியின் அரங்கேற்றம்! கவிஞர்களும், புலவர்களும், செல்வந்தர்களும், அரசச் சுற்றத்தார்களும் அணி அணியாக மண்டபத்திலே அமர்ந்திருந்தார்கள்.

வண்ண வண்ண ஆடைகளும், அழகு கொழிக்கும் அணிகளும் புனைந்த நூறு நூறு இளம் பெண்கள் கையில் குத்து விளக்குகள் ஏந்தி, நடுவிலே ரகுநாத நாயக மன்னன் அரச உல்லாசத்தோடு வர, ஒரு பெரிய ஊர்வலமாகச் சென்று கோவிலில் நுழைந்தார்கள். அரசவைக் கவிஞரான வெள்ளியம்பலப் புலவரின் மகள், ஆலவாய் அண்ணலின் கோவிலுக்குரிய நாட்டியக் கட்டளைக் கலைஞரியான நீலமணியின் குமாரி, அவள் அரங்கேறுகிறாள். அந்த விழாவிலே கலந்து கொண்டு நடன நங்கைக்கு அரசப் பரிசுகள் வழங்குவதற்காக என்றே நாயக மன்னர் கோவிலுக்கு வருகை தந்திருக்கிறார்!

வழிபாட்டுப் பாடலான 'வாரம்' ஒலித்தது. மதுரையை அரசாண்ட தெய்வமும், மாயத் திருவிளையாடல்கள் புரிந்து அடியார்களைக் காத்தவனும், கலை வித்தைகளைச் செய்து காட்டித் தெய்வத் தமிழிலே தெய்வீகக் கலைகளை நிலைநாட்டிய கடவுட் கலைஞனுமான



# மறை பேசும் மயில்

சோமு

அண்ணலின் புகழைத் துதித்தார்கள் இன்னிசை மாதர்கள் :

''ஆடல் புரிந்தான் அரன் என்றும்
—மூவர் தமிழ்ப்
பாடல் உகந்தான் பரன்''

என்னும் இறைவனை வழிபாட்டு இசைத் தமிழ்! இதோ பூமகள் தோன்றுகிறாள், வணங்கிய உடலோடு, குவிந்த கைகளோடு!

உவகையும் பெருமிதமும் முகத்திலே பொங்க மகளுக்குப் பின்னால் பெண்களின் வரிசையிலே முகப்பில் அமர்ந்திருக்கிறாள் அன்னை நீலமணி. ஒரு காலத்தில் ஒப்பற்ற அழகோடு திகழ்ந்த முகம் என்று அறிவிப்பது அந்த முதிய முகத்தின் வயோதிகச் சுருக்கங்களுக்குப் பின்னும் நிறைபட்டு நிற்கிறது! ஆடவர்களின் வரிசையிலே மன்னன் வீற்றிருந்த அரச அணிக்குப் பின்னால் உணர்ச்சிவசமாகி அமர்ந்திருக்கிறான் முதிய தந்தை வெள்ளியம்பலம்!

ஆடல் புரிந்தான்
அரன் என்றும், மூவர் தமிழ்ப்
பாடல் உகந்தான்
பரன் என்றும் — கூடலிலே



கன்னரி வாசிக்கு
கடை பயிற்றி ஞுன்னன்றும்
இன்னரி வாசிக்கும்
இனி !

என்ற பாடல், ஆடலும் பாடலுமாக கருவெடுத் துப் பூமகளின் அழகுத் திருமேனியிலே துவண் டது!

கல் யானைக்குக் கரும்பு அருத்திய சித்தன், பிட் டுக்கு மண் சுமந்து பிரம் பால் அடிபட்ட பித்தன், நரியைப் பரியாக்கி விளை யாடிய அத்தன், நான் மாடக் கூடல் நன்னக ரிலே புரிந்த திருவிளை யாடல்கள் எல்லாம் எழி லும், இளமையும், பெண் ணின் பெருமிதமுமாக

இணைந்து இசையிலே கொஞ்சி, நடனத்திலே துள்ளி, அபிநயக் கோலத்திலே ஞான ஒவியங்களாக வடி வெடுத்து, அந்த அரங்கிலே வண்ணம் திகழ அழகு மிடுக்கோடு விளையாடின !

**கின்னரி வாசிக்கும்**
**கிளி**

என்ற சொற்களை அபிநயமாகச் சித்திரித்துப் பச்சைப் பசுங் கிளியானது தனது கொண்டையை ஆட்டிக் கொண்டு தந்தை மொழியிலே கின்னரியை வாசிப்ப தாக விரல்களிலும் ஒவியம் காட்டி நின்றாள் பூமகள்! அரசன் அப்படியே எழுந்தான். விலை மதிப்பற்ற முத்து மாலையை மரகதம் இழைத்த பதக் கோர்வை யோடு சேர்த்து அப்படியே பூமகளுக்கு வழங்கினான் ஆனந்தக் களிப்புடனே! நடன மண்டபத்திலிருந்த ஆயிரம் ஆயிரம் மக்களும் மகிழ்ச்சிப் பரவசத்திலே ஆனந்தம் ஒலித்தார்கள் !

எதிரே இருந்த தந்தை வெள்ளியம்பலத்துக்குக் கண்களில் நீர் மல்கியது. பார்வை மங்கிற்று. வானத்திலிருந்து மின்னலானது கீழே இறங்கி அந்த அரங்கத்தில் வந்து, ஆடித் துவள்வது போல இது வரை தனது கண்முன் நடனம் ஆடிய மகளின் காட்சி பார்வையிலிருந்து மறைந்தது. அவனுடைய மனம் வேகமாகச் சுழலத் தொடங்கிற்று !

2

பல ஆண்டுகளுக்கு முன்பு இப்படி ஒரு நடன அரங் கேற்றத்தின் போதுதான், இதே கூடல் நகரில், இதே கோவிலில் இதே மண்டபத்தில், பூமகளின் அன்னை நீலமணியை முதன் முதலாகச் சந்தித்தான் வெள்ளி யம்பலம். அப்போது அவன் இளமை துள்ளும் இளைஞன். அவளோ? அவள் பூவினம் கன்னி. அன்னம் போல, மான் போல, மயில்போல என் றெல்லாம் கவிதையிலே பாடியிருக்கிறேனே அவள், அப்படித்தான் அரங்கிலே வந்து நின்றாள் அவள்! ஆனால் இத்தனை ஆண்டுகளில் அவள் இப்போது எப்படி உருமாறிப் போய் விட்டாள் !

பல ஆண்டுகளுக்கு முன்பு நீலமணியின் நடனம் இதே மண்டபத்தில் இது போலவே அரங்கேறிய போது, இந்த மன்னரின் தந்தையும் இவரைப் போலவே கோவிலுக்கு வந்தார். இது போலவே ஒரு பெரிய மணிமாலையை நீலமணிக்கு அரசப் பரிசாக வழங்கினார். ஆனால் இப்போது அந்த நீலமணி, அந்த ஒப்பற்ற பேரழகி, எப்படி ஆகி இருக்கிறாள் ?

நீலமணி! முதுமையும் தளர்ச்சியும் மேனி யைப் போர்த்தி விருக்கின்றன. இலவு வெடித்தது போல் கூந்தல் எல்லாம் வெண் புகையாக வெளிறிப்போய்க் கிடக்கிறது. கோடு களும் சுருக்கங்களும் படர்ந்து போயுள்ள இந்த முதிய முகம் அன்று எப்படி இருந்தது? மாதுளந் தோடு போன்று வெடித்து ஒளிர்ந்த அந்த முகத்தின் காவிய ஒளியில் தானே வெள்ளியம்பலம் என்ற கவிதையுள்ளம் தன்னை இழந்து தவித்தது! தன்னைத் தானே அப்படியே பறிகொடுத்தது ! ஆனால் இன்று?

நினைத்துப் பார்க்கவே வியப்பாக இருக்கது வெள்ளியம்பலப் புலவனுக்கு! அழகின் மோக மயக் கிலே பித்தானான். உணவு செல்லாமல், உறக்கம் கொள்ளாமல், காதலின் நோய் அவனை வருத்தியது. பிறகு அவளையே மணந்து கொண்டான். அரச வாழ்வு வாழ்ந்தார்கள் கவியரசனும் அந்த ஆடல் அரசியும் ! பூமகள் பிறந்தாள் !

பிறகு? பிறகு ஆண்டுகள் உருண்டன. ஒரு நாள் நிலைக் கண்ணாடியிலே நின்று கூந்தல் திருத்திக் கொண்டிருந்த நீலமணி கணவனிடம் கண்ணீரும் பதற்றமுமாக ஓடோடியும் வந்தாள்; கூந்தலில் எங்கோ ஓர் ஓரத்தில் நிலாக் கீற்றுப் போல ஒரு நரை தோன்றியிருந்ததைக் கணவனிடம் காட்டினாள். அந்த நிலாக் கீற்றை ஒரு விநாடியில் கிள்ளி எறிந்து விட்டு நகைத்தான் வெள்ளியம்பலம்.

இப்போது அந்த நிகழ்ச்சி மறுபடியும் நினைவுக் கண்ணாடியிலே தோன்றி நிழல்விட்டது !

ஒரு கீற்றைக் கிள்ளி எறிந்தான். பிறகு சில ஆண்டுகள் விரைந்து ஓடின! கீற்றுவிட்ட முதுமை கூந்தல் முழுதும் வெள்ளிநிலவாகப் பரவியது ! ஏதேதோ கருமேகக் குழம்புகளை எண்ணெயிலே குழைத்துக் கோதிலே தடவிக்கொண்டு நடனம் ஆடினாள் நீலமணி. காலிலே செம்பஞ்சுக் குழம்பு, கூந்தலிலே கருநீலக் குழம்பு, நெஞ்சகத்திலோ என்றும் காலதேவன் பூசிவிட்ட முதுமை ! கால் தள்ளாடியது. குரல் நடுங்கியது. தாளம் தவறிப்


















பாதங்கள் இடறின. அழகு தடுமாறுகிறது என்பதைக் கண்டு கொண்டான் கணவன். நீலமணியும் அதை உணர்ந்தாள். வீடு திரும்பியதும் கணவனை அழைத்தாள் :

"இனி நான் நடனம் ஆடக்கூடாது. பூமகள் அரங்கேறுவதற்கு ஒரு நல்ல நாள் பாருங்கள் !"

இத்தனையும் ஒரு விநாடி வெள்ளியம்பலத்தின் இதய அம்பலத்தில் வந்து நினைவுக் கூத்து ஆடி நின்றன !

அந்தப் பழைய நடன நாடகம், தாயின் வாழ்வில் ஏற்பட்ட வயதின் அபிநயக் கூத்து, தனது மகளின் வாழ்விலே இன்று தொடங்குகிறது என்று எண்ணிப் பார்த்தான் அந்த முதிய தந்தை. கண் கலங்கியது.

பூமகள் ! இனி இவளும் ஒரு நாள் நீலக் கருங்கூந்தலிலே நிலாக் கீற்றைக் காணப் போகிறாள். இனி இவளுக்கும் ஒரு நாள் கால் இடறும். தாளம் தவறும். இளமை தடுமாறும். அழகுக்கு அடி சறுக்கும்.

ஆகா! அழகு என்ற முக அரங்கிலே இளமை என்ற நாடகம் இதுதானா? அழியாத அழகும் முதிராத இளமையும் உலகின் இயல்புக்கு முரண்பட்டவையா?

உள்ளம் துடித்தது. கண்களிலே வெள்ளம் பெருகிற்று. அரங்கு கலைந்து. மக்கள் திரும்பிய தருணத்தில் அந்தக் கூட்டத்திலே அப்படியே கரைந்தான் வெள்ளியம்பலம்.

பூமகள் நடனம் முடிந்து இசை அரங்கிலிருந்து உலக அரங்குக்கு மீண்டு வந்த போது, தகப்பனைக் காணோம் !

## 3

என்றும் அழியாமல் நிலைத்து நிற்பதும், மாறாது திகழ்கிற மங்காத ஒளி நிரம்பியதும், முதிராத இளமை வாய்ந்ததுமான அழகு எங்கே இருக்கிறது. அதனுடைய வடிவம், அதனுடைய மேனி என்ன, என்று தேடிச் சென்றான் அந்த முதுபெரும் புலவன் வெள்ளியம்பலம் !

நடந்தான். நடந்து சென்றுகொண்டே இருந்தான். ஒரு கவிஞனின் நாட்டமும், ஒரு கணவனின் ஆர்வமும், ஒரு தந்தையின் பாசமும் உந்தித் தள்ளத் தேடித் தேடி நடந்தான் வெள்ளியம்பலப்புலவன் அழியாத அழகு எங்கே என்று !

நந்தவனங்களிலே புகுந்தான். மலர்கள். வண்ண வண்ணப் பூக்கள். நான்கு. ஐந்து. பத்து. நாற்பது. ஐம்பது. நாலாயிரம், நாற்பதாயிரம், ஐம்பதாயிரம் வண்ணங்களிலே, வண்ண வண்ண எழிலோடு நறுமணம் கமழப் பூத்து நின்றன! அன்றிரவு அந்த நந்தவனத்து மலர்க் குடிலிலேயே அழகுச் சூழலிலே கண்ணயர்ந்தான்.

ஒரு கனவு. மலர்க் கனவு. வண்ணக் கனவு. பூவண்ணக் கனவு ! எத்தனை பூக்கள்! ஆகா! எத்தனை வண்ணங்கள்!

யாரோ ஒரு பெண். பூவினம் பெண். சிரிக்கும் குரல் கேட்டது. திரும்பிப் பார்த்தான் கவிஞன். தாமரை மலர், செந்தாமரை மலர். முகமும், கையும், காலும் தாமரையாகப் பூத்து வட்ட நகை செய்தது.

"யார் நீ ?" என்று கேட்டான் கவிஞன்.

"நான்தான் தாமரையாள்!"

இன்னொரு சிரிப்புக் கேட்டது. திரும்பிப் பார்த்தான்.

"யார் நீ?"

"நான்தான் அல்லிக் குமரி!"

கையும் காலும் முகமும் எல்லாம் அல்லி மலராக மலர்ந்து நின்றாள் அவள்! பின்னொரு சிரிப்பு. இன்னொரு கன்னி எதிர் நின்றாள்.

"நான்தான் முல்லை" என்று சொல்லி முல்லை மொட்டு அவிழ்வதுபோல ஒரு பூவெண் நகை புரிந்தாள் அந்த முல்லைப் பெண்ணாள் !

சம்பங்கி, கடம்பு, கோங்கு, அரக்கு, நீலம், செங்குவளை, மல்லிகை, செண்பகம் — ஒவ்வொரு மலருமே ஒரு பெண்ணாக நின்று, இளமைக் குரலிலே பேசிப் புன்னகையிலே மலர்ந்து நின்றனர் !

"தாமரையே! எத்தனை அழகாக இருக்கிறாய் நீ! உன் வாழ்வு எத்தனை காலம் ?" என்று கேட்டான் கவிஞன்.

"ஒரு பகல் !"

"அல்லியே! உன்னுடைய மேனி எத்தனை எழிலாகத் திகழ்கிறது! உன் வாழ்வு ?"

"ஓர் இரவு !"

இப்படியே செண்பகம், கடம்பு, கோங்கு, மல்லிகை, அரக்கு ஆம்பல், செவ்வந்தி — எல்லா மலர்களும் மறுமொழி பேசின.

ஒரு நாள், ஓர் இரவு, முப்பது நாழிகை, அறுபது நாழிகை — என்று சொல்லும் போதே பூக்களின் அந்தப் பெண்மைக் குரல் நலிந்து மறைகிறது !

நந்தவனத்தி லிருந்து எழுந்தான் வெள்ளியம்பலம். அப்போது அந்த வனம் முழுதும், பூஞ்செடிகள் அனைத்தும் ஒருமித்து, ஒரே மொத்தமாகக் கூட்டு நகை, பூநகை செய்தன! அவற்றின் வாழ்நாள் ஒரு வசந்தகாலம் !

எழுந்தான் வெள்ளியம்பலம்! நடந்தான். பறவைகளின் கீதத்தை இசைத்துக் கொண்டே வந்தது தென்றற்காற்று. அந்த இன்னொலி, ஒலிக்கும் போதே மடிந்து காற்றோடு காற்றாய்ப் போகிறது! சந்திரன் — வளர்ந்தான்; தேய்ந்தான். ஓடையின் தண்ணீர் — பாடிக் கொண்டே ஓடியது. அதைக் கையிலே பிடிப்பதற்குள், அந்தப் புனல் ஓடிவிட்டது. அதைத் துரத்திக் கொண்டு யாணர் யாணராகப் புதுப் புனல் வந்தது ! எல்லாம் ஓடி ஓடிக் கடலிலே போய் மடிந்து மாண்டு ஒரே உப்புத் தண்ணீராகக் கைத்தது !

மின்னல் — வெட்டுகிறது; வெட்டிக் கொண்டே சாகிறது. வானவில்? — இதோ ஏழு வண்ணங்களோடு ஒளியாக விளைகிறது; எதிரிட்டுப் பார்ப்பதற்குள் மடிந்து மறைகிறது !

வெள்ளியம்பலம் தன்னைச் சுற்றி நின்ற அகில சராசரத்தைப் பார்த்தான். அவனுக்குத் தலை சுற்றியது !

## 4

எங்கே விரைகிறோம், எங்கே படர்கிறோம் என்ற சிந்தனையே சற்றும் இல்

## ரொம்பப் பெரிதும் அல்ல ரொம்பச் சிறிதும் அல்ல





# 1½ டன் எடை சாமான் ஏற்றும்

# பார்கோ D-300

சிறிய வண்டிகளிலே பெரிது; பெரிய வண்டிகளின் உழைப்பு. சுருங்கச் சொன்னால் நடுத்தரமான நல்ல வண்டி பார்கோ D-300. அதிகச் சாமான்களை ஏற்றிச் செல்ல அடக்கமான வண்டி பார்கோ D-300. சாலைகளிலே சங்கடமில்லாமல் ஓட்டவும் போக்கு வரத்து நெரிசலைச் சுலபமாகச் சமாளிக்கவும் பொருத்தமான வண்டி பார்கோ D-300. பிக் அப்-வான், டெலிவரி வான், ஸ்டேஷன் வாகன், ஆம்புலன்ஸ் ஆகிய எந்த விதத்திலும் உபயோகிக்கலாம் நகரத்திலும் அதன் சுற்றுப்புறங்களிலும் ஆட்களையும் சாமான்களையும் குறைந்த செலவில் ஏற்றிச் செல்ல இணையற்ற வண்டி பார்கோ D-300.

*சக்தி மிக்க 28.35 H.P. பெட்ரோல் என்ஜின் ● 3,112 மிமீ (123") WB அல்லது 3,366 மிமீ (133") WB ஆகிய இரண்டில் விருப்பமானதைத் தேர்ந்தெடுக்கலாம் ● சுலபமாகவும் விரைவிலும் ரிப்பேர் செய்ய பானெட் திறப்பு வசதி.*

* (பிரிமியர் ஆட்டோமோபைல்ஸ் தயாரிப்பு)

வாமல் நடந்தான் வெள்ளியம்பலம்! பகலும் இரவும் மாறுபாடு இல்லாத கானக வழியிலே நடந்தான். வெயிலின் அனல் தீயாகக் கடுகிற கற்பாறை படர்ந்த மலைப் பாங்கான குன்றுவெளி களிலே நடந்தான். கடற்கரைப் பட்டினங்கள், மனித நடமாட்டமில்லாத மணற்பரப்பு, பாலைவனம், மணல் மேடுகள், பள்ளத்தாக்குகள் — எங்கெங்கோ நடந்தான் வெள்ளியம்பலம்.

எத்தனையோ பல குகைகள், குகை ஓவியங்கள், கோவில்கள், கவரோவியங்கள். மகேந்திரவர்ம பல்லவன், நரசிம்மன், ராஜசிம்மன் — இவர்கள் காலத்து வண்ண ஓவியங்களையெல்லாம் பார்த்தான். காலத்தின் நகக் குறி பட்டு அந்த ஓவிய மேனிகள் எல்லாம் கண்ணீர் வடித்தன. மனிதனுடைய அறியாமையும், மனித சமுதாயத்தின் பகைமைப் பூசலும் சேர்ந்து, அழகோடு செய்த போரின் பயங்கர விளைவு. அந்த எழிலோவியங்கள் எல்லாம் தேய்ந்தும் மறைந்தும், மாண்டும், மாண்டு கொண்டும் நின்றன! காலத்தின் வேகத்திலே மங்கியும் மட்கியும் உலர்ந்தும் சிதைந்தும் அந்தச் சித்திரங்கள் எல்லாம் சித்திரவதைக்கு உள்ளாகி நிற்பதைப் பார்த்ததும், வெள்ளியம்பலம் கதறி அழுதான்! இப்போது ஆள்கிற நாயக அரசர்கள் செய்து நிறுத்துகிற, நிறுத்தப் போகிற ஓவியங்களும் இதே நிலையைத் தான் அடையுமா?

அழுது புலம்புகிற இதயத்தோடு காலம் என்ற காட்டிலே மேலும் நடந்தான் வெள்ளியம்பலம்! சிற்பங்கள், கற்சிலைகள், ராஜராஜன், ராஜேந்திரன், சுந்தரபாண்டியன், பராக்கிரமன் — இப்படிப் பலர், பலப்பலர், மன்னாதி மன்னர்கள் ஆக்கி நிறுத்திய அழகு வடிவங்கள்: செம்பிலும் கல்லிலும் மூக்கு இழந்தவை, முகவாய் போனவை, தலை விழுந்தவை, கை முறிந்தவை, கால் ஒடிந்தவை! ஐயோ! இப்போதுள்ள நாயக மன்னர்கள் எத்தனை ஆர்வத்தோடு அழகுக்கு வழிபாடுசெய்கிறார்கள்! விஜய ரகுநாதனும், அவனுடைய முன்னோர்களும், இனி அவனுக்குப் பின்னே வரப் போகும் மன்னர்களும் கல்லிலும், செம்பிலும், வண்ணங்களிலும், உளியிலும், இறுதியிலும் செய்துள்ள, செய்கிற, செய்யப் போகிற கலைவழிபாடு — அவற்றின் கதியும் இதுதானோ?

மேலே நடந்தான் வெள்ளியம்பலம். இலக்கிய மேடைகள், பட்டி மன்றங்கள் — பேசும்போதே, அந்த ஓசையின் பிறப்பிலேயே, அந்தப் பேச்சின் ஒலியும் ஒடுங்கி விடுகிறது!

இசைவாணர்கள் — பாடும் போதே, அந்த இசையொலி எழுந்தபோதே, அது காற்றிலே நலிந்துவிடுகிறது!

நூல் நிலையங்கள் — கறையானும், புனலும், பகைமை நெருப்பும், அறியாமை இருளும் சேர்ந்து எத்தனை நூல்கள் மறைந்து போய்விட்டன! இனி இவை அழிக்காமல் விட்டு வைக்கிற சுவடிகளை மனிதனுடைய இறுமாப்பும், உதாசீனமும், மடமையும் சேர்ந்து அழிப்பதற்குப் போட்டி போடுகின்றன!

கண் கலங்க, உள்ளம் துடிக்க, உடல் எல்லாம் பதற மேலே மேலே நடந்தான் வெள்ளியம்பலம்!

## 5

திரிசிரபுரம் அது! எங்கிருந்தோ தெய்விகமான ஞான ஒலி கேட்கிறது. திருமூலரின் மரபிலே வந்த மௌன குருவின் மடத்திலிருந்து வருகிறது அந்தக் குரல்! ஞானத்தின் எழிலோடு பேசுகிற ஆன்மாவின் பேச்சு, அழிவற்ற ஆன்மாவின் நிலையான பேச்சு அது!

தாயுமானவரா அது? நாயகமன்னனுடைய அவையிலிருந்து விலகி மௌன தேசிகரின் சீடராகத் துறவு பூண்டு நிற்கும் தாயுமான அடிகளா அது?

அடியார்களின் திருக் கூட்டம் கோவிலை நோக்கிச் செல்கிறது. அகிலாண்ட நாயகியின் திருக் கோவிலை நோக்கி நடக்கிறார்கள் துறவிகளும், சீடர்களும்.

வெள்ளியம்பலம் மனம் ஒன்றி மேலே நடந்தான்!

திருவானைக்கா! கோவிலிலே பல்லியங்கள் எழுந்து ஒலிக்கின்றன. மத்தளம் இயம்புகிறது. யாரோ ஒரு பெண் பாடுகிறாள். யாரோ ஒரு பெண்ணா?

வெள்ளியம்பலம் திகைப்பு அடைகிறான். அவனுடைய முதிய விழிகளிலே அன்போடு அறிவும், பாசத்தோடு ஞானமும் இணைந்து கசிந்து கண்ணீராக வடிகின்றன.

அகிலாண்டநாயகியின் கோவிலிலே நடன மண்டபத்தில் பூமகள் நாட்டியம் ஆடுகிறாள்!

ஆம்; வெள்ளியம்பலப் புலவனின் மகள் அகிலாண்டநாயகியின் திருவிழாவிலே நடனம் ஆடுகிறாள். தாயுமான அடிகளின் ஞானப் பாடல் ஒன்றை யாரோ ஒரு முதிய பெண் தன்னை மறந்து பாடுகிறாள். யாரோ ஒரு முதிய பெண்ணா? வெள்ளியம்பலம் தனது முதிய விழிகளை அகலத் திறந்து பார்க்கிறான். ஞானக் கனிவு பழுத்த குரலிலே நீலமணிதான் பாடுகிறாள்:

**அகிலாண்ட கோடி ஈன்ற**
**அன்னையே! பின்னையும்**
**கன்னி என மறை பேசும்**
**ஆனந்த ரூப மயிலே!**

அகிலாண்டகோடி யெல்லாம் பெற்றெடுத்த அன்னை அவள். அகிலாண்டேசுவரி! ஆனாலும் அந்த அன்னையாம் அன்னையை வேதங்கள் எல்லாம் 'கன்னி' என்று பேசுகின்றன! அவளுடைய ஞானமா எழிலைக் கண்டு, மாறாத இளமையை நோக்கி வியந்து வியந்து 'கன்னி' என்று துதிக்கின்றன! அப்படிப் பட்ட ஆனந்தரூப மயில் அவள். அந்த ரூபத்துக்கு, அந்த ஆனந்தத்துக்கு, அத்தகைய மயிலுக்கு முதுமை இல்லை. என்றும் இளைய, என்றும் அழகிய, நித்திய கன்னி எங்கள் அன்னை! அழியாத அழகு என்று ஒன்று உண்டா? ஆம். உண்டு — ஆனந்த ரூப மயில்!

வெள்ளியம்பலப் புலவனுடைய மனத்தின் சக்கரம் அப்படியே ஊழி ஊழிக் கால வேகத்திலே சுழல்கிறது. அண்ட பிண்ட சராசரங்கள் எல்லாம் சுழல்கின்றன. அந்தச் சுழற்சியிலே மாறாத, முதிராத, அழியாத அழகு, நிரந்தரமாக நின்று ஞானப் புன்முறுவல் பூத்தது! மலர்கள், நந்தவனங்கள், வானவில், சிற்றோடை, ஓவியம், சிற்பம், காவியம் எல்லாம் அந்தப் புன்முறுவலிலே மையமாக வைத்துப் பூத்தன, சிரித்தன, உலர்ந்தன, பிறந்தன, மறைந்தன, மீண்டும் பிறந்தன, மீண்டும் பூத்தன, சிரித்தன!

''கண்ணுக்குத் தெரியாத நிறம், காதுக்குக் கேட்காத ஒலி, நாவுக்கு எட்டாத சுவை, நுகர்ந்து பார்க்க முடியாத நறுமணம் — இத்தனையும் ஒருங்கே இணைந்த அழகு ஒன்று உண்டு! ஐம்புலன்களுக்கும் அப்பாற்பட்ட அந்த அழகு என்றும் அழியாதது. என்றும் முதிராதது. என்றுமே மாறாதது. அதுவே கடவுள்! அதுவே மறை பேசும் மயில்!''

இவ்வாறு அடிகளின் திருக்கூட்டத்திலிருந்து ஒரு ஞானக் குரல் ஆனந்த ரூப மயிலின் அழியாத அழகுக்குத் தோத்திரம் சொல்கிறது.

நடன அரங்கிலே அபிநய ஓவியமாக எழுந்து நின்ற அந்த ஆன்ம தேகத்திலே கட்டுண்டவனாக, ஆர்வம் பொங்கக் கோவில் மண்டபத்துக்குள் நுழைந்தான் பூமகளின் தந்தை வெள்ளியம்பலப் புலவன்!



# ஹேரா 'கேச்வா!



"உங்க கிராப் சகிக்க வில்லை! பழைய நாகரிகம் எவ்வளவு உயர்ந்தது! கட்டுக்குடுமி இருந்தா எவ்வளவு நன்றாயிருக்கும்! போதும் இந்தக் கிராப். உங்க கிராப் தலையோடு உங்கள் கூட வர எனக்கு வெட்கமாயிருக்கு" என்றாள் ஒரு மனைவி



'இது என்னடா அதிசயம்? குடுமிதான் இப்ப அவசரத் தேவை. கிராப் ஒழிய வேண்டும் என்று எல்லா மனைவிமார்களும் அபிப்பிராயப்படுவது தெளிவாகிறதே!'



'மனைவிமார்கள் கட்டுக்குடுமிக்கு ஆசைப்படும் போது நாம் இந்தக் கிராப்பை ஒழிக்கத்தான் வேண்டும்' என்றார்கள் கணவன்மார்கள்!

கிராப் போய் குடுமியோடு ஆண்கள் நடமாடுவது கண்டு பெண்கள் அதன் வளர்ச்சியை எதிர் பார்த்திருந்தனர்.



குடுமி ஏராளமாக வளர்ந்து அறுவடை சமயமும் நெருங்கியது. மனைவிகள் பூரித்துப் போனார்கள்.



வழுக்கைத் தலைக் காரர்கள், நாட்டில் பழைய நாகரிகம் திரும்பச் செய்யத் தங்களால் ஏதும் உதவி செய்ய முடியவில்லையே என்று ஏங்கினார்கள். குடுமி வைத்துக் கொள்ள முடியாமற் போனதால் அவர்களை பெண்கள் நிராகரித்தனர்.



திடீரென்று ஒரு நாள் கணவன்மார்கள் குடுமிகள் எல்லாம் மனைவிமார்கள் கையில் வந்தது! 'ஏமாந்து போனோமே இது சவுரி கோர்க்கும யுகமோ? சேயா! என்றார்கள் கணவன்மார்கள்!





# வசதி

அனுத்தமா

நான் என் அக்காவின் வீட்டுக்குச் சென்றபோது அவள் தீபாவளி அமளியில் மூழ்கித் திணறிக் கொண்டிருந்தாள். ஒரு போர் புதுத் துணி மணிகள் மேலே பாயில் கிடந்தன. அவளோ சோர்ந்து போய்ச் சாய்மான நாற்காலியில் பிழிந்த துணி போல் விழுந்து கிடந்தாள்.

''வா!'' என்றாள் அவள் மலர்ந்த முகத்துடன்.

''ஏன்தான் இப்படி உடலை மாய்த்துக் கொள்கிறாயோ?'' கடிந்தேன் நான்.

''நான் பெரிய கலெக்டர் மனைவி பார், மணி அடித்தால் நடந்துவிடும்! சீ, இனி என்றும் முடியாது'' என்று அலுத்துக் கொண்டாள் அவள். அவள் கண்கள் குழி விழுந்து, ரவிக்கை வேர்வையில் நனைந்து, அவளைப் பார்க்கவே பரிதாபமாக இருந்தது.

''ஏன் சாந்தா, நீயேதான் செய்ய வேண்டுமா? அவரவர்களையே பித்தான் தைத்து இஸ்திரி செய்து கொள்ளச் சொல்லேன்.''

''நீ எப்போது வந்தாய்? உன்னுடன் உன் கணவரும் வந்திருக்கிறாரா?'' பேச்சை மாற்றிவிட்டாள் அவள்.

''என்னைத் திருச்சிக்கு மாற்றிவிட்டார்கள். இன்னும் இரண்டு நாட்களில் அங்கு போய்ச் சேர வேண்டும்.''

''வீட்டை வைத்துக் கொள்ளப் போகிறாயா? காலி செய்து விடேன். தீபாவளிப் பண்டிகைக்கு அவர் இங்கேயே எங்களுடன் இருக்கலாம். பிறகும் உன்னோடு வந்து சேர்ந்து கொள்ளும் வரை இங்கேயே இருக்கட்டும்.''

நான் சிரித்தேன். அவளுக்காகக் காத்துக் கொண்டிருக்கும் வேலைகளின் மீது ஒரு முறை நோட்டம் விட்டேன். பட்சணம் செய்ய மாவு சலித்து வைத்திருந்தாள் ஒரு புறம். கடையிலிருந்து வந்த எண்ணெய், நெய்த் தூக்குகள் அப்படியே இருந்தன.

''இது கிடக்கிறது. குடும்பம் என்றால் ஒரு தொழிற்சாலை மாதிரிதான். நிற்காமல் நடக்கும். நீ எங்கே தங்கப் போகிறாய்?'' என்றாள் அவள், என் நோக்கமறிந்து.

''பெரிய கலெக்டர் மனைவி ஒருத்தியுடன்!'' என்று கூறிக் கலகலவென்று சிரித்தேன் நான்.

''ஓகோ, நம் யோகம், அங்கு இருக்கிறாள் அல்லவா?''

''ஆமாம். அவளும் பதில் போட்டு விட்டாள். தீபாவளிக்கு அவளுடன் இருக்க வேண்டுமாம். வீடுகளும் நாலைந்து பார்த்து வைத்திருக்கிறாளாம். போய் ஏதாவது ஒன்றில் குடிபுக வேண்டும். அதுவரை அவளுடன்தான் இருப்பேன். மணி அடித்தால் எல்லாம் நடக்கும். அப்படித்தானே?''

''ஆமாம். அதற்கும் வசதி வேண்டாமா? நீ ஒரே ஒரு குழந்தையைப் பெற்று, அதையும் விடுதியில் விட்டு விட்டு, ஊர் ஊராய்த் திரிகிறாய். குடும்பத்தின் மேடு பள்ளங்கள் உனக்கு என்ன தெரியும்?''

''இதோதான் தெரிகிறதே? வேலையெல்லாம் மேட்டுக் கிடக்கிறது. உன் கண் நாளுக்கு நாள் பள்ளத்துக்குள் புதைகிறது.''

''வசதி வேண்டாமா? எட்டுக் குழந்தைகளை வைத்துக் கொண்டு குடும்பம் நடத்துவது சர்க்கஸ் வித்தை மாதிரி இருக்கிறது. பண்டிகைகள் கொண்டாடுவது கூடச் சிரமமாக இருக்கிறது. அதற்காகக் குழந்தைகளுக்கு எதைக் குறைக்க முடியும்? பெண் பெரியவள்தான். ஆனால் அவள் வேலைக்குப் போகிறாள். வந்தவுடனே பாடம் சொல்ல இரண்டு வீடுகளுக்குப் போய் விடுகிறாள். பெரியவன், சங்கர் டைப் அடிக்கப் போகிறான். அவர்கள் அப்பா வீடு வரவே மணி எட்டாகிறது. வேலை செய்து நாலு காசு சம்பாதிக்கக் கூடியவர்கள் அதற்குப் போய் விடுகிறார்கள். மற்றவர்களுக்கு விளையாட்டுப் புத்தி.''

''பெரியவளை வேலைக்கு அனுப்பாமல் வீட்டில் வைத்துக் கொள்ளலாம். எப்படியும் அவளுக்கு இந்த வருஷம் கல்யாணம் செய்ய வேண்டும் என்றாயே. வீட்டு வேலைகளைத் தெரிந்து கொள்ளட்டுமே?''

''வசதி! வசதி எங்கே? அவரவர்கள் கொண்டு சேர்த்தால்தான் மேல் படிப்பு, கல்யாணம், துணி மணி, சாப்பாடு எல்லாம்.''

நான் எழுந்து கொஞ்சம் துணிகளுக்கு இஸ்திரி போட்டேன்.

''தையல்காரனுக்குக் கொடுக்காமல் மிச்சப்படுத்துகிறாயாக்கும்? வைத்தியனுக்குக் கொடுப்பாய், கடைசியில்'' என்று முணு முணுத்தேன் நான்.

''பத்து நாள் படுக்க வசதி ஏது? நிற்க நேரமிருந்தால்தானே ஜுரமாய்ப் படுக்க?....'' என்று சாந்தா பேசிக் கொண்டே இருந்தாள்.

காய்ச்சல் வருவது கூட ஒரு வேலை போல் அவள் பேசியது எனக்குச் சிரிப்பாக இருந்தது.

அவள் என்னைப் பற்றிப் பல விஷயங்களை விசாரித்தாள். தன்னைப் பற்றிச்

சொன்னாள். வெகு நேரம் கழித்துத் தான் நான் வெம்பினேன்.

''இங்கேயே வந்துவிடச் சொல். உடம்பு சரியில்லாத மனிதன், தனியாக இருக்க வேண்டாம்'' என்று பல முறை சொன்னாள் சாந்தா.

என் கணவருக்கு நீர் வியாதி. தினமும் தானே ஊசி போட்டுக் கொள்வார். ஆகார நியமம் வேறு.

நான் திருச்சிக்கு வந்து விட்டேன். யோகம் என்னை அன்போடு வரவேற்றாள். அவள் கணவன் கிருஷ்ணமூர்த்தி இந்த ஊர்க் கலெக்டராக மாற்றலாகி இரண்டு வருடங்களாகி இருந்தன.

இங்கு வந்தது முதல் எனக்கு என் அக்கா நினைவேதான். இங்கே வசதி நிறையத்தான் இருந்தது. யோகம் வாயைத் திறந்து பேச வேண்டிய அவசியமே இல்லை. எல்லாம் இயந்திரக் கணக்கில் நடந்தது. யோகம் எப்பொழுதும் அலங்காரமாக விளங்கினாள். ஆடம்பரமின்றி ஆடை உடுத்து எப்பொழுதும் கண்ணுக்கு விருந்தாக இருந்தாள். யோகம் என் சித்தப்பா பெண். அவளும் நானும் ஒரே வயது. ஒன்றாக வளர்ந்து, சேர்ந்து விளையாடி மனம் ஒன்றியவர்கள். ஆனால் அவளுக்குச் சிறு வயதிலேயே கல்யாண மாகிவிட்டது. இன்று ஐந்து குழந்தைகளுக்குத் தாயாக நின்றாள் அவள். நான் சரித்திர ஆராய்ச்சி செய்து, பட்டம் பெற்று இப்போது கல்லூரியில் பேராசிரியை பதவி வகித்தேன், என் கணவருக்கும் அதே போல்தான் வேலை.

''உன் அகத்துக்காரர் எப்போது வருவார்?'' என்று கேட்டாள் யோகம்.

''இரண்டு மாதம் லீவு போட்டிருக்கிறார். அதன் பிறகு அவருக்கும் இங்கேயே மாற்றலாகி விடும்.''



யோகம் அமைதியாக இருந்தாள். அவள் கணவன் கிருஷ்ணமூர்த்தி என் மாமா மகன்.

''ஏ, பாம்! என்ன விஷயம்? உன் கணவரையும் அழைத்து வரமாட்டாயோ? தீபாவளிக்குப் பிரிந்து இருக்கலாமோ?'' என்று ஒரு நாளைக்கு நூறு தடவை கேட்டான் அவன்.

'' 'பாமா' என்று அழகாகக் கூப்பிடுங்கள். 'பாம், பாம்' என்றால் அது வெடித்து விடப் போகிறது!'' என்றாள் யோகம் சிரித்துக் கொண்டே.

''எல்லோருமே என் யோகம் மாதிரி யோகி போல் அமைதியாக இருக்க முடியுமா? 'பாம்' எப்போதுமே கொஞ்சம் 'டைம் பாம்'தான்'' என்றான் அம்மான் சேய். நான் துடுக்காகப் பேசுவேன் என்று எங்கள் குடும்பத்தில் எனக்குப் பெயர்.

நான் கலகலவென்று சிரித்தேன். அவர்கள் இருவரும் பேசிக் கொள்வதும் நடந்து கொள்வதும் காணக் காண இன்பமாக இருந்தன. நான் வீட்டுக்கு வந்து விட்டால் ஒரு நிமிடம் கூட யோகம் கண் மறைவாகப் போய்விடக் கூடாது கிருஷ்ணமூர்த்திக்கு.

''பாமா, பார் உன் அக்காளை. வீடு நிறைய ஆட்கள். அவனவன் வேலையைச் செய்கிறான். இவள் எப்பொழுதும் சமையலறையை விட்டு வெளியே வரமாட்டாள். இவள் வரையில் இந்த இடமெல்லாம் அநாவசியம். ஒரு வீட்டுக்குச் சமையலறையும் சாப்பாட்டுக் கூடமும் இருந்தால் போதும்.''

''என்ன செய்வது? குழந்தைகள் பலகாரம் சாப்பிட உட்கார்ந்திருக்கிறார்கள். பண்டிகைக்காக குலாப் ஜாமூன் செய்யச் சொன்னேன். காரா பூந்தி தேய்க்கிறாள் புதிதாக வந்த அம்மாள். அதைப் பார்த்து விட்டால் இவர்கள் சமையலறையை விட்டு நகர மாட்டார்களே? தோசையை எடுத்துப் போட்டுச் சாப்பிட வைத்து எழுப்பி விட்டு வந்தேன். வேலைக்காரர்கள்தாம் என்ன செய்வார்கள்? மிஞ்சினால் குழந்தைகளை மிரட்டுவார்கள். நான் இருந்தால் இரண்டு தரப்பும் சற்று அடங்கி நடக்கிறது.''

''ஏதோ சாக்கு!''

''என்ன, சொல்லுங்கள்'' என்று கேட்டபடியே யோகம் கணவன் அருகில் அமர்ந்தாள்.

நான் கண் குளிரப் பார்த்தேன். மற்றவர்கள் அசம்பாவிதமாகக் கூடக் கருதுவார்களோ என்னவோ. ஒரு பக்கம் நெருங்கிய தோழி. மறுபுறம் என்னோடு சிறு வயது முதல் பழகிய மாமன் மகன். ஐந்து குழந்தைகளுக்குப் பெற்றோரான மாதிரியே தெரியவில்லை. புது மணத் தம்பதிகள் போல் சேர்ந்து சேர்ந்து அமர்ந்து, பழகி, பேசி, சிரித்து, ஆலோசித்து வாழ்வதைக் காண நன்றாகத்தான் இருந்தது.

''பாமா மிகவும் பெரியவளாகத் தென்படுகிறாள் இல்லையா?'' என்று என்னைப் பற்றிக் கணவனிடம் கேட்டாள் யோகம்.

''அவள் வாத்தியாரம்மாவாயிற்றே? உலகத்தையே பிரம்பெடுத்து மிரட்ட வேண்டியவள். வேறு எப்படி இருப்பாள்? அவள் தன் கணவனோடு பழகும் போது பார்க்க வேண்டுமென்று எனக்கு ஆசையாக இருக்கிறது. அவர் ஒரு பிரம்பு, இவள் ஒரு பிரம்பு — எப்படி இருக்கும்!''

இருவரும் கலகலவென்று சிரித்தனர்.

நானும் புன்முறுவல் பூத்தேன். ''நீங்கள்தாம் சீக்கிரமே பார்க்கப் போகிறீர்களே?'' என்றேன்.

''இட்லி!'' என்று ஒரு குரலும், 'டக் டக்' என்று குதி உயர்ந்த காலணியின் ஓசையும் கேட்டு நான் திரும்பினேன். கந்தி நின்று கொண்டிருந்தாள். அவளைப் பார்த்து நான் எக்காலமோ ஆகிவிட்டது. அதனால் அவளே அடையாளம் கண்டு கொள்ளட்டும் என்று ஒதுங்கி இருந்தேன். யோகம் முகமெல்லாம் மலர, அகமெல்லாம் குளிர அவளை வரவேற்றாள்.

''கந்தி! ஓடியா, ஓடியா!'' என்று அழைத்தான் கிருஷ்ணமூர்த்தி.

நாகரிக ஆடை அணிந்திருந்தாள் அவள். கையில்லா ரவிக்கை, உயர்ந்த வெளிநாட்டு நைலான் புடவை, புத்தம் புதிய நிழுக் கறுப்புக் கண்ணாடி, கையில் டம்பப் பை. உதட்டில் சாயம். தலை முடி வெட்டப் பட்டிருந்தது.

''இட்லி! நான் இன்று எங்கள் வார்ட் தீபாவளி பார்ட்டிக்குப் போக வேண்டும். கார் கொடுக்கிறாயா? என் கார் ரிப்பேருக்குப் போய்விட்டது. டிரைவர் இருக்கிறானா?''

''டிரைவர் இல்லாவிட்டால் என்ன, நானே கொண்டு விடுகிறேன். உட்கார், வா. பாமாவைத் தெரியுமா?''

கந்தி ஒப்புக்கு ஒரு புன்னகை காட்டி விட்டு, கிருஷ்ணமூர்த்திக்கு அருகில் போய் நின்று கொண்டாள்.

''இங்கே எப்படி வந்தாய்?'' என்று என் மனதில் தோன்றிய கேள்வியை யோகம் கந்தியிடம் கேட்டாள்.

''டாக்ஸியில்தான்.''

அதே டாக்ஸியில் போக வேண்டிய இடத்துக்கே போயிருக்கலாமே? கந்தி வந்து, ஊருக்குத் தள்ளி இருக்கும் கலெக்டர் பங்களாவுக்கு வந்து அவர்களுடைய காரில் போக வேண்டுமா? என் மனம் கந்தியின் போக்கை ஒப்பவில்லை.

''அடி, சக்கை! புதுப் புடவையா? தீபாவளிக்கு முன்பு ஒன்று, பின்பு ஒன்று.

தீபாவளிக்கு என்று ஒரு டஜன் புடவை யாவது வாங்குவாயா?'' என்று கேட்டுக் கிருஷ்ணமூர்த்தி அவள் அலங்காரத்தை ரசித்தான்.

கண்ணுக்கு நன்றாகவே இருந்தாள்—நல்ல அழகிதான் சுந்தி.

''அவனுக்கென்ன? எந்தப் பணக்கார நோயாளியோ பரிசாக அளித்துவிட்டிருப்பார்கள்'' என்றாள் யோகம்.

''ஆமாம், யோகம். போன மாசம் கஷ்டமான பிரசவம் ஒன்று பார்த்தேன் என்று சொன்னேனே? அந்தப் பெண்ணுக்கு அவள் அண்ணன் அமெரிக்காவிலிருந்து அனுப்பிய பரிசு. எனக்குத் தந்துவிட்டாள்.''

சுந்தி வைத்தியத் துறையில் சுடு பட்டிருப்பது இப்போதுதான் என் நினைவுக்கு வந்தது.

சுந்திக்கு நேரமாகி விட்டதாம். அவன் அவசரப்படுத்தினான். கிருஷ்ண மூர்த்தி அவனுக்குச் சாத்தியம் செய்யக் கிளம்பி விட்டான்.

அவர்கள் சென்ற பிறகு, ''நன்றாக அலங்காரம் பண்ணிக் கொள்வாள், டாக்டர் சுந்தியின் அலங்காரத்தைப் பார்க்கவே மனிதர்கள் குழுமிவிடுவார்கள்'' என்றாள் யோகம்.

''டிரைவரை அனுப்பக் கூடாதோ? கிட்டுவே எதற்காகப் போக வேண்டும்? யாராவது பார்த்தால் மதிப்புக் குறைவாக இருக்காதா?''

''ஆனால் அதே சமயம் சுந்திக்கு மதிப்பு அதிகமாகுமே — கலெக்டரே வண்டி ஓட்டிக்கொண்டு விட்ட பெண் மணி என்று?...'' யோகம் சிரித்தாள்.

''இருந்தாலும் கொஞ்சம் கூடப் பண்பாக இல்லை. தன் தொழில் விளம்பரத்துக்காக யாரை வேண்டுமானாலும் பலியிடுவதா?''

''என்ன பாமா, இதில் என்ன பலியும் கிலியும்? — இவர் அதெல்லாம் மதிப்புக் குறைவாக நினைப்பதில்லை. நமக்குக் கூடத்தான் ஓட்டிக் கொண்டு வருவார், இனி பார், நீ குடித்தனம் வைத்து விட்டால், உன்னையும் கூடத் தானே கொண்டு விடுவார். அதில் அவருக்குத் திருப்தி.''

''எனக்கு அதில் அதிருப்தி. நான் ஒருநாளும் கிட்டுவை ஓட்டச் சொல்லிப் போக மாட்டேன். மேலும், உன்னையும் என்னையும் அழைத்துப் போவதும், சுந்திக்கு டிரைவர் வேலை செய்வதும் ஒன்றுதானா?''

யோகம் கண்களை அகல விரித்தாள். ''ஏன்? சுந்தியும் அவருக்கு நெருங்கிய உறவுதானேம்மா? சின்ன வயசில் உன் மாமா வீட்டிலேயே இருந்தானாமே?''

''சுந்தியா? அப்போழுதெல்லாம் எட்டின உறவுதான். என்னைப் பார்த்துத் தெரிந்து கொண்ட மாதிரி கூடக் காட்டிக்கொள்ளவில்லையே எங்கள் 'நெருங்கிய உறவினன்' ?''

''அவனுக்கு அவசரம். பார், மறுபடியும் வந்தால் நன்றாகப் பேசுவான். உன்னைப் பற்றி அடிக்கடி கேட்பானே அவன்?''

''எப்போதுமே இப்படித்தான் அலங்காரமோ? வைத்தியம் செய்பவர்களுக்கு எளிமைதான் முக்கியமே யன்றி ஆடம்பரமல்ல.''

''வசதி இருக்கிறது பாமா. செய்து கொள்கிறான். அடுத்த வாரம் உங்கள் கல்லூரியில் உன் அம்மாஞ்சி தலைமை வகிக்கப் போகிறார். சுந்திதான் பரிசு வழங்கப் போகிறான்.''

''ஓஹோ? இன்று காலை பார்த்தேன். ஓர் அழைப்பிதழ் என் மேஜை மீது கிடந்தது — டாக்டர் சுந்தி ஆனந்தன் என்று. இவன்தானா? நீ பரிசு வழங்குவதற்கு என்ன?''

''எனக்கு அப்போது சௌகரியப்படாது. அதனால்தான் இவர் சுந்தியைக் கூப்பிடச் சொன்னார்.''

நான் யோகத்தை உற்றுப் பார்த்தேன். அவள் அமைதியாகப் பத்திரிகை பார்த்துக் கொண்டிருந்தாள்.

நாள் நான் முழுவதும் கல்லூரிக்குப் போவேன். மாலை வேளைகளில் யோகம், கிட்டு, நான் மூவருமாய் வீடு தேடுவோம். சில சமயம் சுந்தியும் வருவான்.

''கிட்டு, நீயும் யோகமும் என்னோடு கூட ஒவ்வொரு வீட்டிலும் நுழைந்து புறப்படுவது எனக்குப் பிடிக்கவில்லை. இனி நான் மட்டும்தான் போகப் போகிறேன்'' என்று அறிவித்தேன்.

''இவளுக்கென்று ஒரு தனி ரூலே, தனி யோசனைகள்!'' என்றாள் யோகம்.

சீக்கிரமே ஒரு நல்ல வீடு கிடைத்தது. என் கணவருக்கும் எனக்கும் வசதியாகக் கல்லூரிக்கு அண்மையில் இருந்தது. அதையே தேர்ந்தெடுத்தேன். என் கணவரும் வந்து விட்டார். நான் என் குடும்பத்தைத் தொடங்கினேன்.

யோகம் பெரிதும் உதவியாக இருந்தாள். ''பாமா, நீ மிகவும் எட்டத்தில் வீடு பார்த்து விட்டாயம்மா. கிட்டே இருந்தால் நன்றாக இருக்குமே?'' என்று அவள் வருத்தப்பட்டாள்.

''உங்களுக்கென்ன? வசதிக் குறைவா! நினைத்தால் வரலாமே?'' என்றார் என் கணவர்.

நாங்கள் புது வீட்டில் குடி புகுந்ததாலும், புது வேலையில் அமர்ந்ததாலும் இருவருக்கும் பத்துப் பதினைந்து நாட்களுக்கு வேலை சரியாக இருந்தது. யோகமும் கிட்டுவும் ஒரு முறை வந்துவிட்டுப் போனார்கள்.

அவர்கள் அழைப்புக்கு இணங்கி ஞாயிற்றுக்கிழமை மாலையை அவர்களுடன் கழித்து விட்டு வந்தோம். திரும்பும்போது என் கணவர் எனக்கு அந்த உத்தரவை இட்டு விட்டார்.

''பாமா, நீ அடிக்கடி அவர்கள் வீட்டுக்குப் போவது எனக்கு இஷ்டமில்லை. கலெக்டர் உறவு என்று பலரும் நம்மிடம் சிபாரிசுக்கு வந்து நிற்பார்கள். தட்டவும் முடியாது. ஏற்கவும் முடியாது. ஓரளவு ஒதுங்கியே இருக்கப் பழகிக் கொள்.''

யோகத்தைப் பார்க்காமல் எப்படி இருப்பது என்று எனக்குக் குறைதான். ஆயினும் அவர் சொல்லுவதும் நியாயம்தானே?

நான் அடிக்கடி போவதை நிறுத்திக் கொண்டேன். எப்பொழுதாவது பாட்டுக் கச்சேரி, நாடகம் என்று போனால் எங்களையும் அழைத்துச் செல்வார்கள். கூடவே அந்த சுந்தியும் வருவான். 'பாம், பாம்' என்று கிட்டு வைப் போல தானும் அழைப்பான். நான் முகத்தைச் சுளிப்பதையோ என் கணவர் விட்டேற்றியாக இருப்பதையோ அவன் கவனித்ததாகவே தெரியவில்லை. கிட்டுவின் ஒரு புறம் யோகம் அமர்ந்தால், அவன் கட்டாயம் மறுபுறம் இருப்பான்.

''யோகம், சுந்தியின் ஆனந்தன் எங்கே?'' என்று ஒரு நாள் கேட்டேன்.

''அவர்கள் பிரிந்து விட்டார்கள் பாமா. மனம் ஒத்துக்கொள்ளவில்லை. இப்பொழுதுதான் இதற்கெல்லாம் வசதி இருக்கிறதே? பின்னே ஏன் சிரமப்பட வேண்டும்?'' என்றாள் யோகம்.

ஒரு முறை கவர்னர் எங்கள் ஊருக்கு வருவதாக இருந்தது. கல்லூரியில் ஏதோ கட்டடம் அடிக்கல் நாட்டுவிழா ஏற்பாடு செய்திருந்தார்கள். அதன் விஷயமாகக் கிட்டுவிடம் கலந்து ஆலோசிக்க எண்ணி நான் அவர்கள் வீடு தேடிப் போனேன். கிட்டு வீட்டில் இல்லை. யோகம் தலைவலி என்று மாடி அறையில் படுத்திருந்தாள். நான் அவளைப் போய்ப் பார்த்தேன். இருட்டறையில் தலையில் பனிக்கட்டிகளை வைத்துக் கொண்டு படுத்திருந்தாள் அவள்.

''கிட்டு எங்கே?'' என்று நான் கேட்டேன்.

''கவர்னர் வருகைக்காகப் போட்டிருக்கும் விளக்கு அலங்காரங்களைப் பார்க்க அழைத்தார்கள். தலை வலி விஷம் என்னால் போக முடியவில்லை. சுந்தியும் இவரும் போயிருக்கிறார்கள்.''

''சுந்திக்கு அவசரக் கேஸ் ஒன்றுமே வருவதில்லையோ?''

யோகம் பதில் சொல்லவில்லை.

கலகலவென்ற சிரிப்பும் ''கிட்ஸ், கிட்ஸ்!'' என்ற விளியும் வெளியே





**"காலமானவர் என்னுடைய ஆர பந்து. உயிலில் எனக்கு ஏதோ எழுதி வைத்திருப்பதாகக் கேள்வி! என்ன வென்று பார்த்துச் சொல்ல முடியுமா?" என்று கேட்டார் பத்திரிகாசிரியர்.**

**"ஓ! உங்களுக்கு ஒரு கதை எழுதி வச்சிருக்கார்!" என்றார் வக்கீல்.**

---

சென்றிருந்தவர்கள் திரும்பிவிட்டதை அறிமுகப்படுத்தின.

"உன் சுந்திக்கு ஆங்கிலக் கவிகளில் கீட்ஸ்தான் மிகவும் பிடித்தமோ?"

"ஏன் கேட்கிறாய்?"

"கீட்ஸ், ஷெல்லி' என்று என்னவோ கூப்பிடுகிறாளே?"

"கிட்டு என்றும் மட்டும் நன்றாக இருக்கிறதாக்கும்!" யோகம் அந்த வலியிலும் புன்முறுவல் பூத்தாள் எப்படியோ.

நான் கிட்டுவிடம் பேசிவிட்டு வீடு திரும்பினேன். சுந்தி காதுபட "கிட்டு, நீ ஓட்டுவதானால் நான் உன் காரில் ஏற மாட்டேன். உனக்கு உன் மதிப்புத் தெரியாமல் இருக்கலாம். எனக்குத் தெரியும் உன் மதிப்பு. டிரைவர் இருந்தால் அனுப்பு. இல்லேயேல்..." என்றேன்.

என் ஜாடை மாடைக் குட்டெல்லாம் சுந்திக்கு உரைத்ததாகவே தெரியவில்லை. அவள் 'கீட்ஸை' தினமும் தன் இஷ்டப்படி ஆட்டி வைத்தாள்.

அடுத்த முறை யோகம் என் வீட்டுக்கு வந்தபோது சுந்தி வரவில்லை. கிட்டுவும் யோகமும், அவர்கள் குழந்தைகளுமே வந்தனர். நாள் முழுவதும் எங்களுடன் இருந்தனர். குழந்தைகளின் ஆரவாரம் வீடு முழுவதும் இன்ப எதிரொலி எழுப்பியது.

பெரிய பெண் சுஜாதா எதிரே என் கணவருடன் சதுரங்கம் ஆடிக் கொண்டிருந்தாள்.

"கிட்டு, நீ சீக்கிரமே மாப்பிள்ளை தேட வேண்டும் போலிருக்கிறதே?" என்றேன் நான்.

"சீக்கிரம் கல்யாணம் செய்து கொண்டால் இப்படித்தான். யோகத்தைப் பார். அவளே மணமகளைப் போல் இருக்கிறாள். அதற்குள் பாட்டியாக ஏற்பாடு செய்ய வேண்டாம்.. ஆனால், பாமா, எனக்குக் குறைவில்லை. பொறுப்பெல்லாம் சீக்கிரம் முடிந்து விடும். நம் பெற்றோர் இருந்து நடத்தி விடுவார்கள். பிறகு நாம்...நாம்... நானும் யோகமும் தேன் நிலவு கிளம்பிவிடுவோம். என்ன, யோகம்?" என்று கேட்டுவிட்டு மனைவியின் கன்னத்தைத் தட்டினான் கிட்டு.

"எனக்கும் குறைவில்லை. நமக்கும் உடம்பில் தெம்பு இருக்கையில் எதுவும் செய்ய ஆசையிருக்கும்" என்றாள் அவன் மனைவி.

அவர்கள் இருவரும் மனமொத்துப் பேசுவதும், பழகுவதும்.... இந்தக் காட்சி இப்படியே நிலைத்திருக்க வேண்டுமே என்று என் மனம் அஞ்சியது. கிட்டு மெத்தப் படித்தவன். பரத நாட்டியம் முதல் பௌதிக சாஸ்திரம் வரை, விஞ்ஞானம் முதல் மெய்ஞ்ஞானம் வரை நன்றாகப் படித்து அறிவை விருத்தி செய்து கொண்டிருக்கிறான். அழகாகப் பேசுவான். யோகமும் ஒரு விஷயம் பாக்கியில்லாமல் அவனுடன் சரி சமானமாகப் பங்கெடுத்துப் பேசினாள். எனக்கே வியப்பாக இருந்தது. பிறருக்குப் போதிக்கும் தொழிலில் இருந்தும் என் குறிப்பிட்ட வரலாற்று ஆராய்ச்சிக்கு அப்பால் எனக்கு ஒன்றும் தெரியவில்லையே என்று நானே நொந்து கொள்வேன்.

அழகிய காவியம் போன்ற இவர்கள் வாழ்வில் சுந்தியின் நிழல் கரிக்கோடு போல என் இதயத்தை வதைத்தது. யோகம் பிறந்தகமே வரமாட்டாள். புக்ககத்துக்கும் அதிகம் செல்ல மாட்டாள். கணவனோடு வந்து கணவனோடு போய்விடுவாள். பிள்ளைப் பேற்றுக்குக் கூட வருவதில்லை என்று குறைப்படுவார்கள் என் சித்தப்பாவும் சித்தியும். கணவனை விட்டுப் பிரியாத காதல் மனைவி என்று அவளைக் கேலி செய்வார்கள். புன்சிரிப்புக்கு மேலே யோகத்தினிடமிருந்து பதில் வந்ததில்லை. இப்போழுதுதான் உண்மை விளங்குவது போல் நிழல் தட்டியது என் மனசில். அவளைக் கேட்கச் சந்தர்ப்பம் பார்த்துக் கொண்டிருந்தேன் நான். ஒரு நாள் அதுவும் கிட்டியது.

யோகமும் நானும் கோவிலுக்குப் போய்விட்டு அவர்கள் வீட்டுக்குப் போனோம். தோட்டத்தில் ஓர் ஆணும் பெண்ணும் உரக்கச் சண்டையிடுவது கேட்டது.

காரை விட்டு இறங்கினதுமே யோகம் கை மணியை அடித்தாள். சிப்பந்தி வந்தான். "என்ன சத்தம், கவனி" என்று பணித்தாள் யோகம்.

உடனே சத்தம் அடங்கி விட்டது. தோட்டம் கூட்டுபவன் மனைவி இப்படித்தான் அடிக்கடி கூச்சல் போட்டு விட்டுப் பணம் வாங்கிக் கொண்டு போவாளாம்.

"அவர்கள் பாடு நிம்மதி யோகம். கத்தித் தீர்த்து விடுகிறார்கள். நாகரிகம் முற்ற முற்றத்தான் பிரச்னைகள்" என்றேன் நான்.

"ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு வசதி."

"என்னவோ நீயும் என் அக்கா மாதிரியே எப்பொழுது பார்த்தாலும் வசதி வசதி என்கிறாயே?"

"இல்லையா பாமா?"

நான் அறையில் குறுக்கும் நெடுக்கும் அலைந்து கொண்டிருந்தேன். அந்தரங்க விஷயத்தை எப்படித் தொட்டுப் பேச்சைத் தொடங்குவது என்று எண்ணிச் சுற்றி வந்தேன். 'சுந்தி ஆனந்தன்' என்று முகவரி விட்ட உறை ஒன்று மேஜை மீது கிடந்தது.

"ஆனந்தன் உறவைத் துறந்த இவளுக்கு அந்த மனிதனின் பெயர் மட்டும் என்ன தொந்தம்?" என்று பேச்சைத் தொடங்கினேன்.

"உனக்குச் சுந்தி நினைவுதான் எப்போதும்!" என்றாள் யோகம், அமைதியாக.

"சுந்தியாம் சுந்தி! அந்தி என்று மாற்றி வைத்துக் கொள்ளச் சொல்" என்றேன், நான் கோபத்துடன்.

"அவள் நீதி அது" என்று கம்மிய குரலில் யோகம் பேசினாள்.

அதுதான் சமயம் என்று நான் பிடித்துக்கொண்டேன். "யோகம், அவளை நீ ஏன் வீட்டில் வரவிடுகிறாய்? ஊரே பேசிக் கொள்கிறது. உனக்கு மட்டும் கண் குருடா?"

"குருடும் இல்லை, செவிடும் இல்லை, பாமா. வசதி வேண்டாமா, எதற்கும்?"

"என்ன வசதியோ?"

"ஆமாம். தோட்டத்தில் சற்று முன் கத்தினாளே, அப்படிக் கத்த முடியுமா நான்? என்னுடைய ஒவ்வொரு ஆசையையும் கவனித்துப் பேசிச் சிரிக்கப் பக்கம் பக்கமாக ஆட்கள். கத்தித்தான் என்ன பயன்? ஐந்து குழந்தைகள். அவர்களுக்கு வேண்டிய வாய்ப்புக்களைப் பெற வேண்டும் என்று நான் ஆசைப்பட்டால், நான் பொறுமையாகத்தான் இருக்க முடியும். சீட்டாட்டப் பைத்தியம், பந்தாட்டப் பைத்தியம் — இப்படி எத்தனை ஆண் பிள்ளைகள் இல்லை? அவர்கள் மனைவிமார் இல்லையா?"

"அதுவும் இதுவும் ஒன்றா?"

"எனக்கு அப்படித்தான் தோன்றுகிறது. அவர் என்னிடம் அன்பாக இருக்கிறார். அதை நீடிக்க வைக்க நான் எந்தத் தியாகமும் மேற்கொள்ளத் தயார். மாவட்டத்துக்கே அதிகாரி அவர். நான் அவரை நிராகரித்தால் உலகம் அவரை மதிக்குமா? இப்பொழுது கேட்டுப்பார், 'டாக்டர் சுந்தி நடந்து கொள்வது நன்றாக இல்லைதான். ஆயினும் ஒன்றும் தவறான உறவு இராது. இருந்தால், அவர் மனைவியே கூடக் கூட வருவாளா?' என்றுதான் உலகம் சொல்லும். அவர் பதவிக்காக அவர் எவ்வளவோ பொறுப்புக்களை ஏற்க வேண்டியிருக்கிறதே? என் பதவிக்கு நானும் சில கோட்பாடுகளைக் கொள்ள வேண்டியதுதானே?"

யோகத்தையே பார்த்துக் கொண்டு நின்றேன் நான், வாயடைத்து. எதிரே தொங்கின அவர்கள் குடும்பப் படத்தைப் பார்த்தேன்.

ஆமாம், யோகத்துக்கு வசதி இல்லை தான். அவரவர் வசதிக்குத் தகுந்த மாதிரிதான் வாழ முடியும். சுந்திக்கும் குடும்பப் பொறுப்பில்லை. அவள் கணவனை விட்டுப் பிரிந்து விட்டாள். நான் சுகமாக இருக்கிறேன். அந்த நிறைவில் பேசுகிறேன்.

அன்று முதல் யோகத்தை நான் தெய்வமெனக் கருதினேன். மனித உணர்ச்சிகளை உணர்ந்து, விவேகத்தோடு ஒரு குடும்பத்தின் நலனுக்காகத் தன்னலம் மறந்தாள் என்ன? ஒரு பட்டிக்காகத்தான் பாடுபட்டாள் என்ன! இரண்டுமே ஒன்றுதான் என்று எண்ணி அவளை வணங்கியது என் மனம்.


If paper sarees
are made in India
it is just possible
West Coast paper
might
wrap you up
nicely
WEST COAST PAPER
FOR WRITING
PRINTING
PACKAGING
WEST COAST PAPER, SHREENIWAS HOUSE, WAUDBY ROAD, BOMBAY 1





# மனம் பூஞ்சைதான்!




உமாசந்திரன்

"புதன்கிழமை பிளேனில் சென்னை வருகிறேன். கட்டாயம் விமான நிலையத்துக்கு வரவும். — கேதாரி."

தந்தியின் வாசகம் சுருக்கமாக இருந்தது. நாலாயிரம் மைல்களுக்கு அப்பாலிருந்து அனுப்பப்பட்ட தந்தியாயிற்றே! ஆனால் அப்படித் தந்தி அடிப்பதற்கு என்ன நெஞ்சழுத்தம் இருக்க வேண்டும் கேதாரிக்கு! காலம் என்பது எத்தகைய மனப் புண்ணையும் ஆற்றக் கூடிய மருந்தாயிருக்கலாம். ஆனால் அவன்வரை அப்படி இல்லையே! ஆறு வருஷங்கள்! நீண்ட காலம்தான்! ஆனால் அன்று கேதாரி அவன் மனத்தில் கட்டெரிக்கும் செந்தழலைக் கொட்டிவிட்டுச் சென்றது இன்னும் ஆறாத பச்சைப் புண்ணைப் புரையோடிக் கொண்டிருக்கிறதே! மறுபடியும் அதைக் கிளறி விடும் விதத்தில் இந்தத் தந்தி!

கேதாரியின் நெஞ்சழுத்தம்! அதை நினைக்க நினைக்க ஆத்திரம் பொங்கியது வாசுவின் மனத்தில். தந்தியின் வறண்ட வாசகத்தில் என்ன உள்ளர்த்தம் காண நினைத்தானோ! மீண்டும் மீண்டும் அந்த வரிகளையே படித்துக் கொண்டு பிரமை பிடித்தவன் போல் உட்கார்ந்திருந்தான்.

எவ்வளவோ வெள்ளை உள்ளத்துடன் வாசு அவனிடம் காட்டிய அன்பை எவ்வளவு கடுமையாகத் தேய்த்து மிதித்து விட்டுப் போய்விட்டான் அந்தக் கேதாரி! "ஆறு வருஷங்களாக ஒரு வரி கூட எழுதவில்லை; இப்போது இந்தத் தந்தி என்ன வேண்டியிருக்கிறது!" என்று பொரிந்தாள் அவன் மனைவி கமலா.

வழக்கம் போல் அன்று மாலை கிளப்புக்குப் போவதாகச் சொல்லிவிட்டுக் கிளம்பிய வாசு நெடுநேரம் வரை வீடு திரும்பவில்லை. "'விருந்தாளி வந்தாலும் வரலாம். நல்ல சமையலாகச் செய்து வை" என்று சமையல் ஆளிடம் சொல்லிவிட்டு ஹாலில் வந்து உட்கார்ந்திருந்தாள் கமலா. ஒன்பது மணித் தறுவாய்க்கு டெலிபோன் மணி அடித்தது. எடுத்த எடுப்பிலேயே வாசுவின் குரல் கமலாவின் காதில் ஒலித்தது.

"விமான நிலையத்திலிருந்து பேசுகிறேன். விமானம் சரியான நேரத்துக்குத்தான் வருகிறதாம்!"

ஒன்பதரை மணிக்குச் சற்று முன்னதாக அவர்கள் வீட்டுக்கு மேலே ஜெட் விமானம் பறந்து செல்லும் இரைச்சல் கேட்டது. கேதாரி அதில்தான் தாய் நாடு திரும்பி வந்து கொண்டிருக்கிறான். இன்னும் சில நிமிஷங்களில் விமானம் தரையைத் தொட்டுவிடும். கேதாரியும் வாசுவும் மீண்டும் சந்திக்கப் போகிறார்கள். அந்தச் சந்திப்பு எப்படி இருக்குமோ! ஆறு வருஷங்களுக்கு முன்னால் கிளம்பி அடங்கிய புயலைப் போல் மீண்டும் ஒரு புயல் கிளம்புவதற்கான ஆயத்தமா இதெல்லாம்!

ஆறு வருஷங்களாக அந்தப் புயலின் கொந்தளிப்பு வாசுவின் மனத்தில் அடங்கவில்லை, என்பது கமலாவுக்குத் தெரிந்த விஷயம்தான். ஆனால் அவ்வளவு கொந்தளிப்பையும் அடக்குவதற்குக் கேதாரியிடமிருந்து வந்த ஒரு சிறு தந்தியே போதுமானதாகிவிட்டதே! இப்படி ஒரு பூஞ்சை மனமா? பூப்போன்ற அந்த மனத்தை இன்னும் எப்படியெல்லாம் குதறி எறியப் போகிறானோ கேதாரி!

பார்க்கப் போனால் அப்படியெல்லாம் வாசுவைத் துன்பப்படுத்துவதற்கு கேதாரிக்கு என்ன உரிமை இருந்தது? கூடப் பிறந்த தம்பியா என்ன, எவ்வளவு கீழே போட்டு மிதித்தாலும் தலைமேல் தூக்கி வைத்துக் கொண்டு கூத்தாடுவதற்கு? எப்போதோ கேதாரியின் தகப்பனார் வாசுவின் வாழ்க்கைக்கு வழிகாட்டி விட்டார் என்பதற்காக ஆயுள் முழுவதும் கேதாரிக்கு அடிமைப்பட்டிருக்க வேண்டுமென்று கட்டாயமா? கேதாரியின் தவறுகளைக் கமலா சுட்டிக் காட்டும் போதெல்லாம் வாசுவின் சமாதானம் அதே ரீதியில்தான் இருக்கும்.

"உனக்குத் தெரியாது கமலா. நான் இப்போது ஓர் ஆளாக இருக்கிறேன் என்றால் அதற்குக் காரணம் கேதாரியின் தகப்பனார்தான். இந்தப் பங்களா, இந்தக் கார், இந்த ஆள்கட்டு, இந்தச் செல்வச் செழிப்பு, எல்லாவற்றுக்கும் மேல் நீ! — இதெல்லாம் யார் போட்ட பிச்சை என்று நினைக்கிறாய்? ஐந்து வயதிலேயே பெற்றோரைப் பறிகொடுத்து விட்டு, ஆதரவற்ற அனாதையாய் நான் அலைந்துகொண்டிருந்தேனே, அப்போது என்னை அரவணைக்க முன்வந்த கரம்

கேதாரியின் தகப்பனுருடையதுதான் என்பதை நான் எப்படி மறக்க முடியும்?''

இருக்கட்டுமே! அதற்காகக் கேதாரி செய்யும் அக்கிரமங்களை யெல்லாம் சகித்துக்கொண்டிருக்க வேண்டும் என்று என்ன தலையெழுத்து? என்னவெல்லாம் அட்டகாசம் செய்வான்! எப்படியெல்லாம் தூக்கி யெறிந்து பேசுவான்! படிக்கும் படி வாசு நிர்க்கதியாய்த் திண்டாடிய நாட்களைச் சுட்டிக் காட்டி அவனை அவமானப்படுத்துவானே! அவ்வளவையும் துடைத்துப் போட்டுவிட்டு வாசு ஒன்றுமே நடக்காதது போல் கேதாரியிடம் குழைந்து குழைந்து பேசுவதைப் பார்த்துக் கமலாவுக்கு எவ்வளவு ஆத்திரம் பொங்கும்!

''நாலுபேர் எதிரில் உங்களைக் கண்டபடி அவமானப்படுத்த இவனுக்கு என்ன துணிச்சல்? 'உனக்கும் எனக்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது' என்று விரட்டியடிப்பதற்கு என்ன?'' என்று கூறுவாள்.

''கேதாரியின் நிலைமையை நாம் புரிந்துகொள்ள வேண்டும் கமலா. நம்முடைய ஆதரவில் இருப்பதனுல் அவனை நாம் அலட்சியம் செய்துவிடுவோமோ என்ற தாழ்வு மனப்பான்மைதான் அவனை இப்படியெல்லாம் நடந்து கொள்ளத் தூண்டுகிறது. அவனை நிர்க்கதியாய் நிறுத்தியது அவனுடைய தகப்பனுரின் உதார குணம்தானே! ஊருக்கெல்லாம் உதவி செய்தார். என்போன்ற எத்தனேயோ அநாதைப் பிள்ளைகளைக் கை தூக்கிவிட்டு ஆதரித்தார். ஆனுல் சொந்தப் பிள்ளை தலையெடுக்க வேண்டிய சமயத்தில் கை தளர்ந்துப் போனுர்.''

கேதாரியின் தகப்பனுர் சிவசாமிக்கு வாழ்வில் சறுக்கல் ஏற்பட்டபோது உள்ளமே உடைந்து போயிற்று. அதுவே அவரது உயிரையும் குடித்துவிட்டது. மரணப்படுக்கையில் கிடந்தார் சிவசாமி. அந்த நிலையில்தான் அவர் தமது ஒரே மகன் கேதாரியைப் பற்றிக் கூறினுர். தாயை இழந்த பிறகு கேதாரி வீட்டில் நிலைக்காமல் எங்கெங்கோ தத்தாரியாய்ச் சுற்றிக் கொண்டிருந்தானென்றும், அவன் எங்கிருந்தாலும் தேடிக் கண்டு பிடித்து அவனை வாழ்க்கையில் நிலைப்படுத்துவது வாசுவின் கடமை என்றும், இந்த விஷயத்தில் வாசு தன்னைக் கேதாரியின் கூடப் பிறந்த தமையனுகவே கருதி நடந்து கொள்ள வேண்டுமென்றும், மரணப் படுக்கையிலிருந்து மீண்டும் மீண்டும் மன்றுடியவாறே இருந்தார் சிவசாமி. அவர் கண்



முடிவதற்குள்ளேயே கேதாரியை வரவழைப்பதில் வெற்றி கண்டு விட்டான் வாசு. குறிப்பிட்ட விலாசத்துக்குக் கேதாரி உடனே வந்தால் எல்லா வசதிகளுடனும் இருக்க முடியும் என்று பத்திரிகைகளில் வாசு கொடுத்த விளம்பரம் விரைவிலேயே பலனளித்தது. கேதாரி வந்து சேர்ந்தது மட்டுமல்ல; எடுத்த எடுப்பிலேயே அந்த வீட்டுக்கு முழு உரிமையும் உடையவன் போல் நடந்து கொள்ள ஆரம்பித்து விட்டான்.

மகனை மீண்டும் பார்த்த மகிழ்ச்சியுடன் அவன் கையை வாசுவின் கையோடு சேர்த்து வைத்து, "வாசு, உன் பொறுப்பில்தான் என் ஒரே பிள்ளையை விட்டுச் செல்கிறேன். இவன் எப்படி நடந்து கொண்டாலும், என்ன தவறு செய்தாலும் இவனை மன்னிப்பது உன் கடமை. இவன் வாழ்க்கையில் வேரூன்றும் வரை இவனைக் கைவிடாமல் காப்பாற்றி வருவதாக எனக்கு வாக்குக் கொடு. அப்போதுதான் நான் அமைதியுடன் கண் மூட முடியும்" என்று அந்தப் பெரியவர் ஈனமாகக் கண்ணீர் வடித்த போது வாசு விம்மியவாறே கேதாரியை அணைத்துக் கொண்டு வாக்குக் கொடுத்தான். அந்தச் சாந்தியைப் பெற்றதும் பெரியவரின் ஆவி அவர் உடலை விட்டுப் பிரிந்தது.

! இந்த நிகழ்ச்சிகளெல்லாம் திரைப் படக் காட்சிகள் போல் கமலாவின் நினைவுத் திரையில் ஓடிக் கொண்டிருந்தன. சட்டென்று அவளது சிந்தனைக் கோவையில் தடங்கல் ஏற்பட்டது. 'இதென்ன! ஜெட் விமானத்தின் இரைச்சல் மீண்டும் காதைத் துளைக்கிறதே! விமான நிலையத்தில் இறங்க வேண்டிய விமானத்துக்கு என்ன வந்தது? இறங்க வசதி இல்லாமல் விமானத்தில் ஏதேனும் கோளாறு ஏற்பட்டு விட்டதா?'

டெலிபோன் மணி ஒலித்தது. கமலா பரபரப்புடன் டெலிபோனை எடுத்துப் பேசினாள். ' [வாசுதான் விமான நிலையத்திலிருந்து பேசுகிறான்.

"விமானம் தரையில் இறங்குவதில் எதிர்பாராத தடங்கல் ஏற்பட்டிருக்கிறது. விமானம் இறங்கும் போது விமானத்தைத் தாங்குவதற்காக அமைந்திருக்கும் சக்கரங்கள் உரிய நிலைக்கு இறங்கியாக வேண்டும். அவை சரியான நிலையில் இறங்கியிருக்கின்றன என்பதைப் பைலட் தமக்கு எதிரே அமைக்கப்பட்டிருக்கும் விளக்குகளில் ஒன்று எரிவதிலிருந்து தெரிந்து கொள்ள முடியும். இன்று சக்கரங்களை இறக்குவதற்கான விசையை இயக்கிய பின்பும் அந்தவிளக்கு எரியவில்லையாம்!"

"ஐயையோ! அப்படியானால் சக்கரங்கள் சரியாக இறங்கவில்லை என்று அர்த்தமா?"

"அதைப் பற்றி நிச்சயமாகத் தெரிந்து கொள்ளாமல் விமானத்தைத் தரையில் இறக்குவது ஆபத்தாகமுடியும். பக்கவாட்டில் பார்த்துத் தெரிந்து கொள்ள முடியாதபடி மேகமும் இருட்டும் மயமாயிருக்கிறது. பைலட்டுக்கு உறுதி ஏற்படும் வரை விமானம் மேலேயே பறந்து கொண்டிருக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது!"

"விசித்திரமான சிக்கலா யிருக்கிறதே!"

"கேதாரி அதில் இருக்கிறானல்லவா? சிக்கலும் விசித்திரமாகத்தானே இருக்கும்!" என்று வறண்ட சிரிப்புடன் கூறி விட்டுப் போனை வைத்தான் வாசு.

இறங்க வழியில்லாமல் மேலேயே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தது விமானம். கமலாவின் எண்ணங்களும் கேதாரியின் விசித்திரப் போக்கைப் பற்றிய சிந்தனையிலேயே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தன.

வாசுவின் முயற்சியால் கேதாரி பொறியியல் கல்லூரியில் சேர்ந்து அந்தப் படிப்பில் விரைவாக முன்னேறி வந்தான். வீட்டில் அவனுக்கு எந்தவிதமான



குறையும் இருக்கக் கூடாது என்று கண்ணும் கருத்துமாயிருந்து வந்தான் வாசு. வெறும் கடமைக்காகச் செய்யவில்லை. கேதாரியைத் தன் சொந்தத் தம்பியாகவே கருதி உள்ளன்புடன் ஒவ்வொன்றும் பார்த்துப் பார்த்துச் செய்து வந்தான். ஆனால் எவ்வளவுக்கெவ்வளவு வாசு அவனிடம் பரிவும் பாசமும் காட்டினானோ அவ்வளவுக்கவ்வளவு கேதாரி அவனைக் கிள்ளுக் கீரையாகவே மதித்து வந்தான். கடைசியில் வாசுவின் பொறுமையைக்கூடத் தகர்த்தெறிந்து விட்டுப் போய் விட்டானே அந்தக் கேதாரி! வாசுவுக்கு எப்படிப்பட்ட தலை குனிவை ஏற்படுத்திவிட்டுப் போய் விட்டான்!

சிறு வயதில்தான் வாசு நிராதரவாகத் தவித்தானே ஒழிய, அவன் வாழ்க்கையில் நிலைப்பட்டு அவன் கையில் கொஞ்சம் பசை சேர்ந்ததும் எங்கிருந்தெல்லாமோ தூரத்து உறவினர்கள் மறந்து போன உறவை மீண்டும் நினைவுபடுத்திக் கொண்டு அவனைத் தேடி வந்து உறவு கொண்டாட ஆரம்பித்தனர். அவன் முன்னுக்கு வந்ததைப் பற்றிய பெருமையுடன் எவ்விதப் பிரதிபலனையும் எதிர்பாராமல் அவனிடம் உண்மையான உள்ளன்பு கொண்டு அவனுடன் உறவாட வருபவர்களும் இல்லாமல் இல்லை. ராமநாதன் அப்படிப்பட்டவர்தான். தாயார் வழியில் வாசுவுக்கு ஏதோ தூரத்து உறவுக்காரர் அவர். வெகு நாட்களாக வடக்கே எங்கெல்லாமோ வேலையாயிருந்துவிட்டு வேலையிலிருந்து ஓய்வு பெற்றதும் தென்னாட்டுக்குத் திரும்பி வந்திருந்தார். வாசு புதிதாக வீடு கட்டியிருந்த அதே காலனியில் அவரும் வீடு கட்டிக் கொண்டு குடியேறிய பிறகுதான் அவர் வாசுவுக்குத் தூரத்து உறவினர் என்ற விஷயமே தெரிந்தது. உண்மையுள்ள உறவு மனிதர் வேண்டுமெனத் தவித்துக் கொண்டிருந்த ராமநாதனுக்கு இது நிதி கிடைத்தாற்போல் இருந்தது. உறவை உறுதிப்படுத்திக் கொள்வதற்காகத் தமது பெண் உஷாவுடன் அடிக்கடி வந்து போய்க் கொண்டிருந்தார். வாசுவும் பதிலுக்குக் கமலாவை அழைத்துக் கொண்டு அவர் வீட்டுக்குப் போய் உறவாடி வருவது வழக்கமாயிருந்தது.

உஷா சிறுவயதிலேயே தாயை இழந்த பெண். அவளுடைய களங்கமற்ற குழந்தை சுபாவமும் கலகலவென்ற சிரிப்பும் கமலாவுக்கு மிகவும் பிடித்திருந்தன. அதோடு அந்தப் பெண் தாயின் அரவணைப்புக்கு ஏங்கிப் போயிருந்ததையும் கமலாவால் உணர முடிந்தது. ஆகவே, உஷாவைத் தன் சொந்தத் தங்கை போலவே பாவித்து அன்பு காட்டி வந்தாள். உஷாவும் கமலாவை, "அக்கா, அக்கா!" என்று பாசத்துடன் அழைத்துக் கொண்டு அடிக்கடி அவளைத் தேடி வந்துவிடுவாள். ஒவ்வொரு சமயம் உஷா வீட்டுக்குப் போக வேண்டும் என்ற சிந்தனையே இல்லாமல் நாள்கணக்காகக் கமலாவுடனேயே தங்கி விடுவதும் உண்டு.

மென்மையான அந்த மலரை மாசுபடுத்தத் துணிந்து விட்டான் கேதாரி. எப்படி மயக்கினானோ, என்னென்ன சந்தர்ப்பங்களை ஏற்படுத்திக் கொண்டானோ தெரியாது. உஷா அவனுக்காக எதுவும் செய்யத் துணியும் அளவுக்கு அந்தப் பேதையின் மனத்தைக் கலைத்து விட்டான். அந்த இருவருடைய உறவும் வெகுதூரத்துக்கு முற்றிய பிறகுதான் கமலாவுக்கே அதைப் பற்றித் தெரிந்தது.

கேதாரி பொறியியல் படிப்பில் தேறி பட்டம் பெற்ற பிறகு மேல்படிப்புக்கு வெளிநாடு செல்ல வேண்டும் என்ற பிடிவாதத்துடன் வாசுவுடன் போராடிக் கொண்டிருந்த சமயம் அது. அவன் வெளிநாடு செல்லும் யோசனையை வாசு ஆதரிக்கவில்லை. கேதாரியின் மேல் படிப்புக்கான செலவை ஏற்கும் நிலையில் அவன் அப்போது இல்லை. அவன் செய்து வந்த தொழிலில் பலவித இடைஞ்சல்கள் ஏற்பட்டு இக்கட்டான நெருக்கடி தோன்றியிருந்த வேளை அது. அந்த நெருக்கடியைச் சமாளித்துத் தொழிலை வலுப்படுத்துவதற்கே போதுமான பொருள் வசதி இல்லாமல் அவன் திணறிக் கொண்டிருந்தான். மீண்டும் மீண்டும் கேதாரி வெளிநாட்டுச் செலவுக்குப் பணம் கேட்டு வாசுவைத் தொந்தரவு செய்து கொண்டிருந்தான். ஆனால் வாசு சிறிதும் பொறுமை இழக்காமல் அவனிடம் தன் நிலைமையைத் தெளிவாக எடுத்துக் கூறி, அப்போதைக்கு அவன் அங்கேயே ஏதாவது நல்ல வேலை தேடிக் கொண்டு வாழ்க்கையில் நிலைப்படுவதுதான் நன்மையாயிருக்கும் என்பதையும் அவன் மனத்தில் பதிய வைக்க முயற்சி செய்தான். ஆனால் வாசு எவ்வளவுக்கெவ்வளவு பொறுமையுடன் கேதாரியின் எண்ணத்தை மாற்றப் பாடுபட்டானோ அவ்வளவுக்கவ்வளவு கேதாரி பிடிவாதக் கொம்பில் இன்னும் உயர உயர ஏறிக் கொண்டிருந்தான்.

"நீ அனுப்பினாலும் சரி, அனுப்பாவிட்டாலும் சரி, என் வெளிநாட்டுப் பயணம் சீக்கிரம் நிறைவேறத்தான் போகிறது!"

கேதாரியின் அந்த வீறாப்புப் பேச்சுக்கு என்ன பொருள் என்பது சில நாட்களிலேயே தெரிய வந்தது. சொன்னபடியே அவன் வெகு வேகமாக வெளிநாட்டுப் பயணத்துக்கான ஆயத்தங்களைத் தீவிரமாகச் செய்ய ஆரம்பித்து விட்டான். அதற்கு வேண்டிய பண வசதி அவனுக்கு எப்படிக் கிடைத்தது என்ற வியப்புடன் வாசு அதைப் பற்றிக் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் அலட்சியமும் இறுமாப்பும் நிறைந்த பதில்களையே அளித்து வந்தான் கேதாரி.

கடைசியில் அந்தப் புதிருக்கு விடை உஷாவிடமிருந்து வந்தது. உஷாவின் தாயார் காலமான பிறகு அவளுடைய நகைகளையெல்லாம் உஷாவுக்காகவே பத்திரப்படுத்தி வைத்திருந்தார் ராமநாதன். ஏதேதோ சொல்லி உஷாவை நம்ப வைத்து அந்த நகைகளையெல்லாம் ஒரே மொத்தமாக வாங்கிக்கொண்டிருந்தான் கேதாரி. அந்த நகைகளின் பலத்தைக் கொண்டுதான் வெளிநாடு செல்வதற்கான பண வசதியைச் செய்து கொண்டிருந்தான் என்ற செய்தியை உஷாவிடமிருந்து அறிந்த போது வாசுவும் கமலாவும் அடைந்த அதிர்ச்சிக்கு அளவே இல்லை. உஷாவின் வெள்ளை மனத்தைக் கேதாரி எவ்வளவு தூரம் கலைத்து விட்டிருந்தான் என்ற விஷயமும் அப்போதுதான் அவர்களுக்குத் தெரியவந்தது. தனக்குத் துரோகம் செய்துவிட்டு அவன் வெளி நாடு சென்றுவிடப் போகிறான் என்ற உண்மையைக்கூட உணராமல் உஷா கேதாரியிடம் அந்த நகைகளையெல்லாம் ஒப்படைத்திருந்தாள். வெளிநாட்டுப் பயணத்துக்கான ஏற்பாடுகள் எல்லாம் பூர்த்தியாகி கேதாரி புறப்படத் தயாரான போதுதான் அந்தப் பேதை விழித்துக் கொண்டு கமலாவிடம் ஓடி வந்தாள்.

"அவர் இப்படி மோசம் செய்வாரென்று நான் எதிர்பார்க்கவேயில்லை. என்னை நட்டாற்றில் நிறுத்திவிட்டு அவர் நாட்டை விட்டே போய் விடப் போகிறார் என்று நான் நம்பவே இல்லை!" என்று கதறிய உஷா, "இந்த விஷயம் அப்பாவுக்குத் தெரிந்தால் அவமானம் தாங்காமல் உயிரையே விட்டு விடுவாரே!" என்று விம்மினாள்.

ஆனால் செய்தியறிந்த ராமநாதன் உயிரை விட்டுவிடவில்லை. வாசுவிடம் வந்து தமது ஆத்திரத்தையெல்லாம் கொட்டிக் கூச்சல் போட்டார்.

கேதாரியிடம் கெஞ்சாத வண்ணம் கெஞ்சினான் வாசு.

"உஷா உன்னையே நம்பியிருக்கிறாள். அவளை நட்டாற்றில் நிறுத்தி விட்டுப் போய் விடாதே! உஷாவின் கழுத்தில் மூன்று முடிச்சுப் போட்ட பிறகு நீ வெளிநாடு செல்வதுதான் முறை......" என்று மன்றாடினான்.

அவனுடைய வார்த்தைகள் கேதாரியின் செவிகளில் ஏறினால்தானே! "கல்யாணமா? அந்தக் கால்கட்டைப் போட்டு என்னை வெளிநாடு செல்ல விடாமல் இங்கேயே நிறுத்திவிடச் சூழ்ச்சி செய்கிறாயா? அது ஒரு நாளும் நடக்காது. உஷா என்னையே நம்பியிருப்பது உண்மையாயிருந்தால் எத்தனை வருஷமானாலும் எனக்காகக் காத்திருக்கட்டுமே!"

ஒரு பக்கம் கேதாரியின் திமிர் பிடித்த உதாசீனம், மறுபக்கம் உஷாவின் கண்ணீர், அவள் தந்தையின் சீற்றம் இவற்றினிடையே அன்று வாசு தவித்த தவிப்பு! கேதாரி எதற்காவது அசைந்து கொடுத்தானா?

ராமநாதன் காரியவாதி. "உஷாவின் வாழ்க்கையைப் பற்றி நான் கவலைப்பட்டுக் கொள்கிறேன். எப்படியாவது நீ அந்த நகைகளை மீட்டுக் கொடுத்துவிட வேண்டும்!" என்று கண்டிப்பாகக் கூறி விட்டு உஷாவை அழைத்துக் கொண்டு சென்று விட்டார்.

அவருக்குக் கொடுத்த வாக்கை வாசு எப்படியோ நிறைவேற்றி விட்டான். எவ்வளவோ இன்னல்களுக்கிடையே பணத்தைத் திரட்டிக் கேதாரி அடகு வைத்திருந்த இடத்திலிருந்து நகைகளை மீட்டுக் கொண்டு போய் ராமநாதனிடம் ஒப்படைத்து விட்டான். ஆனால் ராமநாதன் தம் பொறுப்பை நிறைவேற்ற முடியாமல் உஷாவின் வாழ்க்கை இன்னும் அந்தரத்திலேயே நின்றுகொண்டிருந்தது. அவளுடைய கல்யாணத்துக்கான முயற்சியை ராமநாதன் ஆரம்பிக்கும் போதெல்லாம் அவள், "எனக்குக் கல்யாணமே வேண்டாம்!" என்று பிடிவாதமாக மறுத்து வந்தாள். 'அக்கா, அக்கா' என்ற பாச அழைப்புடன் அவள் கமலாவைத் தேடி வந்த



கணவன்: "ஏ, காமாட்சி! பெண்ணை உட்கார வைத்து என்ன சொல்லிக் கொடுத் துண்டிருக்கே?"

மனைவி: கலியாணம் ஆனப்பறம் கணவனோடே எப்படி வாழணும்னு சொல்லிக் கொடுத்திண்டிருக்கேன்.

கணவன்: (கூச்சலிட்டபடி) அதை 'நீ' சொல்லிக் கொடுக்காதடீ!

---

நாட்கள் கனவு போலாகி விட்டன. ராமநாதனும் வேற்று மனிதர் போல் விலகியே இருந்து வந்தார்.

**ம**ணி பதினொன்று அடித்தது. சமையல் ஆள்கூடச் சாப்பாட்டையெல்லாம் மூடி வைத்து விட்டுப் படுத்துக் கொள்ளச் சென்றுவிட்டது. கமலா இன்னும் ஹாலிலேயே உட்கார்ந்திருந்தாள். ஜெட் விமானம் பறந்து செல்லும் சத்தம் வீட்டுக்குள்ளேயே கேட்டது. திறந்த முற்றத்துக்கு ஓடிச் சென்று விமானத்தை அண்ணாந்து பார்த்தாள் கமலா. விடியும் வரை அந்த விமானம் இப்படியே பறந்து கொண்டிருக்கப் போகிறதோ என்னவோ!

"அக்கா! அக்கா!"

பழைய பாச அழைப்புடன் உள்ளே விரைந்து வந்த உஷாவைப் பார்த்ததும் கமலாவுக்கு வியப்புத் தாங்கவில்லை.

"உஷா! இந்த நேரத்தில் நீ எப்படி?"

"அக்கா! சமாசாரம் தெரியுமா உங்களுக்கு? அவர் இந்தப் பிளேனில் தான் திரும்பி வருகிறார். இன்றுதான் எனக்குத் தந்தி வந்தது!"

"உனக்குமா?"

"விமான நிலையத்துக்குக் கட்டாயம் வரும்படி தந்தி அடித்திருந்தார். போகப் பிடிக்காமல் நான் வீட்டிலேயே தங்கி விட்டேன். ஆனால் இந்தப் பிளேன் இறங்காமல் மேலே பறந்து கொண்டிருக்கிறதே! விமான நிலையத்துக்கு டெலிபோன் செய்து விசாரித்தேன். பிளேனில் ஏதோ பழுது ஏற்பட்டிருக்கிறதாமே! பத்திரமாக அது தரையில் இறங்க வேண்டுமே என்று ஒரே தவிப்பாயிருக்கிறது. அந்தத் தவிப்பை அடக்க முடியாமல்தான் உங்களிடம் ஓடி வந்தேன்."

"நீ ஏன் இவ்வளவு தவிக்க வேண்டும் உஷா? கேதாரி உனக்குச் செய்து விட்டுப் போன துரோகத்தை ஒரேயடியாக மறந்து விட்டாயா?"

"அவர் எனக்கு எவ்வளவு துரோகம் செய்திருந்தாலும் சரி, அவர் மறுபடியும் என் பக்கம் திரும்பியே பாராமலிருந்தாலும் சரி, அவருக்கு எந்தவிதமான ஆபத்தும் நேரக் கூடாது. எப்படியாவது அவர் நன்றாயிருக்க வேண்டும். க்ஷேமமாயிருக்க வேண்டும்." அதற்கு மேல் பேச முடியாமல் முகத்தை மூடிக் கொண்டு விம்மினாள் உஷா.

பரிவுடன் அவளை அணைத்துக் கொண்டாள் கமலா. "உஷா..... உஷா..... பேதைப் பெண்ணே! எவ்வளவு வெள்ளை மனது உனக்கு!"

மீண்டும் தலைக்கு மேலே விமானம் பறக்கும் இரைச்சல். இப்போது அந்த இரைச்சல் ஒரே சீராயில்லை. ஏதோ பேராபத்துக்கு முன் அறிவிப்பாக ஒலித்தது.

அதே சமயம் கணகண வென்று டெலிபோன் மணி அடித்தது.

பரபரப்புடன் போனை எடுத்தாள் கமலா. உஷாவும் போனில் காதைப் பொருத்தி வைத்துக் கொண்டு கேட்டாள். வாசுதான் பேசினான்:

"இப்போது புதியதொரு சிக்கல் தோன்றியிருக்கிறது. விமானத்தில் இருக்கும் பெட்ரோல் தீரும் நிலையில் இருக்கிறதாம். இன்னும் அரைமணி நேரத்துக்குத்தான் விமானம் மேலே பறக்க முடியுமாம்!"

"அக்கா!" என்று அலறினாள் உஷா.

"அது யார் குரல்? உஷாவா?"

"ஆமாம். உஷாதான். கேதாரி அவளுக்கும் தந்தி அடித்திருக்கிறான். விமானம் ஆபத்தான நிலையில் இருக்கிறதென்று தெரிந்ததும் தவிப்பு மிகுந்து போய் வந்திருக்கிறாள். ஆமாம், அரை மணி நேரத்துக்குள் விமானம் கட்டாயம் தரையில் இறங்கியே தீர வேண்டும் என்று சொல்கிறீர்களா?"

"ஆமாம். இறங்கு சக்கரம் சரியான நிலையில் இருந்தாலும் இல்லாவிட்டாலும் விமானத்தைத் தரையில் இறக்கியே ஆகவேண்டும். இங்கு ஒரே பரபரப்பு. விமானத்துக்கு என்ன ஆபத்து நேரப் போகிறதோ என்ற திகிலுடன் எல்லாரும் யந்திரம் போல் இயங்கிக் கொண்டிருக்கின்றனர். தீயணைக்கும் அணிகள் சாதனங்களைத் தயாராக வைத்துக் கொண்டு இறங்கு தளத்தைச் சுற்றிலும் முன்னிப்புடன் காத்திருக்கின்றனர். இம்மாதிரி ஆபத்தான நிலை என்றுமே ஏற்பட்டதில்லையாம்....." அ

"தெய்வமே! விமானத்துக்கு ஒன்றும் நேரக் கூடாது. அவர் அதில் இருக்கிறார். இத்தனை நாளும் என் மனத்தில் குமுறிய குமுறல் அவரை அணுகக் கூடாது. அவரைச் சிறிதும் பாதிக்கக் கூடாது." என்று விம்மினாள் உஷா.

அதே சமயம் ராமநாதன் காரை வாயிலில் கொண்டு வந்து நிறுத்தி, 'ஹாரனை' ஒலிக்கச் செய்தார்.

"அப்பா!" என்று அலறினாள் உஷா.

"உன் மனம் எனக்குத் தெரியும் உஷா. விமான நிலையத்துக்கு உன்னை அழைத்துப் போகத்தான் வந்திருக்கிறேன். புறப்படு கமலா, நீயும்தான்" என்று அவர் கூறியதும் இருவரும் காருக்குள் பாய்ந்து ஏறிக் கொண்டனர். வேகமாக விமான நிலையத்தை நோக்கிப் பறந்து சென்றது கார்.

விமான நிலையத்தில் எல்லை மீறிய பரபரப்பும் கலவரமும் நிலவியிருந்தன. விமான நிலையச் சிப்பந்திகள் இங்கு மங்கும் ஓடியாடி விமானம் இறங்குவதற்கான ஏற்பாடுகளையும் தீயணைப்புக்குரிய முன்னிப்புகளையும் கவனித்துக் கொண்டிருந்தனர். ஒளி மிகுந்த விளக்குகள் இறங்கு தளம் நெடுகிலும் ஒளி வெள்ளத்தைப் பாய்ச்சிக் கொண்டிருந்தன. விமானத்தில் வந்திறங்க வேண்டிய தத்தம் உறவினர்களையும் நண்பர்களையும் வரவேற்கக் குழுமியிருந்தவர்கள் திகிலுடன் மேலே பார்த்தவாறு அங்கங்கே நெருக்கியடித்துக் கொண்டு நின்றிருந்தனர்.

அந்த நெருக்கடியிலும் குழப்பத்திலும் வாசுவைத் தேடிக் கண்டு பிடிப்பது கமலாவுக்கும் மற்றவர்களுக்கும் எளிதாயில்லை. எப்படியோ அந்தக் கூட்டத்தில் வழி விலக்கிக் கொண்டு அந்த மூவரும் வாசு நின்றிருந்த இடத்துக்கு வந்து சேர்வதற்கும் விமானம் அடுத்த சில விநாடிகளில் தரையில் இறங்கப் போவதைப் பற்றிய அறிவிப்பு ஒலிபரப்பாவதற்கும் சரியாயிருந்தது.

வாசுவின் முகத்தில் பீதிக் களை தாண்டவமாடிக் கொண்டிருந்தது. கமலா ஆதரவுடன் அவன் தோளைத் தொட்டதும் அவன் திரும்பிப் பார்த்தான். அவன் கண்களில் நீர் நிரம்பியிருந்தது. "நீங்களும் வந்துவிட்டீர்களா? நாம் எல்லாரும் சேர்ந்து செய்யும் பிரார்த்தனைதான் ▲ கேதாரியையும்—விமானத்திலுள்ள மற்ற உயிர்களையும் பாதுகாக்க வேண்டும்" என்று அவன் கூறிய போது உஷா ▲ பொங்கி வந்த துக்கத்தை அடக்க முடியாமல் முகத்தை மூடிக் கொண்டாள்.

அதே சமயம் விமானம் விமான நிலையத்தை நெருங்கி வரும் ஒலி கேட்டது. அனைவரும் வைத்த விழி வாங்காமல் அந்தத் திசையையே பார்க்க ஆரம்பித்தனர். இருண்ட கரிய வானத்தில் ஒரு சிறிய நட்சத்திரம் போல் தொலைவில் தென்பட்ட விமான விளக்கு இருக்க இருக்க நெருங்கி வந்தது. விட்டு விட்டு எரிந்த அதன் சிவப்பு விளக்குகள் அதில் வந்து கொண்டிருந்த அத்தனை பிராணிகளின் நெஞ்சத் துடிப்பையும் பிரதிபலிப்பவை போல் தோன்றின. அதோ, இறங்கு தளத்தை அது நெருங்கி விட்டது. தளத்தைத் தொடுவது போல் தணிவாக இறங்கிப் பறக்கிறது!

"கமலா! அதோ! அதோ!" என்று கத்தினான் வாசு திடீரென்று.

"என்ன?" என்று புரியாமல் கேட்டவாறு பார்வையைத் தீவிரமாக்கினாள் கமலா.

"உனக்குத் தெரியவில்லையா? இறங்கு சக்கரம் சரியான நிலையில்தான் இருக்கிறது! ஓர் ஆபத்தும் இல்லை கமலா! ஒரு ஆபத்தும் இல்லை!" என்று கூறினான் வாசு.

தரையில் இறங்கும் விமானத்தைத் தாங்குவதற்குத் தயாராக அதன் அடிவயிற்றிலிருந்து சரியாக இறங்கி நிலை கொண்டிருந்த இரண்டு சக்கரங்கள் இறங்கு தளத்தின் ஒளி வெள்ளத்தில் தெளிவாகத் தெரிந்தன.

"தெய்வமே! என் பிரார்த்தனை பலித்ததா? அவர்.... அவர்..." என்று

ஆனந்தம் பொங்கக் கூவினாள் உஷா.

முதல் பிரயாணி இறங்க ஆரம்பித்தபோது அங்கு குழுமியிருந்தோர் குதூகல ஆரவாரத்துடன் கரகோஷம் செய்து அவரை வரவேற்றனர். மரணத்தின் வாயிலிருந்து மீண்டு வந்தவரல்லவா? இதே குதூகல ஆரவாரமும் கரகோஷமும் அடுத்து இறங்கி வந்த ஒவ்வொரு பிரயாணியையும் வரவேற்றன.

“இன்னும் அவர் இறங்கி வரவில்லையே!” என்று தவித்துக் கொண்டிருந்தாள் உஷா.

அநேகமாக எல்லாப் பிரயாணிகளும் விமானத்திலிருந்து இறங்கி விட்டாற் போல் தோன்றியது.

“என்ன இது! உண்மையிலே கேதாரி தந்தியடித்தபடி புறப்பட்டு வரவில்லையா?” என்று வியப்புடன் நோக்கினான் வாசு.

மேலும் இறங்கி வரும் பிரயாணி யாரும் இல்லை என்ற தீர்மானத்துடன் படிக்கட்டை அப்புறப்படுத்தத் தயாராயினர், விமான நிலையப் பணியாட்கள். அப்போது வேகமாகக் கீழே இறங்கி வந்த உபசரிப்புப் பெண் சற்றுப் பொறுக்கும்படி பணியாட்களுக்குச் சைகை காட்டிவிட்டு அதே வேகத்துடன் நிலையக் காரியாலயத்தை நோக்கி விரைந்தாள். சில நிமிஷங்களுக்கெல்லாம் ஒலிபெருக்கியில் ஓர் அறிவிப்பு ஒலித்தது: “மிஸ்டர் கேதாரி என்ற பிரயாணியைச் சந்திக்க வந்திருப்பவர்கள் யாராவது இருந்தால் உடனே இறங்கு தளத்துக்கு அருகே வந்து நிற்கக் கோருகிறோம்!”

இரண்டு தடவை இந்த அறிவிப்பு கேட்டது. முதல் தடவை அது ஒலித்து முடிவதற்குள்ளேயே உஷாவும் மற்றவர்களும் பின்தொடர வாசு முன்னே பாய்ந்து சென்று இறங்குதளத்தின் ஓரமாக வந்து நின்று கொண்டான். இனம் புரியாத திகிலும் கலக்கமும் எல்லோர் மனத்திலும் நிரம்பியிருந்தன.

உபசரிப்புப் பெண் அவர்களை நோக்கி விரைந்து வந்தாள். “உங்களுக்குத் தொந்தரவு கொடுப்பதற்கு மன்னிக்க வேண்டும். மிஸ்டர் கேதாரி என்ன காரணமோ விமானத்திலேயே உங்களையெல்லாம் சந்தித்த பிறகுதான் விமானத்திலிருந்து இறங்க முடியும் என்று ஒரே பிடிவாதமாக இருக்கிறார்” என்று கூறிய அவள், விமானத்தை நோக்கி நடந்தாள்.

“இன்னுமா அவன் பிடிவாதம்?” என்று பெருமூச்செறிந்தவாறே வாசு அவளைத் தொடர்ந்து செல்ல மற்றவர்களும் ஒருவித அச்சத்துடன் அவர்களைப் பின்பற்றினர்.

பதைக்கும் நெஞ்சுடன் எல்லோரும் படிக்கட்டில் ஏறி விமானத்துக்குள்ளே சென்றனர்.

“மிஸ்டர் கேதாரி அதோ கடைசி ஸீட்டில் உட்கார்ந்திருக்கிறார்!” என்று அந்தத் திசையில் சுட்டிக்காட்டினாள் உபசரிப்புப் பெண். அவளுடைய குரலைக் கேட்டதும் கேதாரியும் உட்கார்ந்தவாறே திரும்பிப் பார்த்தான். மறுகணம் அவன் முகம் எல்லையற்ற மகிழ்ச்சியால் மலர்ந்தது. அவர்கள் அவனை நெருங்குவதற்குள் அவன் கண்களில் நீர் நிரம்பி நின்றது.

“அண்ணா! அண்ணி! உஷா!..... நீங்கள் எல்லோரும்.....” என்று தழுதழுப்புடன் கூறியவாறே எழுந்து நின்றான் அவன்.

ஆனால் இதென்ன! அவனால் சரியாக நிற்க முடியவில்லையே! நொண்டி, நொண்டி முன்னே வருகிறானே! வலது பக்கம் அதென்ன? தாங்கு கட்டை! அப்படியானால்.... அப்படியானால்...... அந்தக் கால்.....?

“கேதாரி!” என்று கத்தி விட்டான் வாசு.

“அண்ணா! அண்ணி!” என்று நெஞ்சு வெடிய அலறியவாறே அவர்கள் காலடியில் விழுந்தான் கேதாரி.

“கேதாரி, என்னப்பா இதெல்லாம்?” என்று கண்ணீர் பொங்கக் கதறிய வாசு அவனை அள்ளியணைத்தவாறு தூக்கி நிறுத்தினான்.

“கேதாரி, உயிருக்கே வந்த ஒரு பெரிய கண்டத்திலிருந்து நீ தப்பிவிட்டாய் என்று ஒரேயடியாகப் பூரிப்பு அடைந்தேனே! இந்தக் கோலத்தில் உன்னைப் பார்க்கப் போகிறோம் என்று கனவிலும் நினைக்கவில்லையே!” என்று விம்மினான்.

“அண்ணா, உங்கள் எல்லாருக்கும் மாற்ற முடியாத துரோகம் செய்து விட்டுப் போனேனே. அதற்குத் தகுந்த தண்டனை கிடைக்க வேண்டாமா? போனமாதம் கார் விபத்தில் காலை இழந்த பின்புதான் என் இறுமாப்பு அடங்கியது. மாறிய மனிதனாக உங்கள் மன்னிப்பை நாடிப் புறப்பட்டேன். உங்கள் மன்னிப்பைப் பெறாமல் இந்தப் புனித மண்ணில் கால் வைப்பதில்லை என்று சபதம் செய்து கொண்டேன். ஆனால் மன்னிப்பைப் பெறும் தகுதி ஏது எனக்கு? அதனால்தான் விமானம் தரையில் இறங்குவதற்கே தடங்கல் ஏற்பட்டதோ என்னவோ? விமானம் ஆபத்தான நிலையில் பறக்க ஆரம்பித்தபோது உங்கள் மன்னிப்பைப் பெறாமலே நான் மடிய நேரிடுமோ என்று பயந்தேன். அந்தப் பாக்கியத்தை எனக்கு அளிக்கக் கூடாது என்பதற்காகவே விதி என்னுடன் வந்திருந்த அவ்வளவு உயிர்களையும் பலி வாங்கத் தீர்மானித்து விட்டதோ என்று தவித்துப் போனேன்!”

“கேதாரி!” என்று உரக்க விம்மினாள் உஷா.

“உஷா, நான் உன் மனத்தை எப்படிச் சின்னாபின்னப்படுத்திப் போய் விட்டேன்! உன் தகப்பனாருக்கும் என்னை அருமையாக ஆதரித்த என்கூடப் பிறவாத அண்ணாவுக்கும் எவ்வளவு தலைகுனிவை ஏற்படுத்தி விட்டுப் போய்விட்டேன்! இந்தக் கணம் வரையில் நான் யாருடைய அன்புக்கும் தகுதியில்லாத பாவி என்றுதான் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் இந்தப் பாவிக்காக நீங்கள் எல்லோரும் இவ்வளவு தவித்துப் போய் இங்கு ஓடி வந்திருக்கிறீர்களே. இதைவிட பாக்கியம் எனக்கு வேறு என்ன இருக்க முடியும்? உங்களுடைய அந்த மாசற்ற அன்புதான் என் உயிரை மீட்டுக் கொடுத்தது; இந்தப் பாவியுடன் மடிய இருந்த அத்தனை உயிர்களையும் காப்பாற்றியது. அந்த ஊன்றுகோல் எனக்கு இருக்கும் வரை ஒரு காலை இழந்த நொண்டி என்று யார் என்னைச் சொல்ல முடியும்?”

“கேதாரி!” என்று அலறியவாறு ஓடிச் சென்று அவனைத் தாங்கிக் கொண்டாள் உஷா.

மறுபக்கத்திலிருந்து அவனை அணைத்துக் கொண்ட வாசு, “வா, கேதாரி! எங்கள் புஞ்சை மனங்களில் பொங்கும் அன்பு என்றும் உனக்கு ஊன்றுகோலாக இருக்கும்!” என்று கூறியவாறு விமான வாயிலை நோக்கி நடந்தான்.

### பரம ரகசியம்!

மாமா: ஏண்டா பசங்களா? எவ்வளவு சொல்லிக் கொடுத்தாலும் பரீட்சையில் ஃபெயில் வாங்கிண்டு வருகிறீர்களே! அது எப்படி?

பையன்கள்: ஐயையோ! அதை மட்டும் நாங்க சொல்ல மாட்டோம்......மாமா!

# இண்டியனாயில்

## எங்களுடையது - நாட்டுக்குச் சொந்தமானது !



நாட்டின் பாதுகாப்புப் பணியில் ஈடுபட்டுள்ள நாங்கள் **இண்டியனாயிலின்** நெருங்கிய துணையுடன் நம் நாட்டை அந்நிய ஆதிக்கத்தினின்றும் பாதுகாக்க வேண்டி தரையிலும் ஆகாயத்திலும் கடலிலும் இடைவிடாமல் சேவை புரிகிறோம். எல்லைப்புற யுத்தகாலங்களில் **இண்டியனாயில்** ஒரு மகத்தான பொறுப்பை ஏற்று வந்திருக்கிறது. இந்திய விமானப்படைக்கு தேவையான விமான எண்ணெ சப்ளை செய்வதற்கும் சரி, எந்த வகைப்பட்டயுத்த விமானத்திற்கும் கண நேரத்தில் எண்ணெ நிரப்புவதற்கு விசேஷ வசதிகள் செய்து கொடுப்பதற்கும் சரி, பகலென்றும் இரவென்றும் பாராமல் பணியாற்றி வந்தது. **இண்டியனாயிலின்** அபரிமித வேகம் தரும் டீசல் எண்ணெயினால் சக்தி பெறும் டிரக்குகளும் மற்றும் சப்ளை அலுவல்களை இடைவிடாமல் செய்து வந்தன. சுதந்திர தீபம் சுடர்விட்டுப் பிரகாசிக்கச் செய்வதில் **இண்டியனாயில்** எங்களுக்கு பேருதவி புரிந்தது.

**இண்டியனாயில்** இவ்வளவும் செய்ய முடிகிறதென்றால் அது நமக்குச் சொந்தமாக இருப்பதே காரணம்.




இண்டியன் ஆயில் கார்ப்பொரேஷன் லிட்.,



# ஆயாவுக்கு எங்கே போவேன்?

## ஆர். சூடாமணி

ஒருவாறு கவலை தீர்ந்தது என்று கோமதி நிம்மதி அடைந்த போதுதான் தங்கையும் தம்பியும் அந்தத் தகவலைச் சொன்னார்கள். கேட்டதுமே அவள் கண்கள் பிதுங்கின.

''அவளா!'' என்றாள் நம்ப முடியாமல்.

''ஆமாம் அக்கா.''

''அட அசிங்கமே!''

முகத்திலடித்தாற்போல் வந்து விழுந்தது அந்தச் சொல். ஸ்ரீதரும் மீனுவும் கூசிப் போய் விட்டார்கள். இப்படி ஒரு விமரிசனம் இருக்க முடியுமென்று அவர்கள் கற்பனை செய்திருக்கவில்லை. நெஞ்சோடு நெஞ்சாக உணர்ச்சியை வடித்துச் சேர்த்து அதில் ஒரு பெண்ணின் பரிதாப நிலையையும் அவளுக்கு உற்ற அநீதியையும் கண்டு அவர்கள் பொங்கியபோது, அதை 'அசிங்கம்' என்று வெறுக்கக் கூடிய மனநிலை அவர்களுக்குப் பெரும் அதிர்ச்சியைத் தந்தது.

''அவளா வருகிறாள்? ஐயே, நினைக்கவே பிடிக்கவில்லையே! என்ன ரசாபாசம்!'' என்று மேலும் வர்ணித்த கோமதி திடீரென்று ஓர் எண்ணத்தின் நினைவில் ''எப்படி இந்த மாதிரி ஓர் ஏற்பாட்டை அப்பா பண்ணினார்? நம்மை யெல்லாம் என்ன வென்று நினைத்துவிட்டார்?'' என்றாள் தீவிரமாக.

''அவளையும்தான் என்னவென்று நினைத்துக் கொண்டார்? அதை யோசிக்கவில்லையே அக்கா நீ!'' என்றான் ஸ்ரீதர்.

''அவள் என்னடா அவள்! கெட்டுப் போனவளைப் பற்றி யெல்லாம் கரிசனம் வேறு? இந்தக் குடும்பத்துக்குச் சத்துருவாக வந்தவளில்லையா அவள்? நம் அம்மாவின் மனசு அவள் காரணமாக எவ்வளவு கொதித்திருக்கும்!'' என்று கோபாவேசமாய்ப் படபடத்துக் கொண்டே சென்ற கோமதியை ஸ்ரீதர் தடுத்தான்.

''அக்கா! கொஞ்சம் நிதானி. ஒருவனை நாம் பொய்யன் என்றால் ஒரு நபரைத்தான் குற்றம் சாட்டுகிறோம். திருடன் என்றால் ஒருவனைத்தான் குற்றம் சாட்டுகிறோம். கொலைகாரன் என்றாலும் ஒருவனைத்தான் குற்றம் சாட்டுகிறோம். ஆனால் 'கெட்டுப்போன ஆள்' என்னும்போது மட்டும் ஒருவரையல்ல, இரண்டு பேர் மீது பழி சுமத்துகிறோமென்பது நினைவிருக்கட்டும். அவள் கெட்டுப்போனவள் என்றால் நம் அப்பா என்ன? அவள் சீரழிந்த குற்றத்தில் அப்பாவுக்குப் பங்கில்லையா?''

ஒரு கணம் வாயடைத்துப் போன கோமதி மெள்ளச் சமாளித்துக்கொண்டாள். ''அப்பாவை அந்த விதத்தில் நல்லவர் என்று யாரும் சொல்லவில்லையே! அவர் இழைத்த துரோகத்தை நாம் மறக்க முடியுமா? மன்னிக்கத்தான் முடியுமா?''

ஸ்ரீதரின் மனத்தில் எண்ணங்கள் ஓடின; அவர் செய்தது அநியாயம்தான். இப்போது செய்வதும்தான். அம்மாவுக்கு அவர் துரோகம் இழைத்தது மட்டுமல்ல; அந்த இன்னொருத்திக்கும் தான் இப்போது துரோகமிழைத்து விட்டார்.

இதைக் கோமதி புரிந்துகொள்ளாவிட்டாலும், 'ரசாபாசம்' என்ற கருத்திலாவது இந்த ஏற்பாட்டை மறுப்பாள் என்ற நம்பிக்கையில் ஸ்ரீதர், ''அப்படியானால் அவளை வேண்டாம் என்றுதான் சொல்லி விடுவாய், இல்லையா, அக்கா?'' என்றான்.

கோமதி சற்றுத் தயங்கினாள். ''அது எப்படியடா சொல்ல முடியும் ஸ்ரீதர்? என்ன இருந்தாலும் அப்பா செய்த ஏற்பாடு. அவர் அப்புறம் கோபித்துக் கொள்வார். நாமும்தான் எத்தனை நாட்களாய் ஆயா தேடுகிறோம்? ஒருத்தியாவது திருப்திகரமாய் அமையவில்லை. அடுத்த வாரம் கைக்குழந்தையோடு ஊருக்குப் போக வேண்டுமே, என்னடாப்பா செய்யப் போகிறோம் என்று தவித்துக் கொண்டிருந்தேன். இவளையும் வேண்டாமென்றால் ஒரு வாரத்துக்குள் வேறு எவள் கிடைப்பாள்? மேலும் அஸ்ஸாம் என்றதுமே ஒவ்வொருத்தியும் நடுங்கிக் கொண்டு 'நான் வரவில்லை' என்று கூறிவிடுகிறாள். இவள் ஒப்புக் கொண்டிருக்கிறாள் போலிருக்கிறது...''

சகோதரியின் பேச்சு எந்த அர்த்தத்தை எட்டிக் கொண்டிருக்கிறது என்பதை உணர்ந்து மீனுவும் ஸ்ரீதரும் திடுக்கிட்டார்கள்.

''அதுவும் தவிர, ஸ்ரீதர், அவள் யார் என்று நமக்குத் தெரியும் என்று அப்பாவுக்குத் தெரியாது. ஆகவே நம்மைச் சிறுமைப்படுத்தும் நோக்கத்தோடு அவர் அவளை நம் தலையில் கட்டுவதாக நாம் நினைக்க முடியாது...''




''நம்மைச் சிறுமைப்படுத்தவில்லை எப்படுதான் முக்கியமோ? அவனைச் சிறுமைப்படுத்துகிறீரே!''

''இதில் நீ அவன் அவன் என்று புலம்புவது எனக்குப் புரியவில்லை ஸ்ரீதர். அவனைப் பற்றி நமக்கு என்ன? நம் அம்மாவின் சக்களத்தி — அதுவும் தாலி கட்டாத சக்களத்தி! நமக்குத் தான் வேலை செய்யட்டுமே அவன்!''

மேலும் அங்கு நின்றால் அக்காவை அறைந்து விடுவோமோ என்ற பயத்தில் ஸ்ரீதர் விரைந்து வாசலுக்குப் போய் விட்டான். மீரா மட்டும் ஓர் இகழ்ச்சிப் புன்னகையுடன் சகோதரனைப் பார்த்தவாறு நின்றிருந்தாள்.

அது ஒரு காலம். வளர்ந்துகொண்டிருந்த பருவம். வீடு, பெற்றோர், உடன் பிறந்தோர் என்ற அமைப்பில் இதயத்திலே ஒரு பாதுகாப்பு உணர்ச்சி. அப்பாவும் அம்மாவும் அவர்களது உலகத்துக்கு இரு காப்புத் தேவதைகள். அந்த இதமான பின்னணியில் காலம் இன்னிசையாய்ப் பொழிந்து கொண்டிருந்தது. அவ்விருவரை மனிதர்களாய்ப் பார்க்கத் தெரிந்த வயதில்லை. பார்க்கத் தோன்றிய உந்தலும் இல்லை.

பின்னால்தான் அந்த உந்தல் உணர்வாகியது. அப்பாவும் அம்மாவும் அவர்கள் கவனிப்பதை அறியாத நேரங்களில் வாக்குவாதம் செய்யும் காட்சி, அம்மா அடிக்கடி தனிமையில் கண்ணீர் விட்டுக் கொண்டிருந்த தோற்றம், வீட்டின் கலகலப்பில் அவ்விருவரும் தமக்கெனப் பங்கில்லாதவர்கள் போல் நாட்கணக்காய்க் குழந்தைகளின் மூலமே தம் உரையாடலை நிகழ்த்திக் கொண்ட சந்தர்ப்பங்கள் — இவை அந்த இதமான பின்னணிக்கு மேலாக அப்பாவையும் அம்மாவையும் மனிதர்கள் என இனம் பிரித்துக் காட்டியது. அதுவே அறிவு தெளிந்த பின் இவ் விஷயத்தை ஆராயும் உந்தலாக, புரிந்துகொண்ட நிலைப்பாக, மாறியது.

உண்மை பிடிபட்டதிலிருந்தே அவர்கள் அனுதாபம் தாயின் பக்கம் தான் அதிகம் சாய்ந்தது எனக் கூறலாம். அடிபட்ட மான் போல் அம்மாவின் கண்களில் ஒரு தோற்றம். தனக்கு மனைவி என்ற ஸ்தானத்துக்கு, பெண் என்ற பெருமைக்கு அநீதி இழைக்கப்பட்ட துடிப்பு அவள் அப்பாவைப் பார்க்கும்போதெல்லாம் பார்வையில் ததும்புவது அவர்களுக்குத் தெரியும். ஆனால் அதை அம்மா அவர்களோடு பகிர்ந்து கொள்ள மாட்டாள். குழந்தைகள் தனக்கு எவ்வளவுதான் அருமையானவர்களாக இருந்த போதிலும் அந்த ஒரு விஷயத்தில் தானும் தன் பெண்மையும் ஒரு தனி அந்தரங்கம் என்று எல்லையைக் காட்டுபவள் போல் அவள் தன் கண்ணீரை அவர்களிடமிருந்து மறைத்தே காத்து வந்தாள். அவர்களுக்குத் தெரியும் என்பதை அவள் அறிந்திருந்தாலும் வெளிப்படையாக அவர்களோடு அது பற்றிப் பேசாத தன்மானத்தின் உரிமையைத் தனக்கென்று வைத்துக் கொண்டாள். அந்த உரிமையில் குறுக்கிடும் துணிவு அவர்களுக்கு இல்லை.

தாயின் நிலைக்காக மனம் புண்பட்டாலும் ஸ்ரீதருக்கும் மீராவுக்கும் தந்தையிடமும் ஒரு கள்ளத்தனமான மதிப்பு இல்லாமல் இல்லை. மனைவிக்கு அவர் துரோகம் இழைத்தது தவறுதான். ஆனால் வீட்டில் எத்தனை பூகம்பங்கள் நேர்ந்தாலும், அமைதி குன்றாது அவர், தம்மையே நம்பியிருந்த இன்னொருத்தியைக் கைவிடாமல் சார்ந்து நின்ற பான்மையைப் போற்றாமல் இருக்க முடியவில்லை. எதிர்ப்பையும் மனைவியின் வெறுப்பையும் ஊராரின் ஏளனத்தையும் மீறி அவர் அந்த இன்னோர் அன்புக்கு உண்மையாய் அவளைக் காப்பாற்றிக் கொண்டிருந்த செயல் அந்த உறவிலிருந்த மாசை அகற்றி அன்பின் உணர்வை மட்டுமே அதற்கு ஒரு வடிவமாய் வார்த்துக் கொண்டிருந்தாற் போல் தோன்றச் செய்தது.

ஆனால் இப்போதோ? உயர்வின் தோற்றத்தில் கறை படிந்து விட்டது!

''கடைசியில் ஒருவழியாய் ஓர் ஆயாவுக்கு ஏற்பாடு செய்துவிட்டேன், தெரியுமா உங்களுக்கு?'' என்றார் அப்பா.

மீரா தலை கவிழ்ந்தாள். ஸ்ரீதர் தந்தைக்குப் பதில் சொன்னான்:

''நாம் இங்கிருந்து ஏனப்பா ஏற்பாடு செய்ய வேண்டும்? அதுவோ குளிர்ப் பிரதேசம். அதற்குப் பழக்கப்பட்ட ஓர் ஆயாவை அங்கேயே பார்த்து அக்கா ஏற்பாடு செய்துகொள்ளட்டுமே? இங்கிருந்து போகிறவர்களுக்கு அந்தக் குளிரும் சூழ்நிலையும் தாங்குகிறதோ என்னவோ?''

''இவளுக்கு எல்லாம் தாங்கும். அதாவது நல்ல ஆயா என்று நாலு பேர் சிபாரிசு செய்திருக்கிறார்கள். குழந்தையை நன்றாகப் பார்த்துக்கொள்வாள். கோமதிக்கும் ஒரு துணை.''

''எனக்கென்னவோ இது அவசியமென்று தோன்றவில்லை.''

''ஆமாமடா! நான் செய்த ஏற்பாடென்றால் உங்களுக்கெல்லாம் பிடிக்குமா? எத்தனையோ ஆயாக்களைப் பார்த்தோம். ஒன்றாவது சரியாய் அமைந்ததா? ஏதோ கஷ்டப்பட்டு ஓர் ஏற்பாட்டை முடித்திருக்கிறேன். அவ்வா



மூக்கும் போக ஒப்புக் கொண்டிருக்கிறான். நல்ல மனுஷியாம். இதைவிட உசத்தியாய் நீதான் ஒன்றைப் பாரேன், பார்க்கலாம்! ' கட்டின வீட்டுக்குப் பழுது சொல்வது சுலபம்தான்.''

உரக்கக் கத்திவிட்டு அங்கிருந்து சென்றார் அவர். அடேயப்பா! எத்தனை கோபம்!

அவர்களுக்குத் தெரியும் என்பதை அவர் அறிந்திருக்கவில்லை. தாதிக்கு ஏற்பாடு செய்திருப்பதாய் அவர் கூறு முன்பே அவர் யாரை நிச்சயப்படுத்தியிருக்கிறார் என்பது காதில் விழுந்துவிட்டது. இம்மாதிரி விஷயங்களைத் தெரிந்து வைத்துக் கொள்ளவும் சம்பந்தப்பட்டவர்கள் காதில் போட்டு வேடிக்கை பார்க்கவும்தான் எத்தனையோ அக்கறைப் பட்டவர்கள் இருக்கிறார்களே!

தகவல் சொன்னவர்கள் எதிர்பார்த்தது 'அந்த நாசகாரியா எங்கள் வீட்டில் காலெடுத்து வைப்பது? அடித்து விரட்டுகிறோம் பார். யாருக்கு வேண்டும் இவள் உதவி?' என்ற மனப்பான்மையைத்தான்.

ஆனால் மீனுவும் ஸ்ரீதரும் உணர்ந்தது வேறு. அந்த அவள் தாதியாய் வருவது அவர்களுக்கு இஷ்டமில்லைதான். ஆனால் அதற்குக் காரணம் அவளிடம் தோன்றிய பரிதாபம்.

பரிதாபம்! அம்மாவின் இடத்துக்குப் போட்டியாய் வந்தவளிடம் பரிதாபமா? ஆனால் இறந்துபோன அம்மாவிடம் தம் அன்போ பக்தியோ இதனால் களங்கப்பட்டதாக அவர்கள் கருதவில்லை. தாயிடம் அன்பு என்பது போன்ற இயல்பான பந்தங்கள் இருக்கும்போதே, அவற்றுடன் கூடவே, மனிதத் தன்மையின் அடிப்படையில் எழும் பாரபட்சமற்ற அநுதாபங்களுக்கும் நியாய அநியாய உணர்ச்சிகளுக்கும் மனத்தில் இடம் இருப்பது சாத்தியமில்லையா என்ன? அப்படி இருப்பதுதானே முதிர்ச்சி?

அவள் நல்லவளோ பொல்லாதவளோ அது வேறு விஷயம். இந்தச் சந்தர்ப்பத்தில் அவளிடம் அவர்களுக்கு அநுதாபம்தான் மிகுந்தது.

கோமதியை வசதியுள்ள இடத்தில் மணம் முடித்துக் கொடுத்தாகி விட்டது. ஸ்ரீதர், மீனு இருவரும் வேலையில் இருப்பவர்கள். அப்பா எப்போதேனும் தான் தமது சொந்தச் செலவுகளுக்கு அவர்களிடம் கேட்பார். மற்றபடி பெல்லாம் அவர் பென்ஷனுக்குள் அடங்கிவிடும். அந்த அவளைக் காக்கும் கடமை உட்படத்தான். இப்போது சிறிது காலமாய் அவருக்கு ஏதோ பண நெருக்கடி போலும். அவளைக் காப்பதற்காகப் பிறரிடம் உதவி கோர அவர் கூச்சப்படுவது இயற்கைதான். ஆனால் அவர் தம் பென்ஷன் முழுவதையும் அவளிடம் தந்து விட்டுத் தம் மக்களிடம் ''நான் பரம ஏழை. நீங்கள் இருவரும் என் தேவைகள் அனைத்தையுமே கவனித்துக் கொள்ளுங்கள்!'' என்று கூறி விருக்கலாமே! அதற்கு அவருக்கு உரிமை உண்டு. அதில் அவர் உயர்வு களைமடைந்திருக்காது. அல்லது அவளை ஏதேனும் ஓர் அநாதை விடுதியிலேனும் சேர்த்திருக்க வேண்டும். அப்போதும் அவள் உழைத்திருப்பாளென்றாலும், அந்நியர்களிடம்தான் உழைத்திருப்பாள். வறுமையின் செம்மையாக அந்த உழைப்பை மாற்றி அதிலும் அவள் தலைநிமிர்ந்து நிற்க முடியும். அதையெல்லாம் விட்டுவிட்டு....

தம் மகளின் குழந்தைக்குத் தாதியாகவா?

இதைவிடக் கொடிய அவமானம், சிறுமை அவளுக்கு வேறென்ன அவர்

தந்திருக்க முடியும்? அதை எண்ணி அவர்களுள் சீற்றம் பொங்கியது.

தன் வாழ்வையும் அவருக்கு அர்ப்பணித்தவள் அவள். அந்த அர்ப்பணத்துக்கு உலகச் சம்மதம் கிடைத்திருக்காவிட்டால் என்ன? அவளைப் பொறுத்த வரையில் அது விள்ளாத முழுப்பொருள். ஒரு பெண்ணின் தலைசிறந்த கொடை. மனைவியின் ஸ்தானத்தைத் தந்திருக்காவிட்டாலும் மனைவிக்குரிய மதிப்பை அவளுக்குத் தர அவர் கடமைப்பட்டவர். அத்தகைய உறவு அவளுடையது. அம்மாவுக்கும் அவளுக்கும் அந்த வகையில் வேறுபாடு கிடையாது. சொல்லப்போனால் அம்மாவை விடவும் நைந்து நின்றவள் அவள்தான். அம்மா வேதனைப்பட்டாள் என்றால் அவளுக்கும் எல்லாம் சுகமாகவே இருந்திருக்க முடியாது. அம்மாவுக்காவது சமூகத்தின் கௌரவம், பிறரின் அநுதாபம், குடும்பத் தலைவி என்ற மதிப்பு, இவை இருந்தன. அவளுக்கோ சமூகத்தில் அவமரியாதை. ஒரு குடும்பத்தைக் கெடுத்தவள் என்ற ஏச்சு. எந்த உறவிலும் அம்மாவுக்கு வீட்டிலும் வெளியிலும் ஒரு கண்ணியமான பதவி இருந்ததோ அதே உறவு அவளுக்கு ஒரு குடிமுழுப்பு. அதை ஒரு தவமாய் அவள் வகித்திருக்கலாமே தவிர, உலகத்தைப் பொறுத்தவரையில் அதன் இன்பமும் பெருமிதமும் அவளுக்கு விலக்கு. கௌரவம் என்பது அவர் தந்தால் தான் அவளுக்கு உண்டு. அவளை ஏற்றுக்கொண்டுவிட்ட பிறகு அந்தக் கௌரவத்தைத் தருவதுதான் அவருக்கும் சிறப்பு. இப்போது அந்தக் கௌரவத்தை அவளுக்கு மறுத்து அவர் தம்முடைய சிறப்பையும் சிதைத்துக் கொண்டு விட்டார்.

ஒரு சாமானிய வேலைக்காரியாய் அவளைத் தம் வீட்டுக் குழந்தைக்கு நியமிக்க அவருக்கு எத்தனை நெஞ்சுரம்! தாலி கட்டவில்லை என்ற ஒரே காரணத்தினால்தானே அந்த அவமதிப்பும் அநியாயமும்!

தாலி! அதன் அபரிமிதமான முக்கியத்துக்கு முன் மனித அடிப்படையில் எழும் தர்மங்களுக்குக் கூடவா இடம் இல்லை?

அவர் மீண்டும் வந்தார். அவளுக்கு ஏதோ ஒரு வழி செய்துவிட்டதான உணர்வில் தன் மனத்தையே சமாதானப்படுத்திக் கொள்ள விரும்புபவர் போல் படபடப்புடன் ''என்ன இன்னும் யோசனை செய்கிறீர்கள் இரண்டு பேரும்? நான் செய்த ஏற்பாட்டில் ஏதும் தவறில்லை. அந்தப் பெண்பிள்ளை சந்தோஷமாகத்தான் ஒப்புக்கொண்டாள் '' என்றார்.

ஸ்ரீதர் அவரை உற்றுப் பார்த்தான். அவன் மௌனத்தைக் கண்டு அவர் ஒருவிதக் குழைவோடு, ''என்னடா அப்படிப் பார்க்கிறாய் ஸ்ரீதர்? என் ஏற்பாட்டில் நீ குறை சொல்லலாமா? அப்பாவிடம் ஆசை இல்லையா உனக்கு?'' என்றார்.

கண்களைத் தாழ்த்திக் கொண்ட அவன், ''ஆசை இல்லாமல் என்னப்பா?'' என்றான் மெல்லிய குரலில்.

அன்பு இருந்தது என்னவோ உண்மை தான். சதையும் உதிரமும் ஒன்றாய் இருந்தால் அன்பு இயங்குகிறது. ஆனால் அதில் என்ன சிறப்பு? அது வெறும் இயற்கை. மதிப்புத்தான் மனிதன் தன் செயலாலும் குணத்தாலும் சம்பாதித்துக் கொள்வது. அதுவே பெருமைக்குரிய உணர்ச்சி. ''அப்பாவிடம் உனக்கு மதிப்பு இல்லையா?'' என்று அவர் கேட்டிருந்தால் அவன் என்ன பதில் சொல்லியிருக்க முடியும்!

அவன் பதிலால் திருப்தியுற்ற அவர், ''அடுத்த புதன்கிழமை கோமதி ஊருக்குக் கிளம்புகிறாள் இல்லையா? செவ்வாய்க் கிழமை மாலையே அந்தப் பெண்பிள்ளை தன் சாமான்களுடன் இங்கே வந்துவிடுவாள். ஒரு நாள் முழுவதும் குழந்தையுடன் பழகுவதற்கு இருக்கட்டும்'' என்றார்.

அவன் உள்ளம் சில்லிட்டது. அவனும் மீனுவும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

அவள் வந்தாள்.

கோமதிதான் முதலில் எட்டிப் பார்த்தாள். அம்மாவின் இடத்தை ஆக்கிரமித்துக் கொண்டவளை எப்படி எப்படியோ கற்பனை செய்து, கூடவே ஆத்திரத்தையும் இழைய விட்டு ஒரு குரூரமான ஆவலில் பகைமைக் கண் கொண்டு விழித்துப் பார்த்தாள்.

வந்தவளுக்கு வயது சென்ற பருவம். மூப்பின் தொடக்கத்தில் கால் வைத்தாயிற்று. இளமையில் எப்படி இருந்திருப்பாள் என்று நிதானிக்க முடியவில்லை. ஏதோ ஒரு கவர்ச்சி இருந்திருக்க வேண்டும் என்பது மட்டும் நிச்சயம். ஸ்ரீதரும் மீனுவும் இதையெல்லாம் ஆராயவில்லை. அவர்கள் பார்வை கண்டுகொண்ட உருவம் சோர்ந்திருந்தது. அவமானத்தில் குன்றித் தயக்கமாக அடி வைத்து வந்தது; அடிபட்ட பெண்மையின் துடிப்பையெல்லாம் இதயத்தில் இடம் போதாமல் வெளியே கொண்டுவந்து விட்டாற்போல் அங்கந்தோறும், அசைவு தோறும் அந்தத் துடிப்பைத் தாங்கிக் கொண்டு வந்தது.

மகத்தான சோகம் அவர்கள் நெஞ்சில் கவிந்து கொண்டது.

தயங்கி வாசலில் நின்றவளிடம் கோமதி நேராகப் பேசாமல் வேலையாளைப் பார்த்து ''அந்தப் பெண்பிள்ளையை இப்படி வரச்சொல்லு'' என்று வெடுக்கென்று கூறிவிட்டு உள்ளே சென்றாள். ஸ்ரீதருக்குத் தாங்கவில்லை. ''வாருங்களம்மா'' என்று அவன் அவளிடம் புன்னகையோடு கூறி அவள் கைகளிலிருந்த பெட்டியையும் படுக்கையையும் தான் வாங்கிக் கொண்டான்.

''ஐயையோ, நீங்கள் எதற்கு?''...

''பரவாயில்லை. உள்ளே வாருங்கள்.'' சாமான்களைக் கூடத்தில் வைத்து விட்டு அவன் அவளை ஊஞ்சல் அருகில் அழைத்துச் சென்று ''உட்காருங்கள்'' என்றான்.

''இருக்கட்டும்.''

''உங்களைப் பார்த்தால் ரொம்பக் களைப்பாயிருக்கிறது. நிற்க வேண்டாம். இப்படி ஊஞ்சலில் உட்கார்ந்து கொள்ளுங்கள். நான் போய் என் அக்காவை அழைத்து வருகிறேன்.''

கோமதியுடன் அவன் திரும்பி வந்த போது அவள் தரையில் உட்கார்ந்திருந்தாள். சோர்விலும் மன உளைச்சலிலும் தலை கவிழ்ந்திருந்தது. அவர்கள் காலடிச் சத்தம் கேட்டதும் திடுக்கிட்டாற்போல் எழுந்து நின்றாள்.

''இவள்தானா ஆயா? என்னம்மா, உங்களைப் பார்த்தால் பலவீனமாய் இருக்கிறதே. ஊருக்கு வர முடியுமா? அப்புறம் அங்கே போய்க் 'குளிருகிறது' என்று போர்த்துக் கொண்டு படுத்து விட்டால் என்னால் முடியாது. குழந்தையின் வேலையை யெல்லாம் சரியாய்க் கவனித்துக் கொள்ள வேண்டுமே ...''

கோமதியை ஏறெடுத்துப் பார்த்த அவள் கண்களில்தான் எத்தனை வெறுப்பு! 'என் நிலை இப்படி ஆயிற்று?' என்ற துன்பம் அந்த வெறுப்பை இயக்கிக் கொண்டிருந்தது.

''அக்கா! கொஞ்சம் நிதானமாய்த் தான் பேசேன்'' என்றான் ஸ்ரீதர்.

''நிதானம் என்னடா? உள்ளதைத் தான் சொன்னேன். என்னம்மா, நான் பாட்டுக்குக் கேட்டுக் கொண்டிருக்கிறேன், சும்மா நிற்கிறீர்களே?''

''வேலை செய்யத்தானேயம்மா வந்திருக்கிறேன். எல்லாம் பார்த்துச் செய்கிறேன்.''

''ஏதேது, வாய்த் துடுக்கு இருக்கும் போலிருக்கிறதே!'' என்று உரக்க முணுமுணுத்த கோமதி, ''ஆமாம், உங்களுக்கு அப்பா எவ்வளவு சம்பளம் பேசியிருக்கிறார்?'' என்றாள் குத்தலாக.

அவள் சூடு பட்டாற்போல் துடித்துப் போனாள். ஸ்ரீதர் குறுக்கிட்டுப் பேசுமுன் அறைக்குள் அவர் வந்தார். முகத்தில் சிறிதும் மாறுபாட்டைக் காட்டாமல், அவளைப் பார்த்து ''இவள் தானம்மா என் பெரிய பெண். இவள் குழந்தைக்குத்தான் ஆயா தேவைப்படுகிறது. மூன்று மாசக் குழந்தை. தலைச்சன். அவளுக்கு ஒன்றும் தெரியாது. நீதான் குழந்தையை ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொள்ள வேண்டும். இவள் என் மகள். இன்னுமொரு மகள் இருக்கிறாள்'' என்று கூறிவிட்டுக் கோமதியைப் பார்த்து ''என்னென்ன சொல்ல வேண்டுமோ அந்தம்மாளிடம் விவரமாகச் சொல்லு!'' என்றார்.

''விவரம் என்ன! குழந்தைக்கு ஒரு நாள் விட்டு ஒரு நாள் எண்ணெய் தேய்க்க வேண்டும். ராத்திரியில் அடிக்கடி அழும். அதன் அப்பாவுக்கு எந்தக் காரணம் கொண்டும் தூக்கம் கெடக் கூடாது. குழந்தையை அழ விடாமல் ஆட்டித் தூங்கப் பண்ணுவதெல்லாம் உங்கள் பொறுப்பு. காலையில் எட்டு மணிக்குப் பசும் பால் புகட்ட வேண்டும். பதினொரு மணிக்கு அரால்; அதற்கப்புறம் பழ ரசம் — ஒரே ஒரு மூடியைப் பிழிந்து...'' கோமதி அடுக்கிக்கொண்டே போனாள். எப்படி முடிகிறது அவளால் என்று வியந்தான் ஸ்ரீதர்.

உள்ளேயிருந்து வந்த மீனு அவளிடம் தம்ளரை நீட்டினாள்.

''காப்பி!''

இதை ஸ்ரீதரைத் தவிர யாரும் எதிர் பார்க்கவில்லை. தந்தை குழப்பத்துடன் மகளை நோக்கினார். மீனு அவளைப் பரிவாகப் பார்த்து, ''களைப்பாயிருக்கிறீர்களே என்று காப்பி கொண்டு வந்தேன். குடியுங்கள்'' என்றாள்.

அவளிடம் திகைப்பு. பிறகு அவளுடைய அயர்வு அந்தப் பானத்தின்

இதந்ததை எண்ணி நெகிழ்ந்தது. புன்னகைத்தாலும் அச்சம் நீங்கவில்லை. ஒரு விதத் தயக்கத்தோடு அவரைப் பார்த்தாள்.

சட்டென்று முகத்தைத் திருப்பிக் கொண்ட அவர் ஏதோ ஒரு துயரம் பனிக்கின்ற குரலில் "குழந்தை கொண்டு வந்திருக்கிறான். வாங்கிக் கொள்" என்றார்.

கோமதிக்குச் சகிக்கவில்லை. அவன் யார் என்று தெரிந்தும் இந்த மீனுவும் ஸ்ரீதரும் செய்கிற உபசாரம்...! அப்பாவுக்கும்தான் வெட்கம் இல்லையா?

"குழந்தையைக் கொண்டுவருகிறேன், அவன் தன் ஆயாவின் முகத்தைப் பார்த்துப் பழகட்டும்" என்று சுருக்கென்று சொல்லிவிட்டு அவள் உள் அறைக்குச் சென்று மதலையைத் தூக்கி வந்தாள்.

"இந்தாடா கண்ணு, ஆயாகிட்டப் போறியா? இந்த ஆயாதான் உன்னைப் பார்த்துக்கொள்ளப் போகிறான். நல்ல ஆயா, 'நீ நன்றும் வேலை செய்தால் அம்மா பொங்கலுக்குச் சேலை வாங்கிக் கொடுப்பாள்' அப்படின்னு சொல்லு, பார்க்கலாம்?"

காப்பியை அருந்தி முடித்துவிட்டுக் குழந்தையைப் பார்த்துப் புன்னகை செய்யத் தன்னைப் பலப்படுத்திக் கொண்ட அவனது இதயத்துள் கோமதியின் ஒவ்வொரு சொல்லும் கத்தியாய்ப் பாய்ந்தது. அப்படியே கூனிக் குறுகி நின்றான். பிறகு உதடுகளைக் கடித்துத் தன்னைச் சமாளித்துக் கொண்ட பின் குழந்தையை நோக்கிப் பிரயாசையுடன் கரங்களை நீட்டினான்.

" 'ஆயா' சொல்லு? 'ஆயா'ன்னு சொல்லுடா கண்ணு!" கோமதியின் குரல் குரூரமாய் அந்தச் சொல்லுக்கே அழுத்தம் கொடுத்தது. "ஆயாகிட்டப் போறியா? நல்...ல ஆயா! பாப்பாவுடைய ஆயா!..."

அவன் பக்கமாகக் கோமதி குழந்தையை நீட்டினாள்.




ஜோஸ்யர்: இந்த லோகத்திலே நீங்க அளவுக்கு மீறி ஆசைப்படுகிற பொருளெல்லாம் இனிமேத்தான் உங்களுக்குக் கிடைக்கப் போகுது.

மீனுவின் குரல் மென்மையாக இடையில் புகுந்தது. "ஆயா என்று வயது முதிர்ந்தவன் என்கிற அர்த்தத்திலும் அழைப்பதுண்டு, இல்லையா? வயதான ஸ்திரீயை ஆயா என்றும், அதே போல்..." மீனு சற்று நிறுத்தி விட்டு அடுத்த சொல்லுக்கு அழுத்தம் கொடுத்தாள். "...பாட்டி என்றும் சொல்லலாம்."

அறைக்குள் இடி விழுந்து விட்டது.

அவன் பிரமிப்புடன் வெறித்தான். முகம் வெந்து உணர்ச்சி கொப்புளித்துப் பொருமி வெள்ளமிட்ட வேகத்திலும் அத்தனை மலைப்பை மீறிக் கொண்டு அந்தப் 'பாட்டி' என்ற சொல் விளைத்தாற்போன்ற ஏதோ ஓர் இனிமை உள்ளத்தில் சுரந்த நெகிழ்ச்சியின் அடையாளமும் அவனது வாடிய முகத்தில் பரவியது.

அவர்கள் யாவையும் அறிந்திருந்தார்கள் என்ற சூக்ஷமத்தைப் புரிந்து கொண்ட அப்பாவுக்கு நாவே எழவில்லை.

ஸ்ரீதர் அமைதியாக அவனை நோக்கி வெளிப்படையாகவே பேசினான். "உங்களைக் காப்பாற்ற வேண்டியது அப்பாவின் கடமை. ஏதோ சிறிது சேமிப்பே இருப்பதால் கொஞ்ச காலத்துக்கு இந்த வகையில் சமாளிக்கலாம் என்று எண்ணினார் போலிருக்கிறது. ஆனால் அதற்கு அவசியமில்லை. உங்களுக்காக எங்களைக் கேட்கலாமென்று அவர் கருதியிராவிட்டாலும் என் தங்கை மீனுவும் நானும் எங்கள் ஊதியத்திலிருந்து ஆளுக்குக் கொஞ்சமாய் உங்கள் ஜீவனத்துக்கு வேண்டியதைக் கொடுக்கிறோம். நீங்கள் நிம்மதியாகக் கௌரவமாக வாழுங்கள்."

அவன் தடுமாறினான். தலையைச் சுற்றிக் கொண்டு வந்தது. தந்தை செயலிழந்து நின்றார்.

அவன் முகத்தை மீனுவும் ஸ்ரீதரும் கனிவுடன் நோக்கினார்கள். அவனுக்காக அவர்கள் உணர்வது என்ன? அது அன்பல்ல. ஆனால் அன்பைவிட அவசியமானது. அது நியாய உணர்வு.

"இதைத் தானம் என்று எண்ணி மறுக்காதீர்கள். இது உங்கள் உரிமை. அப்பாவின் கடமையில் எங்களுக்கும் பங்கு இருக்கிறது."

தீனமாய் நோக்கிய அவன் கண்களில் திடீரென நன்றியின் அருவி ஊற்றெடுத்தது. கால்கள் துவண்டு தரையில் உட்கார்ந்தான். ஆறுதலடைந்த குழந்தை போல் உடல் துடிதுடிக்கத் தன் முழங்கால்களை அணைத்துக்கொண்டு அவற்றினிடையே முகத்தைப் புதைத்துக் கொண்டான்.

அப்பாவுடைய உள்ளம் உருகி விம்மி நெஞ்சில் வந்து அடைத்தது. தலை குனிந்தவாறு அங்கிருந்து வேகமாகச் சென்றுவிட்டார்.

கோமதி விழித்த கண்களுடன் சிறிது நேரம் அசையாமல் நின்றாள். நடந்தது எதையுமே அவளால் நம்ப முடியவில்லை. பிறகு அவளுள் ஆத்திரம் இறுகியது. குரலை உயர்த்திக் கூவினாள்.

"என்னடா ஸ்ரீதர் இப்படி ஒரு காரியம் செய்துவிட்டாய்? நாளைக்கு நான் ஊருக்குக் கிளம்ப வேண்டுமே. இப்போது ஆயாவுக்கு எங்கே போவேன்?"

# ஃபாஸ்ஃபோமின்



## சக்தியை அதிகரிக்கிறது.

## பசியைத் தூண்டுகிறது.



## வலிவைப் பெருக்குகிறது.



## நோய்களை எதிர்க்கும் சக்தியை கூட்டுகிறது.

சுருங்கச் சொன்னால்—
குடும்பத்தில் அனைவரும் திட
ஆரோக்கியத்துடன் திகழ
உதவுகிறது ஃபாஸ்ஃபோமின்




ஃபாஸ்ஃபோமின்... 'பி' காம்ப்ளெக்ஸ் வைட்டமின்களும் பலவகை கிளிஸரோஃபாஸ்பேட்டுகளும் அடங்கிய, பழரஸ மணம் கமழும் பச்சைநிற டானிக்.

SQUIBB® ® இ. ஆர். ஸ்க்விப் அண்டு ஸன்ஸ் இன்கார்பொரேட்டெட்டின் ரிஜிஸ்டர்ட் டிரேட் மார்க்காகும். காரசந்த் ப்ரேம்சந்த் ப்ரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

SARABHAI CHEMICALS

Shilpi SC 50 A /67 Tam

"அண்ணன் இருக்காகளா?"

"ஏது ஏது... மூனாவா? வணக்கம், வணக்கம், வணக்கம் அண்ணே!"

"என்னண்ணே, நீங்களும் வந்து தம்பியை அண்ணேங்கிறிய? தம்பீன்னு சும்மாச் சொல்லுவியளா?"

"ஏது ஏது... நீங்க ஒண்ணு! அண்ணனாத்தான் இருந்துட்டுப் போவிட்டா என்னவாம்?" என்றபடி கந்தையா என்கிற கானா, முத்தையாவுக்கு ஒரு குறிச்சியை எடுத்துப் போட்டார்.

"அப்படிக் இல்லேண்ணே வயசிலே மூத்தவிங்க, இளைய விங்கன்னு கெடையாதா அண்ணே?" மூனா விடவில்லே.

"ஏது ஏது... இப்ப ஆரு வயசிலே மூத்தவங்கிறிய? நான் தாங்கிறியளா?"

"இதுலே வேறெ சந்தேகமாண்ணே? போவமே மனுசன் வயசைச் சொல்லிறுமே. அது சொல்லாட்டி முளைக்க வாற நரை சொல்லிப் போட்டுறுமே. சந்தேகமிருந்திச்சின்னு தானா தாவன்னா பின்னாலே வாருக; கேட்டுப் புடுவம்."

"ஏதுஏது...அவுகளுமா.? ஏது ரெண்டு பேருமா கருக்கல்லிலே புறப்பட்டுட்டிய?"

"ஒங்களைத்தான் பாக்க வாறான்னு.."

"ஏது...ஏது...? அ...!"

"இதா வந்திட்டாகண்ணே..."

அணைத்த சுருட்டும் அதன் வாடையுமாக உள்ளே நுழைந்து வந்தார் தானா தாவன்னா என்கிற தாவு மானவர். நல்ல உயரம்; அதற்கேற்ற ஆகிருதி. பெரிய மீசை; புருவங்கள்.

"வாங்கண்ணே... வாங்கண்ணே... ஏது ஏது... வணக்கம், வணக்கம், வணக்கமண்ணே!"

# மூனாவின் முற்போக்கு

"உம்ம்..." என்று உறுமியவாறு வரவேற்புக்குத் தலையசைத்தார் தாவன்னா. அவருடைய உடலுக்கேற்ற பிரம்பு நாற்காலியில் நிதானமாக வந்து உட்கார்ந்து கொண்டே, "என்ன தகிசு உங்களுக்குள்ளாற இப்ப? வந்ததும் வராததுமா?"

"ஏது ஏது... ஒண்ணுமில்லேண்ணே... இப்ப நான் எளமையா, மூனா எளமையான்னு ஒரு சந்தேகம். மூலத்துக்கும் முளைக்க வாற நரைக்கும் என்ன வந்துடுச்சி. அதெல்லாம் உடம்பு வாகி. அதைக் கொண்டா மனுஷனுக்கு வயசு பாக்கறது? துந்துபிக்கு வருஷம் என்னாச்சி, கணக்குப் போட்டுப் பாருங்களேன்!" என்று இருவரையும் மாறி மாறிப் பார்த்துச் சொன்னார் கானா.

"நீங்க துந்துபியா...? நான் வந்து ரெத்தாக்ஷி. அப்ப ஆரு எளமை?" என்று கேட்டார் மூனா.

"ஏது.....ஏது..... நீங்க தாங்கிறிய! அதானே?"

"ஆமாண்ணே ஆமா... வருசந்தான் சொல்லிட்டியளே ... ரெத்தாக்ஷியா. ரௌத்திரி, துன்மதி, துந்துபி ... மூனு வருசம் நான் எளமையாச்சே!"

"ஏது ஏது... துந்துபியை ஏன் கணக்குலே சேக்கிறிய? ரெண்டுதான். ஒப்புக்கிறியளா?"

"சரி, அப்படியேதான் இருந்திட்டுப் போவட்டும். நான் எளமைங்கிறதையாவது ஒப்புக்கிறியண்ணே?"

"ஏது ஏது... ஒப்புக்கிட வேண்டியதுதானே? என்ன தானா தாவன்னா, சிரிக்கிறியளா உதட்டுக்குள்ளாற? மீசை வெச்சுக்கிட்டா இது ஒரு சௌகரியம்லே! அண்ணாச்சிக்கு வயது அம்பதுன்னாலும் இருக்கும். எங்கே மீசையிலே அண்ணாச்சிக்கு ஒரு நரையைக் காட்டிப்புடுங்க பாப்பம்? நரையைக் கொண்டா வயசைப் பாக்குறது?"

தாவன்னாவின் மடிப்புத் தொந்தி ஒரு குலுங்கு குலுங்கியது. மின்னல் மின்னிக் கொஞ்ச நேரம்





ஆனபிறகு கேட்கிற இடிச் சத்தத்தைப் போல, ''ம்... .... ம் .... ம்'' என்ற சிரிப்புச் சத்தம் சற்றுப் பொறுத்துத் தான் வெளியில் கேட்டது.

''ம்... ம்... ம்... சின்னத் தம்பி மூணு சொல்றத்தைக் கேட்டனு, நரையிலே மீசை நரையா, ஆசை நரையான்னு கேக்கலாமின்னு நெனைச்சனு. அதுக் குள்ளாற நீங்களே அதைக் கேட்டுப் புட்டியளா — அதுக்குல்ல சிரிச்சேன். ஏன் நாஞ் சொல்றதுலே...''

''ஆமாண்ணே ஆமா, நீங்க எதுவும் வாயைத் தொறந்து சொல்ல மாட்டிய. சொல்லிப்புட்டா அதுலே அப்பனுக்கு அப்புறம் சொல்லிற முடியுமா? எது... எது... தம்பி, மூணுண்ணே, நல்லாக் கேட்டுக்கிடுங்க — தம்பின்னு சொல் விட்டேன்; சரிதானு? — தம்பி வந்து இந்த வருசந்தானே நம்ப முன்சிபால்டியிலே புது மெம்பரு. அநுபவம் பத்தாதுல்லே...'' என்றார் கானு.

தாவன்னு ஐந்து விரலாலும் மீசையை அடக்கிச் சேர்த்து இரண்டு புறமும் உருவி விட்டுக் கொண்டார். பிறகு கானு சொல்வதை ஆமோதிப்பது போல் தலையை உலுக்கிக் கொண்டார்.

''தாவன்னுவுக்குல்லே?'' என்றார், மூனு — சித்தார்த்தி வருஷத்து இளைய செம்மல்.

''என்னு?'' என்று காதை மட்டும் சாய்த்துக் கொண்டார் தானு தாவன்னு.

''வந்து, இன்னிக்கு மீட்டிங்கிலே நான் ஒரு தீர்மானம் கொண்டாரலாமின்னு யோசனை பண்ணியிருக்கிறேன். என்னும்பியளோ? அதுக்குத்தான் உங்களை, இளிங்களைக் கலந்துக்கிட்டுச் செய்யலாமின்னு...''

''ம்.....ம். ..சொல்லுங்க, தம்பி!''

''என்னு, நீங்க இந்த முன்சிபால்டியிலே ஊனி உடப்பெடுத்தவங்க. பஞ்சாயத்து யூனியனு இருந்த நாள்லேருந்து பழக்கப்பட்டவங்க. இல்லீங்களா? அதுக்காகத்தான் உங்க யோசனையைக் கேக்கணுமிங்கறது.''

''ம்.. .ம்... உம்...''

''எதுக்கும் ரெண்டு பேருக்கு மூணு பேராக் கலந்துக்கிட்டா நல்லதுல்லீங்களா அண்ணே?''

''ஆமா, ஆமா. பின்னே? நெனச்சா கொண்டுக்கிட்டு வாறது. நெனைக்காட்டி வா பி க வாங்கிக்கிட்டுத் தோத்துப் போறது. அதெல்லாம் என்னு வெவகாரம்; கத்துக்குட்டி வெவகாரம்!'' என்றார் தானு தாவன்னு.

''வந்து நானும் இந்த நாலு மாசமா பாக்கறேன். மெம்பருங்கள்ளாம் அந்தப் பழைய பாதையிலேயே போயிட்டிருக்

காங்களே தவிர, புதுமையா, முற்போக்கா ஒண்ணையும் காணோமே!'' என்றார் மூனா.

''எப்படித் தம்பி வரும்? அல்லாரும் பரிசய ஆளுங்கதானே?''

''அதுக்காவத்தான் இதைக் கேளுங்க! இப்ப நாவப்பட்டணம் கடல் இருக்குதுங்களே—''

''ஆமா, இருந்துக்கிட்டிருக்கு!''

''அதை வந்து நம்ப ஊர் முன்சிப்பாலிடி எல்லைக்குக் கொண்டாந்துட்றதுன்னுஒரு தீர்மானம் போட்டுறனும்.''

''எது எது... என்னா, சமுத்திரத்தையா?''

''ஆமாண்ணே! சமுத்திரம்னதும் உடனே வாயைப் புளந்திட்டியளே! நம்பளுக்குத் துறைமுகம் வேணுமண்ணே. மெட்ராஸ்லே இருக்கறவங்க, நாவப்பட்டணத்திலே இருக்கிறவங்க, புதுச்சேரியிலே இருக்கிறவங்க மட்டும் என்ன ஒசத்தி? நாம்ப என்ன மட்டம்? ஏண்ணே! இந்தத் தீர்மானத்தைப் படிக்கப் பாத்தா எல்லாரும் அசந்து போயிறமாட்டாங்களா? இந்த முற்போக்கான தீர்மானம் எல்லாப் பேப்பர்லேயும் தமிளு, இங்லிசு, ஏன் அந்த இந்தியிலே கூட அச்சுப்போட்டுவரும். நாடெல்லாம் பாக்கும்; படிக்கும். அதுக்கப்புறம் கம்மாத் தடபுடலா நம்ம ஊரு பேரு அடிபட்டுட்டு இருக்கும். நாம்ப மட்டும் இந்தத் தீர்மானத்தை ஏகமனதா நெறவேத்திப்புட்டோம் — எல்லாக் கட்சியும், ஆதரவும் கொடுப்பாங்க. என்ன சொல்றிய? உங்க சகலருகூட இப்ப ரொம்பச் செல்வாக்கா இருக்கிறாரு. அவுகளை வச்சுச் சிபாரிசு பண்ணிக்கிடலாம். குறுக்குச் சட்டத்துக்கு ஒரு ஆணி மாதிரி!''

''பண்ணிக்கிடலாம் தம்பி, ஆனா சமுத்திரத்தை எப்படி நம்ப ஊருக்குக் கொண்டாறது?'' என்றார் நாவன்னா மீசையை உருவி விட்டுக் கொண்டு.

''நாமா கொண்டாறப் போறோம்? எத்தினியோ இஞ்சினிரு, ஓவர்சீயரு!''

''எது எது... நீங்க ஒண்ணு...இதெல்லாம் நடக்கிற சங்கதியா? அதிலேயும் இப்ப இருக்கிற ஆணையருகிட்டேயா? இந்த ஊரு சாக்கடைத் திட்டத்துக்கே பணமில்லேன்னு காதைப் பொத்திக்கிறவரு இதுக்குமட்டும் பணம் இருக்குன்னு ஒப்புடுவாரா?''

''பணம் இல்லேன்னு சர்க்காரைக் கேக்கறது? நாம என்ன மத்தவங்களுக்குச் சமுத்திரம் கூடாதுன்னு சொல்றோம்? நம்பளுக்கும் வேணுமின்னுதானே சொல்றோம்?''

''அப்படியா வெசயம்? அப்படிப் புடிக்கலாங்கிறியா? அதுவும் பாயின்டுதான்! துறைமுகம் மட்டும் வந்திடுச்சி, கொட்டைப் பாக்கு, தேக்குமர யாபாரத்தை நாம நேரவே நடத்திறலாமே. போடு சக்கை, இதுல்ல சரியான ரோசனே! எழுது தம்பி. இன்னிக்கே மீட்டிங்கிலே வச்சு ரெண்டுலே ஒண்ணு பாத்துப்புடுவம். பணம் இல்லேன்னுப்புடுவாங்களோ! உம்ஹூம்னுறும்! இல்லாட்டிப்போனா தம்பி சொல்றாப்பலே சர்க்காருலே கடனு வாங்கிக்கிடறது. சமுத்தரமே வரக்கொள்ள மேலே பணத்துக்கு என்ன பஞ்சம்? பாசிக் குத்தகைக்குக் காணுதே அந்தப் பணம். நாலே வருசத்துலே கடனும் அடஞ்சி போயிடும்; சமுத்திரம் வந்தது மிச்சமாயிருமே. ஏன், நான் சொல்றதுலே என்ன?''

''எது எது...அப்ப சமுத்திரத்தை எப்படி இந்த ஊருக்குக் கொண்டாறதாம்?''

''இதாண்ணே ஒரு கேள்வி? கங்கையையும் காவேரியையும் ஒண்ணாக்கிப் புடலாம்டாங்கிறாங்க. கிருஷ்ணாவையும் பெண்ணாறையும் சேர்த்துப் புடலாம் கறாங்க. அணைகட்டைத் தூக்கிப் போட்டா அந்நாறு மைலு இடலாயிடும்டாங்கறாங்க. சந்திர மண்டலத்துக்கு மனுசனே அனுப்பலாம்டாங்கறாங்க. இப்படியெல்லாம் விஞ்ஞானமே முற்போக்கிலே போயிக்கிட்டிருக்கிறப்ப, இதுவா ஒரு பெரிய காரியம்? என்ன நானா நாவன்னா? பேசாமே புஞ்சிரிப்பா இருக்கிறீளே. சொல்லுங்க கானாவுக்கு!''

''நீ இப்பவே வந்து எழுது தம்பி, பேசாமே தீர்மானத்தை. மத்தச் சோலியை நம்மகிட்ட உட்டுடு, தம்பி!''

மூன்று பேரும் அன்று முன்னதாகவே நகராட்சி மன்றத்துக்குப் போனார்கள். நகரசபை எழுத்தர் நாகராஜ ராவைக் கொண்டு வந்து நிறுத்தினார் மூனா.

''என்ன ராவுஜி... முக்கியமான சங்கதி. காகிதம் பேனா வச்சிருக்கியா? வாயைத் தொறக்கப்படாது. தம்பி சொல்றதை எழுதணும். வெளியிலே போயி வாயை விட்டியோ எழுத்தர் வேலே எகிறிடும். என்ன நான் சொல்றது?'' என்றார் நாவன்னா.

நாகராஜ ராவ் வெள்ளெழுத்துக் கண்ணாடியைக் கிழிந்த கோட்டுக்குள்ளிருந்து உருவி எடுத்துக் கொண்டே, ''நானா நாவன்னா, என்ன இப்படிச் சொல்றீங்களே. இந்தப் பஞ்சாயத்து ஆபீசிலே எத்தினி வருசமா நீங்களும் இருந்து கொண்டிருக்கீங்க, நானும் இருந்து கொண்டிருக்கேன்...'' என்று இழுத்து நீட்டினார்.

''எது எது... பஞ்சாயத்து ஆபீசா? ஓய்! மூளை மண்டை எப்படி இருக்கு? ஏய்யா, இது பஞ்சாயத்து போர்டா முன்சிப்பாலிடியா? அ—?'' என்றார் கானா.

''சும்மா வளத்தாதே. எழுதுய்யா!'' என்று முடுக்கினார் மூனா.

தீர்மானம் ஒரு விதமாக எழுதியாயிற்று. கூட்டம் தலைவர் வியன்னா வீனா தலைமையில் கூடியது. எல்லாம் வழக்கமாக அஜெண்டாவில் கண்டபடி நடைபெற்றன. பிறகுதான் நாவன்னா புதர்ப் புருவத்தை இழுத்துக் கண் ஜாடை காட்ட, மூனா எழுந்திருந்தார். தொண்டையைக் கனைத்துக் கொண்டார்.

''தலைவர் அவர்களே, கவுன்சிலர்களே! எல்லாரும் நல்லாக் கவனிக்கணும். இன்றைத்தினம் உலகம் இருந்துக்கிட்டிருக்கிற நெலமையிலே, அது போற போக்கிலே, நாம பிற்போக்காகவே இன்னிவரைக்கும் இருந்திட்டிருக்கிறபடியினாலே — அதுக்காவ நாம வருத்தப்படணும். வெறும்மே வருத்தப்பட்டுட்டாப் போதுமா? நல்லாச் சிந்திக்கணும். சிந்திச்சிட்டா மட்டும் ஆயிடுமா? செயலாத்தணும். அந்த அளவுலே சிந்திச்சுப் பாத்திங்கன்னா, இப்ப நான் கொண்டாற தீர்மானத்தை ஏகமனதா நெறவேத்திப்புடுவீங்க. இதுக்கான திட்டமெல்லாம் தயாரா எங்கிட்ட இருந்துக்கிட்டிருக்கு. நீங்க நெறவேத்திடவேண்டியதுதான். அப்புறம் செயலாக்கற வேலையை நாங்க பாத்துக்குவம்...''

''அதுலே...''

''நாவன்னா, நீங்க சும்மா இருங்க! நானே சொல்லி முடிச்சிட்டு உக்காந்திடறேன். ஆச்சா? இந்தத் தீர்மானத்தைப்பத்தி நான், நானா நாவன்னா, கானா எல்லாருமாச் சேர்ந்து ராவு பகலாச் சிந்திச்சு உங்க முன்னாலே வச்சிருக்கிறோம். என்னண்ணே கானா, சரிதானா நான் சொல்றது?''

''எது எது... தம்பி சொல்றதுலே தப்பே இல்லே...''

''நாவன்னா?''

''அதான் சரியாச்சொல்லிட்டியளே!''

''அப்ப தீர்மானத்தை ஏகமனதாச் செய்துப்புட வேண்டியதுதானே?'' என்று கேட்டார் வியன்னா வீனா.

''கையைத் தூக்கிப்புடுவம். வேறெ என்னா?'' என்றார் நாவன்னா.

அவர் கலந்துகொள்கிற காரியம் என்றால், அவர் உதவியால் தலைவராக வந்துள்ள வியன்னா வீனாவுக்கு ஒரு மரியாதைதான். உடனே தலையையாட்டினதுமல்லாமல் கையையும் தூக்கினார். மற்ற எல்லாருமே இதைப் பார்த்துவிட்டுத் தூக்கினார்கள். தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது.

''ஆமா, எல்லாம் சரி, தீர்மானம் என்னா, எதைப் பத்தி? வாசகத்தை வாசிக்கலியே!'' என்றார் ஆணையர்.

''ஓ, அதுக்கென்ன, இப்பமே வாசிச்சுட்டாப் போவுது. தீர்மானம் என்னான்னா — ஓய் நாகராச ராவ், வாசிய்யா அதை!''

''தீர்மானம். நாகப்பட்டணம் சமுத்திரத்தை — நமது ஊருக்கு முப்பத்திரண்டு மைல் சமீபமாக இருக்கும் வங்காள மகா சமுத்திரத்தை — இந்த ஊர்ப் பொது மக்களுடைய பொது நலனை உத்தேசித்து அவர்களுடைய வெகுநாள் தேவையான ஒரு துறைமுகத்தை ஏற்படுத்துவதற்காக இந்த முனிசிபாலிடியின் கீழ் எல்லையாக ஆக்குவதற்கு நாங்கள் எல்லோரும் ஒருமனதாகத் தீர்மானம் செய்கிறோம். இதை அமுலாக்க வேண்டிய நடவடிக்கைகளை நாளை முதலே ஆணையர் கவனிக்க வேண்டியது என்று முடிவு செய்கிறோம்.''

நாகராஜ ராவ் கரகோஷத்துடன் தீர்மானத்தை, 'ன'கரத்தை வெல்லாம் அழுத்தமாக 'ண'கரமாக்கி வாசித்து முடித்த பிறகு, ஒரே கதம்பக் கூச்சல் கிளம்பியது. ''சமுத்திரமா? துறைமுகம்னா என்னா? முடியுமா? ஆகனும்யா அபசகுனம்... விஞ்ஞான யுகமய்யா! ... பணம் இருக்கா — பணம் இல்லே, ஏன் இல்லேன்னு எப்பவும் அழுவுறீங்க? பின்னே சிரிங்க — ஊர் பேர் அடிபடும்'' என்றெல்லாம் அங்கத்தினர்கள் ஒரே காலத்தில் ஒருவரோடு ஒருவர் பேசிக் கொண்டார்கள்.

''சைலென்ட்ஸ்!'' என்றது தலைவரின் குரல்.

''அமைதி, அமைதி... தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது. உம்... உம்... கையைச் சந்தோஷத்துக்குத் தூக்குங்க எல்லாரும்'' என்று வியன்னா வீனா ஆக்கினையிட்டார்.

கூட்டம் கரகோஷத்துடன் இனிது முடிந்தது. மூனா பெரிய வெற்றி வீரராகி விட்டார்.

"ஓய் ராவுத்ரே! இன்னிக்கே நீயும் எல்லாப் பேப்பருங்களுக்கும் போயிற னும். தீர்மானம் கொண்டாந்தவங்க, ஆதரிச்சவங்க பேரெல்லாம் ஒழுங்கா வரணும். என்ன? இல்லே, சீட்டைக் கிழிச்சுப்புடச் சொல்லுவேன், உன் கோட்டு–மாதிரி!"

நாகராஜ ராவ் வெள்ளெழுத்துக் கண்ணாடி போட்டுக் கொண்டபடி கீழ்ப் பார்வையாகப் பார்த்துவிட்டு, "இதோ ஆயிட்டுது. இப்பவே டைப்பிஸ்டு வந் துட்டானோ, இல்லியோ, தெரியல் லியே – கொடுத்து அடிக்கத் தள்ளிப் பிடறேன்!" என்று சொல்லிக்கொண்டே போனார்.

பிரமை தட்டிப் போனவர் போல் ஆணையர் அப்படியே உட்கார்ந்திருந் தார். பிறகு தாணு தாவன்னா காதருகில் ஏதோ முணுமுணுத்தார்.

தாவன்னா ஆட்டுக் கடாச் சிரிப்புக்கு வழி ஒதுக்கி விடுவது போல, குத்து மீசையை இரண்டு புறமாகவும் ஒதுக்கி விட்டுக் கொண்டு, "ம்ம்ம்... என்னது?" என்றார் ஆணையரைப் பார்த்து.

"அதுலே..."

"என்னய்யா அதுலே இதுலே...? உன்னுரோட இருக்க உங்களுக்குப் புடிக்கல்லியா? நம்ப சகலபாடிகிட்டே சொல்லி, தண்ணி இல்லாக் காட்டிலே உங்களைத் தூக்கிப் போடச் சொல் லணுமா?"

"ச்சுச்சு... வாசகத்திலே வந்து ஒரு சிறு பிழை. அதைத் திருத்திடுத் தேவலாம்னு சொல்ல வந்தேனே தவிர" என்று முழுங்கினார் ஆணையர். அவ ருடைய அதிருப்தியை யெல்லாம் அப்போதைக்கு விழுங்கி விட்டார்.

"என்னய்யா பிழை, கிழை?"

"வங்காள மகா சமுத்திரம் இல்லீங்க. அது கடலுங்க..."

"ஹாக்கும்.. பொல்லாத பிழையைக் கண்டுபிடிச்சுட்டீரு. இதுவும் என்ன பண விசயமா? எங்களுக்குத் தெரியாது? பெரிசாத் தப்புக் கண்டுபிடிக்கிறியளே. சமுத்திரம்னாலும் கடலுன்னாலும் தண் ணீர் உப்புத்தானே? என்ன பாக்கிறிய, சொல்லுங்க அய்யா!"

"வந்து..."

"இல்லே, கடலுன்னு சக்கரைத் தண்ணியோன்னில்லே சந்தேகமாக் கேக் கறேன்! அதுவும் உப்புத்தானே? போதி யளா! போய் என்டிமேட் போடறதுக்கு ஏற்பாடு செய்யுங்க. வீயன்னா வீனா இருக்கிறாங்களே. நானும் சொல்றேன். உங்க சம்பந்தி ஊட்டு மாப்பிளைக்கே காண்டிராக்குட்டு வுடச் சொல்லிச் சமா ளிச்சுப்புடுவம்.போங்க! ஏன், சரிதானே?"

ஆணையர் போனதும் அந்தப் பக்கம் வீயன்னா வீனா வந்து தாவன்னா கையைப் பிடித்துக் கொண்டு "சிறு புள்ளையா இருந்தாலும் உங்க செய்யப் புள்ளே ரொம்ப சரியான மூளைக்காரப் புள்ளைதான். என்ன சொல்றீங்க? எப்படியும் நம்ப பதவிக் காலத்துக்குள்ளாற இது நடந்து முடிஞ்சிறணுங்கறது எனக்கு. அதுக்கு நீங்க முனைஞ்சீங்கன்னா முடிச்சிறலாம்!" என்றார்.

தொந்தி குலுங்க மீசையை உருவிக் கொண்டு, "என்ன முனையணும்? சொல் லுங்க!" என்றார்.



**மாப்பிள்ளை:** ஸ்வீட், இட்லி, வடை காபி கொடுத்தாய். கூடவே அதென்ன?

**பெண்:** எங்கப்பா ஓட்டல் முதலாளி யாச்சே! பில் கொடுக்கச் சொன்னார்!

---

"உங்க சகலபாடி பொரிக்கத்தான். சர்க்கார் மனசு வெச்சா மானத்தையே வளைச்சிறப்படாது?"

"ஹ்ஹூம்! விசயத்தைச் சொல்லிட் டியன்னே. போங்க. பேசாமே. இனிமே நானுச்ச, அதுவாச்சு! நீங்க பாட்டுக்குச் சொல்ற எடத்துலே மேலொப்பம் வைக் கிறதோட இருங்க. என்ன நான் சொல் றது சரிதானே?"

"ஆவட்டும். அதுகூடவா போடாமே இருந்திடுவேன்?..."

நகரசபையின் இந்த முற்போக்குத் தீர்மானத்தைப் பற்றிப் பேசாதவர்கள் இல்லை. வடிகட்டின புத்திசாலித்தனம் என்றும், வடிகட்டாத புத்திசாலித் தனம் என்று பலபடியாகப் பேச்சு அடி பட்டது. பல பத்திரிகைகளிலும் இந்தச் செய்தி வெளி வந்தது.

தீர்மானம் சர்க்காருக்கு அனுப்பப் பட்டது. கடலுக்கு வேண்டுகோள் பிறந் தது. உதவி நிதிக் கச்சேரிகளுக்குத் திட்டம் போடக் கமிட்டிகளும் உப கமிட்டிகளும் போட்டாயிற்று.

எக்ஸிக்யூட்டிவ் எஞ்சினியர் ஒருவர் வந்தார். எல்லாரையும் ஏற இறங்கப் பார்த்தார். உதட்டைப் பிதுக்கிவிட்டு ஊருக்குப் போய், "இது சாத்தியமான திட்டமல்ல" என்று எழுதி அனுப்பி விட்டார்.

"மனுசனுக்கு மாலே போடவேன்னு குறையண்ணே. ஊத்தப் பல்லு நாகராச ராவு இதையெல்லாம் கவனிச்சிக்கிட வேணும்?" என்றார் மூனா.

"எது எது... அவரு கெடக்கிறாரு, தம்பி. ஊர்லே இப்ப மூலைக்கு மூலே கூட்டம் போட ஏற்பாடு ஆகிக்கிட் டிருக்கு. தாவன்னாவும் வீனாவும் சீப் இஞ்சினீரை எது எது... அனைச்சிக்கிட்டு வாறதாப் போயிருக்காங்க... தெரியு மில்லே?" என்றார் கானா.

"அண்ணே, சீப்இஞ்சினீருக்கு மக ஒண்ணு. அது காலேஜிலே படிச்சுக் கிட்டிருக்குது போலிருக்குது. வீயன்னா வீனா மகன் மாசிலாமணி அங்கேதானே இருக்கிறான்? ஏதோ கசரசல் புசரசல் ஆயிட்டுது. முகூர்த்தத்துக்கு தாவன்னா சகலரு மூலமா பேச்சு நடக்குது. ஆக.."

"எது எது.. சமுத்திரத்தைக் கொண் டாற வேலைக்குக் குந்தகம் ஏற்பட்டுப் போவுமோ?"

"நீங்க ஒண்ணு அண்ணே, இப்பத் தான் சகலீன்னு சொல்ல வந்தா, குந்தகமிங்கிறியளே நீங்க!" என்றார் மூனா.

ஊரிலுள்ள சங்கம், சபை, கழகம், கட்சி, மன்றம், குழு — எல்லாம் துறை முகம் வேண்டியதன் அவசியத்தை வற் புறுத்திக் கூட்டம் போட்டு, தீர்மானங் களை நிறைவேற்றி, பாராளுமன்றத்துக் கும், ஊராளு மன்றத்துக்கும் தந்தி களாகக் கொடுத்தன. தூதுக் குழு வினரை அனுப்பி வைத்தன. சட்ட மன்ற உறுப்பினர்கள் சந்தித்தனர். அமைச்சர்கள் குழு கூடி ஆலோசித்தது. அமைச்சர் இருவரிடையே உண்டான கருத்து வேறுபாடு மனக் கசப்பாக வளரும் அளவுக்குப் போயிற்று. நிரு பர்கள் வேறு கேள்விகளைத் தொடுத்து நெருக்கடியை முற்ற விட்டார்கள். ஒரு வர் இதைக் "கத்தப் பேத்தல்" என் றார். மற்றொருவர் "மதியூகமான தீர் மானம்" என்று வர்ணித்தார். மத்தி யஸ்தமாகச் சிலர் "செய்யலாந்தான்; செய்திட வேண்டியதுதான். செய்திட முடியாதது ஒன்றில்லைதான். ஆனால் செலவு நிலை சரியாயில்லையே... ஐ. நா. வுக்குப் போய்க் கடன் வாங்கிச் செய்து முடிக்கப்படலாம்" என்றார்கள். கடைசி யில் அமைச்சர் குழு சார்பாக நவர் குழு ஒன்று நியமனமாகி, இதை ஆராய் வது என்று முடிவாயிற்று.

தாவன்னாவின் சகலரான 'ஸ்குரு ஆணி' ஆலோசனைப்படி சீப் எஞ்சினியர் 'சோதனை'க்கு வந்தார். வீயன்னா வீனா வைக் கலந்து பேசினார். மூனாவும் தாவன்னாவும் சமரசம் பேசி ஒரு முடிவு கட்டினார்கள். கடற்கரைத் திட்டத்துக் குச் சர்வே ஆரம்பித்ததுமே திருமணத் துக்குத் தேதி வைத்துவிடலாம் என்று முடிவாயிற்று. அதன்படி சீப் எஞ்சினி யர், "இது முற்றிலும் காரிய சாத்திய மான திட்டமே. முப்பத்திரண்டு மைல் தூரத்துக்கு முந்நூறு மீட்டர் அகல முள்ள பெரிய கால்வாய் ஒன்றை வெட்டி அதன் மூலம் கடலை ஊரோடு இணைப்பது சாத்தியமே. தனிக நிலங்கள் இல்லாத காரணத்தால் காவிரிக்குப் பக்கமாகவே இந்தக் கால்வாய் — கடல் இணைப்பை மூன்று கோடியே முப்பது லட்ச ரூபாய் செலவில் கொண்டு வர லாம். அடுத்த ஐந்து ஆண்டுகளில் இந்தத் திட்டத்தை முடித்து விடலாம்" என்று அங்கேயே எழுதி அவர்கள் முன் னிலையிலேயே கையொப்பமும் போட்டு அனுப்பினார்.

இதற்கு மேல் வரவு செலவுக் கூட்டம் ஆரம்பமாகியது. மாநில அரசு கொள்கை அளவில் இதை ஒப்புக் கொண்டு ஓரளவு கடன் கொடுக்க வும் ஒப்புக் கொண்டுவிட்டது. இதை முன்னிட்டு அமைச்சர்களுக்குள் பிளவு

என்றும், அப்படியெல்லாம் ஒன்றுமில்லை என்றும் அறிக்கைகள் வெளிவந்தன.

இவர் குழு ஆய்வு நடத்திக்கொண்டே இருந்தது. திடீரென்று ஒரு நாள் டில்லி மந்திரி ஒரு நிபுணரை அனுப்பிவைத்து விட்டு அவரும் பின்னாலேயே வந்தார். கடற்கரைத் திட்டத்தை நேரிடப் பார்வையிட்டார். போகிறபோது தமிழ் நாட்டு இட்லி சாம்பாரின் பெருமையை வடநாட்டவரும் உணர்ந்து பழக்கத்துக்குக் கொண்டு வந்தால் தேசிய ஒருமைப்பாடு உண்டாகும் என்று பத்தி பத்தியாகப் பேசிவிட்டுத் திருவனந்தபுரத்துக்குப் போய்ச் சேர்ந்தார்.

அவர் போனதும் அமெரிக்கப் பொருளாதார நிபுணர் வந்தார். ஜப்பான் தொழில் நிபுணர் ஒருவரின் ஆலோசனை கோரப்பட்டது. மேற்கு ஜெர்மனி எஞ்சினியர் ஒருவர், "எந்தத் திட்டம் தான் உலகில் சாத்தியமில்லை?" என்று அழுத்தமாகக் கூறிவிட்டுப் போனார். ருஷ்யாவிலிருந்து ஒரு கலாசாரக் குழு வந்தது. "தமிழ் நாடு கலைகளில் சிறந்து நிற்பதுடன், வெகு வேகமாக முன்னேறியும் வருகிறது." என்று அந்தக் குழு கூறிற்று. நாவன்னா மலர் மாலை சூட்ட, வியன்னா வீனா வரவேற்புரை நிகழ்த்த, மூனா கடற்கரையின் அவசியத்தை வற்புறுத்த, கானா நன்றியுரை கூறினார். வழியனுப்புக் கூட்டத்தின் காட்சிகள் முற்போக்கு நாளிதழ்களில் எல்லாம் வெளிவந்தன.

ஆயினும் இவர் குழுவின் முடிவு வெளியாகவில்லை. தென் கண்டத்துப் பழங்குடி மக்களின் மாநாட்டுப் பிரதிநிதியாக அதில் ஒருவர் நியமிக்கப்பட்டு, பாலித் தீவுக்குப் போய்விட்டதும் ஒரு காரணம். "இட்டிலிக்கு ஆதாரமான அரிசி விளையும் பூமியை உப்பங்கழியாக்கும் இந்தச் சமுத்திரத் திட்டத்தைக் கொண்டு வந்தால் வறண்ட காற்று உப்பங்காற்றாக மாறி க்ஷயரோகத்தை அதிகரிக்கும். எனவே இத் திட்டத்தைக் கைவிட்டாகி விட்டது" என்று டில்லி தீர்ப்புக் கூறிவிட்டது.

ஆனால் அதற்குள் ராஜ்ய சர்க்கார் ஒப்புக்கொண்டபடி ஒரு பகுதிப் பணம் வந்து சேர்ந்து, டெண்டர்கள் கேட்டு, ஆனையரின் சம்பந்தி மாப்பிள்ளைக்குக் காண்ட்ராக்ட் கொடுத்து, சர்வே நடத்தும்வரை சமுத்திரம் காத்திருக்க வேண்டாம் என்று வெட்டு வேலைக்கு மண்வெட்டிஇலைகள்கூட வந்து சேர்ந்து விட்டன. காம்புக்கு மரங்கள் வந்து இறங்கி டெலிவரியும் எடுத்துவிட்ட நிலையில் டில்லி உத்தரவு இடி போல் வந்து விழவே, எல்லாம் திகைத்துப் போய் நின்றன.

இந்த உத்தரவுச் செய்தி வெளியான கையோடு உண்ணாவிரதச் செய்தியும் கூடவே எழுந்தது. நகரசபை மாளிகைக்கு எதிரே சிற்றும் பந்தலைப் போட்டுக் கொண்டு, 'சமுத்திரம் வந்தாலொழியச் சாப்பிட மாட்டோம்' என்று பட்டினித் தவம் கிடக்க ஒருவர் மனைவியோடு வந்தமர்ந்து விட்டார். தாவன்னா இதை நிறுத்தத் தூண்டும்படி தந்தி மேல் தந்தியாகக் கொடுத்து வந்தார். அந்தத் தந்திகள் எல்லாம் என்ன ஆயினவோ அவருக்கே தெரியாது. யாருக்கும் தெரியாது. நாகராஜ ராவுக்குத் தெரிந்திருந்தால்தான் உண்டு.

"பிச்சை இல்லாத ஊர் பாழ்! சமுத்திரத்தைக் கொண்டு வரும்வரையில் சாக மாட்டோம்" என்று அனைத்துக் கட்சிகளும் முழங்கின.

"பிச்சை எங்கள் மூச்சு" என்று தொழிற் சங்கங்கள் அறைகூவின.

"அழகான பீச்சு வேண்டும். சொகுசான தென்னை மணல் வேண்டும். சிங்காரச் சோலையும் நடுவிலொரு பாதையும் வேண்டும்" என்று சகல கலாசாலை மாணவ மாணவிகள் அட்டைகளைத் தயாரித்தார்கள்.

"மாணவர்கள் கோரிக்கை நியாயமானதே. இதில் அரசியல் எதுவும் கலக்கவில்லை. அவர்களது வளமான எதிர்கால வாழ்வு கலந்திருக்கிறது" என்று ஓரிரு அமைச்சர்களே அந்த வழிச் சுற்றுப் பயணத்தின்போது கூறி விட்டார்கள். ஆயினும் நிலைமை நெருக்கடியாக மாறிவிடாமல் மூன்று மாதங்களுக்கு மூச்சுக் காட்டக் கூடாது என்று தடையுத்தரவு ஒன்று தந்தி மூலம் வந்தது. நகராண்மைக் கழகத் தலைவருக்கும் ஒரு நகல் வந்தது.

"ஏ டைப்பிஸ்டு, தலைவருக்கு என்னை தந்தியானாலும் சட்டுனு மூனாகிட்டே கொண்டு போய்க் கொடுத்திடம்மா!" என்றார் தலைமை எழுத்தரான நாகராஜ ராவ்.

"நானா? நான் அவருகிட்டே போக மாட்டேன்" என்றாள் அந்தப் பெண்.

"ஏன்?" என்றார் நாகராஜ ராவ், கீழ்ப்பார்வையாக.

"மாட்டேன்னா மாட்டேன். ஏன், என்னான்னு கேக்கப்படாது!"

அதற்குள் அட்டெண்டர் ஆறுமுகம் வந்து மேலே நோக்கிக் கையைக் காட்டவே, மாடியில் உள்ள கமிட்டி அறைக்குப் போனான் ராமாமணி. போனவன் மத்தியானம் வரையில் திரும்பவேயில்லை.

அப்புறம் வந்தபோது, "சார்... உங்களை உடனடியாக ராஜிநாமாச் செய்யச் சொல்லித் தலைவர் உத்தரவு போட்டிருக்காரு. மூனாதான் எழுதினார். தலைவர் வியன்னா வீனா நீட்டின இடத்துலே கையெழுத்துப் போட்டுப் பிட்டாரு" என்றான் ராமாமணி.

"ஐயையோ! என்னையா? போய்; நான் நம்பவே மாட்டேன்!" என்று கத்தினார் ராவுஜி.

"மூனாவைக் கேப்பமா?"

"கேக்கறது என்னா? சத்தியமா அவருக்குக் கையெழுத்தே தகராறு. எழுதவே வராது; தெரியாது!"

"அவரு சொன்னாரு; நான் எழுதினேன். முந்தியே வியன்னா வீனா வெத்துக் காகிதத்திலே கையெழுத்துப் போட்டுக் கொடுத்திட்டாரு" என்று உத்தரவைக் காட்டினான் ராமாமணி.

"ஐயையோ, ஆறு புள்ளேங்களாச்சே. அப்ப எனக்குப் பதிலா யாரு?" என்று பதை பதைத்தார் நாகராஜராவ்.

"இப்போதைக்கு நான்தான்..... அப்புறம் எல்லாம் முடிஞ்ச பிறகு யாரைப் போடுவாங்களோ?"

"எல்லாம் முடிஞ்ச பிறகுன்னா எதெல்லாம் முடிஞ்சு?"

"உங்களுக்கு வயசாயிப் போச்சு சார். உங்களுக்கு ஏன் இதெல்லாம்?" என்று அவன் சொல்லி முடிப்பதற்குள் ராவுஜி மூர்ச்சையாகிக் கீழே விழுந்தார். அவரது வெள்ளெழுத்துக் கண்ணாடி விழுந்து உடைந்துபோயிற்று.

வியன்னா வீனா வந்தார்; கானா வந்தார்; தாவன்னா வந்தார். தடை உத்தரவுத் தந்தியையும் ராவுஜி மயக்கம் போட்டுக் கிடப்பதையும் பார்த்துவிட்டு மேலே போய் மூனாவைப் பார்த்தார்கள். விஷயத்தைத் தெரிந்து கொண்டார்கள்.

"எது எது.... அதெல்லாம் கத்துக்குட்டி வெவகாரமாப் போயிரும். டிசமிஸ் உத்தரவைக் கிழிச்சுப் போடுங்க" என்றார் கானா.

"கலாட்டா ஆவறதுக்கு முன்னே ஆவட்டும்" என்றார் வியன்னா வீனா.

தாவன்னாவின் தொந்தி இரண்டு குலுங்குக் குலுங்கியது. ராமாமணியைப் பார்த்துக் கொண்டே அவர் மீசையை இரண்டுபுறமும் ஒதுக்கிவிட்டுக் கொண்டு "ம்....ம்....ம்...." என்று உறுமல் சிரிப்புச் சிரித்தார்.

"ஏன், என்னமோ பதறுறீங்க? தடையுத்தரவைப் பார்த்ததும் மனுசன் மயக்கம் போட்டுட்டாரு.... ஆகா, அவருல்ல மனுசன். என்ன தியாகம்! சமுத்திரம் வரல்லேன்னதும் நம்ப யாருக்குனா மயக்கம் போட்டுச்சா? இவருல்ல மனுசன்? இவருல்ல ஒரு முற்போக்கான ஆளு!" என்று ஓர் ஆவேசப் பிரசங்கம் புரிந்தார் மூனா.

"பாத்தீங்கல, தம்பி புடிக்கிற புடியை! எதையும் எதையும் போட்டுப் பிணைச்சுப்பிட்டாரு, பாத்தியா?" — என்று ராமாமணியைப் பார்த்து மீசையை ஒதுக்கிக் கொண்டார் தாவன்னா.

"அடே, ஆறுமுகம்! ஏ, ஆறுமுகம்! சட்டுனு ஓடிப் போயி, போட்டோ பிடிக்கிறவரைக் கூட்டியாடா! எல்லாரையும் சேர்த்து ஒரு போட்டோ பிடிச்சு—எல்லாப் பத்திரிகைகளுக்கும் அனுப்பச் சொல்லுவம்!" என்று சத்தம் போட்டு உத்தரவிட்டார் வியன்னா வீனா.

"எது எது...? எல்லாரும் போடுவாங்களா? முற்போக்கா உள்ள பத்திரிகைகள்லே மட்டும்தானே போடுவாங்க!" என்றார் கானா.

"அட சட்டுனு போடா! பேச்சைக் கேட்டுக்கிட்டே நிக்கிறான். ராவுஜி சட்டுனு எந்திரிச்சுட்டாப் படம் எப்படிப் புடிக்கிறது?" என்று கவலைப்பட்டார் வியன்னா வீனா.

"எந்திரிச்சுடுவாரோ? அதெப்படி நாமெல்லாம் இருக்கக் கொள்ள, கேட்டுக் கேள்வியில்லாமெ எந்திரிப்பாரு? எந்திரிச்சிட்டா மறுபடியும் புடிச்சுக் கீழே தள்ளி விட்றது. என், நாஞ் சொல்றது என்னா?" என்றார் தாவன்னா.

"எது..... எது..... அ—?"

"கடக்கரை வராட்டியும் பத்திரிகையிலே படம்னாலும் வரட்டும். அத்தையும் கெடுத்திடப் போறாரு மனுசன். சுத்தப் பிற்போக்கான ஆளு!" என்றார் மூனா.

இதைக் கேட்டதும் தாவன்னாவின் தொந்தி குலுங்கியது. அவர் உறுமல் சிரிப்பு வெளிப்படுவதற்கு முன்னே ராமாமணி சிணுங்கிச் சிரித்து வைத்தான்.






**மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்**

மேட்டூர் அணை R. S. சேலம் ஜில்லா

மானேஜிங் ஏஜெண்ட்ஸ்: சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்

# "ஒரே சீரான ஒலிச்சிறப்பு" அளிக்கும் இரண்டு

# G.E.C. ரேடியோக்கள்



**BC 822:**

இப்புதிய 7 + 1 டிரான்ஸிஸ்டர், 3 பாண்ட் மேஜை மாடல் ஓர் அழகிய பேக்லைட் பெட்டியில் அடங்கியது. தொனிக் கட்டுப்பாடு செய்ய இருவித விசையும், சக்தி வாய்ந்த பிக்கப் சாதனமும், வெளிப்புற ஸ்பீக்கர் அமைக்க வசதியும் பொருந்தியது.



**BC 6156:**

5 வால்வு, 3 அலை வரிசை சக்தி வாய்ந்த ஒலி பரப்பி நவநாகரீகமான பேக்லைட் பெட்டியில் அடங்கியது. (AC/DC 200-250V)

BC 6156 (AC/DC) BC 6156 A (AC)



G.E.C.

உங்கள் சிறந்த செவியின்ப உலகம்!

தி ஜெனரல் எலக்ட்ரிக் கம்பெனி
ஆப் இந்தியா பிரைவேட் லிமிடெட்

## எல்லோருக்கும் இன்ப நல்லொளி!

எல்லை காணாத இன்பம்! எட்டுத் திக்கும் ஒளி
வரிசைகள். பட்டாசுகளின் வெடி முழக்கம்.
பட்டாடைகளின் சலசலப்பு. மனைதோறும் மங்களக்
கோலம். பொங்கும் மகிழ்ச்சியோடு சங்கீதம்.
பண்டிகை இன்பத்தைப் பன்மடங்காக்க எங்கள்
தீபாவளி வாழ்த்துக்களை மனமார வழங்குகிறோம்.






கோல்டன் டுபாக்கோ கம்பெனி
பிரைவேட் லிமிடெட், பம்பாய்-56.
பாரதத்தில் இத்தகைய தேசிய
ஸ்தாபனங்களில் மிகப்பெரியது.


VT VOILES
வாயில்களில்
ஒரு புதிய பெயர்
தென்னாடு அளிக்கும்
முதல் வாயில்
எமது
தீபாவளி
வாழ்த்துக்கள்!
Nalin-VT-172
விற்பனையாளர்கள் : பி. ஆர். அண்டு சன்ஸ் (பி) லிமிடெட் மதராஸ்-ஊட்டி

# உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்திற்கு வைடமின்களும் தாதுப் பொருள்களும் இன்றியமையாதவை.

*அவர்களுக்குப் போதுமான அளவில் கிடைக்கின்றனவா?*




## புதியது! விம்க்ரான்®

மல்டிபிள் வைடமின்ஸ்-
மினரல்ஸ் டேப்லெட்ஸ்

வைடமின்கள் மற்றும் தாதுப் பொருள்களின் பற்றாக்குறை, உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்தைப் பாதிக்கக்கூடும். சோர்வு, ஜலதோஷம், பசியின்மை, உடல் இளைத்துப் போதல், சருமம் மற்றும் பல் உபாதைகள்- இவற்றிற்குமூலகாரணம் சாதாரணமாக, இன்றியமையாத வைடமின்கள் மற்றும் தாதுப் பொருள்களின் பற்றாக்குறைதான்.

இருப்பினும், மிகவும் கவனமாகத் திட்டமிடப்பட்ட உணவில் கூட வைடமின்களும், தாதுப் பொருள்களும் பெரும்பாலும் அடைசல் செய்யப்பட்டு, உணவில் இவற்றின் பற்றாக்குறை காணப்படுகிறது. வயமான உணவு எல்லாம் சமைத்த உணவாக இருப்பதினால் தினசரி நாம் உண்ணும் உணவுகளிலும், வைடமின்கள் மற்றும் தாதுப் பொருள்களின் பற்றாக்குறை இருக்கக்கூடும் அப்படியானால், அத்தியாவசியமான வைடமின்களும், தாதுப் பொருள்களும் அதுவும் சரியான விகிதங்களில்-உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கின்றனவா என்று நிச்சயமாக எப்படிச் சொல்லமுடியும்?

உங்கள் குடும்பத்தில் ஒவ்வொருவருக்கும், தேவையான அளவுகளில் இந்த இன்றியமையாத போஷாக்குச் சத்துகளை கிடைப்பதை உறுதிப் படுத்திக்கொள்ள, அவர்களுக்கு விம்க்ரான்-ஸ்க்விப் மல்டிபிள் வைடமின்ஸ்-மினரல்ஸ் டேப்லெட்ஸ் கொடுங்கள். தினம் ஒரு மாத்திரை வீதம். இந்த ஆரோக்கியமான வழக்கத்தை இன்றே ஏன் ஆரம்பிக்கக்கூடாது?

விம்க்ரானில் 11 முக்கியமான வைடமின்களும், 8 தாதுப் பொருள்களும் சரியான அளவுகளில் அடங்கியிருக்கின்றன. இரத்தச் சிவப்பு உயிரணுக்களை வளர்க்கவும், சக்தியை மீண்டும் பெற உதவும் இரும்புச் சத்து-எலும்புகளையும், பற்களையும் உறுதியாக வைத்திருக்க கால்ஷியம்-ஜலதோஷத்தை எதிர்க்கும் சக்தியை அதிகரிக்க வைடமின் ஸி சிறந்த கண் பார்வைக்கும், ஆரோக்கியமான சருமத்திற்கும் வைடமின் ஏ-பசியைத் தூண்ட, நரம்பும் சக்தியை அதிகரிக்கும் வைடமின் பி12 இவைகளுடன், உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்திற்குத் தேவையான, இதர போஷாக்குச் சத்துகளும் அடங்கியிருக்கின்றன. ஒரு மாத்திரை விம்க்ரான் விலை சுமார் 13 பைசாதான். உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்திற்கு இது மிகவும் குறைந்த விலை என்பதில் சந்தேகமில்லை. இன்றே விம்க்ரான் வாங்குங்கள்-ஒவ்வொரு நாளும் விம்க்ரான் சாப்பிடுங்கள்.

# விம்க்ரான்®

**ஒரே ஒரு விம்க்ரான் மாத்திரை உங்களை நாள் முழுதும் சக்தியுடன் வைத்திருக்கப் போதுமானது.**

SQUIBB® SARABHAI CHEMICALS


அண்மையில் ஸ்டெப் நகப் பாலிஷ்
பூசிப் பார்த்தீர்களா?
பூசும் தோறும் பூரண எழில்மெருகுடன்
இழைந்துகொள்ளும். விரியாது, உரியாது,
பெயராது. உங்கள் நகத்திற்குப்
பாதுகாப்பையே தருகிறது,
வர்ணங்களா!
அழகழகான வகைகளிலே
உலகிலேயே உன்னதம்!
களிப்பூட்டும்
கனிவான, கவர்ச்சிமிக்க
சாயல்களோ, தேர்வுசெய்யப் பலவகை.
இதோ...பூசிப்பாருங்கள்...இன்றே.
ஸ்டெப் காஸ்மெடிக்ஸ், பம்பாய்-2.
(இந்தியா)
Step
FROSTED
LOVE THAT
PINK

# MEET THE FACIT FAMILY

## (Swedish precision-built)

*On your left is HALDA. She writes delightfully. Next to her is FACIT-C1-13, the real schemer in the family. She calculates. And then, we have FACIT-ADDING MACHINE. She is nuts. She adds all the time. She lists too. Never forgets her dates. A very hot number! We belong to a very happy Swedish family. Today we have made India our home. We still have those world-famous Swedish features—precision construction, proven reliability, craftsmanship, rare durability and elegance with efficiency —and are proud of them too! Get us into your office and see the wonders we perform. Fast, efficient, we never look at the clock. We are sold and serviced all over India by*






**THE RAYALA CORPORATION PRIVATE LIMITED** Madras-32.

# தீபாவளி வாழ்த்து!







## சேவைக்கும், சிக்கனத்திற்கும் சிறந்தது ஸ்டாண்டர்ட்-20

***தயாரிப்பாளர்கள்:***
ஸ்டாண்டர்ட் மோட்டார் ப்ராடக்ட்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், சென்னை-2

***விநியோகஸ்தர்கள்:***
தி யூனியன் கம்பெனி (மோட்டார்ஸ்) பிரைவேட் லிமிடெட், சென்னை-2, உதகை
யூனிகான் (பெங்களூர்) பிரைவேட் லிமிடெட், பெங்களூர்-1

**Printed & published by S. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10. Managing Editor: T. Sadasivam**

# காமகோடியின் கருணைமொழி

தீபாவளி எல்லாப் பண்டிகைகளைக் காட்டிலும் அதிகக் கியாதி அடைந்திருக்கிறது. ஒரு பண்டிகை வடக்கே தெரியும்; தெற்கே தெரியாது. ஒரு ஜாதிக்காரர் ஒரு பண்டிகை கொண்டாடுவார்கள்; இன்னொரு ஜாதிக்காரர் கொண்டாட மாட்டார்கள். ஓணம் என்று மிகவும் விசேஷமாக மலையாளத்தில் ஒரு பண்டிகை கொண்டாடுகிறார்கள். நமக்கு அது தெரியாது. வடக்கே இருக்கிறவர்கள் சாயத் தண்ணீரை ஒருவர் மீது ஒருவர் அடித்துக் கொண்டு ஹோலிப் பண்டிகை கொண்டாடுகிறார்கள். அதுவும் நமக்குத் தெரியாது. இப்படி ஒவ்வொரு பிராந்தியத்தில் மட்டும் ஒவ்வொரு பண்டிகை முக்கியமாக இருக்கிறது. ஆனால் தீபாவளி ஒன்றுதான் நம் தேசம் முழுவதும் எல்லா ஜாதிக்காரர்களாலும் எல்லா மதஸ்தர்களாலும் கொண்டாடப்படுகிறது. வெளி நாட்டிலிருந்து வந்த மதங்கள் தவிர, நம் நாட்டிலேயே பிறந்த இதர மதஸ்தர்களான ஜைனர்களும் பௌத்தர்களும்கூட தீபாவளி கொண்டாடுகிறார்கள். ராமேச்வரத்திலிருந்து ஹிமாசலம் வரை எல்லோரும் கொண்டாடுகிறார்கள். 'எத்தனையோ பண்டிகைகள் இருக்கின்றன; கர்மாக்கள் இருக்கின்றன. எல்லாவற்றையும் விட தீபாவளிக்கு ஏன் அதிகக் கியாதி வந்திருக்கிறது?' என்று யோசித்துப் பார்த்தால் ஒரு காரணம் தெரிகிறது.

தீபாவளி எப்படி ஏற்பட்டது? அஸ்ஸாம் நாட்டில் பிராக்ஜோதிஷம் என்ற நகரத்தைத் தலைநகராகக் கொண்டு பூமாதேவியின் மகன் பௌமன் ஆண்டு வந்தான். அவனுக்குத்தான் நரகாசுரன் என்று பெயர். அவன் அநேக அக்கிரமங்கள் செய்து வந்தான். நிறைய தபஸ் பண்ணியவன் என்றாலும், தாமசமான வரங்களையே வாங்கிக் கொண்டதால் எல்லாரையும் ஹிம்சை செய்து உலகத்தை அடக்கி ஆண்டு வந்தான். ஸ்திரீகளுக்கும் சாதுக்களுக்கும் மிகுந்த கொடுமை செய்து வந்தான். அக்கினிக்







கோட்டை, வாயுக்கோட்டை எல்லாம் கட்டிக்கொண்டு எதிரிகளிடமிருந்து தன்னை ஜாக்கிரதை செய்து கொண்டான். இருந்தபோதிலும் கடைசியில் ஸ்வாமியே கிருஷ்ண பரமாத்மாவாக அவதாரம் செய்து, பல யுக்திகளைக் கொண்டு அவனை சம்ஹாரம் பண்ணினார். அப்போது அவன் நல்ல புத்தி பெற்று, தான் இறந்த தினத்தில் எல்லோரும் பண்டிகை கொண்டாட வேண்டும் என்று சொன்னதாகவும் இதுவே தீபாவளிப் பண்டிகை என்றும் சொல்வதுண்டு.

இந்த முடிவை வேறு விதமாகவும் சொல்வதுண்டு. நரகாசுரன் மரணமடைந்தவுடன் அவனது தாயான பூமி தேவியே அத்தினத்தை எல்லாரும் பண்டிகையாகக் கொண்டாட வேண்டும் என்று பகவானிடம் பிரார்த்தித்ததாகச் சொல்வதுண்டு. இந்த அம்சம்தான் தீபாவளிக்குத் தனிப் பெருமை தந்திருக்கிறது.

ஸ்திரீகளுக்குப் புத்திர சோகத்தைக் காட்டிலும் வேறு பெரிய சோகம் கிடையாது. என்றாலும் நரகாசுரன் மரணமடைந்தபோது அவனது தாய், லோகம் முழுவதையும் ஏகசக்ராதிபதியாகப் பரிபாலனம் செய்த புத்திரன் போய்விட்டானே என்ற துக்கத்துக்கு இடம் தரவில்லை. 'அவனுக்கு பகவானை நேரில் பார்க்கிற பாக்கியம் கிடைத்ததே; பகவான் கையால் மோக்ஷம் பெறும் பாக்கியம் கிடைத்ததே' என்று மனத்தை ஆறுதல் செய்து கொண்டு, லோக க்ஷேமமாக அன்று பண்டிகை கொண்டாட வேண்டும் என்று பிரார்த்தனை செய்து கொண்டாள். 'என் பிள்ளை போனது இருக்கட்டும். எனக்குப் பிள்ளை போன துக்கம் ஏற்பட்டாலும் லோகத்தில் இருப்பவர்களுக்கு ஒரு துக்கமும் ஏற்படக் கூடாது. என் பிள்ளை போன இன்றைக்கு எல்லோரும் எண்ணெய் தேய்த்துக்கொண்டு, புத்தாடை உடுத்திக் கொண்டு, நல்ல விருந்து உண்டு, சந்தோஷமாக இருக்க வேண்டும்' என்று பகவானிடம் வேண்டிக் கொண்டாள்.

'ஊரார் பிள்ளைகள் நன்றாக இருக்கிறார்களே! நம் பிள்ளை அப்படி இல்லையே' என்றுதான் பொதுவாகத் தாபம் எழுமே யன்றி, 'நம் பிள்ளை எப்படிப் போனாலும் போகட்டும், ஊர்ப் பிள்ளைகள் சந்தோஷமாக இருக்கட்டும்' என்று நினைப்பு யாருக்கேனும் வருமா?

நரகாசுரனுடைய தாய்க்குத்தான் தன்னுடைய புத்திர சோகத்திலும் கூட உலகம் சந்தோஷமாக இருக்க வேண்டும் என்ற நினைப்பு வந்திருக்கிறது. அதனால் தான் தீபாவளிக்கு மற்ற எல்லாப் பண்டிகைகளையும் விட அதிகக் கியாதி.

நமக்கு அநேகத் துன்பங்கள் ஏற்படுகின்றன. நாம் பல தப்புக்கள் பண்ணுவதால் துன்பங்கள் வருகின்றன. 'இந்தத் தப்பைப் பண்ணினோம் அல்லவா? அதற்காகத்தான் இக்கஷ்டம் ஏற்பட்டிருக்கிறது' என்று சில சமயங்களில் நமக்கே தெரிகிறது. சில சமயங்களிலோ, 'நான் ஒரு தப்பும் பண்ணவில்லையே! எனக்குக் கஷ்டம் வந்திருக்கிறதே' என்று வருத்தப்படுகிறோம். காரணம் தெரியும்போது நம்மை நாமே சமாதானம் செய்து கொள்ளப் பார்க்கிறோம். தெரியாதபோது இன்னும் அதிகத் துக்கத்தை உண்டாக்கிக் கொள்கிறோம். எல்லாக் காரியங்களுக்குமே நமக்குக் காரணம் தெரிந்துதான் இருக்க வேண்டுமா, என்ன? நமக்குக் காரணம் தெரியாமலும் பல துன்பங்கள் உண்டாகலாம். எப்படி இருந்தாலும் நமக்கு ஏற்படுகிற துன்பம் ஏற்பட்டே தீரும். என்றாலும் நாம் துன்பப்படுகிறோமே என்பதற்காக மற்றவர்களும் துன்பப் படட்டும் என்ற எண்ணம் நமக்கு வரக் கூடாது.

மனிதர்களாகப் பிறந்து விட்டோம். எப்போதுமே கஷ்டம்தான் நமக்கு அதிகமாக இருக்கும். சுகம் எப்போதோ வரும். திண்ணையிலிருந்து விழுந்தால் சிராய்ப்பு அல்லது சுளுக்கோடு நின்று விடுகிறது. மாடியிலிருந்து விழுந்தாலோ கைகால் மண்டையெல்லாம் நொறுங்கிப் போகின்றன. அப்படியே எவ்வளவுக்கு எவ்வளவு பெரிய மனிதர்களாக இருக்கிறோமோ அவ்வளவுக்கு அவ்வளவு பெரிய கஷ்டமாக வரும். ஆனாலும் நம் கஷ்டத்தையே நினைத்துக் கொண்டிருக்கக் கூடாது. அதை மறந்து உலகத்தின் சுகத்துக்காகப் பாடுபட வேண்டும். 'பிள்ளை இறந்து விட்டான் என்று அழுது பயனில்லை. இந்த ஒரு காரணத்தைக் கொண்டாவது லோகமெல்லாம் க்ஷேமமாக இருக்க வேண்டும் என்று பகவானிடம் பிரார்த்தனை செய்வோம்' என்ற ஞானம் நரகாசுரனுடைய தாய்க்குப் புத்திர சோகத்திடையே தோன்றியதுதான் விசேஷம்.

ஒன்று எந்தச் சந்தர்ப்பத்தில் உண்டாகிறது என்பதாலேயே அதற்கு ஒரு விசேஷம். தீபாவளிக்கும் பகவத்கீதைக்கும் இப்படித்தான் விசேஷம். பொதுவாக, நல்ல அழகான மரங்கள் அடர்ந்த சோலைகளும் நதிகளும் நிறைந்த சாந்தமான இடத்தில், கவலையே இல்லாமல் குரு சாந்தமாக இருக்கும்போது, சிஷ்யனும் சௌகரியமாக இருக்கிற சமயத்தில்தான் ஞானோபதேசம் நடைபெறும். ஆனால் பகவத் கீதை உபதேசம் நடைபெறுகிற சமயத்திலோ சூழ்நிலை இதற்கு நேர்மாறாக இருந்தது. அடுத்த க்ஷணத்தில் யாருடைய கை கால் இருக்கப் போகிறதோ, தலை இருக்கப் போகிறதோ, உயிர் இருக்கப் போகிறதோ, அர்ஜுனன்தான் இருக்கப் போகிறானா, கிருஷ்ணனுமே இருப்பானா என்று சொல்ல முடியாத நிலை அது. அப்பேர்ப்பட்ட சமயத்தில் உயிர் போவதாக இருந்தாலும் ஞானத்தை அடைய வேண்டியதுதான் முக்கியம் என்ற உணர்ச்சியில் பகவத்கீதை என்ற ஞானோபதேசம் நடந்தது. உயிரின் மேல் ஆசை இல்லாமல், உடலின் மேல் ஆசை இல்லாமல், உற்றார் மேல் ஆசை இல்லாமல், தத்துவம் ஒன்றிடத்தில் மட்டும் ஆசை கொண்ட சமயத்தில் — வழக்கமான ஞானோபதேசச் சூழ்நிலைக்கு மாறான ரணகளத்தில் — கீதை பிறந்தது. அதனால்தான் எத்தனையோ ஞான நூல்கள் இருந்தாலும் பகவத் கீதைக்கு அவை எல்லாவற்றைக் காட்டிலும் விசேஷம் ஏற்பட்டிருக்கிறது.

ரணகளத்தில் தத்துவமே பெரிதாக அர்ஜுனன் நினைத்தது போலவே, புத்திர சோகத்திடையே உலக க்ஷேமத்தை பூமாதேவி பெரிதாக நினைத்தது விசேஷம். அதனால்தான் நூல்களில் பகவத்கீதை போல், பண்டிகைகளில் தீபாவளி தனிக் கியாதி பெற்றிருக்கிறது.

நாம் துன்பப்பட்டாலும் லோகம் க்ஷேமமாக இருக்க வேண்டும் என்ற மனப்பான்மையை வளர்த்துக் கொள்வதுதான் தீபாவளி கொண்டாடுவதன் பயன். இந்தப் பண்டிகை விட்டுப் போகாமல், இது சம்பந்தப்பட்ட புராணக் கதையும் மறைந்து போகாமல் இவ்வளவு காலம் இருந்து வருவது இதற்காகத்தான்.

தீபாவளிப் பண்டிகை கொண்டாடி, பட்டாசு வெடித்து, விருந்துண்பதோடு நாம் நிற்கக் கூடாது. 'நம்மைக் காட்டிலும் லோக க்ஷேமம்தான் பெரிது' என்ற ஞானத்தை இன்று பெற வேண்டும்.





# கானம் கண்ட காட்சி

இசையால் இறைவனைத் தரிசனம் செய்த சங்கீத சத்குரு ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள் அவதரித்த இருநூறாம் ஆண்டு இது. அவர் எண்ணத்தால் கண்ட அற்புதக் காட்சிகள் நான்கினை இங்கு வண்ணத்தால் நமக்குக் காட்டுவிக்கிறார் ஓவியர் ராஜம்.

முதல் சித்திரத்தில் பாலன் ராமனை லாலனை செய்கிறார் தியாகராஜர் — அவர் கௌசல்யாதேவியாகி விட்டது போலவே தோன்றுகிறது.

சிறுவர்கள் ராமனை விளையாட அழைத்தனர். அவனும் சென்றான். ஆனால் அழைத்த சிறுவர்கள் அவனை விளையாட்டுக்குச் சேர்த்துக் கொள்ளவில்லை. ஏன்? அவர்கள் கண்ணாமூச்சி விளையாடுகிறார்கள். அவர்களுடைய சின்னக் கைகளால் ராகவனுடைய நீண்டு அகன்ற ராஜீவ லோசனங்களைப் பொத்த முடியவில்லை. இதனால் மெல்லிய அல்லி இதழ் போன்ற கண்கள் சிவக்க, திரு ஆபரணங்கள் முறுக்கிக் கொண்டும் உடலில் அழுந்தியும் துன்புறுத்த, வேர்த்து விறுவிறுத்து வந்து நிற்கிறான் ராமன். அவனை ஆறுதலாக அரவணைக்க அழைக்கிறார் தியாகையர். "உன்னை விட்டு அந்தப் பிள்ளைகள் மட்டும் ஒளிந்துவிளையாடுகிறார்கள் என்று இந்தத் துக்கம், இந்தக் கோபம்? நீயும்தான் பக்தர் பொருட்டு ஒளிந்துவிளையாடுபவன் ஆயிற்றே! உன் மேனியின் பிரகாசம் தாங்கமாட்டாமல் அவர்கள் மட்டும் ஒளிந்து கொள்ளக்கூடாதா?" என்கிறார்.

சஹானா ராகத்திலமைந்த 'ராம ராம ராம' என்ற இந்த ஒரு கிருதி வால்மீகி ராமாயணத்தில் பாலராமனின் லீலைகளை ஆதிகவி பாடாமல் விட்ட குறைப் பூரணமாக ஈடுசெய்து விடுகிறது எனலாம்.

இரண்டாம் ஓவியத்தில் ராமசோதரியான தேவியின் திருவிளையாடல் ஒன்றைக் காண்கிறோம். அறக் கருணையும் மறக் கருணையும் இணைந்த திருவிளையாடல் இது.

நாகைப்பட்டினத்தில் அடிக்கடி கடல் பொங்கி வருவதுண்டல்லவா? ஒரு முறை அவ்வாறு பொங்கி ஊரையே அழித்துவிட வந்தது மஹோததி. மக்களைக் காக்க வேண்டிய கருணை நாகையில் உறையும் நீலாயதாட்சியம்பிகையிடம் கடலரசன்பால் சீற்றத்தை மூட்டிவிட்டது. போர்க்கோலம் பூண்டு புறப்பட்டாள் அன்னை. தேவியைக் கண்டதும் கடலரசனின் கருவம் அடங்கியது. அவளிடம் சரண் புகுந்தான். உலகு பிழைத்தது. இந்நிகழ்ச்சியை 'கர்மமே பலவந்தமாயா தல்லி' என்ற ஸாவேரி ராகப் பாடலில் வர்ணிக்கிறார் ஐயர்வாள். பொங்கிவரும் கருமவினை என்ற கடலிலிருந்து ஜீவனைக் காக்கப் பராசக்தியே தஞ்சம் என்ற கருத்தும் தொக்கி நிற்கிறது.

நீலாயதாக்ஷியின் நீலக் குமுதக் கண்களை மலர்விக்கும் பூரண சந்திரனான பரமேசுவரனைத் தியாகராஜர் பக்தி செய்கிறார் மூன்றாம் சித்திரத்திலே. ஐந்தாறுகள் பாய்ந்து வளம் பெருக்கும் பஞ்சநத க்ஷேத்திரமாம் ஐயாற்றிலே பஞ்சமுகனான ஐயன் பவனி வருகிறான். தேவியை நீங்கியவாறு ஊர்வலம் வருகிறான். உள்ளத்தைக் கவரும் தூவெண்மேனியில் அணிகள் அழகுபெற, அலங்காரப் பல்லக்கில் அமர்ந்து அரசர்க்குரிய பிருதங்களுடன் பவனி வருகிறான் பரமேசன். பரமனுக்கு மிகவும் பிரியமான ஹரியின் திருநாமங்களைக் கூறி பாகவதர்கள் அற்புத இசையோடு சங்கீர்த்தனம் செய்ய, அதனில் மகிழ்ந்து நகர் வலம் வருகிறான். உத்தமர்களுக்கும், ஜப-தபங்களில் தேர்ந்தோருக்கும் காலமறிந்து வரம் தர வருகிறான். நாம் இங்கு காணும் இக்காட்சி பிரம்மாதி தேவருக்கும் கிட்டாது எனப் பாடுகிறார் ஐயர்வாள், 'முச்சட ப்ரஹ்மாதுலகு' என்ற மத்யமாவதி கிருதியில்.

நான்காவது சித்திரத்தில் சீதைக்கு மட்டுமே கிடைத்த ஒரு தரிசனத்தை — விசுவரூப தரிசனத்தை — நாமும் காண்கிறோம்.

சீதையின் சுயம்வரத்தின்போது மற்ற மன்னர்கள் யாவரும் வர, ராமன் மட்டும் வரவில்லையே என்று தோழிகளிடம் விசாரப்பட்டுக் கொள்கிறாள் வைதேகி. "என் போன்ற நாயகிகள் அவருக்கு எத்தனை பேரோ?" என்று ஏகபத்தினி விரதனைப் பற்றி ஐயுறுகிறாள். அப்போது திடுமென ராமன் தோன்றுகிறான். ஜானகி அளவிலா ஆனந்தம் கொள்கிறாள். ஆனால் உடனே ஆனந்தம் மாறுகிறது. "என் 'சுயம்வரம்' சுயமாக நான் மணாளனை வரிப்பது அல்லவே! சிவ தநுசை நாணேற்றி விடுபவருக்கல்லவோ என்னைத் தந்தையார் தருவார்? சிறு பிள்ளையாய் வந்துள்ள ஸ்ரீராமன் தநுசை வளைக்க இயலுமா?" என்று கலங்கினாள் சீதை. அப்போது, அவளது கலக்கம் தீர்ப்பதற்காக, அவளது கண்களுக்கு மட்டுமே புலனாகுமாறு ராமபிரான் விசுவரூப தரிசனம் காட்டியருளினானாம். மானுடனாகவே வாழ்ந்த ராமனைத் தியாகராஜரின் சங்கீதம் விசுவரூபனாக வளர்த்துவிட்டது என்றே சொல்லலாம். 'ப்ரஹ்லாத பக்தி விஜயம்' என்ற ஐயர்வாளின் இசை நாடகத்தில் 'தயஜேயவய்யா' என்று தொடங்கும் யதுகுல காம்போதிப் பாடல் இந்தத் திவ்விய தரிசனத்தை வழங்குகிறது.





# பரிதியின் சோதி

வானமெங்கும் பரிதியின் சோதி;
　மலைகள் மீதும் பரிதியின் சோதி!
தானை நீர்க்கடல் மீதிலும் ஆங்கே
　தரையின் மீதும் தருக்களின் மீதும்
கான கத்திலும் பற்பல ஆற்றின்
　கரைகள் மீதும் பரிதியின் சோதி;
மான வன்றன் உளத்தினில் மட்டும்
　வந்து நிற்கும் இருளிது வென்னே!

— பாரதி



# கலிங்கத்துக் காட்சிகள்

ஆதவன் கோயிலிலும் புவனேசுவரம் கோயில்களிலும் பூரி ஜகந்நாதர் ஆலயத்திலும் ஓவியர் விஜு பல நாட்கள் தங்கி இருந்து வரைந்த வண்ண ஓவியங்கள் சிலவற்றை இங்கு பெருமிதத்துடன் தருகிறோம்.

பல வண்ண ஓவியங்களில் முதலில் குதிரை மீது ஆரோகணித்துச் செல்லும் மாலை நேரத்துச் சூரியனைக் காண்கிறீர்கள். மறுபக்கத்தில் ஒரு பெரிய சக்கரத்தைக் காணலாம். சூரியதேவன் கோயிலே ஏழு குதிரைகள் பூட்டிய தேர் போன்ற அமைப்புக் கொண்டதாகும். தேரில் இடம் பெற்றுள்ள பல சக்கரங்களுள் ஒன்றினைப் படத்தில் பார்க்கிறீர்கள். பிறகு மடலை மெல்லப் பிரித்துப் பாருங்கள். ஆதவன் கோயிலின் முழுமையான தோற்றத்தை அப்படியே சித்திரத்தில் வடித்துத் தருகிறார் ஓவியர். இடதுபுறம் உலகப் பிரசித்தி பெற்றுவிட்ட கொனாரகா குதிரை. எதிரே ரதம் போன்ற அமைப்பில் ஆதவன் கோயில். வலது புறம் நடன மண்டபம்.

கீழே நடன மண்டபத்தில் உள்ள பல சிலா வடிவங்களைப் பெயர்த்தெழுதித் தந்திருக்கிறார் ஓவியர் விஜு. 'பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்' என்பார்கள். ஆயிரமாயிரம் அழகு வடிவங்களுள் ஒன்பதை மட்டும் எழுதிக் காட்டுகிறார் ஓவியர். வாத்திய விற்பன்னர்களையும், நடன மணிகளையும் காண்கிறோம்.

மடலை மடித்தால் நடன மண்டபத்தின் சிற்ப நுணுக்க வேலைப்பாடுகள் எத்தகையது என்பதற்கு ஒரு மாதிரி கிடைக்கும்.

அடுத்த பக்கத்தில் புவனேசுவரம் லிங்கராஜா கோயில்—முழுத் தோற்றம். கீழே ராஜா ராணி கோயிலில் உள்ள தண்டையைக் கழற்றும் நங்கை. பிரம்மேசுவரர் கோயிலில் கிளியுடன் கொஞ்சும் 'கிளி'. அடுத்தாற்போல் இருக்கும் இரு நங்கையரையும் லிங்கராஜா கோயிலிலும் ராஜா ராணி கோயிலிலும் சந்திக்கலாம்.

## இரு வண்ண ஓவியங்கள்

### பக்கம் - 1

(1) புவனேசுவரத்தில் உள்ள விநாயகர். கீழே மோதகங்கள் அடுக்கி வைக்கப்பட்டுள்ள அழகைப் பாருங்கள்.

(2) கொனாரகாவில் உள்ள அந்தப் பாடகி தம்புரா ஏந்தி நடன மண்டபத்துக்கு விரைந்து கொண்டிருக்கிறாள்.

(3) நடனமாது அலங்காரம் செய்து கொள்ளாமல் மேடை ஏற முடியுமா என்ன? — இவளையும் ஆதவன் கோயிலில்தான் சந்திக்கிறோம்.

(4) லிங்கராஜா கோயிலில் உள்ள அர்த்தநாரீசுவரரின் முகம், சிகை அலங்காரம் இவற்றை மட்டும் எடுத்துக் காட்டுகிறார் ஓவியர்.

### பக்கம் - 2

(1) கொனாரகாவில் ஆதவனுக்கு ஆலயம் எழுப்பிய அரசனும் அரசியும்.

(2) அலங்காரக் கலையில் அன்று நங்கையர் அளவில்லா ஈடுபாடு கொண்டிருந்தார்கள் (இன்றைக்கு மட்டும் என்னவாம் என்று முணு முணுக்கிறீர்களா?)

(3) 'அம்மா, தயிர்க்காரி! பத்திரம்! குரங்குகள் பானையை உருட்டி விட்டுத் தயிரை 'அபேஸ்' செய்யப் போகின்றன' — கொனாரகா சிற்பம்.

(4) ஆதவன் கோயிலுக்குப் பக்கத்தில் வாசலருகே எதிரிகளுக்குச் சிம்ம சொப்பனமாக விளங்கும் கங்க மன்னனது போர் யானைகள் கல்லிலே சிரஞ்சீவித்துவம் பெற்று விளங்குகின்றன. அவற்றின் தும்பிக்கையில் சிக்கித் தூக்கி எறியப்படவிருக்கும் எதிரியுமல்லவா சிற்பியிடம் சாகா வரம் பெற்று விட்டான்!

### பக்கம் - 3

(1) கபிட்சத்தின் மீது செங்கோலோச்சும் அரசு. யானையும் யாளியும் அதை உருவகப்படுத்துகின்றன.

(2) லிங்க ராஜா கோயிலில் ஒரு நங்கையின் நளினத் தோற்றம்.

(3) வானில் பறக்கக் கந்தர்வர்களாலா முடியாது? ஆயினும் சாமரம் வீசும் அந்தக் குட்டித் தேவதையின் சவாரி சொகுசைப் பாருங்கள்! என்ன அற்புதமான கற்பனை கலைஞருக்கு!

(4) கொனாரகா சூரிய தேவன் கோயிலில் கருத்தொருமித்த காதலர்களைக் கணக்கின்றிக் காணலாம்.

(5) யானைக் கூட்டம் மெல்ல நகர்கிறது. பல்லாயிரக் கணக்கில் ஆதவன் கோயிலில் யானைகளைக் காண்கிறோம். ஆயினும் ஒவ்வொன்றிலும் ஒரு தனித் தன்மையும், பாவமும் வைத்திருக்கிறானே சிற்பி. அதை என்னவென்று சொல்லிப் புகழ்வது!

### பக்கம் - 4

(1) பூரி ஜகந்நாதர் ஆலயம் சாலையிலிருந்து பார்க்கையில் அளிக்கும் தோற்றம்.

(2) நவீன பாணி ஓவியரும் கண்டு மயங்கும் ஜகந்நாதர், சுபத்திரை, பலராமன் ஆகியோர் இவர்கள்தான்—பூரி ஜகந்நாதர் ஆலய மூர்த்திகள்.








"ஏண்டா, நோக்கு லக்னம்தான் மேஷம்னு சொன்னு, எப்பப் பாத்தாலும் அசோகாவும் வெத்தலையுமா குதப்பிக்கிட்டே கிடக்கணுமா ?"




டிரான்ஸிஸ்டர் மங்கை: மிஸ்டர் அண்ட் மிஸஸ் ஒயிட், எங்க இண்டியன் கல்ச்சர் இருக்கே...

# கல்லூரி தரும் கவின் ஓவியங்கள்

கலைகளுக்குப் புகழ் பெற்றது பாரதம் என்றால் கலைகளுக்கும் சித்திரங்களுக்கும் முதலிடம் தந்து அந்தக் கலைகளை வளர்த்து வருவது தென்னகம்தான். நம் முன்னோர்களின் படைப்புக்களைக் கண்டு நாமே பிரமிக்கும் நிலையிலே பின்தங்கிப்போன நிலையிலே, சித்திரமும் சிற்பமும் கற்பிக்கும் பள்ளி ஒன்றை இந்தியாவிலேயே முதலாவதாக ஆரம்பிக்கும் பெருமை நம் தென்னகத்துக்கே கிடைத்தது. இன்று கல்லூரியாக வளர்ந்து புகழ் பரப்பிக் கொண்டிருக்கும் இப் பள்ளி தோன்றி நூறு ஆண்டுகளுக்கு மேலாகப் போகிறது. அப்படியானால் இது எத்தனை கலைஞர்களை உருவாக்கிக் கொடுத்திருக்கும்? இக்கல்லூரியின் வாழ்விலே, வளர்ச்சியிலே பங்கு கொண்ட புகழ் பெற்ற மூன்று கல்லூரி முதல்வர்களின் கைவண்ணங்களையும் இக்கல்லூரி உருவாக்கிய ஓவிய மணிகள் மூவரின் சித்திரங்களையும் இம்மலரில் அடுத்துள்ள பக்கங்களில் வெளியிடுவதில் பெருமை கொள்ளுகிறோம்.

இருபதாம் நூற்றாண்டின் மிகச் சிறந்த ஓவியர்களில் திரு ராய் சௌத்ரியும் ஒருவர். வங்கம் கண்ட இந்தத் தங்கம், மேலை நாட்டு ஓவிய விற்பன்னர்களிடம் கலையைப் பயின்றிருந்தும் இவரிடம் இயற்கையாக அமைந்திருந்த இந்தியக் கலாசாரத்தின் மணம் போகவில்லை. 'உள்ளதை உள்ளபடி அப்படியே கொடு. கற்பனையால் அழகு கொடுத்து இல்லாததை காட்டாதே' என்பது சௌத்ரியின் கொள்கை. ராய் சௌத்ரியின் ஓவியங்கள் இந்தியாவின் பல அரண்மனைகளையும், மகாராஜாக்களின் இல்லங்களையும் அலங்கரித்துக் கொண்டிருக்கின்றன. மேலை நாட்டிலும் இவரது ஓவியங்கள் வெகுவாகப் புகழ்ந்து பாராட்டப்பட்டுள்ளன. ஓவியக் கலையில் ஒப்பற்ற இவர் சிலைகள் வடிப்பதிலும் கவனம் செலுத்திப் புகழ்பெற்றார். சென்னைக் கடற்கரையிலேயுள்ள உழைப்பாளிகளின் வெற்றி என்ற சிலையை [illegible] மறக்க முடியுமா? இவர் கைவண்ணம் [illegible] ஸர் ஸி. பி. அன்னி பெஸண்ட் ஆகியோரின் மார்பளவு சிலைகள்தான் நினைவை விட்டு நீங்கிவிடுமா?

சென்னை சித்திரக் கல்லூரியின் புகழுக்காக நீண்ட காலம் உழைத்துப் பல இளங் கலைஞர்களின் உள்ளங்களில் கலையார்வத்தை உண்டாக்கிய திரு தேவி பிரசாத் ராய் சௌத்ரி இப்போது கல்கத்தாவில் வசித்து வருகிறார். அவரது சிறந்த படைப்புக்களில் ஒன்றான ''கோவில் படிகள்'' என்ற ஓவியம் விழிகளுக்கு விருந்தாக முதல் பக்கத்தில் நிறைகிறது.

திரு ராய் சௌத்ரிக்குப் பிறகு சென்னை சித்திரக் கைத்தொழில் கல்லூரியின் முதல்வராகி அதன் சிறப்புக்கு உழைத்து வருபவர் திரு பணிக்கர். இன்றைய நவீனமுறையில் புகழ் பெற்ற ஓவியர்கள் வரிசையில் பணிக்கருக்குச் சிறப்பான இடம் உண்டு. அகில இந்திய ரீதியில் சென்னைக்குத் தனிச் சிறப்பு உண்டென்றால் அது பணிக்கரால்தான். சித்திரக் கலையின் பல்வேறு நுணுக்கங்களையும் நன்கறிந்து அதில் தலைசிறந்து விளங்கும் பணிக்கர், மேலை நாட்டிலே இன்றைக்கு வேகமாகப் பரவிவரும் நவீன பாணி ஓவியம் நமக்கு வராது என்று குறைப்படுபவர்களுக்கு, எதுவும் எங்களால் முடியும் என்று சொல்வதோடு மேல் நாட்டினரே பாராட்டுமளவுக்கு அதைச் செயலிலும் வடித்துக் காட்டுபவர்.

அற்புதமான வர்ணச் சேர்க்கை, உள்ளத்தைத் தொட்டிழுக்கும் கவித் துடிப்பு, காட்சிகளை அமைப்பதில் ஒரு தனி பாணி—இவை பணிக்கரின் தனிச் சிறப்புகள். ஏராளமான ஓவியங்களை உருவாக்கியதோடு பல விசேஷப் பரிசுகளைப் பெற்ற பணிக்கர் சித்திரக் கலைஞர்களின் நல்வாழ்விலே அக்கறை கொண்டு பல நல்ல திட்டங்களை உருவாக்கிக் கொடுத்தவர். அவரது பெரு முயற்சியால்தான் சென்னை அருகே 'சோழ மண்டலம்' என்ற ஓவியர்களின் குடியிருப்பு உருவாகியுள்ளது.

'தாயும் சேயும்' என்ற அவருடைய வண்ணக் காவியத்தை இரண்டாம் பக்கத்தில் வழங்கியிருக்கிறோம்.

தாம் படித்துப் பட்டம்பெற்ற கல்லூரியிலேயே திரு பணிக்கர் அவர்களைத் தொடர்ந்து முதல்வராகப் பணியாற்றி வருகிறார் திரு தனபால். இந்தியாவில் நடந்த பிரதானமான எல்லா ஓவியக் கண்காட்சிகளிலும் பங்கு பெற்றிருக்கிறார். மேற்கு ஜெர்மனியில் நடைபெற்ற அகில உலக சிற்ப, சிலை ஓவியக் கண்காட்சியில் இந்தியாவின் சார்பில் கலந்து கொண்டதோடு காமன் வெல்த் நாடுகளின் கலைவிழா லண்டனில் 1962ம் ஆண்டு நிகழ்ந்தபோது அதிலும் பங்கு பற்றியுள்ளார். புதுதில்லி லலிதகலா அகாதமியார் நடத்திய தேசியக் கண்காட்சியில் 'மிகச் சிறந்த சிலை' என்று தனபால் வடித்த சிற்பத்துக்குப் பரிசு கிடைத்திருக்கிறது.

பழகுவதற்கு இனியவர் திரு தனபால். தமிழர்கள் தலைசிறந்த கலைஞர்கள் என்ற பெருமிதம் கொண்டவர். மாணவர்களிடம் தோழனாகப் பழகும் பண்பாடுடையவர். திறமை யாரிடம் இருந்தாலும் அதை மனமார வாயாரப் புகழ்ந்து பூரித்துப் போவார். ஓவியங்கள் வரைவதில் வல்லவரானாலும் அவர் மனத்துக்குப் பிடித்தமானது சிற்பக் கலைதான். சிலைகள் வடிப்பதில் பல புதிய உத்திகளையும் பாணிகளையும் கையாண்டு வருகிறார்.

திரு தனபால் தீட்டியுள்ள 'வாழ்த்து' என்ற ஓவியத்தைத்தான் மூன்றாம் பக்கத்தில் காண்கிறோம்.

இம் மூன்று ஓவியங்களையும் மலரில் வெளியிட அனுமதியளித்து உதவிய சென்னை மியூசியம் நிர்வாகிகளுக்கு நன்றி.

நவீன பாணி ஓவியங்கள் வரைவதில் வல்லவரான திரு டி. விசுவநாதன் இக்கல்லூரியிலேயே போதகராகவும் பணியாற்றுகிறார். 'சேவலும் பெட்டையும்' இவரது கற்பனையிலே உருவாகிய அழகான சித்திரங்களுள் ஒன்றாகும்.

பாவங்களைத் தேக்கி நிற்கும் பாவை ஒருத்தியின் படத்தை இரண்டாவதாகக் காண்கிறோம். அது சென்னைச் சித்திரக் கல்லூரியில் போதகராகப் பணிபுரியும் திரு ஸி. ஜே. அந்தோணிதாஸ் அவர்களின் படைப்பு.

மூன்றாவதாக நம் கவனத்தைக் கவர்ந்திழுக்கும் அந்தத் தெருக் காட்சி ஒரு நீர்வண்ண ஓவியம். ஒளி செய்யும் ஜாலங்களை சுரேந்திரநாத் என்ற இந்தக் கலைஞர் எத்தனை அழகாகத் தீட்டியிருக்கிறார்!



" இந்தப் பொண்ணுக்கு வந்த துணிச்சலைப் பாரேன்! புல்லெ சொமக்கற வயசிலே
இந்த டிரான்ஜிஸ்டர் பொட்டியெச் சொமந்துண்டு திரியுது!

# THE POWERFUL ENGINE TODAY

PERKINS **P6-354**



**Vehicle Diesel Engine Rated to develop 120 BHP at 2800 RPM**

**Industrial Diesel Engine Rated to develop 90 BHP at 2250 RPM**

***Salient Features:***

1. Direct injection combustion system and distributor type fuel injection pump with automatic advance and retard. Also hydraulic governing which ensures proper measuring of the fuel in direct proportion to the load. Exceptionally low fuel consumption under all operating conditions.
2. New standard for diesel power weight ratio and compactness which means extra payload.
3. Timing drive through helical gears.
4. Designed to reduce maintenance to a minimum—all components requiring routine servicing easily accessible. No external oil pipes.
5. 12 volt electrical equipment ensures positive starting under all normal conditions.




Simpson & Co. Ltd.

Head Office & Works:
202, Mount Road, Madras-2.

Branches: Bangalore - Ootacamund
Tiruchirapalli - Secunderabad








# "ஹுத்ரி"

குடகு நாட்டுக் குடவர்கள் அறுவடை விழாவை ஹுத்ரி என்று பெயரிட்டு அமர்க்களமாகக் கொண்டாடுவது வழக்கம். கார்த்திகை பௌர்ணமிக்கு ஒரு வாரம் முன்னதாகவே கொண்டாட்டம் தொடங்கி விடும். பௌர்ணமியன்று, குறிப்பிட்ட ஆடவர் ஒருவரிடம் 'குத்தி' என்ற படி போன்ற பாத்திரம் கிராமத் தலைவரால் வழங்கப்படும். கன்னிகைகள் தீபமேந்தி வர, நாட்டு வாத்தியங்கள் முழங்க அவர் குத்தியுடன் ஊர்வலம் வருவார். ஆலயத்தில் ஆண்டவன் முன் நெற்கதிர்கள் நிவேதனமான பின் அவற்றில் சில வெட்டப்பட்டுக் 'குத்தி'யில் சொருகப்படும். அனைவருமே ஒவ்வொரு கதிரைக் கையில் எடுத்துக் கொள்ள, நடு நாயக புருஷர் குத்தியைத் தலையில் சுமந்து வர, ஆலயத்திலிருந்து அனைவரும் கோஷ்டிகானம் பாடியபடி வீடுகளுக்குத் திரும்புவர். வாயிசையோடு வாத்திய இசையும் வாண வேடிக்கைகளும் அப்போது திமிலோகப்படும்.

வீரம் செறிந்த குடவர்களுக்கு வேளாண்மையில் உள்ள ஈடுபாட்டை விளக்கும் இவ்விழாவினை ஓவியர் எம். டி. வி. ஆசாரியா ஓவியத்தில் குழைத்துத் தருகிறார்.

